ய்துகொண்டு துன்பத்தையே அனுபவிக் கின்றதையும், கெட்ட காரியங்களை யே செய்து கொண்டு இன்பத்தையே அனுபவிக் கின்றதையும் காண்கின் றோமன்றோ; ஆதலால் ஸங்கற்ப முதலிய செய்கைகளைச் செய்விப்பதொன் றும் இன்ப துன்பங்களைத் தருவது மற்றொன்றுமாக இருக்க வேண்டு மென்று நிர்ணயிக்கப் படுகின்றது. ஆனது பற்றியே கர்மாவிலும் வாஸனை வேறு என்று கொள்ள வேண்டிய தாகின்றது.

இனி இங்கு மற்றோர் சங்கை. கர்மா, வாஸனை, என வேற்றுமைப் படு த்திப் பிரித்துச் சொல்லப் பட்ட இவ்விரண்டும் எதனால் வந்த தென்பதைக் கவனிப்போ மாயின் இதற்கு முன்னெடுத்த ஜன்மங்களில் செய்த செய்கையி னாலேயே என்பது விளங்கு கின்ற தன்றோ? இங்ஙனம் இரண்டிற்கும் கார ணம் ஒன்றாகவே யிருக்கின்றமையால் இவ்விரண்டு காரியங்களையும் (கர்ம வா ஸனைக ளிரண்டையும்) ஒன்றே எனக்கொள்ளலாமே. உசிதம் இங்ஙன மிருக்க கர்மா வேறு வாஸனை வேறு என இரண்டையும் தனித் தனிப் பொருளாய்ச் சொல்லுவதேன் என்பதாம். இச்சங்கை அவி வேகத் தாலேயே நிகழுவதாம், அதெப்படி எனின், பூர்வ ஜன்மத்திய செய்கைகளே கர்ம, வாஸனை, இவ்வி ரண்டிற்கும் ஹேதுவா யிருக்கினும் அச்செய்கைகளால் வருவது இரண்டு வித மாய்ப் பிரிவடை கின்றமையால் அவைகளை நாம் இரண்டாகவே விவேகித்து கொள்ள வேண்டும். உதாரணமாக, சுருட்டுக் குடித்தல் புகையிலை போடுதல் முதலிய செய்கைகளால் கபால வறக்ஷி முதலிய வியாதி யொன்றும், மீண்டும் அவைகளை உபயோகிக்க வேண்டு மெனும் அப்பியாஸப் பற்று மற்றொன்று மாக இங்ஙனம் இரண்டு விதமான விசேஷ மேற்படுவதுபோல, நல்வினை தீவினைகளைச் செய்தலால் ஏற்படும் விசேஷமும் இரண்டு விதமாய்ப் பிறி கின்றது. அதாவது ஜன்மாந்தரத்தில் அனுபவிக்க வேண்டிய இன்பதுன் பங்களுக்கு மாத்திரம் ஏதுவாகும் கர்மா ஒன்றும், மீண்டும் அதே காரியங் களில் தூண்டி விடுவதாகிய அப்பியாஸ ஸம்ஸ்காரம் மற்றொன்றுமாமென்க. ஓர் காரியத்தை ஓர் தடவை செய்தாலும் அது ஓர் கர்மாவாய்விடும். ஒரே காரி யத்தைப் பல முறை செய்தாலொழிய வாஸனை ஏற்படாது. கர்மாவினால் வரும் இன்பதுன்பங்களை அனுபவித்தே தீரவேண்டும். வாஸனையால் வரும் ஸங்கற்பத்தை விவேகத்தால்வென்று விடலாம். கர்மா மிகவும் பலமுடையது. வாஸனை அற்பமே. இங்ஙனம் இவ்விரண்டிற்கும் மிகவும் வித்தியாஸ மிருக்கின் றது. ஆதலால் இவ்விரண்டையும் ஒன்றாகக்கொள்ள இயலவில்லை. ஆனது பற்றியே கர்மாவேறு வாஸனைவேறு என்று சொல்லப்பட்டது.

வாஸனையே ஸங்கற்பம் முதலியவைகளின் மூலமாகச் செய்கைக்கு ஏது வாகின்றதென்றுசொல்லப்பட்டதே; அதெவ்விதம் எனின் அஃதறிக. உதாரண மாக, அழகியமங்கை, ஆபரணம், விலையுயர்ந்தவஸ்திரம், ருசியாகியகனிமுதலிய பொருள்கள் தற்செயலா யெதிர்ப்படும்போது எதிரிலுள்ளதை யெல்லாம் பார்க்குமியல்பினால் நேத்திரம் அவைகளைநோக்கவே அசுபவாஸனையேவிசேஷ மாயுள்ளவனாயின்" இவை யெவ்வளவு அழகாயிருக்கின்றன" வென அவை களின் சிறப்பை ஸங்கற்பிப்பான். அந்த ஸங்கற் பத்திற்குச் சற்று நேரம்

இடங்கொடுத்து விட்டானுயின் அவைகளைத்தான் அனுபவிக்க வேண்டுமென விருப்ப முதிக்கும். அவ்விருப்ப மேற்படின் பிறகு அவைகளை யனுப வித்தே தீருவது எனும் நிச்சய முடையோனுய் அக்காரியத்தில் பிரவர்த்திப்பான். இவ்வுண்மையானது.

விஷயேஷ்வாவிஶச்சேத: ஸங்கல்பயதி தத்குணாந் ।
ஸம்யக்ஸங்கல்பநாத்காம: காமாத்பும்ஸ: ப்ரவர்த்தநம் ॥

விஷயங்களில் சித்தஞ் சென்றால் அவைகளின் குணங்களை ஸங்கற் பிக்கின்றது. நன்றாய் ஸங்கற் பித்தால் விருப்ப முதிக்கும். காம மேற்படின் மனிதன் பிரவர்த்திக்கின்றான்.

என சங்கர பகவத்பாதர் முதலிய பெரியோர்களால் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. விவேகிக்கு அசுபவாஸனை சற்றுக் குன்றி யிருக்கு மாகையால் அவ் விஷயங்கள் எதிர்ப்படும் போதே கண் பார்த்தாலும்பிறகு அவன் அவைகளின் குணங்களை ஸங்கற்பிக்க விடாமல் மனஸை நிக்ரஹித்து மற்றோர் நல்ல விஷயத்தில் செலுத்துவான். அங்ஙனமாயின் அவ்வசுப வாசனை யாதும் செய்வதற்கின்றி அடங்கிப் போகின்றது. வாஸனையால் செய்கை நிகழுவதும் அதனை நிக்ரஹித்தலும் இவ்வாறே என்க. வாஸனையானது சுபம் அசுபமென்றிருவகையாகும். பூர்வம் பாவங்களையே அடுத்தடுத்துச் செய்திருந்தால் அசுபவாஸனையும், புண்ணியங்களையே விசேஷமாய்ச் செய்திருந்தால் சுபவாஸனையும் ஏற்பட்டுச் சித்தத்தில் பதிந்து கிடக்கும். பூர்வம் சுபவாஸனையே விசேஷமாயேற் பட்டிருக்கினும் இப்போது அஸத் ஸஹவாஸம் முதலியவைகளைச் செய்தால் அது குன்றி அசுப வாஸனையே பலத்துவிடும். அல்லது பூர்வம் அசுப வாஸனையே விசேஷமாயேற் பட்டிருக்கின் இப்போது செய்யும் ஸத்ஸஹவாஸம் முதலியவைகளால் அது குன்றி சுபவாஸனை பலத்து விடும். ஆதலால் அசுப வாஸனையைத் தடுத்து சுபவாஸனையின் வழியே நடக்க வேண்டும். இங்ஙனம்.

வாஸநாவஶியாத்யக்தா ஶுபாஶுபவிபாஜநா ।
வாஸநௌகேந ஶுத்தேந தத்ர சேதநுநீயஸே
தத்க்ரமேண ஶநை: பாவம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்
அதசேத்ஶுபோ பாவஸ்த்வாம் யோஜயதி ஸங்கடே
ப்ராக்தநஸ்தத ஸௌ யத்நாஜ்ஜேதவ்யோ பலவத்தாஸ்பம் ।

வாஸனை சுத்தம் மலினம் என்றிரு வகையாம். சுத்த வாஸனைத் தொகுதிகள் நல் வழியில் ஏவும். அங்ஙன மேவும்போது அவ்வழி நடப்பாயாயின் கிரமமாக அழிவில்லாத பதத்தை யடையலாம். அசுப வாஸனை யானது கெட்ட காரியத்தில் ஏவும். அப்படி ஏவும் போது அந்தப்பூர்வவாஸனையைப் பலமான முயற்சியைக் கொண்டு உன்னால் வென்று போடத் தக்கது.

என்பது முதலிய சுலோகங்களால் யோக வாஸிஷ்டம் முதலிய நூல்களில் உபதேசிக்கப் பட்டிருக்கின்றது.

சுப வாஸனையின்படி நடந்தாலும் அல்லது அசுப வாஸனையின்படி நடந்தாலும் இப்போது வரும் இன்ப துன்பம் வந்தே தீரும். அது மாறுவதில்லை. ஏனெனின் இந்தச் சரீரம் கர்ப்பத்தில் உற்பத்தியாகும் போதே “இச்சரீரத்தினால் இந்த இந்த ஸமயத்தில் இந்த இந்த இன்ப துன்பங்களை அனுபவிக்க வேண்டும்” என இவனது பூர்வகர்மங்களுக்குத் தக்கபடி ஈசனால் ஆஜ்ஞைசெய்யப் பட்டு விட்டது. அவ்வீசாக்ஞையை மீறி நடக்க எவராலுமியலாது. ஈசாக்ஞை மிக்க பலமுடையது. ஆதலால் அற்பயோக்கியதையுடைய பசுக்களாகிய இச்சீவர்களால் அதன்படி எப்போது எவ்விதமான இன்பதுன்பம் வருமோ அப்போது அதற்குட்பட்டே நடக்கவேண்டும்; இவ்வாறு நல்லதைச் செய்தாலும் கெடுதியைச் செய்யினும் இப்போது வரும் பயன் ஒன்றே எனின் எதைச் செய்வது நலம் என்று யோசிக்கவேண்டும். ஒன்றும் செய்யாமல் ஒருவனும் ஓர் க்ஷணமும் இருக்க இயலாது. குரங்குக்குப்போல எப்போதும் யாதானும் ஓர் சேஷ்டை இருந்துகொண்டேயிருக்கும்.

நஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |
கார்யதே ஹ்யவஸ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர் குணை: ||

> ஒருவனும் ஓர்க்ஷணமும் ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்க மாட்டான். எல்லோரும் பிரகிருதியால் வரும் குணங்களால் அவசமாக எதையேனும் செய்து கொண்டேயிருக்கின்றனர்.

எனப்பகவானால் அர்ச்சுனனுக்கு இங்ஙனம் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனமிருத்தலால் மனிதர் எதைச்செய்வது நலம் என யோஜிப்போமாயின் சுபவாஸனையின் படியே நடக்க வேண்டுமென்று அறியப்படுகின்றது. அசுபவாஸனையின் வழி நடந்து தீமையைச் செய்தால் இச்செய்கையே பாவமாய் முடிந்து மறுமையில் துன்பத்திற்கே ஏதுவாகும். சுபவாஸனையின்படி நடப்பதோ எனின் அதுவே புண்ணியமாய்வந்து மருமையில் இன்பத்தையேதரும். ஆதலால் மனிதர் அசுபவாஸனையின்படி நடக்கக்கூடாதென்பதே விவேகம்.

சுபவாஸனையின்படியே நடக்கும் போது, ஓரோர்ஸமயம் ஏற்கனவேசித்தத்தில் பதிந்துள்ள அசுபவாஸனைகள் பல ஒருங்கு சேர்ந்து கெட்டகாரியங்களில் மிக்கப் பலமாக ஏவுவது முண்டு. தீரர் அதற்குச் சிறிதும் சலியாமல் திடவிவேகத்தால் அவைகளைத் தகைந்து வென்றுபோடுவார். சொற்பகாலம் சுருட்டு, கள், கஞ்சா, முதலியவைகளை அப்பியஸித்தவன் பின்னர் அவைகளைத் துரப்பியாஸமெனக் கண்டு இனி இவ்வப்பியாஸம் கூடாதென்று உறுதிகொண்டு அவைகளை நிறுத்தி யிருக்கினும் ஓரோர்ஸமயம் முன்போலவே அவைகளில் சபலமுண்டாகின்றது. அது பூர்வம் செய்த அப்பியாஸத்தினால் ஏற்பட்டுள்ள வாஸனையினாலேயே யன்றோ. அற்பகால அப்பியாஸத்திற்கே இவ்வளவு பலமாக வாஸனையேற்படு மெனின், அனந்தகோடி ஜன்மங்களில் அழ

கியமங்கையை விரும்புதலும், ஆடையாபரணங்களில் மயங்குவதும், ருசியாகிய பதார்த்தங்களை உண்பதும் இவைபோன்ற காரியங்கள் அப்பியாஸத்தில் ஏற்பட்டிருக்கு மாதலின் அதற்குத் தக்கபடி வாஸனை மனவினில் எவ்வளவு திடமாய் ஊன்றி யிருக்கக் கூடும் ? அப்படிப்பட்ட வாஸனைகள் அசுப காரியங்களில் ஏவும்போது மனிதருக்கு அவைகளை நிக்ரஹிப்பது அஸாத்திய மென்றே தோன்றும். ஆனால் அது தவறேயாம். அதற்குத்தக்கபடி மிகவும் திடமாகிய முயற்சியால் அவைகளை வென்று போடலாம் என்பது நிச்சயம். இதுவரையிலும் வாஸனையைப் பற்றி விஸ்தரிக்கப்பட்டது.

கர்மாவாவது, இதற்குமுன் எடுத்திருந்த அளவற்ற ஜன்மங்களில் மனுஷ்ய ஜன்மங்களும் எவ்வளவோ ஏற்பட்டிருக்கக் கூடுமன்றோ. மனுஷ்ய ஜன்மங்களில் செய்யப்பட்ட நல்லகாரியங்களும் கெட்டகாரியங்களும் அப்போதைக்கப்போது மனவினில் மிக்க நுட்பமாகப் பதிந்து போகின்றன. அவை ஸ்வர்க்கத்திலாவது நரகத்திலாவது மனுஷ்யப் பிறவியிலாவது, காலாந்தரத்தில் தத்தம் பயனான இன்பதுன்பங்களைக் கொடுக்கின்றன. அவ்விதம் இன்பதுன்பங்களைத் தரும் மனவினிலுள்ள பதிவே கர்மா என்பதாம். இனி மனுஷ்ய ஜன்மத்தில் செய்யப்படும் செய்கைகளே கர்மாக்களாய் ஏற்படுவது போல பசுபக்ஷியாதி ஜன்மங்களில் செய்யப்படும் செய்கைகளும் கர்மாக்களாகின்றன என்பது கூடாதோ எனின் கூடாதென்க. ஏனெனின், செய்கை மாத்திரத்தினாலேயே கர்மா ஏற்படும் என்பதல்ல. மற்று யாதெனின் இது புண்ணியம் இது பாபம் எனப் புண்ணிய பாபங்களில் பகுத்தறிவுள்ளவர் செய்யும் செய்கைகளே கர்மாக்களாகும் என்பதே சாஸ்திரங்களின் மர்மம்.

இவ்விதம் புண்ணிய பாபங்களின் பகுத்தறிவோடு கர்த்திருத்துவாதிபாவனைகளுடன் செய்யப் பட்டுள்ள நல்ல காரியங்களும் கெட்டகாரியங்களும செய்யப்படும்போதே அறிவினில் பதிவு ரூபமாகுந் தன்மையைப் பெற்றுக் காலாந்தரத்தில் கர்மாக்களாய் வந்து இன்ப துன்பங்களுக்கு ஏதுவாகின்றன. இக்கருமங்கள் பிராரப்தம், ஸஞ்சிதம், ஆகாமி எனமூவ்வகைப்படும். அதெப்படியெனின்' இதற்குமுன் எடுத்திருந்த மனுஷ்யஜன்மத்தில் லக்ஷம் கர்மா செய்திருந்ததாக வைத்துக்கொள்வோம். அவைகளில் ஓர் கொடும் பாபகர்மம் பக்குவப்பட்டுப் பலகோடி நரகயாதனையை யளித்தது. அதன் பிறகு மற்றோர் கர்மா பரிபக்குவப்பட்டு கிருமி கீடாதி பலஜன்மங்களைத் தந்தது. அதன் பிறகு மற்றோர்கர்மா பக்குவப்பட்டு பசுவாதி ஜன்மாவைத் தந்தது. இங்ஙனம் மூன்று கர்மங்களின் பயனை அனுபவிக்கவே நான்காவது ஓர் பெரும் புண்ணிய கர்மா பக்குவப்பட்டு வந்து அரியதாகிய இம்மனிதப் பிறவியைத் தந்தது. இங்ஙனம் மனிதப்பிறவியை மாத்திரம் தந்து அதனோடு அக்கருமம் முடிந்து போகவில்லை. இந்த தேஹம் எவ்வளவு சுவாஸம் விடவேண்டியதென ஈசாக்ஞையின்படி நியதமாயுள்ள சுவாஸத்தையும் தந்து, இத்தேஹம் தோன்றியது முதல் மரிக்கும் வரையிலுள்ள காலத்தில் எந்தெந்தஸமயத்தில் எந்தெந்தஇன்பதுன்பங்களை அனுபவிக்கவேண்டுமென நியதமாகிய இன்பதுன்ப போகத்திற்கும் ஏதுவா

கின்றது. இங்ஙனம் இதற்குப் பூர்வம் மனுஷ்யஜன்மத்தில் ஸம்பாதிக்கப் பட்டலக்ஷங்கர்மாக்களில் ஏற்கனவே அனுபவத்தினுல் மூன்று கர்மங்கள் ஒழியவே நான்காவதாகிய கர்மாவினுல் இம்மனுஷ்ய ஜன்மாவைப் பெற்று இன்ப துன்பங்களை அனுபவிக்க ஆரம்பித்திருக்கிறோ மன்றோ. இந்தக் கர்மமே ப்ராரப்தம் என்பதாம். ப்ர, ஆரப்தம் எனின் பயன் தரத்தலைப் பட்டுள்ளது எனப் பொருள். இந்நான்கு கர்மங்களுக் கந்நியமாய் இனி மறுபிறவிகளில் பயன் தருவனவாயுள்ள தொண்ணூற்றொன்பதி னாயிரத்துத் தொள்ளாயிரத் துத் தொண்ணூற்றாறு கர்மங்களும் ஸஞ்சிதங்கள் என்னப்படும். இம்மனித ஜன்மத்தைப் பெற்று இப்போது புதிதாய்ச் செய்கின்றோ மன்றோ? அங்ஙனம் செய்யப்படும் கர்மங்களே ஆகாமிகர்மங்க ளென்பனவாம். ஸஞ்சிதங்களையும் ஆகாமிகளையும் ஞானத்தினுலும் பிராயச் சித்தத்தினுலும் ஒழித்துப் போட லாம். ஆயினும் இந்த மனுஷ்ய தேகத்தைத்தந்து இதனுல் அனுபவிக்க வேண்டிய இன்ப துன்பங்களையும் தரத் தலைப்பட்டுள்ளதாகிய ப்ராரப்த கர்மம் மாத்திரம் ஞானத்தினுலாவது மற்றெதனுலாவது துலையாது. இதனை யனுபவித்தே ஒழிக்க வேண்டும். இவன் இப்போதிய செய்கைகளை நல்லவைகளாகவே செய் தாலும் அல்லது தீயவை களாகவே செய்தாலும் அல்லது ஹடங் கொண்டு வீய்பு பிடித்துச் சும்மா இருந்தாலும் ப்ராரப்தகர் மத்தின்படி எவ்வின்ப துன்பம் வரவேண்டுமோ அது வந்தே தீரும். அப்படி வரும் இன்ப துன்பங்கள் இப் போதிய செயல் களின் பயனென மூடர்களுக்குத் தோன்றும். இப்போதிய செய்கைகளுக்குப் பயன் மறு பிறவிகளில் தான் வரும். இப்போதிய இன்ப துன் பங்களெல்லாம் பூர்வ கர்மப் பயனே என்பது நிர்ணயம். இவ்வுண்மையே

> ஏவம் ஹடாச்ச தைவாச்ச ஸ்வபாவாத் கர்மணஸ்ததா |
> யானி ப்ராப்நோதி புருஷஸ்தத்பலம் பூர்வகர்மணாம் ||

> இங்ஙனம் ஹடத்தினுலும் தைவத்தினுலும் ஸ்வபாவத்தினுலும் செய்கையினுலும் மனிதன் எந்த இன்ப துன்பங்களை அடைகின் றனே அவை பூர்வ கர்மங்களின் பயனே.

என மஹா பாரதம் ஆரண்ய பர்வாவில் சொல்லப் பட்டுள்ளது. ப்ராரப்த கர்மத்தின்படி ஸுகமாவது துக்கமாவது வரத்தயாரா யிருக்கும்போது மனிதன் வாஸனு வசமாய் யாதானும் ஓர் காரியத்தைச் செய்யக்கூடும். அப்படிச் செய் யவே ப்ராரப்த கர்மாயத்தமாய் வருவது வந்து விடுகின்றது. உண்மை இவ்வித மாதலால் இப்போது வரும் இன்ப துன்பத்திற்கு ப்ராரப்த கர்மமே முக்கிய ஹேதுவா யிருக்கின்றது. இப்போது செய்யும் செய்கை நிமித்தம் போலக் காணப்படுகின்றது. இங்ஙனம் அறிய வேண்டிய தாயிருக்க மனிதர் அவிவே கத்தால் இவ்வா றறியாமல் இப்போது நிகழும் சுகதுக்கங்களெல்லாம் இப்போது செய்யும் காரியங்களின் பயன் என்றே எண்ணுகின்றனர். இப்போது செய் யப்படும் செய்கைகளே ஏது எனக்கொண்டோமானுல் உலகில் நல்லகாரியங் களைச் செய்வோரெல்லோருக்கும் ஸுகமும் கெட்டகாரியங்களைச் செய்வோர்

களெல்லோருக்கும் துக்கமுமே வரவேண்டுமென்றேற் படுகின்றது. ஆனால் உலகில் அப்படிப்பட்ட நியமத்தைக் காணுமே? நல்லகாரியங்களைச் செய்துகொண்டு துக்கத்தை அனுபவித்தலையும் கெட்ட காரியங்களைச் செய்து கொண்டு சுகத்தை அனுபவித்தலையும் காண்கின்றோமன்றோ. இதற்குக் கதிசொல்லவழியில்லாமற் போகின்றது. ஆதலால் இப்போது வரும் இன்பதுன்பம் பூர்வகர்மப் பயனே என்றும், இப்போது செய்யும் புண்ணிய பாபங்களுக்கு ஜன்மாந்திரத்தில் பயன் என்றும் அறிந்து கொள்ளவேண்டியது.

சங்கை? ப்ராப்த கர்மாயத்தமாகவே இன்பதுன்பம் வருமென்று சொல்லப்பட்டதே. இன்ப துன்பமாவது மானஸிகமாகிய விருத்தியேயன்றோ. ப்ராரப்தாயத்தமாகவருவது இப்படிப்பட்ட மானஸிகமாகவேயுள்ள விருத்திமாத்திரமா? அவ்விருத்திக்கு ஸாதனங்களாகிய செல்வம் வியாதி, தாரித்திரியம், முதலியவைகளும் கூட ப்ராரப்தாயத்தமாகவே வருவனவா? செல்வம் வியாதி தாரித்திரியம் முதலியவைகளுக்கு ஏதுவாய்க் காணப்படும் வியாபாரம், உத்தியோகம், கெட்ட நடத்தை, வ்ரதோப வாஸதானதர்மங்கள் முதலிய வைகளும் கூட ப்ராரப் தாயத்தமாகவே வருவனவா? எனின் கூறுவாம்.

இன்பதுன்பத்திற்கு நேரில் ஸாதனமான செல்வம், வியாதி, தாரித்திரியம், முதலியவைகள் மாத்திரமே ப்ராரப்தாயத்தமாக வருவன. அவைகளுக்கும் ஸாதனங்களான, வியாபாரம், துர்மார்க்கம், வ்ரதோபவாஸதான தர்மங்கள் முதலியனவும் ப்ராரப்த கர்மாயத்தமாய் வருவன என்பது தவறேயாம். அவைகளையும் ப்ராரப்தாயத்தமாக வருவன என்போமானால், இத்தகைய வியாபாரம் கூடாது, துர்மார்க்கம் செய்யாதே, வ்ருதோப வாஸதான தர்மங்களைச்செய், என்பது முதலிய விதிவிலக்குகள் வீணென்றேமுடியும். ஏனெனின் ப்ராரப்தாயத்தமாக வருவதைத் தடுக்க எவராலுமியலாதென சாஸ்திரங்கள் கூறுகின்றமையால் அதே சாஸ்திரங்களில் துர்மார்க்கம் முதலியவை கூடாது வ்ருதோபவாஸதான தர்மாதிகளைச்செய், என்று சொல்லியிருக்கின்றமையால், துர்மார்க்க, வ்ருதோப வாஸாதிகளை மனிதர் தம்மிச்சையால் செய்யவும் தவிர்க்கவும் கூடும் என்றறியப் படுகின்றது. தம்மிச்சையால் செய்யப்படுவதும் தவிர்க்கப் படுவதுமாகிய செய்கைகளெல்லாம் வாஸனையாலேயே வருவனவன்றி ப்ராரப்தத்தாலல்ல என்பதே சாஸ்திரங்களின் நிர்ணயம் என்று முன்னரே சொல்லப் பட்டது.

பூர்வம் தேஹத்தால் செய்யப்பட்ட பாப புண்ணியங்கள் பின்வரும் ஜந்மத்தில் தேக மூலமாகவே பயன் பட்டு துக்க சுகங்களைத்தரும். இந்திரியங்களால் செய்யப்பட்ட கர்மங்கள் இந்திரிய மூலமாகவும், மனோ மாத்திரத்தினால் செய்யப்பட்ட கருமங்கள் மனோ விருத்தி மாத்திரத்தினாலும் ஸ்வப்னாதிகளில் இன்ப துன்பங்களைத் தரும். உதாரணமாக ஒருவன் இன்றிரவில் சரீரத்தில் வ்ரணம் (காயம்) ஏற்பட்டு அதன் மூலமாய்த் துன்பமனுபவிக்க வேண்டுமென்பதுமட்டில் ப்ராரப்தகர்மாயத்தமே தவிர, துன்மார்க்கம் செய்ததனாலேயே அந்த வ்ரண மேற்பட வேண்டு மென்றாவது, அல்லது ஸந்மார்க்கத்தில் சென்றே அங்ஙனமாக வேண்டு மென்றாவது அவனது கர்மாவினால் விதிக்கப்பட்டிருக்கு

மென்பதல்ல. ரக்தக்காயம் ஏற்பட்டுத் துன்புறவேண்டுமென்பது மட்டுமே கர்ம நியதம். ஆனால் அது ஆலயாதிகளுக்கு ஸ்வாமி தரிசனம் செய்யப் போவதில் நிகழ்ந்தாலும் நிகழலாம், அல்லது துர்மார்க்கம் செய்யப்போன இடத்தில் அடி சிகைச்சேதம் முதலிய சிக்ஷைகளால் நிகழ்ந்தாலும் நிகழலாம். துர்மார்க்கம் செய்யப்போவதோ ஸத்காரியம் செய்யப் போவதோ இவை முதலியன அவரவர் வாஸனை யாலேயேயாம் என்றறிக. வாக்கு மனக்காயங்களால் செய்த கர்மாவின்பயனை முறையே வாக்குமனக் காயங்களாலேயே அனுபவிக்க வேண்டும் என்பது மட்டில் பூர்வ கர்ம நியதம் என்பதையே நிர்ணய மாகக் கொள்ள வேண்டும். இவ்வுண்மை யானது மஹா பாரதம் சாந்திபர்வம் மனு ப்ருஹஸ்பதிஸம்வாதப்ரகரணம் முதலிய இடங்களில்

𑌯𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑍇𑌣 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮 𑌶𑌰𑍀𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌤𑌤𑍍 ॥
𑌶𑌰𑍀𑌰𑌮𑍇𑌵𑌾𑌯𑌤𑌨𑌂 𑌸𑍁𑌖𑌸𑍍𑌯 𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌯 𑌚𑌾𑌪𑍍𑌯𑌾𑌯𑌤𑌨𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍 ॥
𑌵𑌾𑌚𑌾 𑌤𑍁 𑌯𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑍍𑌵𑌾𑌚𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌤𑌤𑍍 ॥
𑌮𑌨𑌸𑍍𑌤𑍁 𑌯𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌨𑍍𑌮𑌨𑌃𑌸𑍍𑌥 𑌏𑌵𑌾𑌯𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌤𑌤𑍍

> சரீரத்தால் எக்கருமத்தைச் செய்கின்றனோ அதன் பயனைச் சரீரத்தாலேயே அனுபவிக்க வேண்டும். சரீரமே சுகத்திற்கும் துக்கத்திற்கும் ஆயதனமாம். வாக்கினால் எக்கருமத்தைச் செய்கின்றனோ அதன் பயனை வாக்கினாலேயே அனுபவிக்க வேண்டும். மனஸினால் எக்கருமத்தைச் செய்கின்றனோ அதன் பயனை மானஸிக விஷயத்தாலேயே அனுபவிக்க வேண்டும்.

என்பது முதலிய வாக்கியங்களால் உபதேசிக்கப் பட்டிருக்கின்றது.

ஒருவன் சுரோத்திரம் (காது) எனும் இந்திரியத்தினால் பூர்வ ஜன்மத்தினில் ஏதோ ஓர் புண்ணியம் செய்திருந்தான் என வைத்துக்கொள்வோம். அதன் பயன் இப்போது அவ்விந்திரிய மூலமாகவே அனுபவிக்கப் படும் சுகமாயிருக்கவேண்டும். அம்மட்டும் ப்ராரப்த கர்மமேயன்றி அது துர்மார்க்கப் பாட்டைக் கேட்டே ஏற்பட வேண்டும் என்றாவது, ஸத்வாக்கியங்களை சிரவணம் செய்தே வரவேண்டு மென்றாவது நிர்ணயிக்கப்பட்டதல்ல. துர்மார்க்கப் பாட்டையோ ஸத் வாக்கியங்களையோ சிரவணஞ் செய்தல் அவரவரது வாஸனை யாலேயேயாம். இங்ஙனமே மற்ற இந்திரியங்களால் நிகழும் அனுபவத்திலும் ஊஹித்துக்கொள்க.

சங்கை, ப்ராரப்த கர்மா இந்த தேஹத்தையும், இதனால் ஜீவிக்க வேண்டிய காலத்தையும், அப்படியே வாழ்நாளில் அனுபவிக்க வேண்டிய இன்ப துன்பங்களையும் தருகின்றதென்று பூர்வம் சொல்லப் பட்டதன்றோ? தேஹமே ப்ராரப்தம் என்று பெரியோர் சொல்லுகின்றனரே? அம்மட்டோடே விடாமல் அது தேஹம், ஆயுள், போகம் என மூவ்வகையாய்ப பயன் படுகின்றதென்று ஏன் சொல்ல வேண்டும்? அன்றியும் இம்மனித தேஹமானது ஓர் பெரும் புண்ணி

யத்தினல் வந்த தென்று சொல்லப் பட்டதே. அவ்வாறு புண்ணியத்தின் பயனாக வந்த இந்த தேகத்தினல் வாழ்நாட்களின் இடையில் துக்கங்களையும் அனுபவிக்கும்படி யாதல் உசிதமோ? புண்ணிய மயமாகிய தேஹம் தோன்றியது முதல் அழியும் வரையில் இன்பத்தையே அனுபவித்த லல்லவோ உசிதம். அப்படியிருக்க பாபப் பயனாகச் சொல்லப்பட்ட துன்பத்தையும் அனுபவிக்கக் காண்கின்றேமே? இதனை எப்படி யொவ்வுவது எனின் இவ்வுண்மை யறிக.

கர்மாவானது தேஹம், அது ஜீவிக்கும் ஆயுள், இன்ப துன்ப போகம், என மூவ்வகையாய்ப் விபாகப் படுகின்ற தென்பதே உண்மை. இத்தேஹம் ஒரு பெரும் புண்ணியத்தினல் வந்த தென்பதும் உண்மையே. ஆனல் ஓர் பெரும் புண்ணியம் செய்யும் காலத்தி னிடையிலேயே பல அவாந்தரமான பாப புண்ணியங் களையும் செய்யக் காண்கின்றேம். உதாரணமாக ? ஓர் பிரபு சிவாலய ஜீர்ணோத்தாரம் தடாகம், நந்த வனுதிகளை ஸ்தாபித்தல் முதலிய பெரும் புண்ணியத்தைச் செய்து கொண்டிருக்கும் காலத்திலேயே, பிறன் பொருளைக் கவர்தல், பிறன் பெண்டீரோடு கூடுதல், கூலியாள்களின் கூலியைப் பிடித்துக் கொள்ளுதல் முதலிய அவாந்தரமான பாபங்களையும் செய்யக் கூடுமன்றே. அவ்வவாந்தர பாபங்கள் ஜன்மாந்தரத்தில் ஓர் முக்கிய கர்மத்தின் பயனை அனுபவிக்கும் காலத்தி னிடையிலேயே தத்தம் பயனுன துன்பத்தைத் தந்துவிடும். ஒரே ஓர் கர்மாவினலேயே இம்மனித ஜன்மம் வருகின்ற தென்று எண்ணக் கூடாது. ஏதோ முக்கிய கர்ம அவாந்தர கர்மங்களின் தொகுதியாலேயே வந்த தென்பதே உண்மை. இவ்விஷயத்தைப் பதஞ்சலி தர்சனம், (யோக ஸூத்ரத்தினில்.)

"ஸதி மூலே தத்விபாகோ ஜாத்யாயுர்போகா:"

"காரணமுள்ளவரை கர்மத்தின் விபாகமானது ஜன்ம ஆயுள், போகம் எனும் மூவ்வகையாம் "

எனும் ஸூத்திரத்தின்பாஷ்ய வியாக்யானங்களில் வியாஸர் வாசஸ்பதி மிச்ரர் எனும் இவ்விரு பெரியோர்களால் மிக்க விஸ்தாரமாக விசாரித்து நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றது. முக்கிய கர்மத்தின் இடையில் அவாந்தா கர்மங்கள் பயன் படுகின்றமைபற்றியே மனிதர் வாழ்நாள்களில் இன்ப துன்பங்களை மாறி மாறி அனுபவிக்கக் காண்கின்றேம்.

சுபப்ராரப்தம் பயன்படும்போது சுபவாஸனையே முளையவேண்டுமென்றுவது அல்லது அசுபப்ராரப்தம் வரும்போது அசுபவாஸனையே முளைய வேண்டுமென்பதாவது நியமமல்ல. ப்ராரப்த கர்மா அசுபமாய் நேரும்போது வாஸனை சுபமாய் நேருவதுமுண்டு. அங்ஙனமே சுபப்ராப்தம் வரும்போது அசுபவாஸனைநேருவது முண்டு. ப்ராரப்தம் வாஸனை இவ்விரண்டும் ஓர்வகையாய் சுபங்களாகவே யாவது அசுபங்களாகவேயாவது நேருவ துமுண்டு. கர்மகதி வாஸனுகதி யிவ்விரண்டின் விசித்திரத் தன்மையை உள்ளபடிதெரிந்துகொண்டவன் ஈசனே. ஸத்குருவின் மொழியினலும் சாஸ்திராராய்ச்சியினலும் ஏதோ யான் தெரிந்து

கொண்டதைச் சுருக்கமாகத் திருஷ்டாந்த வாயிலாய்த் தெரிவிக்கலானேன். அதாவது ப்ராரப்த கர்மா அசுபமாகவும் வாஸனை சுபமாகவும் நேரும்போது அவ்வாஸனையின்படி நடப்பானுயின் வ்ருதோபவாஸ தானதர்மாதிகளைச்செய்து வியாதிதாரித்திரியம் முதலியவைகளின் நிமித்தமாய்த் துன்புறலாகும். ப்ராரப்தம் சுபமும் வாஸனை அசுபமுமாக நேருமாயின் பிறன் பெண்டீரோடு கூடுதல், பிறன் பொருளைக் கவர்தல் முதலிய காரியங்களில் சென்று அந்த நிமித்தமாய் இன்பமனுபவிக்கலாகும். ப்ராரப்தம் வாஸனை இவ்விரண்டும் அசுபமாய் நேருமாயின் திருட்டு பிறன் பெண்டீரோடு கூடுதல் முதலிய கெட்ட காரியங்களில் சென்று மானஹானி தண்டனைப் படுதல் பொருள் விரயப் படுதல் முதலியவைகளின் நிமித்தமாகத் துன்புறலாகும். ப்ராரப்தம், வாஸனை இவ்விரண்டும் சுபமாக ஒத்துக்கொண்டால் தீர்த்த யாத்திரை, திவ்ய ஸ்தல தரிசனம் முதலிய நல்ல காரியங்களைச் செய்யப்போய் அப்படிச் சென்றவிடத்தில் ராஜஸ்நேஹம்,உத்தியோகம் முதலியவைகளின் நிமித்தமாய் இன்ப மனுபவிக்கலாகும். இங்ஙனம் உலகநடையைக் கொண்டு திருஷ்டாந்தங்களை ஊஹித்துக் கொள்ள வேண்டும்.

இவ்விதம் கர்மாவேறு வாஸனை வேறு என்பது வியக்தமாயிருக்க இதனையறியாதவர்களாய் “ நான் யாது செய்வேன்? எனது கர்மா என்னைக் கெட்ட காரியத்தில் ஏவும்போது அதனை மீறிநடக்க என்னு லியலுமா ? ” என்று சொல்லிக்கொண்டே கெட்ட காரியத்தைச் செய்துபோடும் பலரைத் தற்காலம் விசேஷமாய்க் காணலாம். லௌகிகர் மட்டு மிங்ஙனம் என்பதல்ல. தற்காலம் வேதாந்த சாஸ்திரம் படித்தவரெனக் கருதப்படும் சாஸ்திரிகளும் இத்திரிபுணர்ச்சியைக் கொண்டே கெட்ட காரியஞ் செய்வதைக் காணலாம். ஸங்கற்ப காமாதிகள் ஸுகதுக்கம் ஆகிய இவையெல்லாம் ப்ராரப்த கர்மத்தாலேயே வருவன எனும் இப்பெரும் மோஹம் தற்காலம் மிகுதியாயிருத்தலுக்குக் காரணம், ஸரியான குருவினிடம் செல்லாமையும் கிரமப்படி வேதாந்த மோதாமையுமேயாம். வாஸனையை அங்கீகரியாமல் ஸகலமும் ப்ராப்தகர்மத்தாலேயே வருகின்றதெனக் கொள்வோமாயின் நியாயஸ்தலம், சிறைச்சாலை, முதலியனவும் வேத சாஸ்திரங்களும் வீணென்றே ஏற்படும். ஏனெனின் மீற முடியாததாகிய ப்ராரப்த கர்மாவே கெட்ட காரியத்தில் ஏவுகின்றபடியால் அதன்படியே நடப்பவனுகிய இவன்பேரில் குற்றம் யாதுமில்லை யென்றே ஏற்படுமாதலால் குற்றம் செய்தவரைத் தண்டித்தல் முதலியது நியாயமாகாது. ஆதலால் நியாயஸ்தலம் சிறைச்சாலை முதலியது வேண்டியதில்லையன்றோ? அன்றியும் “ மீற முடியாததாகிய ப்ராரப்த கர்மாவானது மோக்ஷத்தை யளிப்பதா யேற்பட்டிருக்குமாயின் மனிதன் எப்படி யிருந்தாலும் அது வந்தே தீருமன்றோ. அப்படியாயின் வேதசாஸ்திரங்களால் யாதும் பயனில்லை என்றே ஏற்படும். ஆதலால் இப்படிப்பட்ட அநௌசித்தியங்களை யோஜித்தாலும் கெட்ட காரியங்களில் ஸங்கற்ப முதிப்பது ப்ராரப்தகர்மத்தா லென்பது சுத்தப்பிசகென்று நன்ருய் விளங்கும்.

அன்றியும் நமது சாஸ்திரங்களில் எவ்விடத்திலும் கர்மாவையும் வாஸனையையும் வேறுபடுத்திச் சொல்லப்பட்டிருக்கின்றதே யன்றி ஓரிடத்திலாவது ஒன்றுபடுத்திச் சொல்லவில்லை. அதாவது (ப்ருஹதாரண்ணியோபநிஷத்) (6—4)

" 𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌰𑍍𑌮𑌣𑍀 𑌸𑌮𑌨𑍍𑌵𑌾𑌰𑌭𑍇𑌤𑍇 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌚 "

> பரலோகம் செல்லுகின்றவனாகிய அந்த ஜீவனை வித்தியா கர்மங்களும் பயன் கொடுப்பதற்கு நன்கு பற்றிக் கூடச் செல்லுகின்றன. பூர்வ ஜன்மங்களில் அப்பியஸிக்கப்பட்ட மாலை, சந்தனம், மங்கை முதலிய விஷயபோகவாஸனையும் கூடச்செல்லுகின்றது

எனும் இச்சுருதியில் வித்தியாகர்மங்கள் கூடச் செல்லுகின்றன எனச் சொல்லிப்பிறகு பூர்வப்ரஞ்ஞை என்ற தனித்தசொல்லினால் வாஸனையே சொல்லப்பட்டிருக்கின்றமையால் கர்மா வேறு, அதனிலும் வாஸனை வேறு என்பது நன்றாய் அறியப்படுகின்றது. அன்றியும் இச்சுருதியின் வாக்கியத்திற்கே பொருள் விளக்கவந்து,

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌵𑌾𑌸𑌨𑌾𑌭𑌿𑌶𑍍𑌚 𑌸𑌂𑌯𑍁𑌤𑌃 |
𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌸𑌰𑍍𑌪𑌤𑌿 ||

> வித்தியா கர்மங்களோடும், வாஸனைகளோடும் கூடியவனாய் ப்ராக்ஞாத்மாவை அடைந்து ஜீவன் வெளிப்படுகின்றான்.

என உத்க்ராந்தியை நிரூபிக்க வந்த சிவகீதா வசனத்தாலும் இங்குள்ள பூர்வப்ராக்ஞை எனுஞ் சொல்லுக்கு வாஸனை என்பதே பொருள் என்பது நன்கறியப்படுகின்றது. அன்றியும் பிரும்மஸூத்ரம் (௩-அத்-௩-பா) " 𑌸𑌮𑌨𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌣𑌾𑌤𑍍 "

எனும் ஸூத்ரத்தினுரையில் ஆசிரியர் ஸுரேச்வரரும் இங்குள்ள பூர்வப்ராக்ஞா எனும் சொல்லுக்கு வாஸனை யென்றே பொருள் படுத்தி இருக்கின்றனர். வாஸிஷ்டத்திலும்

" 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍋 𑌵𑌾𑌸𑌨𑌾𑌵𑍍𑌯𑍂𑌹 𑌶𑍁𑌭𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌶𑍁𑌭𑌶𑍍𑌚 𑌤𑍇 |
𑌕𑌯𑍋 𑌵𑍇𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍋 𑌹𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌯𑍋𑌜𑌯𑌤𑌿 𑌸𑌂𑌕𑌟𑍇 |
𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌤𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌭𑌃 𑌪𑍌𑌰𑍁𑌷𑍇𑌣 𑌜𑍇𑌤𑌵𑍍𑌯𑍋 𑌹𑌠𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌯𑌂 "||

> வாஸனையின் கூட்டம் சுபம் அசுபம் என இரு வகையாம். இனி அசுப வாஸனை உன்னைக்கெட்ட காரியத்தில் ஏவும்போது அப்பூர்வ வாஸனை முயற்சி கொண்டு உன்னால் வெல்லத் தக்கது.

என்று கூறியுள்ளது. இவ்வாஸிஷ்ட வசனத்தாலும் வாஸனை சுபம், அசுபம் என இருவகையாயுள்ளதென்பதும் செய்கையில் ஏவுவது அதுவே என்பதும் கர்மாவிலும் அது வேறு என்பதும் வியக்தமா யறியப்படுகின்றது.

அன்றியும் விவேகசூடாமணி முதலிய நூல்களில்

[illegible]
[illegible]

ப்ராப்தம் மிக்கப்பிரபலமாம். ப்ரும்மவித்துகளும் அதனை அநுபவித்தே தீரவேண்டும். ஸஞ்சிதம் ஆகாமி இவ்விரு கர்மங்களும் அபரோக்ஷ ஞானத்தினால் நசிக்கும்.

என ப்ராரப்தாயத்தமாய் வருவதை ஞானிகளும் புசித்தேதீரவேண்டுமென நிர்ணயித்துஅதே பிரகரணத்தில்

[illegible] |
[illegible] ||

வாஸனையின் முனைதலால் செய்கையும் செய்கையின் மிகுதியால் வாஸனையுமாக இங்ஙனம் இரண்டும் வளர்ந்தோங்குகின்றன. அப்படியோங்குகின்றமையால் ஜீவருக்கு ஸம்ஸாரம் ஓங்குகின்றது. நிவிர்த்தி வருகின்றதில்லை.

"[illegible]"

"ஸம்ஸாரபந்தம் ஒழியவேண்டின் அவ்விரண்டையும் நன்கு அறுத்துப் போடவேண்டும்"

என வாஸனையை ஒழித்தாலேயே ஸம்ஸாரபந்தம் நீங்கும் ஆதலின் வாஸனையும் அதனாலேற்படும் செய்கையும் ஆகிய இவ்விரண்டையும் கிரமமாக ஒழித்துவிடவேண்டுமெனப் பிராப்தத்திலும் வாஸனையை வேறுபடுத்தியே சங்கராசாரியர் முதலிய பெரியோர்களால் உபதேசிக்கப் பட்டிருக்கின்றது.

தவிரவும் ப்ரஹ்மஸூத்ரம்

"[illegible]||"

எனும் (2—1—34) ஸூத்திரபாஷ்யத்தினது உரையில் வாசஸ்பதி மிசிராசிரியரும்

[illegible] |
[illegible] ||

ஜந்மஜந்மங்களாய் தானம் அத்தியயனம் தவம் முதலிய எந்தச் செயல் அப்பியாஸத்தி லேற்பட்டிருக்கின்றதோ அவ்வப்பியாஸ யோகத்தினாலேயே மீண்டும் அப்படிப்பட்ட காரியங்களையே மனிதன் செய்ய ஆரம்பிக்கின்றான்.

எனும் ஸ்ம்ருதிவாக்கியத்தைப் பிரமாணமாகக் காட்டி மனிதர் வாஸனையெனும் அப்பியாஸஸம்ஸ்காரத்தினாலேயே செய்கையில் பிரவர்த்திக்கின்றனர் என்பதை நன்றாய் நிரூபித்திருக்கின்றனர்.

வாஸனையும் ஸங்கற்ப காமாதிகளின் மூலமாகவே செய்கையில் ஏவும். ஆதலின் வாஸனையால் ஏற்படும் ஸங்கற்பத்திற் கிடங்கொடுக்கினும் அந்த ஸங்

கற்பத்தாலேற்படும் காமக்குரோதங்களுக்கு மாத்திரம் இடங்கொடாமல் மனிதர் மனஸை நிக்ரஹித்துவிட்டால் வாஸனையால் ஏற்பட்ட ஸங்கற்பமும் பயனற்றதாய்விடும். ஆதலால் காமக்குரோதங்களை நிக்ரஹித்து விடுதலும் வாஸனையை நிக்ரஹித்துப் போடுதலேயாகின்றது. இவ்வுண்மையே

ஃயெகெ நவ_ஜுய‿ஸெ நூாயம் வாவஞுாந.திவ‿ஸொ‿ஷஃ|
ஃநிஹுநுவிவாஶெஷ்ணுய ஜவாஃிவநியொஜிதஃ ||

ஓ கிருஷ்ணபகவானே தனக்கு இச்சையிராமலிருக்கும்போதே மனிதன் பாபத்தைச் செய்யும்படியாகின்றதே அது எதன் ஏவுதலினால் ஏற்படுவது?

என வினவிய அர்ச்சுனனுக்கு

காஃவைஷகெநா யவைஷ ரஜொமுணஸமுூவஃ|
ஃஹாஶநொ ஃஹாவாஹூா விஜெ்நுஹ ஃஹ வெரிணஃ ||

ரஜாகுணத்தினால் ஏற்படுவதாகிய காமமும் குரோதமுமே. பெரும் போசனமுடையதும் பெரும்பாபமுடையதுமாகிய இதனையே சத்துரு என அறிந்துகொள்.

எனப் பகவானால், வாஸனையாலேற்படும் காமக்குரோதங்களே பிரவர்த்தகங்களென உபதேசிக்கப்பட்டிருத்தலும் காண்க.

இங்ஙனம் ப்ராசீன நூல்களில்கர்மா வேறு வாஸனைவேறு, கர்மாவினால் வருவது இன்ப துன்ப போக மாத்திரமே, வாஸனையால் வருவன ஸங்கற்ப காமக்குரோதாதிகள் என ஸ்பஷ்டமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஆயினும் வேதாந்த நூல்களில் இவ்விஷயம் மிக்க விஸ்தாரமாய் சொல்லப்படாமல் ஸங்கிரஹமாகவே சொல்லப்பட்டிருத்தலுக்குக் காரணம் யாதெனின், ஏனைய யோகம், நியாயம் முதலிய தரிசனங்களில் இவ்விஷயம் விஸ்தாரமாகவே சொல்லப்பட்டிருக்கிறதென்பது கொண்டே என்றறிக. மற்ற தரிசனங்களில் சொல்லியிருத்தலால் வேதாந்தப் பிரகரணங்களில் ஸங்கிரஹமாய்ச் சொல்லவேண்டுமென்பது என்ன நியமம் எனின், மற்ற தரிசனங்களைக்கற்ற பின்னரே வேதாந்தம் கற்கவேண்டுமென்பது வேதாந்தமோதும்முறை. பூர்வ காலங்களில் அம்முறையின்படியே வேதாந்தமோதப்பட்டு வந்தது. ஆதலால் வேதாந்தமோதுதற்கு முன்னரே கர்மாவுக்கும் வாஸனைக்குமுள்ள வேற்றுமை, ஸ்வர்க்க நரகாதி லோகாந்தரவியல்பு, ஈச்வரோபாஸ்தி ஈச்வராநுக்ரஹம் முதலியனவகளின் ஸ்வரூபம், முதலிய விஷயங்களெல்லாம் யோகம் நியாயம் முதலிய தரிசனங்களின் ஆராய்ச்சியால் நன்கு அறியப்பட்டிருந்தன. ஏற்கனவே மற்ற தரிசனங்களில் விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டதென்பது கொண்டே இவ்விஷயம் ப்ரும்மஸூத்திரம், முதலிய நூல்களிலும் மற்றுமுள்ள வேதாந்தப் பிரகரணங்களிலும் விஸ்தாரமாகச் சொல்லப்படவில்லை. தற்காலமோ எனின் வேதாந்தமோதுவதில் ஏற்பட்டிருந்த ப்ராசீன ஸம்ப்ரதாயம் குலைந்து

சிரழிந்து போனமையால் இவ்விஷயங்கள் தெரிந்து கொள்ளுதல் அரிதாய் விட்டது. சாஸ்திர ஞானம் தெளிவுபட வேண்டுமாயின் தற்காலம், யோகம் நியாயம் முதலிய தரிசனாந்தரங்களின் கல்வி அவசியம் வேண்டும். அவைகளை நன்கு கற்றபின்னரே வேதாந்தத்தில் தலையிடவேண்டும். அங்ஙனமின்றி எடுத்ததும் வேதாந்தம் படித்தலாகிய தற்காலவழக்கமானது கர்மா, ஸ்வர்க்க நரகாதி லோகாந்தரம், ஈச்வரன், முதலிய பொருள் இல்லவேயில்லையெனும் நாஸ்திகத்தன்மைக்கே ஏதுவாய் முடியும். இனி தரிசனாந்தரங்களில் இவ்விஷயம் எங்கு சொல்லப்பட்டிருக்கின்றதெனின்,

"𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑌰𑌣𑌾𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌾𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍

எனும் விபூதி பாதம் பதினெட்டாம் ஸூத்திரத்தில் பதஞ்ஜலிமாமுனிவரால் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த ஸூத்திரத்தின் பாஷ்யத்தினில் பாதராயணமுனிவரால்

"𑌦𑍍𑌵𑌯𑍇 𑌖𑌲𑍍𑌵𑌮𑍀 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌕𑍍𑌲𑍇𑌶𑌹𑍇𑌤𑌵𑍋 𑌵𑌾𑌸𑌨𑌾𑌰𑍂𑌪𑌾𑌃 𑌵𑌿𑌪𑌾𑌕𑌹𑍇𑌤𑌵𑍋 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌾𑌃"||

> இந்த ஸம்ஸ்காரங்கள் இருவகையாகவே யுள்ளன. ஸ்மரணக் கிலேசங்களுக்கு ஏதுவாயிருப்பவை வாஸனைகள் என்பனவாம். ஸுக துக்கவிபாகத்திற்கு ஏதுவாயிருப்பவை தர்மாதர்ம ரூபங்களாம்.

என்பதாதி வாக்கியங்களால் சித்தத்திலுள்ள ஸம்ஸ்காரங்கள் வாஸனை, தர்மாதர்ம மல்லது கர்மா, என இருவகைப்படுமெனவும், வாஸனையெனும் ஸம்ஸ்காரம் ஸ்மரணராகத்துவேஷாதிகளுக்கு ஏதுவாகுமென்றும், தர்மாதர்மங்களெனும் ஸம்ஸ்காரங்கள் ஸுகதுக்காதி விபாகத்திற்கே ஹேதுவாகுமென்றும் வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருத்தல் காண்க. அன்றியும் யோகஸித்தியால் ஏற்படும் விஷயபோகங்களுக்கு வாஸனை ஏற்படுகின்றதில்லை என்பதை நிரூபிக்க வந்ததாகிய

"𑌤𑌤𑍍𑌰 𑌧𑍍𑌯𑌾𑌨𑌜𑌮𑌨𑌾𑌶𑌯𑌮𑍍"

எனும் கைவல்யபாதத்திலுள்ள ஸூத்திரத்திலும், மனுஷ்ய முதலிய ஜன்மங்களில் ஊன்றிய வாஸனைகள் பசு பக்ஷி முதலிய ஜன்மங்களை எடுத்திருக்கும்போது முளைவனவல்ல. மனுஷ்ய முதலிய ஜன்மங்களிலேயே அபிவ்யக்தமாகும் எனும் விஷயத்தை நிரூபிக்கவந்த

"𑌤𑌤𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌾𑌕𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌾𑌸𑌨𑌾𑌨𑌾𑌮𑍍"

எனும் ஸூத்திரத்திலும், இன்னம்

"𑌜𑌾𑌤𑌿𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌵𑍍𑌯𑌵𑌹𑌿𑌤𑌾𑌨𑌾𑌮𑌪𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌯𑍋𑌰𑍇𑌕𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌾𑌤𑍍"

"𑌤𑌾𑌸𑌾𑌮𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌂 𑌚𑌾𑌶𑌿𑌷𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍"

"𑌹𑍇𑌤𑍁𑌫𑌲𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌲𑌮𑍍𑌬𑌨𑍈𑌃𑌸𑌙𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌷𑌾𑌮𑌭𑌾𑌵𑍇
𑌤𑌦𑌭𑌾𑌵𑌃"

என்பது முதலிய ஸூத்ரங்களிலும் பாஷ்யகர்த்தாவாகிய வியாஸராலும் அதன் உரையாசிரியராகிய வாசஸ்பதிமிசிரராலும் விருத்திகாரராகிய போஜராலும் வாஸனை கர்மாவிலும் வேறு என்பதும் வாஸனையாலேயே ஸங்கற்பாதிகள் ஏற்படுகின்றன என்பதும் மிகவும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் கண்டுகொள்க. நியாயதர்சனம் நியாயகாரிகையில்

"𑌭𑌾𑌵𑌨𑌾𑌖𑍍𑌯𑌸𑍍𑌤𑍁𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍋𑌜𑍀𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃"

"பாவனை எனும் ஸம்ஸ்காரம் ஜீவனிடம் உள்ளதும் அதீந்திரியமுமாம்"

என வாஸனையைச்சொல்லிப் பிறகு

"𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌵𑌦𑍃𑌷𑍍𑌟𑌂𑌸𑍍𑌯𑌾𑌤𑍍"

"தர்மாதர்மங்கள் அதிருஷ்டம் என்பதாம்"

என்று கர்மாவைத்தனியே நிரூபித்து, அதன் பின்னர் வாஸனையின் ஏவுதலாலேயே நல்வினை தீவினைகள் நிகழுவன என்பதை

"𑌏𑌤𑍇𑌤𑍁𑌵𑌾𑌸𑌨𑌾𑌜𑌨𑍍𑌯𑌾𑌃"

"இந்த நல்வினை தீவினைகள் வாஸனையால் நிகழுவன"

எனும் வாக்கியத்தினுல் சொல்லப்பட்டிருத்தலைக் கவனித்தால் சர்மாவிலும் வாஸனை வேறு என்பதே நியாயதரிசனத்தின் கருத்து என்பதும் வியக்தமாய் விளங்குகின்றது. இன்னம் உதஹரிக்கக்கூடிய பிரமாணவாக்கியங்கள் ஏராளமாயிருக்கின்றன; விரிவஞ்சி விடுகின்றனம்.

ப்ராசீனகிரந்தப் பிரமாணங்களாலும் யுக்திகளாலும் வாஸனையே ஜீவர்களை நல்வினை தீவினைகளில் ஏவுவது என்பது ஸ்பஷ்டமாக விளங்குகின்றதாயிருக்கத் தற்காலம் சிலர் "ப்ராரப்தசர்மாவே ஜீவர்களை ஏவுவது, என்றும் கீதையிலும் இப்படியே சொல்லப்பட்டிருக்கிறதென்றும் சொல்லிக்கொண்டு அதற்குப் பிரமாணமாக

"𑌸𑌦𑍃𑌶𑌂𑌚𑍇𑌷𑍍𑌟𑌤𑍇𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌃𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑌪𑌿।
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂𑌯𑌾𑌨𑍍𑌤𑌿𑌭𑍂𑌤𑌾𑌨𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃𑌕𑌿𑌂𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿॥

"தனது பிரகிருதிக்குத் தக்கபடியே ஞானவானும் சேஷ்டிக்கின்றான். பிராணிகள் பிரகிருதியை யடைகின்றனர் நிக்ரஹம் யாது செய்வதாம்"

எனும் மூன்றுமத்தியாய சுலோகத்திலுள்ள பிரகிருதியெனும் சொல்லுக்கு ப்ராரப்த கர்மாஎனப்பொருள் கொள்ளுகின்றனர். இது மிக்கப்பேதமையேயாம். ஏனெனின் இங்குள்ள பிரகிருதி எனும் சொல்லுக்கு வாஸனையென்பதே பொருள் கொள்ளவேண்டியது. அப்படிக் கொள்ளாவிடில் ப்ரகிருதி ஏவி

ஞூலும் அதனால் வரும் ராகத்துவேஷங்களை வென்றுபோடு, எனச்சொல்ல வந்த இதற்கடுத்ததாகிய

"इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥

இந்திரியங்கள் தோறும் இஷ்டவஸ்துவில் ராகமும் அநிஷ்டவஸ் வில் துவேஷமும் ஏற்பட்டு நன்ருய் ஊன்றியிருக்கின்றன. அவைக ளுக்கு வசமாகக்கூடாது. ராகத்துவேஷங்களே இவனுக்குச்சத்துரு.

எனும் சுலோகத்திற்கு விரோதமேயாகும். இதனை விடுத்து இங்கு ப்ராரப்த கர்மாஎனப் பொருள் கொண்டோமானல் அதனல் வரும் ராகத்துவேஷங்களை மீறி விடவேண்டுமென்பதற்கிடமில்லை யன்றோ. ப்ராரப்த கர்மாவினல் வரு வதை மீறமுடியாதென்பது சாஸ்திரங்களின் துணிபல்லவா. ஆதலால் இங்கு ப்ரகிருதி எனும் சொல்லுக்கு வாஸனை என்பதே பொருள் என்பது நிர்ணயம். அன்றியும் ஸ்ரீ சங்கராசார்ய பாஷ்யத்தில் இங்குள்ள ப்ரகிருதி எனும் சொல் லுக்கு அர்த்தம் சொல்லும்போது

"प्रकृतिर्नाम पूर्वकृतधर्माधर्मादिसंस्कारो वर्तमान जन्मादावभिव्यक्तः"

"ப்ரகிருதியாவது பூர்வ ஜன்மங்களில் செய்யப்பட்ட தர்மாதர்மம் முதலியவைகளுக்குத் (இன்பதுன்ப போகங்களுச்கும்) தக்கபடி ஏற் பட்டுள்ளதும் இந்த ஜன்மம் முதலில் அபிவ்யக்தமா யுள்ளதுமான ஸம்ஸ்காரமாம்.

என்றும்

"या हि यस्य प्रकृतिः सा रागद्वेषव्यवधानेनैव स्वकार्ये पुरुषं प्रवर्तयति"

"யாதொன்று ஜீவனின் பிரகிருதியோ அது ராகத்துவேஷ முன் னதாகவே தனது காரியத்தில் பிரவர்த்திக்கச்செய்கின்றது"

என்றும் சொல்லப்பட்டிருக்கின்றமையாலும், வியாக்கியான கர்த்தாவாகிய சங் கரானந்த ஸரஸ்வதீ முதலியவர்களாலும்

"स्वस्याः प्रकृतेः, वासनायाः सदृशमनुरूपम्":

"தனது பிரகிருதிக்கு = வாஸனைக்கு, ஸத்ருசம், தக்கபடி என்பது முதலிய வாக்கியங்களால் வாஸனையென்றே பொருள் கொள்ளப்பட்டிருக் கின்றது.

ஸ்ரீ ராமாநுஜாசார்ய பாஷ்யத்திலும்

"ज्ञानवानपि स्वस्याः प्रकृतेः प्राचीनवासनायाः सदृशम्"

ஞானவானும் தனது பிரகிருதிக்கு = பூர்வ வாஸனைக்குத்தக்கபடி".

எனும் வாக்கியத்தினல் வாஸனை யென்றே கொள்ளப்பட்டிருக்கின்றது

ஸ்ரீ மத்துவாசார்ய பாஷ்யத்திலும்

“ ப்ரக்ருதி: பூர்வஸம்ஸ்கார: ”

“ப்ரகிருதியானது பூர்வஜன்ம ஸம்ஸ்காரமாம்” என இவ்வாறே கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆதலால் இங்குள்ள ப்ரகிருதி எனும் சொல்லுக்கு ப்ராரப்த கர்மா எனப்பொருள் படுத்திய நவீனகிரந்தவாக்கியங்களை அசாஸ்திரீயமென்றே கொள்ளவேண்டியது.

இனி இங்கோர் சங்கை ; இதுவரையிலும் செய்த விசாரணையால் கர்மாவினாலேயே இன்பதுன்பங்களும் வாஸனையாலேயே ஸங்கற்ப முதலியவைகளும் ஏற்படுகின்றன என்று நிர்ணயிக்கப்பட்டமையால் உலகவியவஹாரம் கர்மவாஸனை எனும் இவ்விரண்டினாலேயே நடைபெறுகின்றது என்றேற்படுகின்றதே. இப்படியானால்

“ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி” கௌஷீத (3—8)

“ இவ்விறைவனே இவனை நல்ல கர்மாசெய்யும்படி ஏவுகின்றான் ”

“பராத்து தச்ச்ருதே: | ப்ரும்மஸூ(2—4—3)

“ ஈசுவரனாலேயே ஜீவர்களுக்குக் கர்த்திருத்தவம் அங்ஙனம் சுருதி கூறுதலால் ”

“ அஜ்ஞோ ஜந்துரநீசோऽயமாத்மந: ஸுகது:கயோ: |

“ஈச்வரப்ரேரிதோ கச்சேத் ஸ்வர்கம் வா ச்வப்ரமேவ வா || மஹாபா.

இந்த ஜீவன் தனது ஸுகதுக்கங்களில் ஸ்வதந்திரனல்ல. ஈசுவரனால் ஏவப்பட்டே ஸ்வர்க்கத்தையோ அல்லது நரகத்தையோ அடைகின்றான்.

“ஈச்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேऽர்ஜுந திஷ்டதி |

ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா” ||

ஓ அர்ச்சுன ஈச்வரன் மாயையாகிய யந்திரத்தை அடைந்துள்ள ஸகல ஜீவர்களையும் பிரமிக்கச்செய்துகொண்டு ஸகல ஜீவர்களின் இருதயத்தில் இருக்கின்றான்.

என்பது முதலிய பிரமாண வாக்கியங்களால் ஜீவர்களை ஏவுவோன் ஈசனே என்பதாக சொல்லப்படுதல் எப்படிப்பொருந்தும் என்பதாம்.

இங்கு இவ்வுண்மையறிக. கர்மா, வாஸனை இவ்விரண்டும் சித்தத்தினில் உள்ள பதிவுகளே யாதலின் அசேதநங்களேயாம். அசேதநமாவது இவன் இந்தக் கர்மாவைச்செய்தான். அதற்கு இதுபயன் எனும் விஷயத்தையறிந்துகொள்ளுதற்கு இயலாத ஜடப்பொருள் என்பதாம். ஜீவர்களால் செய்யப்படும் கர்மாவே அதற்குறிய பயனைத்தருகின்றதென்றும், ஜீவர்களால் அப்பியஸிக்கப்பட்டேன்றிய வாஸனையே அதற்குத்தக்க காரியங்களில் ஏவுகின்றதென்றும் சொல்லியதனால், ஸர்வக்ஞனும் ஸர்வவல்லமை பொருந்தியவனுமாகிய ஈச்

வரனேயின்றி இவைகளாலேயே இவ்வாறு நடக்கின்றதெனக் கொள்ளுவது உசிதமல்ல. முழுமுதற்கடவுளாயுள்ள சேதனன ஈச்வரனது ஆக்ஞையினு லேயே கர்மா இன்பதுன்பங்களைத் தருவதும் வாஸனை ஸங்கற்பாதிகளை யுண் டாக்குவதுமாம் என்பதே உண்மை.

உலகினில் கூலிக்காரன் செய்யும் வேலையே அதற்குள்ள கூலியைக்கொடு க்கின்றதென்பதில்லை. வேலையெனின் செய்கையே. செய்கை அறிவில்லாத தொழில் மாத்திரமே யாகையால் அசேதனமேயாம். அசேதனமாகிய வேலை யானது "இதற்கு இவ்வளவு கூலிகொடுக்கவேண்டும்" என்பதை அறிய இய லாதாகையால் அவ்வேலையை யறிந்த சேதனனாகிய எஜமானனே அதற்குள்ள கூலியைத்தருவதுபோல ஜீவர்களது கர்மாக்களும் வாஸனைகளும் அசேதனங் களாதலால் அக்கர்மங்களுக்குத்தக்க இன்பதுன்பங்களும் வாஸனைகளுக்குத் தக்க ஸங்கற்பங்களும் எல்லாமறிவோனாகிய இறைவனது ஆக்ஞையாலேயே ஏற்படவேண்டுமென்பதே உசிதம். ஆதலால் ஸகல காரியங்களுக்கும்பொது நிமித்தகாரணனாயிருக்கும் ஈசனே ஜீவர்களை யேவுகின்றானென்பதாம்.

ஈச்வரனுடைய அறிவுக்கு விஷயமாகாமல் எக்காரியமும் ஏற்படாதா தலால் அவனின்றி ஓர் அணுவும் அசையாது, ஸகலமும் அவனது ஸங்கற்பத் தால் நடைபெறுகின்றது, என்பது முதலிய வாக்கியங்கள் பொதுவகையில் நிமித்தனாயிருக்கும் தன்மையை நோக்கியே பிரவர்த்தித்தவை என்றறிக. ஆதலால் கர்மாவினாலும் வாஸனையினாலுமே உலகவியவஹாரம் ஏற்படுகின்றது என்பதற்கும் ஸகலத்திற்கும் நிமித்தமாயுள்ளது ஈச்வர ஸங்கற்பம் எனும் வாக்கி யத்திற்கும் சிறிதும் விரோதமாகாது என்பதறிக இவ்வுண்மையே ப்ரும்மஸூத்தி ரம் இரண்டாமத்தியாயம் (வைஷம்யநைர்க்ருண்யே) வைஷம்யனைர்க் கிருண்யாதிகரணத்தின் பாஷ்யத்தினில்

பர்ஜந்யவதீச்வரோ த்ரஷ்டவ்ய: | யதா ஹி பர்ஜந்யோ வ்ரீஹியவாதிஸ்ருஷ்டௌ ஸாதாரணம் காரணம் பவதி | வ்ரீஹியவாதி வைஷம்யே து தத்தத்பீஜகதாந்யேவாஸாதாரணாநி ஸாமர்த்யாநி காரணாநி பவந்தி ||

> ஈச்வரன் மேகம்போலென்றறிக. எப்படி நெல்யவை முதலியவை களின் ஸ்ருஷ்டியில் மேகமானது (நீர்பொழியும்மூலமாக) பொதுக் காரணமாகின்றதோ. நெல் முதலியவை வேறு வேறு வகையாய் முளைத்துப்படன்படுதற்கு அவ்விதையிலுள்ள சக்திகளே முக்கிய காரணங்களாகின்றனவோ. அங்ஙனமே என்றறிக.

எனச் சங்கரபகவத்பாதஸ்வாமிகளால் போதிக்கப்பட்டிருக்கிறது காண்க. இத னால் இன்பதுன்பங்களுக்குக் கர்மாவும், ஸங்கற்பகாமாதிகளுக்கு வாஸனையுமே முக்கிய காரணமென்றும் இவைகள் அசேதனங்களாதலால் ஓர் சேதனனது அறி வுக்கு விஷயமாகாமல் காரியத்திற்கு உபயோகப்படாதென்பது பற்றி இவை எவ னது அறிவுக்கு விஷயமாயேற்படுகின்றனவோ அப்படிப்பட்ட இறைவன்

கேவலம் நிமித்தமாத்திரமாக பொதுக்காரணமாகவே உள்ளவன் என்பதும் நிர்ணயிக்கப்பட்டதறிக.

இங்கு மற்றோர்சங்கை, கர்மா இன்பதுன்பங்களைத்தருதலும் வாஸனை ஸங்கற்பகாமாதிகளை ஏற்படுத்துதலும் ஈச்வரனது ஸங்கற் பத்தினாலேயே என்றதனால், கர்மாவை மீறமுடியாமலாகின்றது போலவே ஈச்வரனது ஆணையால் ஸங்கற்பகாமாதிகளை உண்டாக்குவதாகிய வாஸனையையும் மீறமுடியாதென்றல்லவோ ஏற்படுகின்றது. இப்படியிருக்க வாஸனையை மாத்திரம் பௌருஷவிவேகத்தால் வென்றுபோடலாம் என்பதை எப்படி ஒத்துக்கொள்ளுவது? என்பதாம்.

இச்சங்கையுசிதமல்ல. கர்மாவை மீறமுடியாதென்பது எப்படி ஈச்வரனது ஆணையோ, அப்படியே வாஸனையை பௌருஷயத்தினத்தினால் மீறிப் போடலாம் என்பதும் ஈச்வரனது ஆணையேயாம். கர்மா பிரபலமாயும் வாஸனை துர்ப்பலமாயுமிருத்தலால் அவ்விரண்டையும் அதனதன் யோக்கியதைக்குத் தக்கபடி ஈச்வரன் ஆக்ஞாபித்திருக்கின்றனர். வஸ்துக்களின் யோக்கியதை யைச்சிறிதும் கவனிக்காமல் எல்லாவற்றையும் ஒரேவிதமாக ஸர்வக்ஞரான இறைவன் ஆக்ஞைசெய்யமாட்டார். ஆதலால் வாஸனையைப் புருஷயத்தினத்தால் வென்றுபோடலாம் என்பதாகிய ஈசாக்ஞையை உணர்ந்து நாம் மனஸை க்கெட்டகாரியங்களில் செல்லாமல் தடுத்துப்போடலாம் என்பதே நிர்ணயம் என்றறிக.

சங்கை, கர்மமே இன்பதுன்பத்திற்கும், வாஸனையே செய்கைக்கும் ஏது வென்பதாக இதுவரையிலும் நிரூபிக்கப்பட்டதன்றோ. தர்மபுத்திரர் முதலிய வர்கள் சூதாட்டம் முதலியவைகளில் பிரவர்த்தித்தது ப்ராரப்தகர்மவசத்தாலேயே என்பதாகப் பிரஸித்தமாகக் கேழ்க்கப்படுகின்றதே. இப்படியிருக்க வாஸனையாலேயே நன்மை தின்மைகளில் பிரவிருத்தியாம் என்பது எப்படிப் பொருந்தும்? என்பதாம்.

இவ்வாக்ஷேபம் மிக்கவிந்தையே; ஏனெனின் மஹாபாரதத்தில் தர்மபுத்திரர் விருப்பமில்லாதவரேயாயினும் தனது ப்ராப்தகர்மத்தாலேயே சூதாடப்பிரவர்த்தித்தார் என ஓர்வாக்கியமாவது சொல்லப்பட்டிருக்கின்றதா என்பதைக் கவனிக்கவேண்டும். அவ்வாறுஎங்கும் சொல்லப்படாமலிருக்கும் போது ப்ராரப்தத்தாலேயே அவர் சூதாடப்பிரவர்த்தித்தனர் எனின் இதனையார் ஒத்துக் கொள்ளுவது? ஏதோ உலகில் ஸாமான்னியர்கள் பிரஸித்தமாய் வழங்குகின்றனர் என்பதைக்கொண்டு ஏற்கனவே நன்கெடுத்துக்காட்டிய பிரபலமான பிரமாணங்களைப் பிசகென்று தள்ளுவது உசிதமாகாதன்றோ.

சங்கை. பாரதம் ஸபாபர்வம் சூதாட்டப் பிரகரணத்தில் உள்ள

"𑌅𑌸𑌂𑌭𑌵𑌂 𑌹𑍇𑌮𑌮𑌯𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌤𑍋𑌃 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌰𑌾𑌮𑍋 𑌲𑍁𑌲𑍁𑌭𑍇 𑌮𑍃𑌗𑌾𑌯 । 𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 𑌸𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌵𑌿𑌪𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌲𑍇 𑌧𑌿𑌯𑍋𑌽𑌪𑌿 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌮𑌲𑌿𑌨𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ॥

"பொன்மயமாகிய பிராணி உலகில் அஸம்பவம் என்பது பிரஸித்தம். அப்படியிருந்தும் ராமர் அங்ஙனமாகிய மானை விரும்பினார்

*விசேஷமாக ஸமீபத்தில் விபத்து நேருவோருக்குப் புத்திகளும் மாறுபாடுற்றவையாகின்றன.*

எனும் இச்சுலோகத்தினால் விபத்து நேரும்போது புத்திகெடும் என்று வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றமையால், விபத்துக்கு ஏதுவாகிய ப்ராரப்தகர்மா புத்தியையும் கெடுக்குமென்று ஏற்படுகின்றதே. இதனால் ப்ராரப்த கர்மாவினாலேயே ராமர் எப்படிப்பொன்மானை விரும்பித்துரத்திச் சென்றாரோ அங்ஙனமே தர்மநந்தனரும் ப்ராரப்த கர்மாவினாலேயே சூதாடவிரும்ப நேர்ந்ததென்பது வியக்தமாகின்றதே. இப்படியிருக்க இதனை அநுசிதம் என்பது எப்படிப்பொருந்தும்? எனவும் சிலர் சங்கிக்கக்கூடும்.

ஆனால் இதுவும் அறியாமையேயாம். அதாவது இந்த சுலோகத்தில் திருஷ்டாந்தமாகக் காட்டப்பட்ட ராமர் பொன்மானை விரும்பியது ப்ராரப்த கர்மத்தாலேயே எனவியக்தமாக ஓர்சொல்லாவது இல்லையே. இப்படியிருக்க ப்ராரப்த கர்மத்தாலேயே ராமருக்குப்புத்திமாறியது போலத் தர்மபுத்திரருக்கும் மாறியது என்பதற்கு இந்தச்சுலோகம் எப்படிப் பிரமாணமாகும்? புத்தி மாறுபடுகின்றது எனமாத்திரம் சொல்லப்பட்டிருப்பதைக்கொண்டு அங்ஙனம் நேர்ந்தது ப்ராரப்தத்தாலேயேஎன்பதை எப்படி இதனால்ஸித்தாந்தம்செய்ய இயலும்? அன்றியும் இச்சுலோகத்தில், கேடுஸமீபத்தில் உள்ளவரெல்லோருக்கும் புத்தி கெடுவது நிச்சயம் எனச்சொல்லாமல் (ப்ராய:) அநேகமாக அதாவது விசேஷமாய்" எனும் பொருளையுடைய சொல்லை உதஹரிக்கப்பட்டிருத்தலைக்கவனித்தால் உண்மை நன்கு விளங்கும். அதாவது கேடு ஸமீபித்தவர் எல்லோருக்கும் புத்தியும் கெட வேண்டும் எனும் நியமமில்லை. அநேகமாய்ச் சிலருக்கு அவ்வாறு நிகழும் என்றேற்படுகின்றமையால் சிலருக்குப் புத்தி கெடாமலுமிருக்கும் என்றல்லவோ விளங்குகின்றது. இதனால் நாம் அறிந்து கொள்ள வேண்டியதாவது, துன்பத்தைத் தருவதாகிய ப்ராரப்த கர்மா தலைப்படும்போது விசேஷமாக வாஸனையும் அசுபமாக நேருவதுண்டு என்பதல்லவோ. இவ்விஷயத்தை நாம் ஏற்கனவேசொல்லியிருக்கின்றோம். இதுவேயன்றி கெட்ட ப்ராரப்தம் வரும்போது அதனாலேயே புத்தியும் கெடும் என்று சொல்லவந்ததாயிருந்தால் இந்தசுலோகத்தில் ப்ராய: (அநேகமாய்) எனும் சொல்லை உதஹரிக்காமல் த்ருவா ஸர்வதா நூநம் ஹ்யவச்யம் என்பதாக நிச்சயம் எனும் அர்த்தத்தில் உபயோகிக்கப்படுவதாகிய, ஸத்தியம், த்ருவம் முதலிய சொற்களை ஏன் உதஹரித்திருக்கக்கூடாது? அப்படியிராமல் ப்ராய: எனும் சொல்லையே உதஹரித்திருத்தலால் ப்ராரப்த கர்மத்தாலேயே புத்திகெட்டது என்பது சிறிதும் பொருந்தாது.

தவிரவும், ராமருக்கு ப்ராரப்த கர்மத்தால் பொன்மானை விரும்பும்படி மாறுபாடடைந்ததுபோலத் தருமநந்தனருக்கும் சூதாட்டத்திலேற் பட்டதென இந்தச்சுலோகத்தைக் கொண்டு தீர்மானிக்க வருதல் சாஸ்திரங்களுக்கு முற்றும் விரோதமேயாம். எப்படியெனின் உபநிஷதார்த்த மெனக்கொண்டாடப் படும் பகவத்கீதையில் பகவானால் அர்ச்சுனனுக்குபதேசிக்கப்பட்ட

“ ந மே பார்தா²ஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந |
நாநவாப்தமவாப்தவ்யம் ”

ஓபார்த்தா? எனக்கு உலகில் செய்யவேண்டிய காரியம் யாதுமில்லை. கிடைத்திராதது பற்றி அடையவேண்டுமெனக் கருதப்படும் பொருளும் யாதுமில்லை.

என்பது முதலியவாக்கியங்களால் ராமகிருஷ்ணாதி வடிவமெடுத்து உலகை யநுக்கிரஹிக்க ஆவிர்ப்பாவ மெய்திய பரம்பொருளாகிய இறைவனுக்கு அவித்தியா மூலமாயுள்ளதும், காமக்குரோதாதிகளால் நிகழுவனவுமாகிய ஹேயங்களான புண்ணியபாவங்களாகிய கர்மங்கள் இல்லவேயில்லை யென்பது வியக்தமாகின்றது. அன்றியும்

“ ஜந்ம கர்ம ச மே தி³வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத꞉ |
த்யக்த்வா தே³ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந |

எனது அவதாரமும் என்செய்கையும் இவ்வாறு திவ்வியமே (அவித்தியாகாம கர்மவசமல்ல) என எவன் உள்ளபடி அறிகின்றானோ அவனுக்கு மீண்டும் பிறவி யில்லை.

என்றும் சொல்லப்பட்ட வாக்கியத்தில், உலகை யனுக்கிரஹிக்க திவ்விய மாயா மஹிமையால் தோன்றி ராம கிருஷ்ணாதி நாமத்தோடு விளங்கும் தெய்வத்திற்கு ஸஞ்சிதம், ப்ராரப்தம் ஆகாமி எனும் எக்கருமமும் இல்லவேயில்லை என நிர்ணயிக்கப்பட்டிருக்க அதற்கு முற்றும் விரோதமாய் ராமனுக்கும் ப்ராரப்த கர்மம் உள்ளது அதனால் அவன் பொன்மானை விருப்பிச் சென்றான் எனச் சித்தாந்தம் செய்து கொள்ளுதல் மிகவும் அஸங்கதமேயாம் என்றறிக.

உண்மையில் சூதாட்டப் பிரகரணத்தில் சொல்லப்பட்ட இந்தச் சுலோகத்தினால் நாம் அறியவேண்டியதான முக்கியமான மர்மம் மற்றுமொன்றுள்ளது. ஸ்திரீயினிடம் மிகவும் ஆஸக்தியினால் அவள் இஷ்டப்படி யெல்லாம் நடப்பது, சூதாட்டம் முதலிய காரியங்கள் ஓரோர் ஸமயம் பிரத்தியக்ஷமாய் அப்போதே வருவதாகிய அனர்த்தத்திற்கு ஏதுவாகும் என்பது நிச்சயம். இவ்வுண்மையைத் தருமர் சூதாடப் பிரவர்த்தித்தனர் எனும் வியாஜத்தினால் திருஷ்டாந்தத்தைக் கொண்டு நம்போன்ற மந்தமதிகளுக்குப் போதிப்பதற்கு மாத்திரம் கருதி இந்த சுலோகம் சொல்லப்பட்டது. ஆனது பற்றியே இந்த சுலோகத்தில் ஸ்திரீயினிடம் மிகவும் பற்று வைத்ததினாலேயே அவளது திருப்தியின் பொருட்டுப் பொன்மானைப் பிடித்துத் தரவேண்டு மென்று தூரத்திச் சென்று அனர்த்த மெய்திய சரிதம் திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டது. ஸ்திரீயினிடம் பற்று வைத்தல் பாபமுமல்ல புண்ணியமுமல்ல. அதுபாப புண்ணியங்களில் சேராத அவிஹிதா நிஷித்த கர்மமேயாம்.

ஸ்த்ரியாக்ஷைர்தீ³வ்யஸநை꞉ ச பிவாத்ருதி யோऽஜ꞉ |
தஸ்ய த்ரிவர்க³ஸ்யாப்யாந்யா காமோ ஜாயதே ஸதோ³ஷண꞉ ||

வேட்டை, சூதாட்டம், பகற்றூக்கம், வீண் வம்பளத்தல், ஸ்திரீகளிடம் மிகவும் பற்றுற்றிருத்தல், மதகரமானதையே விசேஷமாய்ப் புசித்தல், வாத்தியம், பாட்டு, கூத்து, இவைகளில் மிகவும் லோலனுயிருத்தல், வீணில் நாடு சுற்றுதல் இவை பத்தும் அரசருக்குக் காமத்தினுல் நிகழும் செயல்களாம்.

என இவைகளெல்லாவற்றையும் ஒரே வகுப்பிலேயே சேர்த்து மனு முதலியவர்கள் தர்மநூல்களில் சொல்லியிருக்கின்றனர். இந்த அவிஹிதா நிஷித்தகர்மங்களைச் செல்வோர் அவைகளின் பயனை அப்போதே அனுபவிக்கும் படியாகுமேயன்றி அப்பயன் மறுமையில் தொடரும் என்பதல்ல. இதனைப் போதிக்க வேண்டி வைசம்பாயனர் தருமர் சூதாடச் சென்றூர் என்பதைச் சொல்லும் பிரகரணத்தில் அர்த்தாந்தர நியாஸாலங்காரங்கொண்டு, இந்தச்சுலோகத்தைச் சொன்னூர். இதனுல் சூதாட்டம், ஸ்திரீ, முதலியவைகளில் அதிகப்பற்று வைக்கக் கூடாதென்பதே அறிந்து கொள்ளவேண்டியது.

இதனை விட்டு ஸ்ரீராமனும் கர்மபந்தமுடையோன் எனக்கொண்டு அவன் ப்ராரப்தகர்மத்தாலேயே பொன்மானைப் பிடித்துத்தர விரும்பிச் சென்றூன் என்பது விசாரணைக்குறைவேயாம்.

பாரதம் முழுதும் ஆநுபூர்வியாய்க் கவனித்தால் தர்மபுத்திரர் சூதாடச் சென்றது அவரது வாஸனையாலேயே என நன்கு விளங்கும்.

அரண்யபர்வாவில் தன்னைவினவிய துரோபதியையும் பீமஸேனனையும் நோக்கித் தருமர் சொல்லியிருக்கும் வாக்கியத்தினுல் இவ்வுண்மை யறியப்படுகின்றது. அதாவது. மிகவும் துர்ஜனனுகிய துர்யோதனனிடம் ராஜ்யச் செல்வம் இருத்தலானது மற்றுமுள்ள பிரஜைகளுக்காவது தனக்காவது சிறிதும் ஸௌகரியத்தின்பொருட்டு ஏற்படவில்லை. ஆனுல் தனக்கும் ஏனையோர்க்கும் அடிக்கடி பெரும்விபத்திற்கே ஏதுவாகின்றது. அப்படிப்பட்ட விபத்தை ஏனையோராவது தாமாவது அடையாமல்க்ஷேமமடைய வேண்டுமாயின் அவனிடம் ராஜ்யமிருக்கக்கூடாது. நியாயமாகவே அந்த ராஜ்யத்தை யடையக்கூடிய பாத்தியமும் ஸாதுக்களுடைய க்ஷேமத்தைக் கோருதலாகிய நல்ல சிந்தனையுமுள்ளவரிடமே அந்த ராஜ்ய மிருக்கவேண்டும். இவ்விரு தன்மைகளும் தன்னிட மிருக்கின்றமையால் அது தன்னிடம் இருத்தல் உசிதமே. அங்ஙனம் ராஜ்யம் தன்னிடம் வரவேண்டுமானுல் அவனேடு யுத்தம் செய்தே ஆகவேண்டும். அந்த ஸமயம் யுத்தத்தில் பிரவர்த்திப்பது பெரியோர்களாகிய பீஷ்ம துரோணுதிகளுக்கு அபசாரம் செய்வதேயாகும். ஆதலால் யுத்தமும் செய்யக்கூடாது ; ராஜ்யமும் கிரமமாகவே தன்னிடம் வந்துவிடவேண்டும். இதற்குத் தக்க ஸந்தர்ப்பம் யாது எனத் தர்மர் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர்.

இப்படி யிருக்கும்போது வலுவில் சூதாட்டத்திற்கு அழைக்கப்பட்டனர். அப்போது தர்மர் எண்ணியதாவது, நமக்கோ மிகவும் நன்றூய்ச் சூதாடத் தெரியும்; நம்மை அவனுல் சூதாட்டத்தில் வென்று டோடுதற்கியலாது. நாம் சூதாட்டத்தில் ராஜ்யத்தைப் பந்தயமாக ஏற்படுத்திக்கொண்டு அவனிட

முள்ள ராஜ்யத்தைத் தந்திரமாய்க் கைப்பற்றிக்கொள்ளும் ஸந்தர்ப்ப மிதுவே என தீர்மானித்தனர். அன்றியும் அந்த ஸமயம் அவர் சூதாடப்போவது

“ ஆஹூதோ ந நிவர்த்தேத த்யூதாதபி ரணாதபி |

சூதாட்டத்திற்காவது யுத்தத்திற்காவது அழைக்கப்படும் க்ஷத்திரியன் நான் வரமாட்டேனெனப் பின்வாங்கக்கூடாது.

எனும் க்ஷத்திரிய நீதியை அனுஸரித்தலேயாகும். ஆதலால் இங்ஙனம் சாஸ்திரீயமாய் நடப்பதனாலேயே ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொள்ளும் ஸந்தர்ப்பம் கிடைத்திருக்கின்றது எனப் பிரஜைகளின் க்ஷேமத்தைக் கோரிய ராஜ்ய இச்சையாலேயே தர்ம புத்திரர் சூதாடச்சென்றார் என்பதே இங்குள்ள மர்மம். இதனை

ஸஹராஷ்ட்ரம் ஜிஹீர்ஷந்தம் ராஜ்யம் ஸராஷ்ட்ரம் த்ருதராஷ்ட்ரஸ்ய பார்த | தந்நாசஸௌபலிர் த்யூதேவ்ஸ்த்ராயோதநாய மாம் ||

யான் திருதராஷ்டிரன் தநயனிடமுள்ள ராஜ்யத்தை ராஜரீக பாத்தியத்தோடுகூட கவர்ந்துவிடவேண்டுமென்ற விருப்பத்தால் சூதாட்டத்தில் இறங்கினேன். ஆனால் வஞ்சகனாகிய சுபலதநயன் துரியோதனனுக்குப் பதிலாக ஆடவந்தான்.

[illegible] | [illegible] ||

மிக்க மாயாவியாகிய சகுனியானவன் ஸபை நடுவில் காய்களைக் கட்டிப் பாய்ச்சியை உருட்டி, யதார்த்தமாக ஆடுவோனாகிய என்னை வஞ்சனையாகவே வென்றுபோட்டான். பின்னர் இக்கொடுமையைக் கண்டேன்.

அக்ஷாம்ஸ்து த்ருஷ்ட்வா சகுநேர்யதாவத் காமாநுலோமாநயுஜோ யுஜஸ்ச | சக்யம் நியந்தும் அபவிஷ்யதாத்மா மந்யுஸ்து ஹந்தி புருஷஸ்ய தைர்யம் ||

சகுனிக்கு அநுகூலமாகவே ஒற்றைப்படையாகவும் இரட்டைப்படையாகவும் விழும் காய்களைக் கண்டதும் என் மனம் அடக்க முடியாமலாகியது. கோபமானது புருஷனது திட விவேகத்தைக் கெடுக்குமன்றோ ?

எனவியக்தமாக அரண்ய பர்வாவினில் சொல்லப்பட்டுள்ள தர்மபுத்திர வாக்கியத்தால் நன்குயறியலாம். இவ்விதம் லோக க்ஷேமத்தையும் க்ஷத்திரிய நீதிக்கு உட்பட்டு நடப்பதையும் கோரியே சூதாட்டத்தில் விருப்ப மேற்பட்ட

தென்பது நன்ருய் விளங்குகின்றது. ஆதலால் தர்மபுத்திரர் சூதாடப் பிரவர்த்தித்ததற்குக் காரணம் தமது வர்ணத்திற்குறிய தர்மத்தை மீறக்கூடாதெனும் எண்ணத்திற்கு ஏதுவாகத் திடமாயூன்றியிருந்த சாஸ்திரீயமான சுபவாஸனையே என்றறியத்தக்கது.

இங்கு ஓர் சங்கை, அதாவது தர்மபுத்திரர் வாஸனையின் வசத்தாலேயே சூதாடப் பிரவர்த்தித்தனர் என்பதோடே நின்றுவிடக்கூடாதோ. அவ்வாஸனையும் சுப (சாஸ்திரீய) வாஸனையே என்பது அநுசிதமாகக் காணப்படுகின்றதே. சூதாட்டம் முதலியவை பாபகாரியங்களென்றல்லவோ சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அதாவது.

" ம்ருகயாக்ஷோ திவாஸ்வப்ந: பரிவாத: ஸ்த்ரியோ மத: |
தௌர்யத்ரிகம் வ்ருதாட்யா ச காமஜோ தசகோ கண: ||

வேட்டை, சூதாட்டம், பகலிற்றூங்குதல், வம்பளத்தில், ஸ்திரீலோலனுயிருத்தல், மத்யபானம் செய்தல், பாட்டு கூத்து வாத்தியம் இவைகளில் ஆவலுற்றிருத்தல், வீணுக நாடு சுற்றுதல் இவை பத்தும் காமத்தினுல் நிகழுவனவாம்.

"காமஜேஷு ப்ரஸக்தோ ஹி வ்யஸநேஷு மஹீபதி: | வியுஜ்யதே(அ)ர்த்தர்மாப்யாம் ||

" காமத்தினுல் நிகழும் இக்காரியங்களில் மிக்க விருப்புற்றுச் செல்லும் அரசன் செல்வம் தர்மம் இவையினின்றும் பிரிவுறுவான்.

என மன்வாதிஸ்ம்ருதியிலும்

" சத்வார்யாஹுர்நரேந்த்ராணாம் வ்யஸநாநி மஹீக்ஷிதாம் |
ம்ருகயாபாநமக்ஷாஸ்ச க்ராம்யே சைவாதிஸக்ததா ||

அரசருக்குத் துரப்பியாஸமாயுள்ள கேடுகள் வேட்டை, குடித்தல், சூதாட்டம், ஸ்திரீகளிடம் மிக்கலோலனுயிருத்தல் எனும் இந்நான்கு செய்கைகளாம்.

என மஹாபாரதம் முதலிய நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்களால் சூதாட்டம் முதலியவை விலக்கப்பட்ட காரியங்களேயாம். தர்மநூலில் விலக்கப்பட்ட செய்கை பாபமேயன்றே. இங்ஙனம் தர்மசாஸ்திரத்தால் சூதாட்டம் பாபமே என்பது வியக்தமாயிருக்க க்ஷத்திரியருக்கு அது பாபமல்ல என்பது எப்படி ஒவ்வும் என்பதாம்.

தர்ம நூலில் ஸரியான ஆராய்ச்சியில்லாமையாலேயே இச்சங்கை நிகழுவதாம். தற்காலம் வேதாந்த சாஸ்திராராய்ச்சி போலவே தர்மநூலின் ஆராய்ச்சியும் மிகவும் மாறுபாடடைந்திருக்கின்றது. இதிஹாஸ புராணங்களில் காணப்படும் லக்ஷியங்களோடு தர்மநூல்களில் சொல்லப்பட்டிருக்கும் லக்ஷண வாக்கியங்களைப் பொருத்தி ஆழ்ந்து யோஜித்துப் பார்த்தால்மட்டும் தர்மத்தின் மர்

மத்தைக் காணலாமன்றி மன்வாதி ஸ்ம்ருதிகளிலுள்ள சுலோகங்களை நெட்டுருப் போட்டுத் தள்ளிவிடுதலால் சிறிதும் இயலாது. இனி இவ்வுண்மையை நிரூபிப்பாம். அதாவது, உலகில் நம்மால் செய்யப்படும் செய்கைகளெல்லாம் விஹிதம், நிஷித்தம், அவிஹிதா நிஷித்தம், உபேக்ஷிதம் எனும் நான்கினில் அடங்கும்.

இந்நால்வகைக் கர்மங்களில் உபேக்ஷிதம் நீங்கலாயுள்ள மற்ற மூவ்வகைக் கர்மங்களே சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

விஹிதம் என்பது இதனைச்செய் என விதிக்கப்பட்ட செய்கையாம். நிஷித்தமாவது, இதனைச் செய்யாதே என விலக்கப்பட்ட செய்கையாம். அவிஹிதாநிஷித்தமாவது, விதிக்கப்படாமலும் விலக்கப்படாமலுமுள்ளதாய், செய்தால் மறுமையில் எப்பயனையும் கொடுப்பதாயிராமல், பிரத்தியக்ஷமாய் அப்போதே யாதானும் ஓர் பயனைக் கொடுப்பதாயுள்ள காரியமாம். உபேக்ஷிதமாவது, சாஸ்திரங்களில் சிறிதும் பிரஸ்தாபிக்கப்படாமலே உபேக்ஷித்து விடப்பட்ட காரியமாம். இனி இவைகளைத் திருஷ்டாந்த வாயிலாக நன்கு விளக்குவாம்.

விஹிதமாவது "அஹரஹஸ்ஸந்த்யாமுபாஸீத" அஹஸ்தோரும் ஸந்தியை உபாஸனை செய்குக, என்பது முதலிய விதிக்கப்பட்ட கர்மமாகும்.

நிஷித்தமாவது "நபரதாரானுபேயாத்" பிறன் மனைவியோடு சேராதே, என்பது முதலிய விலக்கப்பட்ட கர்மமாம்.

அவிஹிதாநிஷித்தமாவது விதிக்கப்படாமலும் நிஷேதிக்கப்படாமலுமுள்ள, "அந்நம் ந நிந்த்யாத்" அந்நத்தை நிந்திக்கவேண்டாம், என்பது முதலிய காரியமாம்.

உபேக்ஷிதமாவது—பொடி போடுதல், காப்பி ஸாப்பிடுதல் முதலிய காரியமாம். விஹிதமாகிய கர்மாவைச் செய்தால் மறுமையில் இன்பமும் செய்யா விட்டால் துன்பமும் வரும். அதலின் அது புண்ணியமென்று சொல்லப்படுவதாம். விஹித கர்மத்தை அனுஷ்டியாவிடில் பிரத்தியவாயம் வருமென்பதும் உபாஸித்தால் புண்ணியமாய் மறுமையில் இன்பம் தரும் என்பதும்

> அநாத்ருத்ய து யஸ்ஸந்த்யாமந்யத்கர்மணி வர்த்ததே
> ஜீவந்நேவ பவேச்சூத்ரோ ம்ருதச்ச்வா சைவ ஜாயதே ।
>
> ஸந்தியையை அநாதரவு செய்து எவன் வேறு காரியங்களைச் செய்கின்றானோ அவன் இங்கு இருக்கும்போதே சூத்திரத்தன்மையைப் பெற்று இறந்தும் நாயாய்ப் பிறக்கின்றான்.
>
> ஸந்த்யாமுபாஸதே யே து நியதாஸ்ஸம்சிதவ்ரதா: ।
> விதூதபாபாஸ்தே யாந்தி ப்ரஹ்மலோகம் ஸநாதநம்
>
> எவர் நியமத்தோடும் ச்ரத்தையோடும் ஸந்தியை உபாஸிக்கின்றனரோ அவர் பாவங்கள் நீங்கப்பெற்று ப்ருஹ்மலோக மெய்துகின்றனர்.

என்பது முதலிய ஸ்ம்ருதி வாக்கியங்களால் காண்க. ஸ்திரீகள் அந்நிய புருஷரையாவது புருஷன் அந்நியர் மனைவியையாவது கூடினால் அது பாப மாகிய நிஷித்த கர்மமாம்

𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌾𑌤𑍍𑌤𑍁 𑌭𑌰𑍍𑌤𑍁𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌲𑍋𑌕𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌯𑌤𑌾𑌮𑍍

𑌸𑍃𑌗𑌾𑌲𑌯𑍋𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌾𑌪𑌰𑍋𑌗𑍈𑌶𑍍𑌚 𑌪𑍀𑌡𑍍𑌯𑌤𑍇 ॥

> பர்த்தாவினின்றும் அந்நியரிடம் வியபிசரிக்கும் மங்கை உலகில் நிந்திக்கப்பட்டுப் பாபரோகங்களாலும் பீடிக்கப்பட்டு மறுமையில் நரி ஜன்மத்தைப் பெறுகின்றாள்.

என மன்வாதி ஸ்ம்ருதிகள் சொல்லுகிறபடி மறுமையில் மிக்கத்துன் பத்தை அனுபவித்தலுக்கு ஏதுவாகும்.

இனி அவிஹிதாநிஷித்தகர்மமானது மறுமையில் இன்பத்தையாவது துன்பத்தையாவது அனுபவித்தலுக்கு ஏதுவாகாததும், பிரத்தியக்ஷமாய் அனு பவிக்கப்படும் பயனை உடனே கொடுத்து அதனோடு தீர்ந்து போவதுமாம். உதாஹரணமாக

𑌪𑍂𑌜𑌯𑍇𑌦𑌶𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌦𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑍈𑌤𑌦𑌕𑍁𑌤𑍍𑌸𑌯𑌨𑍍 ।

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑍃𑌷𑍍𑌯𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑍇𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌨𑌨𑍍𑌦𑍇𑌚𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃

> புஜிக்கும் அந்நத்தைத் தினந்தோறும் சிலாகிக்கவேண்டும் நிந்தியாமற் புஜிக்கவேண்டும். கண்டு மனத்தூய்மையோடுகூட ஸந்தோஷித்து சிலாகிக்கவேண்டும்.

என்று மன்வாதி ஸ்ம்ருதிகள் சொல்லியபடி, அந்நத்தை சிலாகித்து நிந்தியாமலே புசித்தல் முதலிய கர்மமாகும். அந்நத்தை சிலாகியாமல் மௌன மாகவாவது நிந்தித்துக்கொண்டாவது புசித்தால் அதற்காக நரகயாதனையை யாவது இழிய பிறவியையாவது பெற்றுத் துன்புறும்படியாகும் என்பதில்லை. பின் யாதெனின்,

𑌪𑍂𑌜𑌿𑌤𑌂 𑌹𑍍𑌯𑌶𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌬𑌲𑌮𑍂𑌰𑍍𑌜𑌂 𑌚 𑌯𑌚𑍍𑌛𑌤𑌿

𑌅𑌪𑍂𑌜𑌿𑌤𑌂 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌭𑍁𑌕𑍍𑌤𑌮𑍁𑌭𑌯𑌂 𑌨𑌾𑌶𑌯𑍇𑌦𑌿𑌦𑌮𑍍 ॥

> பூஜித்து (சிலாகித்து)ப் புசித்தல் பலத்தையும் சுத்தியையும் கொடுக் கும். நிந்தித்துக்கொண்டு புஜித்தால் அவ்விரண்டையும் கெடுக்கும்.

என மன்வாதி ஸ்ம்ருதிகள் சொல்லியபடி, உடனே ஆரோக்கியம் முதலி யது கெடுதற்கு மாத்திரம் ஏதுவாகும். இதுவே தவிர வேறுயாதும் கேடில்லை. ஆதலின் அந்நத்தை நிந்தித்தல் முதலியது கூடாது என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கினும் அது நிஷித்த கர்மத்தில் சேராது.

பொடிபோடுதல், காப்பி ஸாப்பிடுதல் முதலிய காரியம் விஹிதமு மல்ல; நிஷித்தமுமல்ல; அந்நத்தை நிந்திக்கக்கூடாது என்பதாதிபோல அவி ஹிதாநிஷித்தமுமல்ல. மற்று யாதெனின், இவைகளைப்பற்றி சாஸ்திரங்

களில் யாதும் சொல்லப்படாமையால் உபேக்ஷித்து விடப்பட்டது என்பது கொண்டு உபேக்ஷிதம் என்றே சொல்லத்தகும். இவைகளுக்குப் பயன் மறுமையில் துன்பமாவது இன்பமாவதல்ல. ஆனால் அப்போதே கண் எரிச்சல் ஸமீபத்தில் வருவோருக்குப் பொடிக்காரம் வீசுதல்பற்றி ஜூகுப்ஸாஹேதுவாதல் நீரழிவுரோகம் முதலிய தாத்காலிகப்பயனைத்தவிர வேறு யாதும் இல்லை என்று அறிக.

இனி க்ஷத்திரியருக்குச் சூதாட்டம் முதலியது எந்த கர்மத்தில் சேர்ந்தது எனின் விஹிதமுமல்ல, நிஷித்தகர்மமுமல்ல, உபேக்ஷிதமுமல்ல, அவிஹிதாநிஷித்த கர்மமேயாகும். ஏனெனின் சூதாட்டம் முதலியதை செய்தவன் மறுமையில் நரகாதி துன்பத்தைபாவது இழிய பிறவியையாவது பெறவேண்டுமென்று நம் சாஸ்திரத்தில் ஓரிடத்திலும் சொல்லப்படாததினாலும், சூதாட்டம் முதலியதனால் உடனே ராஜ்ய நஷ்டம் முதலியது மாத்திரம் ஏற்படுவதாகும் என்றே நம் சாஸ்திரங்களில் சொல்லப்படுதலாலும் "அந்நத்தை நிந்தித்துக் கொண்டு புசிக்கக் கூடாது" என்பது முதலிய கர்மங்களிலே சேருவதாகும். சூதாட்டம் முதலியதற்கு ராஜ்ஜியப்ரம்சம் முதலிய தத்காலப் பயனைத் தவிர மறுமையில் அனுபவிக்கவேண்டிய பயனில்லை என்பதை

[illegible] ||
[illegible] ||
[illegible] ||

> பெரியோர்கள், அரசனுக்குள்ளதுரப்பியாஸங்கள் நான்கு முக்கியங்களாம் என்கின்றனர். அவை வேட்டை, சூதாட்டம், குடித்தல், ஸ்திரீயினிடம் மிகவும் லோலனாயிருத்தல் இவைகளாம்.
>
> காமத்தினாலுண்டாகும் இத்துரப்பியாஸங்களில் சென்ற அரசன் செல்வம் தர்மம் இவைகளினின்றும் பிரிவுறுவான்.

என்பது முதலிய வாக்யங்களைக்கண்டு தெளிக. இவ்வாறு அவிஹிதமாயும் அப்ரதிஷித்தமாயுமுள்ள காரியத்திற்கு அப்போதே காணக்கூடிய பிரத்தியக்ஷப்பயனைத்தவிர வேறு பயனில்லை எனும் உண்மைபற்றியே

" [illegible] ||

> "அன்றியும் மற்றதாகிய அவிஹிதமாயும் அநிஷித்த மாயுமுள்ள கர்மம் அக்காலப்பயனேயாம்."

என்பது முதலிய வாக்கியங்கள் சங்கராசாரியர் முதலிய பெரியோர்களால் ஸர்வதர்மாந் பரித்யஜ்ய எனும் பகவத்கீதா சுலோகத்தின் பாஷ்யம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்ஙனம் சாஸ்திரங்களின்மர்மத்தைக் கவனித்தால் க்ஷத்திரியருக்குச் சூதாட்டம் முதலியது அவிஹிதாநிஷித்தகர்மத்திலேயே சேரும் என்பதே நிச்சயம். இதுவேயன்றி ஒருக்காலும் அது பாபமாகாது. ஆதலால் தர்மபுத்திரர் சூதாட விரும்பியது பாப (அசுப) வாஸனையா

லெனச்சொல்லுதல் சாஸ்திரங்களுக்குச் சம்மதமாகாது. தர்மபுத்திரர் அதனில் பிரவர்த்தித்தது சுப வாஸனையாலேயே என்பதே நிர்ணயம். இதுவே நிர்ணயம் என்பது பாரதம் முன்பின் கிரமங்களைப்பர்யாலோசனை செய்து ஆநுபூர்வியாய் ஆராய்ச்சி செய்தலாலும் மற்றுமுள்ள பல நியாயங்களாலும் விசதமாக அறியப்படும்.

அதாவது, வனவாஸகாலத்தில் துரோபதியம்மாள் தர்மபுத்திரரை நோக்கி

[illegible]
[illegible] |
[illegible]
[illegible] ||

ஓ ஸ்வாமி! அச்வமேதம், ராஜஸூயம், புண்டரீகம், பசுபந்தம் முதலிய மஹா வேள்விகள் தங்களால் மிகுந்த தக்ஷிணையோடு (சிரத்தையாய்) இயற்றப்பட்டனவன்றோ. சுத்தரும் இனிய தன்மையுடையோரும் தானசீலரும் ஸத்தியவர்த்தியுமாகிய தங்களுக்குச் சூதாட வேண்டுமெனும் எண்ணம் ஏன் உதித்தது? அது மிக்க அநுசிதமாகிய காரியமன்றோ.

எனச் சங்கித்து வினவ, அதற்குத் தர்மபுத்திரர் ஓ துரோபதி! சூதாட்டம் ஓர்காலமும் பாபமாகாது. சிவபெருமான், பார்வதி, விஷ்ணு, லக்ஷ்மி, இந்திரன், நளச்சக்கிரவர்த்தி முதலிய புண்ணியசரிதராகிய அரசர் முதலிய ஆன்றோர்களான சிஷ்டர்களால் சூதாடப்பட்டதாக இதிஹாஸபுராணங்களில்காணப்படுகின்றது. ஆதலின் அத்தகைய சிஷ்டர்களால் செய்யப்பட்டது பாபமாயிராதல்லவோ; அப்படிப்பட்ட சிஷ்டர்களும் சூதாடினார்கள் எனச்சொல்லும் புராணங்களை எழுதியவர் தர்மமுணர்ந்த ஸர்வக்ஞர்களாகிய மஹரிஷிகளே. அவர்களுக்குத் தர்மம் தெரியாதா? சூதாட்டம் பாபமாயிருந்தால் முற்கூறிய ஆன்றோர்கள் சூதாடியதாகப் புராணங்களில் ரிஷிகள் சொல்லுவார்களா? எனும் இப்பொருள்பட

'[illegible] |
[illegible] ||

ஓ துரோபதி! சிஷ்டர்களால் ஆசரிக்கப்பட்ட தர்மத்தை இவ்விஷயத்தில் ஆசங்கை செய்யாதே. தர்மமுணர்ந்தவர்களும் எல்லாம் அறிந்தவர்களுமாகிய ரிஷிகளால் புராணம் சொல்லப்பட்ட தன்றோ.

என்பது முதலிய சுலோகங்களில் சொல்லியபடி சூதாடப்பிரவர்த்தித்தது பாபமில்ல எனும் கருத்தை வியக்தமாய்க்காட்டுவதாகிய தர்மபுத்திர வாக்கியத்தைக்கவனித்தால் அதனில் பிரவர்த்தித்தது அசுபவாஸனையாலல்ல என்றும் சாஸ்திரீயமாயுள்ள சுபவாஸனையாலேயே என்றும் நன்றாய் விளங்குகின்றது.

தவிரவும் தர்ம புத்திரர் தமது தர்மப்பிரபாவத்தினால் ஸ்வர்க்கலோகம் செல்ல, அப்படி வந்த தர்மபுத்திரருக்கு ஸ்வர்க்க மெங்கும் தரிசிக்கச்செய்து தன்னிடம் அழைத்து வரும்படி தேவேந்திரன் தேவதூதனை ஆக்ஞாபனம்செய்ய அவன் தர்மபுத்திரருக்கு அங்குமாயா நரகயாதனையைக்காட்டி மிக்கத் துன்புறச் செய்ய அப்போது தர்மபுத்திரர் இந்திரனை நோக்கி ஓ ஸ்வாமி ! ஏன் தாங்கள் ஓர் பாபமும் செய்யாத எனக்கு நரகயாதனையைக் கபடமாகக் காணச்செய்தீர்கள் எனவினவ அதற்கு இந்திரன் ஓ தர்மநந்தன! உன்னால் ஓர் பாபம் செய்யப்பட்டிருக்கிறது. அதற்காக உனக்கு நரகயாதனை தரிசனம் செய்விக்கப்பட்டது. அப்பாபமும் உன்னால் கபடமாகவே செய்யப்பட்டமையால் அதன் பயனும் உனக்குக் கபடமாகவே கொடுக்கப்பட்டது. அதாவது

𑌵𑍍𑌯𑌾𑌜𑍇𑌨 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌦𑍍𑌰𑍋𑌣 𑌉𑌪𑌚𑍀𑌰𑍍𑌣𑌃 𑌸𑍁𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 ।
𑌵𑍍𑌯𑌾𑌜𑍇𑌨𑍈𑌵 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍋 𑌨𑌰𑌕𑌸𑍍𑌤𑌵 ॥

ஓ அரசனே உன்னால் துரோணாசாரியர் கபடமாகவே புத்திரநிமித்தமாய் மோசம் செய்யப்பட்டனர்; ஆதலின் உனக்குக் கபடமாகவே அதன் பயனாக நரகயாதனை காண்பிக்கப்பட்டது.

என மஹாபாரதம் ஸ்வர்க்காரோஹண பர்வாவிலுள்ள ஸந்தர்ப்ப வாக்கியத்தாலும் சூதாடியது பாபமேயல்ல என்பது ஊஹிக்கப்படுகின்றது. அதாவது சூதாடியது பாபமாயிருந்தால் துரோணரை வஞ்சித்த பாபத்தோடு அதனையும் ஒன்றாகச்சேர்த்து இரண்டாகச் சொல்லப்பட்டிருக்கவேண்டுமன்றோ. அங்ஙனமின்றி துரோணவஞ்சனையெனும் ஓர் காரியத்தையே தர்மபுத்திரர் செய்த பாபமாகக் கூறிச் சூதாட்டம் முதலிய யாதையும் குறிக்காததினாலும் தருமர் சூதாடப் பிரவர்த்தித்தது பாபமாகாதென்றறியப்படுகின்றது.

𑌆𑌹𑍂𑌤𑍋 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍇𑌤 𑌦𑍍𑌯𑍂𑌤𑌾𑌦𑌪𑌿 𑌰𑌣𑌾𑌦𑌪𑌿 ॥

யுத்தத்திற்காவது சூதாட்டத்திற்காவது அழைக்கப்படும் அரசர் பின்வாங்கக்கூடாது எனும் க்ஷத்திரிய நீதியை அநுஸரித்தே நடந்தவர். ஆதலால் அது சாஸ்திரீயமான சுபவாஸனையாலேயே என்பது நிர்ணயம். இது மட்டுமென்பதல்ல. இதிஹாஸபுராணங்களில் சூதாட்டத்தைப்பற்றியுள்ள எச்சரிதத்தைக் கவனித்தாலும் இந்த நிர்ணயத்திற்கு முரணாகயிராது என்பது அறியப்படும். இது வரையில் வாஸனையைப்பற்றிய சங்கைக்கு ஸமாதானம் சொல்லப்பட்டது. இனி வாஸனையை நிக்ரஹிக்கும் வழியை நிரூப்பாம்.

சுபம் அசுபம்எனும்இருவகையானவாஸனைகளும் மனஸை சுபாசுபவிஷயங்களில் ஏவிக்கொண்டே யிருக்குமாகையால் மனஸை எந்தவிருத்தியுமின்றி நிரோதம்செய்தலாகிய நிவிர்த்திமார்க்கத்தை நோக்க இவ்விரண்டும் பிரதிபந்தகங்களேயாயினும் முதலில் அசுபவாஸனையையேவென்று போடவேண்டும். அசுபவாஸனையை வெல்லுவதற்குத் திடவிவேகத்தோடுகூடிய சுபவாஸனாப்பியாஸமே ஸாதனம். ஆயினும் அவ்வசுபவாஸனையை ஸங்கற்பகாலத்திலேயே இடங்கொ

டுக்காமல் தடுத்துப் போடுவது மிகவும் நலம். ஸங்கற்பகாலத்தில் சற்றுவிட்டு விட்டாலும் ராகத்துவேஷங்களுக்காவது இடங்கொடாமல் தடுத்துப்போட வேண்டும்.

அசுபவாஸனையை விஷவிருக்ஷத்தின் விதையாகச்சொல்லலாம். விஷ விருக்ஷத்தின் விதைமுளைக்கும்போதே அம்முளையை வேற்களைந்தெறிந்து விடு வது மிகவும் நலம். அதற்குத்தவறினால் அது செடியாவதற்குள்ளேயே வேற் களைவது நலம். அது சாகோபசாகையாய்விடின் அதன் ஸமீபத்தில் போவோ ருக்கு அதன் விஷக்காற்றினால் தீங்கேவருமாதலால் அப்போது வேற்களைவது எப்படி அஸாத்தியமோ அப்படியே வாஸனையால் ஸங்கற்பமும் அதனால் ராகத்துவேஷங்களும் ஏற்பட்டுவிடின் அதன் பின்னர் வென்றுபோடுதல் என்பது மிகவும் சிரமஸாத்தியமே. ஆதலால் ஸங்கற்ப ஸமயத்திலேயேயாவது அதற்குத்தவறினால் காமனையின் ஸமயத்திலாவது நிக்ரஹிக்கவேண்டும்.

சங்கை. வெகு காலமாய்த் திடப்பட்டேன்றியுள்ள அசுபவாஸனையைத்தற் காலம் ஸம்பாதிக்கப்பட்ட விவேகத்தால் வென்றுபோடலாம் என்பது யுக்திக் கிணங்கவில்லையே. பல காலமாய் நோயினால் (ரோகத்தினால்) வருந்துவோன் ஓர்வேளை மருந்தினால் அந்த ரோகத்தை நீக்கிக்கொண்டு ஆரோக்கிய மடை வான் என்பது உசிதமோ? ஒருவன் பலகாலம் வியாபாரம் செய்து நஷ்டமடை ந்து விளைந்த பெருங்கடனை ஓர்தின வியாபாரத்தினால் தீர்த்து விடமுடியுமோ? இது போலவே யன்றோ பலகோடி ஜன்மங்களில் செய்த செய்கைகளால் திடப் பட்டேன்றிய அசுபவாஸனையை இப்போது ஏற்பட்டிருக்கும் விவேகத்தால் மா ற்றி விடமுடியும் என்பது. ஆதலால் இதனை எப்படி ஒவ்வுவது என்பதாம்.

இனியிவ்வுண்மையைச் சற்றுராய்ந்தால் இச்சங்கை தவறுஎன்பது இனிது விளங்கும். உதாரணமாக, தினந்தோறும் மூன்று வேளை மிகவும் புசிக்கும் வழக்கமுள்ள மனிதன் ஒருவன் ஓர் ஸமயம் காட்டுப் பாதையில் வழி நடக்கும் படி யேற்பட்டது. ஓர்வேளை போஜனத்திற்கும் இடமில்லாமல் மூன்றுநாளா கப்பட்டினியால் களைப்புற்று அதனோடுகூட வழி நடந்து கொண்டிருக்கும் போது, மற்றொருவன் அவ்வழியில் நல்ல பாத்திரத்தில் அறுசுவை யமர்ந்த பக்ஷிய போஜ்யங்களோடு கூடிய அன்னத்தை எடுத்துக்கொண்டு அவனருகில் வந்து ஐயா நீங்கள் மிகவும் வருந்திக்களைப்புற்று நடக்கின்றீர்களே. இவ்வறு சுவையமர்ந்த இனிய உணவைப் புசிக்கலாமே. இதுதவறினால் இன்னம்மூன்று நாள்வழி நடைக்கிடையில் போசனம் கிடைப்பதற்கு வகையில்லையே. ஆதலால் இதனைப் புசித்துப்போங்கள் எனசொல்லிவேண்டிக்கொண்டான். அது கேட் டுப் பசியால் வருந்திய அந்தப் பிரயாணி பசியின் கொடுமையால் உயிர் நீங்கும் நிலமையிலுள்ள நமக்கு நல்லவேளையாய் இப்போஜனம் கிடைத்தது என மிக வும் ஆவலோடு அதனைப்புசிக்க ஆரம்பித்தான். அப்போது, இவனுக்குப் பூர்வம் அறிமுகமுள்ளவனாகிய ஆப்தன் ஒருவன் அச்சமயம் யதிர்ச்சையாய் அங்கு வந்து ஓ நண்பனே! இது விஷங்கலந்தஅன்னம்? இதனைப்புசித்தால் அனர்த்த மடைவாய் என்று சொன்னான். தினந்தோரும் மும் முறை புசித்தல் வழக்கத்தி

லூன்றியவனேயாயினும் அதனைப் புசியாவிடில் அதன் பின்னரும் மூன்றுநாள் பட்டினியால்வருந்தும்படியாகும் என்பதை அறிந்தவனேயாயினும், அப்போது புசியாவிடில் பசிக்கொடுமையால் மரணம் நிகழும் என எண்ணியவனாயினும், அந்த உணவு அறுசுவை யமர்ந்த அரிய பக்ஷிய போஜ்யங்களோடு கூடியதேயாயினும் விஷங்கலந்த அன்னமிது என ஆப்தன் சொன்னதைக்கேட்டதும் அதனைப்புசிப்பதில் உள்ள ஆவல் முற்றும் ஒழிந்து, சீ இது துச்சம் என்று எப்படி வெறுத்துப் போடுவானோ அப்படியே பலகாலமாக அசுபவாஸனை யூன்றியிருக்கினும் அதனால் விளையும் பாவங்களில் உள்ள தீங்கை நன்றாய் அறிந்துகொள்ளுதலானவிவேகம் ஏற்படுமாயின் அவ்வாஸனையை அவன் வென்றுபோடக்கூடும்.

அன்றியும் திடவிவேகமே அசுபவாஸனையை வெல்லுதற்கு உபாயமாயினும் (ஸங்கற்பத்தையுண்டாக்குதற்கு) உறியநிமித்தங்களையும் ஒழிக்கவேண்டும். அதாவது அழகிய மங்கை, இனிய உணவு, விசித்திரமாகிய வஸ்திரம், முதலிய பொருள்களைக்கண்டதும் அது தனக்கு வேண்டுமெனும் அசுப ஸங்கற்பமுண்டாகின்றமையால் அப்பொருள்களே அசுபவாஸனைக்கு ஆலம்பனம் என்பதாம். அவ்வாலம்பனப்பொருள்களுக்கு இடமில்லாமல் சுபவாஸனைக்கு ஆலம்பனமாகும் பொருள்களுக்கே பிரஸக்தியிருக்கும்படி செய்துகொள்ள வேண்டியதும் அவசியம். இவ்விஷயம்

"ஹேதுப²லாஶ்ரயாலம்ப³னை: ஸங்க்³ருஹீதத்வாதே³ஷாமபா⁴வே தத³பா⁴வ:"

> ஏது-பயன், ஆச்ரயம், ஆலம்பனம் இவைகளாலேயே வாஸனை முளைகின்றது. இவைகளிராவிடில் வாஸனையும் துலைவதாம்.

எனும் பதஞ்ஜலி யோகதர்சனம் கைவல்ய பாதம் பதினோராம் ஸூத்ரத்திலும் அதன் பாஷ்யவியாக்கியானங்களிலும் நன்குபோதிக்கப் பட்டிருத்தல் காண்க. ஆதலால் அசுபவாஸனையை ஒழித்தற்கு வேண்டிய ஸாதனம் விவேகமும் சுப வாசனையின் காரியங்களை யப்பியஸித்தலுமாம்.

சுபவாஸனையின் காரியம் யாதென்பதை யறியாதவரையில் அதனையப்பியஸிக்க இயலாதாதலால் சற்று அதனை விளக்குவாம். எப்படியிருந்தால் சுபவாஸனை யோங்கும் எனின் அது

"மைத்ரீகருணாமுதி³தோபேக்ஷாணாம் ஸுக²து³:க²புண்யாபுண்யவிஷயாணாம் பா⁴வநாதஶ்சித்தப்ரஸாத³நம் ||

> "இதன் பொருள்" ஸுகிகளிடம் பிரீதியும் (துவேஷமின்மையும்) துக்கிகளிடம் கருணை (இரக்கமும்)யும் புண்ணியவான்களான ஸாதுக்களிடம் ஸந்தோஷமும் (மகிழ்வும்), பாபிகளிடம் உபேக்ஷையும் கொண்டு நடப்பதால் சித்தம் தெளிவுறும்.

எனும் யோகதரிசனம் ஸமாதிபாத ஸூத்திரத்தினில் பதஞ்ஜலிபகவானால் மிக்கச் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. இதனிலும் சற்று விரிவாகத்

தெரிந்துக்கொள்ள வேண்டுமெனின், பகவத்கீதை பதினறுமத்தியாயத்தில் தைவஸம்பத் எனும் பெயரோடு சொல்லப்பட்டிருக்கும்

𑌅𑌭𑌯𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌦𑌾𑌨𑌂 𑌦𑌮𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑌪 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ॥

பயமின்மை (தீரத்துவம்) மனக்கலக்கமின்மை, ஞானயோக(சிரவண)த்தில் அடிக்கடிச் செல்லுதல், தானம், வெளி யிந்திரியங்களைக் கண்டபடி விடாது அடக்குதல், தேவதாராதனை, தனக்குறிய மந்திர ஜபாதிகளை ஓதுதல், சாந்திராயண ப்ராஜாபத்தியாதிகிருச்சிரம், ப்ரதோஷஸோமவாராதி விரதம் முதலியவைகளை யநுஷ்டித்தல், ருஜுவாயிருத்தல்,

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍 ।
𑌦𑌯𑌾 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂 𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌮𑍍 ॥

ஹிம்ஸையின்மை, சத்தியம், கோபமின்மை, உபரதி, பிறரிடம் குற்றம் கூறுமை, பிராணிகளிடம் கருணை, போக சக்தியும் விஷய ஸம்பத்துமுள்ளதாயினும் விகாரமின்மை, இனியஸ்வபாவம், லஜ்ஜை, சபலமின்மை,

“ 𑌤𑍇𑌜𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌶𑍌𑌚𑌮𑌦𑍍𑌰𑍋𑌹𑍋 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ॥

பெருந்தன்மை, பொறுமை, தைரியம், ஸ்நாநம், ஆசமனம் முதலிய சௌசம், துரோஹமின்மை, கர்வமின்மை, எனும் இவை தைவ ஸம்பத்துடையவனது காரியங்களாம்.

எனும் சுலோகங்களால் விஸ்தரித்துச் சொல்லப்பட்டிருத்தல் காண்க. சாஸ்திரங்களில் தத்தம் வருணச்ரமங்களை நோக்கவும் பொதுவாகவும் எக்காரியங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளைச் செய்துக்கொண்டிருத்தலே சுபவாஸனப்பியாஸமாம் என்பது நிர்ணயம். ஆனதுபற்றியே அதே அத்தியாயத்தின் இறுதியில்

𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌤𑍇 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌿𑌹𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

ஆதலால் செய்யவேண்டியதிது செய்யத்தகாததிது எனும் வியவஸ்தையினில் சாஸ்திரம் பிராமணமென்க. சாஸ்திர விதியினில் சொல்லப்பட்டதைத் தெரிந்துகொண்டு கர்மாவைச் செய்தற்குத் தக்கவனுகின்றாய்.

எனும் சுலோகத்தினுல் உபஸம்ஹாரமாக உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வாறு தெரிந்துகொண்டு அவ்வழி நடப்பதே சுபவாஸனப்பியாஸ மென்பதாம்.

அன்றியும் அசுபவாஸனையாகிய அசுத்தியை யொழித்தலுக்கு அவசியம் வேண்டப்படுவதாகிய மற்றும் ஓர் உபாயமுண்டு. அதாவது சித்தத்திலிருக்கும் அசுத்தியை நீக்கிக்கொள்ளுதற்கு அஸாத்துவிகமாகிய உணவையும் ஒழிக்க வேண்டும். சாஸ்திரங்களில் விலக்கப்பட்டனவாகிய அஸாத்துவிகங்களான அன்னபானாதிகளை வைத்துக்கொண்டே அசுபவாஸனையை நீக்கிக்கொள்ள எவ்வளவு முயற்சி செய்யினும் அது ஸபலமாகாது. ஆனதுபற்றியே

𑌅𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑍁 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌆𑌹𑌾𑌰𑌶𑍁𑌦𑍍𑌧𑍌 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌸𑍍𑌵𑌤𑌃 ॥
𑌚𑌿𑌤𑍍𑌤𑌶𑍁𑌦𑍍𑌧𑍌 𑌕𑍍𑌰𑌮𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌪𑌾𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 ॥
𑌪𑌾𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌨 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂𑌸𑌾𑌰𑌹𑍇𑌤𑌵𑌃 ॥
𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌯𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌹𑌿 𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌕𑌾𑌰𑌣𑌂 ॥
𑌅𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌭𑌕𑍍𑌷𑌣𑌾𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌸𑍍𑌵𑌤𑌃 ॥
𑌅𑌶𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌨𑍃𑌣𑌾𑌂 ॥
𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌃 𑌪𑍁𑌂𑌸𑍋 𑌨𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌾𑌚𑌰𑌣𑍇 𑌰𑌤𑌿𑌃 ॥
𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑍁 𑌤𑌯𑌾 𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌤𑌤𑌂 𑌜𑌨𑌃 ॥
𑌤𑍇𑌨 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑌦𑌾𑌚𑌨 ॥
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌦𑍂𑌰𑌤𑌃 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ॥

புசிக்கத்தகாததைத் தவிர்த்தலாலேயே சித்தம் மிக்கசுத்தமாகும்.
ஆசாரத்தூய்மை யிருப்பின் சித்தமும்தானே தூய்மையாம்.
சித்தசுத்தியிருக்குமாயின் கிரமமாக (சிரவணாதிகளால்) பரம்பொருளின் ஞானம் நிகழும்.

பரம்பொருளின் ஸாக்ஷாத்காரம் நிகழின் ஸம்ஸாரஹேதுக்களாகிய அவித்யாக்கிரந்திகள் நசிக்கின்றன. இதனில் சிறிதும் சங்கைக்கிடமில்லை.

புசிக்கக்கூடாதென விலக்கப்பட்டதைப் புசித்தலால் சித்தம் அசுத்தமாகின்றது.

சித்தம்அசுத்தமாயிருக்கின் மனிதர்களுக்கு உண்மை மாறுபாடாகத் தோன்றும்.

மாறுபாடாகத்தோன்றுதலால் மனிதருக்குக் கெட்டகாரியங்களில் விருப்பமுதிக்கின்றது.

அங்ஙனமாகிய விருப்பத்தால் மனிதன் எப்போதும் பாபத்தைச் செய்கின்றான்.

அதனால் பிறந்திறந்து உழலுதல் விருத்தி யடைகின்றது. ஒருகாலத்திலும் முக்தி யில்லாமற் போகின்றது.

> ஆதலால் புசிக்கக்கூடாததென விலக்கப்பட்டதை மிக்க முயற்சியுடையோனுய்த் தூரத்தில் தள்ளவேண்டும்.

என ஸூதஸம்ஹிதை முதலிய பிரமாண நூல்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. பகவத்கீதையிலும் பதினேழாமத்தியாயத்தில் இக்கருத்துக்கொண்டே

> आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ॥
>
> எல்லோருக்கும் பிரியமான ஆகாரமும் மூன்று வகையாம்.

எனத்தொடங்கி ஆகாரத்தை ஸாத்துவிகம், ராஜஸம், தாமஸம் எனமுவ்வகையாகப் பிரித்து முறையே அவைகளுக்கு லக்ஷணமும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது,

> आयुःसत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ॥
> रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्त्विकप्रियाः ॥
>
> ஆயு: - நீண்டஆயுள், ஸத்வம் - பலமாகிய துக்கம் வரினும் விகாரப்படாமலிருத்தலாகிய சித்ததைரியம், பலம் - சரீரத்தத்திற்கு தக்க சக்தி அதாவது தனக்குறிய காரியத்தில் சிரமமில்லாதிருத்தல், ஆரோக்கியம் - வாத பித்த கபங்களுள் யாதும் விஷமப்படாமல் ஸமநிலைமையோடிருத்தல், ஸுகம் - போஜனம் செய்த பின்னரும் நல்ல திருப்தி, ப்ரீதி:-போஜனம் செய்யும்போதுருசிக் குறைவுண்டாகாதிருத்தலாகிய ஆவல் இவைகளை அபிவிருத்தி செய்விப்பவையும் ரஸ்யா: - ஆஸ்வாதனம் செய்யத்தக்க மதுரரஸத்தைப்பிரதானமாய்க் கொண்டவையும்,ஸ்நிக்தா:- தழுதழுப்புள்ளவையும், ஸ்திரா:-ரஸம் முதலிய அம்சங்களால் தேகத்தில் நீண்டகாலம் தங்கக்கூடிய பலத்தையளிப்பனவும், ஹ்ருத்யா: - துர்க்கந்தம் அசுசி விரூபம் முதலியவை யிராமையால் மனஸைக்கவருவனவுமாகிய இப்பதார்த்தங்கள் ஸாத்துவிகர்களுக்குப் பிரியங்களாம். அதாவது இவ்வாஹாரங்களை ஸாப்பிடுவோருக்குச் சித்தம் சாத்துவிகமாய் சுபவாஸனைக்கு உபகாரமாகும்

என்பது முதலிய லக்ஷணங்களால் போதிக்கப்பட்ட ஆஹாரங்களே கொள்ளத்தக்கன. இவையாவன அத்திக்காய், அவரைக்காய், கண்டங்கத்திரிக்காய். வாழைக்காய் முதலிய காய்கறிவகைகள் மிகவும் ஸாத்துவிகங்களென்றறிக. இனி இவைமட்டும் தான் ஸாத்துவிகங்களோ? பாவக்காய், கருணைக்கிழங்கு முதலிய வகைகள் ஸாப்பிடத்தகாதவையோ எனின் அல்ல. அவை இவை போல மிக்கச் சிறந்தவையல்லா விடினும் புசிக்கத்தக்கவையே என்பதாம். ஆனது பற்றியே

> [illegible] ॥
> [illegible]

𑌕𑍁𑌲𑍁𑌤𑍍𑌥𑌜𑌾𑌤𑌿𑌹𑍇𑌷𑌂𑌚 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂𑌗𑍁𑌂𑌚𑍈𑌵𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ||
𑌧𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑌪𑌿𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑌧𑌾𑌨𑍍𑌯𑌂𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ||
𑌤𑍍𑌰𑌿𑌵𑌰𑍍𑌷𑌾𑌤𑍀𑌤𑌧𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌨𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑌿𑌵𑍈𑌦𑌿𑌕𑍇 ||
𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌾𑌨𑌪𑌿𑌸𑌰𑍍𑌵𑌾𑌂𑌶𑍍𑌚𑌮𑌾𑌸𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ||
𑌆𑌢𑌕𑍀𑌂𑌜𑍀𑌰𑌕𑌂𑌚𑍈𑌵 𑌮𑌰𑍀𑌚𑌂𑌸𑌰𑍍𑌷𑌪𑌂𑌤𑌥𑌾 ||
𑌰𑌾𑌜𑌮𑌾𑌷𑌂𑌮𑌹𑌾𑌮𑌾𑌷𑌂 𑌶𑍍𑌯𑌾𑌮𑌾𑌕𑌂𑌕𑍃𑌷𑍍𑌣𑌮𑌾𑌷𑌕𑌂 ||
𑌮𑌾𑌷𑌂𑌮𑍁𑌦𑍍𑌗𑌂𑌮𑌹𑌾𑌮𑍁𑌦𑍍𑌗𑌂 𑌨𑌿𑌷𑍍𑌪𑌾𑌵 [illegible]
[illegible] 𑌕𑌦𑌲𑍀𑌪𑌨𑌸𑌾𑌨𑌾𑌂𑌸𑌹𑌕𑌾𑌰𑌕 ||
𑌹𑍈𑌮𑌸𑍍𑌥𑍂𑌲𑌕𑌾𑌰𑌵𑌲𑍍𑌯𑌾𑌦𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 ||
[illegible] 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃
[illegible] 𑌤𑌥𑍈𑌵𑌚 [illegible] |
[illegible] 𑌤𑌃
[illegible] 𑌤𑌥𑍈𑌵𑌚||
[illegible]
[illegible]||

இனிநிவேதன யோக்யமான பாகவிதியின் முறையைச் சொல்லுகின்றேன். காட்டுப்பயறு, வரகு, கேழ்வரகு, கொள்ளு, பெருதினை, இவைகளைத்தவிர்க்கவேண்டும். எல்லாதானியங்களிலும் கருப்புநிறமுள்ளது கூடாது. விதிக்கப்பட்ட தானியமும் விளைந்து மூன்று வருஷத்திற்கு மேற்பட்டது கூடாது. குத்தி ஒரு மாஸத்திற்குமேல் சென்ற அரிசி கூடாது. துவரை, ஜீரகம், மிளகு, கடுகு, கருமொச்சை, தட்டைப்பயறு அல்லது காராமணி, சாமை, கருஞ்சோளம், உளுந்து, பயறு, பெரும்பயறு, (பாசிப்பயறு) வெண்மொச்சை, எள்ளு, சிறுதினை, மா, வாழை, பலா, பாகல், பெரும்பாகல், கண்டங்கத்திரி, கருணைக்கிழங்கு, சுக்கு, தேமா, பூஷணி, வெள்ளிரி, ஆடாதொடை, ஆமணக்கு, கத்திரியின்பேதம் இவைகளெல்லாம் கிரஹிக்கக்கூடியன எனப்பெரியோர்களால் சொல்லப்படுகின்றது.

---

𑌵𑌰𑌕𑌃 - காட்டுப்பயறு, "𑌵𑌰𑌕𑍋 𑌵𑌨𑌮𑍁𑌦𑍍𑌗𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌰𑌕𑌃 𑌕𑍋𑌰𑌦𑍂𑌷𑌕𑌃" 𑌇𑌤𑌿𑌵𑍈𑌜𑌯𑌨𑍍𑌤𑍀. 𑌕𑍋𑌦𑍍𑌰𑌵𑌃-கேழ்வரகு, 𑌕𑍁𑌲𑍁𑌤𑍍𑌥𑌃- கொள்ளு, 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂𑌗𑍁𑌃 - தினை, 𑌆𑌢𑌕𑍀- துவரை 𑌜𑍀𑌰𑌕𑌃 - ஜீரகம், 𑌮𑌰𑍀𑌚 மிளகு, 𑌸𑌰𑍍𑌷𑌪𑌃 - கடுகு, 𑌰𑌾𑌜𑌮𑌾𑌷𑌃 - மொச்சை, 𑌮𑌹𑌾𑌮𑌾𑌷𑌃 - தட்டைப்பயறு, 𑌶𑍍𑌯𑌾𑌮𑌾𑌕𑌃 - சாமை, 𑌕𑍃𑌷𑍍𑌣𑌮𑌾𑌷𑌃 - கருஞ்சோளம், 𑌮𑌾𑌷𑌃 - உளுந்து, 𑌮𑍁𑌦𑍍𑌗𑌃 - பயறு,

எனப் பிருகு முதலியவர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது. மரீசி முதலியவர்களும்

“ஹவிஷ்யவிதிப்ரஸக்தௌ” “வேணுயவாந் ஶ்யாமாகாந் நீவாராந் ப்ரியங்கும் மஹாஶாலிஷஷ்டிகாந் வ்ரீஹீந்” “ஜீரணகந்த ஸூரணகந்த ஶ்ருங்கவேர ஸ்ரீகந்த உதுக்கந்தா ந்யாநி ஹவிஷ்யாணி”॥

இனிப் புசிக்கத்தக்க அந்நவிதியைச் சொல்லுகின்றேன். மூங்கிலரிசியவை, அருபதாங்குருவை, செந்நெல், தினை, சம்பா, பெருநெல் இச்சாதியிலுள்ள நெல் எல்லாமும் கிரஹிக்கத்தக்கன. கக்கரிக்காய் கருணைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, சேனைக்கிழங்கு, சக்கரைவெள்ளரி, க்கிழங்கு, இஞ்சி, நைதற்கிழங்கு, அல்லது கோஷ்டத்தின் கிழங்கு,

எனும் இவைகளை கிரஹித்துக்கொள்ளத்தக்கது என்று சொல்லியிருக்கின்றமையால் சேனைக்கிழங்கு, வெள்ளிக்கிழங்கு, சேப்பங்கிழங்கு முதலியவைகளும் சேர்த்துக்கொள்ளத்தக்கவை என்றறிக.

---

மஹாமுத்கஃ = பெரும்பயறு, நிஷ்பாவஃ = அவரை, திலஃ = எள்ளு, திஷ்யகஃ = தினை, வம்தஃ = மா, கதலீ = வாழை, பநஸஃ = பலா, காரவல்லீ = பாகல், கண்டங்காரீ = கண்டங்கத்திரி, கந்தஃ = கருணைக்கிழங்கு, மஹாகந்தஃ = சேனைக்கிழங்கு, ஸஹகாரஃ = தேமா, கூஷ்மாண்டஃ = பூசணிக்காய், உர்வாருகம் = வெள்ளரி, ஹிம்ஸீ = ஆடாதொடை, வ்யாக்ரீ = ஆமணக்கு, ப்ருஹதீ = கத்தரிக்காய்,

வேணுகாஃ = மூங்கிலரிசி, யவாஃ = யவங்கள், ஷாஷ்டிகாஃ = அருபதாங்குருவை, நீவாராஃ = செந்நெல், (செங்குருவை) ப்ரியங்கவஃ = தினை, ஶாலயஃ = சம்பாநெல், வ்ரீஹயஃ = பெருநெல், கர்கடீ = கக்கரிக்காய், ஜீரணகந்தஃ = கருணைக்கிழங்கு, ஶ்ருங்ககந்தஃ = சேப்பங்கிழங்கு, மஹாகந்தஃ = இச்சொல் சேனையெனும் பெருங்கருணைக்கிழங்கிலும் உபயோகிக்கப்படும் சேனைக்கிழங்கு, ஸ்ரீகந்தஃ = சக்கரைவெள்ளிக்கிழங்கு, ஶ்ருங்கவேரம் = இஞ்சி, உதுக்கந்தஃ = நைதற்கிழங்கு

---

இதுகாறும் கிரஹித்துக்கொள்ளத்தக்க ஆஹாரம் சொல்லப்பட்டது. ஆனால் சிராத்தத்தில் சேர்க்கவேண்டியவைகளைப்பற்றி விசேஷமிருத்தலால் இங்கு அது சொல்லப்படவில்லை. இனி கிரஹிக்கத்தகாதவையாகிய ஆகாரங்கள் யாவை எனின்,

லஶுநம் க்ருஞ்ஜநம் சைவ பலாண்டும் கவகாநி ச |
அபக்ஷ்யாணி த்விஜாதீநாம் அமேத்யப்ரபவாநி ச ||

முள்ளங்கி, முருங்கை, (சிகப்பு முருங்கை), வெங்காயம், காளான், அசுத்தமான இடத்தில் தோன்றியவை இவை துவிஜர்கள் புசிக்கத் தக்கனவயல்ல.

வர்ணஸாத்ருஶ்யஸம்யுக்தம் கந்தரஸாதிபி: ||
த்விபாகாந்நம் ஶ்ருதம், நாரிகேலரஸம் ததா ||
வ்ருத்தம் தோயமஸமுத்த்ருதம்
அநிர்தஶாஹம் கோக்ஷீரம் ஔஷ்ட்ரமைகஶபம் ததா ||
ஆவிகம் ஸந்திநீக்ஷீரம் விவத்ஸாயாஶ்ச கோ: பய: ||

வெங்காயம் போன்ற ரூப ரஸ கந்தங்களையுடைய பதார்த்தங்களும், இரண்டாமுறைபாகஞ்செய்த அன்னம், காய்ச்சிய தேங்காய்ப் பால், பூமியினின்றெடுக்காத தீர்த்தம், கன்றீந்து பத்து நாளாகாத பசுவின் பால், ஒட்டகப்பால், ஆடுமுதலியவைகளின்பால், ஒற்றைக் குளம்புடையதன்பால், புணரும் பருவமுடைய பசு, கன்றில்லாத பசு, இவைகளின் பால்

என மனு முதலியவர்களது வாக்கியங்களில் நிஷேதிக்கப்பட்டுள்ளவைகளை தள்ளவேண்டும். அன்றியும் பகவத்கீதையிலும் ராஜஸம் தாமஸம் எனும் இருவகை யாகாரங்களையும் கிரஹிக்கக்கூடாது எனச்சொல்லவந்து, ராஜஸ தாமஸங்களாவன யாவை என்பது

கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந: |
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:கஶோகாமயப்ரதா: ||

முழுக் கசப்பு, முழுப் புளிப்பு, மிக்க உவர்ப்பு, மிக்கச் சூடு, மிகவும் உறைப்பு, திரவமற்றது, எரிச்சலை யுண்டுபண்ணும் தன்மையுடையது ஆகிய இவை தற்காலத்திய பீடையையும், பின்னர் நிகழுவதாகிய சோகத்தையும், வியாதியையும் தருவனவாகின்றன. இவை ராஜஸனுக்கு இஷ்டங்களாம். (இவை சித்தத்தை மிகவும் அலையச் செய்வனவாம்).

யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் |
உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜநம் தாமஸப்ரியம் ||

அரைபக்குவம், ஸாரமற்றது, (அதாவது கய்ந்தது முதலியது)' துர்க்கந்தமுற்றது, பக்குவமாய் இரவு சென்றது,(பழையது) உச்சிஷ்டம் (புசித்தெஞ்சியது) அசுத்தமானது (புசிக்கத்தகாமல் கெட்டுப் போகியது) இவ்வாஹாரம் தாமஸனுக்குப் பிரியமாம் (அதாவது தமோகுணத்தை ஓங்கச் செய்வது)

எனும் சுலோகங்களால் நன்கு சொல்லப்பட்டிருக்கின்றன. இங்ஙனம் சாஸ்திர வாக்கியங்களால் விலக்கப்பட்டிருக்கும் ஆகாரங்களை விடுத்தும் விதிக்கப்பட்ட ஸாத்துவிகாகாரங்களையே புசித்துக்கொண்டுமிருந்தால் கெட்ட வாஸனைகளால் மூளையில் ஏற்பட்டிருக்கும் பதிவுகளின் மாறுபாட்டிற்குறிய பாவனாஸ்தானங்களைக் கெடுத்து, சுப வாஸனைகள் மாத்திரம் விருத்தி யடைதலுக்கு ஹேதுவாகும். ஆதலால் அசுபவாஸனையை ஒழிக்க விவேகம், சுப வாஸனாப்பியாஸம் இவைகளோடு ஆகார நியமமும் வேண்டிய தவசியமென்றறிக.

ஆகாரத்தில் விதிவரம்பிராதவர்களாய்க் கண்டவிடங்களில் தோன்றியவாறு புசித்துக்கொண்டு திரிவோருக்கு அசுப வாஸனையே ஓங்கிக்கொண்டிருக்கு மென்பதைத் தற்காலம் உலகில் நிதர்சனமாக நன்குகாணலாம். வாஸனையானது செய்கையின் அப்பியாஸத்திற்குத் தக்கபடி ஸங்கற்ப ஹேதுவாய் மனதினில் பதிந்துகிடக்கும் அரூபமாகிய ஸம்ஸ்காரமேயாதலால் அதனை நேரில் காண இயலாவிடினும் அதனால் நிகழும் செயலைக்கொண்டு இவன் இத்தன்மையான வாஸனையுடையோன் என்பதை அறிந்துக்கொள்ளலாம்.

வாஸனை சுபம் அசுபம் எனப் பொதுவாக இருவகையாய்ச் சொல்லப்படினும் அது லோகவாஸனை, தேஹவாஸனை, சாஸதிரவாஸனை என மூவ்வகைப்படும்.

லோகவாஸனையாவது, "எவ்வாறு நடந்துக்கொண்டால் எல்லோரும் நம்மை மிகவும் கௌரவப்படுத்திச் சிலாகிப்பாரோ அவ்வாறே நாம் நடக்கவேண்டும் யாரும் நம்மை நிந்திக்கக்கூடாது" எனும் எண்ணங்கொண்டு இவையே அதற்குத் தக்க காரியங்களெனச் சில காரியங்களை நிச்சயித்துக்கொண்டு ஓய்வொழிவின்றி அக்காரியங்களிலேயே யாதாயாதமாக உழன்றுகொண்டிருத்தலாம். இப்படி யுள்ளவர்களை லோகவாஸனை முனையைப் பெற்றவரென நாம் நிச்சயித்துக்கொள்ளலாம்.

இவ்வுலக வாஸனையானது சித்தத்தை அலையச்செய்துகொண்டே யிருக்குமாதலால் மோக்ஷ மார்க்கத்தை நாடுவோருக்கு இது பெரிய இடையூறே என்பது நிச்சயம். விவேகத்தோடு நன்காராய்ந்து பார்க்கின் இவ்வாஸனையை வென்று போடலாம். அதாவது "யாரும் நிந்திக்கக்கூடாது உலகில் எல்லோரும் நம்மை சிலாகிக்கவேண்டும்" எனும் எண்ணத்தைக்கொண்டு இக்காரியங்களைச் செய்கின்றோமே இது ஸாத்தியமாகுமா என்பதைச் சற்று யோஜிக்கவேண்டும். எவனும் நிந்தியாமல் எல்லோரும் சிலாகிக்கத்தக்க செய்கை உலகில் யாதானும் இருக்கின்றதா? நிந்தைக்குச் சிறிதும் இடமின்றி ஸகல நற்குணங்களும் அமைந்தவரும் நாமோச்சாரண சரிதசிரவணதியானாதிகளால் ஸகல பாபங்களையும் போக்கடித்துப் புனிதராக்குவோருமாகிய ராம கிருஷ்ணாதி அவதார மூர்த்திகளையே எல்லோரும் சிலாகிக்கின்றனரில்லையே. ஏதோ சில சாதுக்களேயன்றோ சிலாகிக்கின்றனர். பலர் நிந்தையும் செய்கின்றனரே? இன்னம் வஸிஷ்டபராசர ஜைகீஷவ்ய அகஸ்திய வியாஸ மனு மாந்தாதா அரிச்சந்திர

நள தர்மபுத்திராதிகளையும் அவ்வக்காலங்களிலேயே பலர் நிந்தித்ததாக இதிகாஸ புராணங்களில் காணப்படுகின்றதே. இவர்களுக்கே இப்படியானால் நம்மை எல்லோரும் ஸிலாகிக்கவேண்டும் யாரும் நிந்திக்கக் கூடாதென்று எண்ணிக்கொண்டு அதற்காக நாம் முயற்சிப்பது உசிதமாகுமா? அது சிறிதேனும் நிறைவேறுமா?

"விசித்ரபாவசித்தஸ்ய லோகஸ்ய பரிதோஷகஃ | ஸ்வயா ஸ்வஹிதமாசர்யம் கிம் கரிஷ்யதி ஜநோ பஹுஜல்பகஃ ||

> ஸகல ஜனங்களையும் ஸந்தோஷம் செய்விப்பதாகிய உபாயம் உலகில் யாதுமில்லை. எவ்வாறாயினும் தனது ஹிதத்தையே தேடிக்கொள்ள வேண்டும். ஜனங்களின் மிகுந்த பேச்சு நமக்கு யாது செய்யும்?

என முன்னோருரைத்த நீதி மொழிக்கிணங்க நமது ஜனன மரணப் பிணியையோ அல்லது நரகயாதனை இழிய பிறவி முதலியவைகளுக்கு ஹேதுவாகும்நிலமையையோஒழித்துக்கொள்ளும்வழியையே நாம்.தேடிக்கொள்ள வேண்டும். அப்படித் தேடிக்கொள்ளாமல் உலக ஸிலாகனையைக்கருதி ஜம்பத்திலேயே வாழ்நாளைக் கழித்துவிட்டோமாயின்,மரித்ததும் நரகயாதனை முதலிய துன்பங்களுக்கே ஏதுவைத் தேடிக்கொண்டவனாய்த் தனக்குத்தானே சத்துருவாய் முடியும்.

" ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மனஃ ||

> " தனக்குத் தானே பந்துவாகின்றான். தனக்குத் தானே சத்துருவுமாகின்றான் "

என்பது முதலிய பகவத்கீதாதிவாக்கியப்படி நமக்கு நாம் ஹிதத்தையல்லவோ தேடிக்கொள்ளவேண்டும். உலகத்தார் ஸிலாகித்தலினால் நமக்கென்னபயன்? உலகம் முழுதும் நிந்தித்தாலும் நாம் ஸந்மார்க்கத்தையே நாடிக்கொண்டிருக்கவேண்டும்.

"நிந்தந்து நீதிநிபுணாஃ யதி வா ஸ்துவந்து லக்ஷ்மீஃ ஸமாவிசது கச்சது வா யதேஷ்டம் | அத்யைவ வா மரணமஸ்து யுகாந்தரே வா ந்யாய்யாத்பதஃ ப்ரவிசலந்தி பதம் ந தீராஃ ||

> நிந்தையைச் செய்தாலும் செய்துக. நீதி யுணர்ந்த பெரியோர் தோத்திரம் செய்தாலும் செய்துக. செல்வம் பெருகட்டும் அல்லது தொலையட்டும். இப்போதே மரணம் வந்தாலும் வரட்டும் அல்லது மறுயுகத்தில் வந்தாலும் வரட்டும். (நியாய) ஸந்மார்க்கத்தினின்றும் தீரர் சிறிதும் வழுவார்.

எனக்கூறிய நீதி மொழியை அநுஸரித்து நடப்பதே விவேகம் என இவ்வாறு புத்தியைப் பரிபாகப் படுத்திக்கொண்டால் இவ்வுலக வாஸனை பலங்குன்றிக் கிரமமாகக் கெடும். பிறகு சித்தம் நிர்மலமும் தெளிவுற்றதுமாகும். இவ்வாற்றால் உலக வாஸனையை வென்றுபோடலாம்.

தேகவாஸனையாவது, "அறுசுவை நிறைந்த இனிய அன்னபானாதிகளைப் புசிக்கவேண்டும். ஸ்திரீ புருஷ சேர்க்கையால்வரும் இன்பத்தை மனம் கொண்டவாறு நன்றாய் அனுபவிக்கவேண்டும்" என்பது முதலிய எண்ணங் களால் தேஹ ஸம்பந்தமாக நிகழும் சுகத்தையே பரமெனக்கொண்டு அவ்வகை யான காரியங்களிலேயே உழலுதல் தேஹவாஸனையாலேயேயாம்.

சற்று விவேகித்துப்பார்க்கின் இவ்வாஸனை மிகக் கொடிது என்பது நன்கு விளங்கும். இந்த வாஸனை லோக வாஸனையைக் காட்டிலும் மிகவும் திடமாக ஸகல ஜீவர்களுக்கும் அமைந்திருக்கும். அதற்குக் காரணம்; நிந்தை தோத் திரம் முதலிய உலகவியவகாரங்கள் மனுஷ்ய ஜன்மத்தில்மாத்திரம் ஸம்பவிக் கும். தேகவாஸனையோ எனின் ஜன்மந்தோறும் ஸகல தேஹத்திலும் நிகழக் கூடும். மனுஷ்ய ஜன்மத்தைக்காட்டிலும் ஏனைய ஜன்மங்களை பெற்றிருத்தல் மிகவும் ஜாஸ்தியாயிருக்கும். ஆதலால் தேகவாஸனை ஸகல பிறவிகளிலும் ஏற் பட்டுத் திடப்பட்டுநின்றியது. லோகவாஸனை மனிதப் பிறவியாத்திரத்தில் அமைந்தது. எனும் இதுவே இதற்குக் காரணம் என்றறிக. ஆதலால் இத் தேசவாஸனையால் இழுபடுவோர் லோகவாஸனையால் இழுபடுவோரிலும் மிகு தியே. இவ்வாஸனையை ஒழிக்க விவேகத்தோடுகூட மிகவும் பலமான முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும்.

அதாவது "பாயஸ சித்ரான்ந பக்ஷ்ய போஜ்யாதி அறுசுவையுடன் கூடிய விருந்துணவினாலும், சிறிது உப்பைக்கலந்து யோரைமட்டும் வார்த்துண்ணப் படும் வெறும் அன்னத்தினாலும் ஏற்படும்பயன் பசியடங்குதல் எனும் ஒன்றே. இங்ஙனமிருக்க வீணில் ஏன் விருந்துண்டியை நினைத்து அதற்காக உழல வேண்டும்? இனி இன்னமும் சற்று யோஜிப்போமாயின் விருந்துணவினால் தேகத்திற்கு ஆரோக்கியக் குறைவும் யோரன்னமாத்திரத்தால் ஆரோக்கியமும் ஏற்படுகின்றது. எளிதாய்க் கிடைப்பதும்,ஆரோக்கியகரமுமாகிய ஸாதாரண போஜனத்தைவிடுத்து ரோகஹேதுவும் மிக்கச் சிரமத்தினால் கிடைப்பதுமாகிய அறுசுவை பக்ஷ்ய போஜனத்தை விரும்பி அல்லற்படுவது அறியாமையே யன்றோ" என விவேகித்துக்கொண்டால் சிறந்த விருந்துணவு விஷயத்தில் உழலுதலுக்கு ஏதுவாகிய இந்த வாஸனை குன்றும். ஆனால் இங்ஙனம் நாம் சொல்லிவிடுவதுமாத்திரம் எளிதே யன்றி இதனை அநுஷ்டானத்தில் கொண் வருவது மிகவும் அரிதே. ஏனெனின் அறுசுவையமர்ந்த விருந்துணவைப் புசிப்பது பாபத்தில் சேராதாதலால் ஸாதுக்களுக்கும் போஜனத்தில் ருசி தேடும் வழக்க மிருக்கக்கூடும். ஆனால் சித்தத்தை மிகவும் அலலற்படுத்தி விடுகின்றமையால் மோக்ஷத்தை நாடுவோருக்கு அது மிகக்கொடிதேயாம். இனி மனங்கொண்டபட்டும் ஸ்திரீ புருஷ சேர்க்கை யின்ப மனுபவிக்கவேண்டுமென வரும் எண்ணத்தை ஒழிப்பதற்கு அவ்வளவாக மிகவும் முயற்சி யெடுத்துக் கொள்ளவேண்டுமென்பதல்ல. ஏனெனின் ஆகார விஷயமாய் ருசி தேடும் பற்றானது நபும்ஸகாதிப் பிறவியிலும் ஸம்பவிக்கக்கூடும். ஸ்திரீ புருஷசேர்க் கைவிருப்பமானது நபும்ஸகஜன்மத்தில் ஸம்பவிக்க இடமில்லை யாதலால்

ஆசாரவிஷயமான பற்றிலும் ஸ்திரீபுருஷசேர்க்கைப்பற்றுச் சற்றுக்குறை வுற்றதென்றே சொல்லலாம். ஆனது பற்றியே ஸ்திரீபுருஷசேர்க்கையின் பற்றைச் சுலபமாய் ஒழிப்பவரும் ஆகாரவிஷயத்தில்மட்டும் மிகவும் இழுபடும் படியாயிருக்கிறது. இது உலகில் நிதர்சனமே. விவேகத்தோடு சற்றுலோசித் துப்பார்த்தால் இன்பத்திற்கென விரும்பப்படும் அவயவமானது தோல், சதை, ரத்தம், மாம்ஸம், துர்நீர் முதலியவைகளின் சேர்க்கைக்கந்நியமாக யாதேனும் உளதா? வெளிப்பார்வைக்கு அழகிய முகம், மனங்கவரும்மார்பு, உல்லாஸமாகிய உடம்பு எனக்கருதப்படுவதாயினும் கசாப்புக்கடைக்காரன் கத்தியினால் பரிசோதிப்பதுபோல நாம்நமது அறிவினால் பரிசோதிப்போமாயின் முற்கூறிய ரக்தம் மாம்ஸம் சதை முதலிய அசுத்தபதார்த்தங்களின் சேர்க்கையே என்பதும் அவை நினைக்கும்போதெல்லாம் காறியுமிழ்ந்து துச்சமாய் ஒதுக்கத்தக்கவையே என்பதும் நிச்சயமாய் விளங்கும்.

> नारीस्तनभरनाभीदेशं दृष्ट्वा मा गा मोहावेशम् ।
> एतन्मांसवसादिविकारं मनसि विचिन्तय वारं वारम् ॥

என்பது முதலிய சங்கரபகவத்பாதர் முதலியவர்களது மொழியில் சிறிதேனும் பிசகேற்படாதன்றோ. அழகினில் சிறந்த என்னருமைநாயகியே என்னருமைநாயகரே எனக்கொஞ்சிக்குலாவப்படும் இத்தேகமே சீவனெனும்ஆவி நீங்கிப்போயின் ஐயா எனிந்தப்பிணத்தை இன்னமும் போட்டிருக்கவேண்டும்? இனியிருந்தால் நாற்றமெடுக்குமே. அந்தோ மிகவும் துர்நாற்றம் நாறுகின்றதே. இதனை எப்படியாவது எடுத்துச்சென்று சொளுத்திப்போடுங்கள் எனச் சொல்லப்படுகின்றதே! இன்பத்திற் காலம்பனமெனக்கருதப்படும் தேகத்தின் கதி முடிவில் இவ்வாறல்லவோ ஆகின்றது.

> [illegible] ॥

> ஸ்திரீ, பொன், அணி, ஆடை முதலிய மாயாமயப்பொருள்களில் (மூடன்) மயங்கியமனமுடையோனுப் இதனில் மிகவும் இன்பமனுபவிக்கலாம் எனும் எண்ணத்தினால் விளக்கு விட்டிற் பூச்சிபோல அறிவிழந்து வீழ்ந்தழிகின்றான்.

என ஆன்றோர் கூறியபடி ப்பிறக்கரிய மனிதப் பிறவியையெடுத்தும் இது அவலமாய்ப்போகும் பெருமோசமேயன்றோ. மனுஷ்ய ஜன்மாவைப்பெற்ற தன் பயன் இனிப்பிறவியில்லாமல் செய்துக்கொளுவதே யல்லவா. அப்படியிருந்தும்

> [illegible] ॥

ஜனனம் துக்கம் ஜரை துக்கம் மரணம் துக்கம் மீண்டும் மீண்டு மிதுவே! ஸம்ஸாரமண்டலம் துக்கமே. அதனில் ஜீவர்பாகமடைகின்றனர்.

என முன்னோர்கூறியபடி மீண்டும் மீண்டும் துக்கத்திற்கு ஏதுவாக்கிக் கொள்ளும் இவ்விழியபோக ஸுகமும் ஸுகமாகுமா? முடிவினில் இது துன்பமேயன்றோ என இங்ஙனம் இதனிலுள்ள உண்மையை விவேகித்துக் கொண்டு இவ்விவேகத்தைத் திட்பபடுத்திக் கொண்டால் தேகவாஸனையைத் துச்சமாய்த்தள்ளி வென்றுபோடலாம்.

இனி சாஸ்திர வாஸனையாவது, சாஸ்திரங்களின் கருத்தை யறிந்து கொண்டு அவ்வாறு அநுஷ்டானத்தில் கொண்டு வருவதான உத்தமமாகிய நிலமையில் யத்தனம் செய்யாமல் மென்மேலும் படித்துக் கொண்டே யிருத்தல் அல்லது ப்ரவசனம் செய்துகொண்டேயிருத்தல் முதலிய காரியங்களிலேயே உழலுதலாம். உதாரணமாக, பரத்துவாஜர் எனும் ஓர் ரிஷி தனது ஆயுளின் முக்கால் பங்கை வேதாத்தியனம் செய்வதிலேயே கழித்து அர்த்த விசாரம் செய்யாமலும் அதில் உபதேசித்தபடி பரம் பொருளைச் சிந்திக்கும் வழியைத் தேடாமலும் மிகுந்த ஜரையை யடைய அச்சமயம் இந்திரன் மனமிரங்கி அந்த ரிஷியை நோக்கி ஒபரத்துவாஜரே! நான் உமக்கு இன்னம் பலகாலம் ஜீவிக்கும் வழியை அருளு வேனுயின் அவ்வாயுளை நீர் எவ்விஷயத்தில் கழித்து எதனைத் தேடுவீர்? என்று வினவ அதற்குஅவர் ஓ தேவராஜனே! யான் இன்னம் அத்தியயனம் செய்யாமலிருக்கும் வேதவாக்கியங்களை அத்தியயனம் செய்து போடுவேன் என்றார். அப்போது இந்திரன் அந்த ரிஷியின் அத்தியயன வாஸனையை நீக்கிப் பரம் பொருளை அறியும் வழியை நாடச்செய்யக் கருதி வேதங்களை ஓர் பெரிய மலைவடிவமாக எதிரில் தோன்றச் செய்து அதனின்றும் ஓர் பிடி மண்ணை யெடுத்து ஒ ப்ராமணரே! நீர் இதுகாறும் அத்தியயனம் செய்த வேதம் இந்தப் பிடிமண் அளவே. இன்னம் ஓதவேண்டி மிஞ்சி யிருக்கும் பாகம் அதோ தெரியும் மலையே. இவ்வேத வடிவமான மலையினின்றும் ஓர் பிடி மண்ணளவை ஓதுவதற்கு உமக்கு இவ்வளவு காலம் பிடித்தது. மிஞ்சியுள்ள பெருமலை வடிவான வேத பாகங்களை எப்போது அத்தியயனம் செய்து முடிக்கப் போகிறீர் என்று கேழ்க்கவே, அந்த ரிஷி அவ்வத்தியயன வாஸனையினின்றும் விலகி ஏக்கமுற்று, எனிப்படி நாம் அஸாத்தியமான காரியத்தில் ஸாத்தியபுத்தியோடு உழன்றோம் என பலவருத்தமுற்று நிற்கவே அச்சமயம் இந்திரன் அவருக்குப் பரம்பொருளை யுபதேசித்தான் என இச்சரிதம் பரத்துவாஜ ஆக்கியாயிகையில் சொல்லப் படுகின்றது. இவ்வாறு சற்று விசாரிப்போமாயின் சாஸ்திர வாஸனையை வென்று போடலாம். மிக்கப் பாவனமும் மறுமையில் க்ஷேமத்திற்கே ஏதுவாவதுமான வேதாத்தியயன பாடமே இவ்வாறாயின், தற்காலம் ஸங்கீதம், முதலியவைகளிலேயே யாவது, அல்லது பாஷாந்தரங்களிலுள்ள ஸயன்ஸ் முதலிய கலா சாஸ்திரங் களிலேயே யாவது வாழ்நாள் முழுவதும் உழைத்துக் கொண்டு பரம் பொருளிலேயோ, அல்லது அவ்வுண்மையைப் போதிக்கும்

சாஸ்திரங்களிலேயோ சிறிதும் புத்தியைச் செலுத்தாமல் நிஷ்பிரயோஜனமாகப் பரலோகத்திற்கு மிகவும் ஹானியையே தேடிக்கொண்டு வாய் விட்டுத் துலையும் ஜனங்களின் நிலைமையை எவ்விதமென்று யோசிப்போமாயின் அது மிக்க ஆச்சரியமே என்றறியப் படும்.

இங்கு காட்டிய பாரத்வாஜ ஆக்கியாயிகையினாலேயே சாஸ்திர வாஸனையை வெல்லும்வழி சொல்லப்பட்டதாயிற்று' விவேகத்தோடுகூட யோஜித்துப் பார்ப்பவனாயின்

𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌬𑌹𑍁𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 𑌅𑌲𑍍𑌪𑌶𑍍𑌚 𑌕𑌾𑌲𑍋 𑌬𑌹𑌵𑌶𑍍𑌚 𑌵𑌿𑌘𑍍𑌨𑌾𑌃 । 𑌯𑌤𑍍𑌸𑌾𑌰𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑍁𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌹𑌂𑌸𑍋 𑌯𑌥𑌾 𑌕𑍍𑌷𑍀𑌰𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌬𑍁𑌮𑌿𑌶𑍍𑌰𑌮𑍍 ॥

> சாஸ்திரம் அநந்தம். அறிந்து கொள்ளவேண்டியதோ பலவுள. வாழ்நாளோ அற்பம். இடையூறுகளோ எண்ணிறந்தன. ஆதலின் ஹம்ஸம் நீரோடு கலந்தபாலைக் கிரஹித்துக்கொள்ளுவதுபோல ஸாரமாயுள்ள பரம்பொருளையே உபாஸிக்கத்தக்கது.

என்பது முதலிய ஆன்றோர் மொழிக்கிணங்க இம்மானிட ஜன்மத்தை ஸபலமாக்கிக்கொள்ளும் வழியைத் தேடிக்கொள்ளுவதே விவேகம். என்றிங்ஙனம் புத்தியைப் பரிபாகப்படுத்திக்கொண்டால் சாஸ்திர வாஸனையை மீறி வென்றுபோடலாம் என்பதே நிச்சயம்.

வாஸனையின் பிரிவுகளையும் அவைகளை வென்று போடும் வழியையும் தெரிந்துகொள்ளாமல் அசுபவாஸனையை ஒழிக்கமுடியாது. அசுபவாஸனையைத் தகைந்து வென்று போடாதவரையில் பிறவிக்கடலினின்றும் கரை யேறமுடியாது. நரகாதித்துன்பங்களுக்காகாமலிருக்கவாவது ஸ்வர்க்காதி லோகாந்தர இன்பத்தை அநுபவிக்கவாவது விருப்பமிருக்கின் அசுபவாஸனையை ஒழித்துப்போடவேண்டியதவசியமேயாம். இங்ஙனம் வாஸனைக்கும் பௌருஷயத்தினத்திற்குமுள்ள பலாபல தாரதம்மியத்தை யறிந்துகொண்டவர் அசுபவாஸனையை எளிதில் வென்று போடலாம். இச்சரீரத்தை விடும் கடைசித்தருணத்தில் எவ்வச்சமுமின்றி மனம் நிர்மலமாக நிலைபெறும். கடைசிஸமயத்தில் சித்தம் நிர்மலமாய் நிலைபெறின் நரகாதியாதனைகளுக்காவது இழிய பிறவிக்காவது சிறிதும் இடமின்றி மறுமையில் உத்தமமான நிலைமையையே பெற்றுஇன் புறலாகும்.

𑌶𑍁𑌭𑌮𑍍 𑌶𑍁𑌭𑌮𑍍 𑌶𑍁𑌭𑌮𑍍.

## தைவமும் பௌருஷமும்

அல்லது

## கர்மதத்துவம் ஸம்பூர்ணம்

உ

ஸ்ரீ ஹம்ஸாய நம:

# வேதசாஸ்திரதத்துவம்

## இரண்டாம் பாகம்

# லோகாந்தரம்.

லோகாந்தரயாவது இவ்வுலகம்போலவே எண்ணிறந்த ஜீவகோடிகள் வஸிக்குமிடங்களாகிய வேறு உலகங்களாம். ஸ்வர்க்கநரங்களென்பவையும் இவைகளே. இவ்வுலகில் மிகவும் புண்ணிய பாபங்களைச் செய்தமனிதர் இறந்த பின்னர் லோகாந்தரம் சென்று இன்பதுன்பங்களைப் புசிக்கின்றனர். இன்பமனுபவிக்குமிடம் ஸ்வர்க்கமென்றும் துன்பமனுபவிக்குமிடம் நரகமென்றும் நம் சாஸ்திரங்களில் வழக்கப்படுகின்றது

இனி இவ்வுலகில் மனிதர் இறந்தபின்னர் மண்ணிலாவது தீயிலாவது நீரிலாவது அழிந்து போகின்றனரென்பது ப்ரத்திய க்ஷமன்றோ. இப்படியிருக்க லோகாந்தரம் சொல்லுகின்றனரென்பது உசிதமாகுமா? எனின், இந்த ஸ்தூலதேஹம் இங்கு இவ்வாறு அழிந்துபோயினும் இதற்குள்ளிருக்கும் ஜீவன் எனும் பதார்த்தமும் இதனோடுகூட அழிந்து போகின்றதில்லை. அவன் தனது கர்மத்திற்குத்தக்கபடி வேறு ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டு ஸ்வர்க்க நரங்களையடைந்து இன்பதுன்பங்களைப் புசிக்கின்றான் என்பது உண்மை என்க.

சங்கை" இந்தஸ்தூல தேகத்தைத் தவிர ஜீவாத்மா எனும் ஒரு பொருள் இதற்குள்ளிருக்கின்றதென்பதாக ஏன் கொள்ளவேண்டும்? கடியாரத்தின் சக்கரம், வில், முதலிய அவயவங்களுள் யாதானும் கெட்டுப்போயின் அது வேலை செய்யாமல் ஓய்ந்து போவதுபோலவே, இந்தஸ்தூலசரீரத்தின் அவயவங்களின் நிலைமைகுலைந்து கெட்டுப்போயின் ஜீவசக்தியும் ஓய்ந்து போகின்றதென இப்படிக்கொள்ளுவதில் எக்குற்றமுமில்லையே? இந்தஸ்தூலசரீரத்திற்கந்நியமாய் ஜீவாத்மா என ஓர் பொருளிருக்குமாயின் விரிந்த இவ்வுலகினில் உள்ள மனிதருள் யாரானும் ஒருவரேனும் அதனைப் பார்த்திருக்கக்கூடுமன்றோ. அங்ஙனமிதுகாலம் வரையிலு மில்லவே யில்லையே! ஆதலால் லோகாந்தரம் என்பதாக ஒன்றைக் கற்பித்துக்கொள்வதும், புண்ணியபாபங்களுண்டென்பதும், இந்தஸ்தூலசரீரத்தில் ஜீவாத்மா என ஒருவன் இருக்கின்றான் என்பதும், அவன் மரித்ததும் எங்கேயோபோய்ச் சேருகின்றான் என்பதும் யுக்திக்குப் பொருந்தவில்லை. ஸ்தூலசரீரத்தின் நிலைமைகெடாமலிருக்கும் வரையில் ஜீவாத்மா இருக்கின்றான் எனவும் கெட்டுப்போயின் மரணம் எனவும் உலகவியவஹாரமாத்திரமே. இம்மட்டோடு இதனை வைத்துக் கொள்

வதை விட்டு, ஏதோ ஸாமான்னியர்களை நோக்கிக் கட்டுப்பாடாகவே எழுதி வைக்கப் பட்டிருக்கும் பழய சுவடிகளில் சொல்லியிருப்பதை உண்மை யெனக் கொண்டு ஸ்தூல தேகத்தினில் ஜீவன் எனும் ஓர் பொருளிருக்கின்றுனென வும், மரித்ததும் அச்சீவன் இதனை விட்டுப் பிரிந்து லோகாந்தரம் செல்லுகின்று னெனவும் சொல்லப்படுவதை ஏன் வீணில் நம்பிக்கொண்டு கஷ்டப் படவே ண்டும்? எனும் சங்கை. தற்காலம் பெரும் பான்மையாய் நிகழுகின்றது. ஆத லால் இதனைச் சற்றுராய்வாம்.

உலகில் ஸகல மனிதர்களுக்கும் உள்ளத்தில் விருப்பம் வெருப்பு ஊஹம் நிச்சயம் முதலிய சிந்தனு வடிவமான அறிவுத் தொழில் நடந்து கொண்டிருக் கின்றதன்றே. கத்தி முதலிய கருவிகளால் எவ்வளவோ நுட்பமாய்ப்பரிசோதிக் கினும், தோல் சதை நரம்பு ரத்தம் மாம்ஸம் எலும்பு முதலிய ஸ்தூலப் பொருள் கள் மாத்திரம் காணப் படுகின்றனவே யன்றி அவ் வறிவுப் பொருளை இதுவே எனக் கண்டு கொள்ள எவராலு மியலவில்லை. நேரில் அங்ஙனம் காணப்படா விடினும் தேஹத்திற்குள் அறிவின் வேலை நடந்து கொண்டிருக்கின்ற தென் பது எல்லோருக்கும் அநுபவ ஸித்தமே. இனி அவ்வறிவுப் பொருள் யாது என வினவுவோ மாயின் ஸ்தூல தேசத்திலும் வேறாக ஜீவாத்மாவை ஒத்துக் கொள்ளாதவர் யாது சொல்லுவார்? ஸ்தூல தேகத்திற்கே அங்ஙனம் அறியுந் தன்மை யிருக்கின்றது என்பதைத் தவிர வேறு யாதும் சொல்ல முடியா தன் றே. தன்மையாவது வஸ்துவினில் ஸ்வபாவமாக (இயல்பாக) வாவது அல் லது நைமித்திகமாகவாவது அமைந்திருப்பதே யன்றி வேறு விதமா யில்லை யே? உதாரணமாக, சர்க்கரைக்குத் தித்திப்பு ஸ்வபாவமாகவும், பானசத்திற்குத் தித்திப் பானது சர்க்கரை முதலிய தித்திப்புப் பொருளின் சேர்க்கை யெனும் நிமித்தத்தினுல் வந்தது பற்றி நைமித் திகமாகவும் அமைந்திருப்பது என்பதாம். இனி ஸ்தூல தேஹத்திற்கு அறியும் யோக்கியதையானது ஸ்வா பாவிகமா யுள்ளதா? அல்லது நைமித்திகமா யுள்ளதா? ஸ்தூலத்திலும் ஜீவனெனும் அறி வுப் பொருளை வேறாகக் கொள்ளுதலை விட்டுக் கண்ணுல் கண்டதையே வாஸ் தவமெனக்கொள்ளும் நாஸ்திகக்கோட்பாடுடையோர் இவ்விரண்டினில் எதனை அங்கீகரிக்கின்றனர்? ஸ்வாபாவிகமாகவே உள்ளதெனின் அது அநுசிதமே. அதாவது சர்க்கரைக்குத் தித்திப்பும் வேப்பிலைக்குக் கசப்பும் ஸ்வாபாவிக மாகவே யிருக்கின்றது. ஸ்வபாவமாகிய தித்திப்புப் போய் சர்க்கரை மாத் திரம் தனித்துள்ள தென்பதுண்டா? அங்ஙனமே கசப்புப் போய் வேப் பிலை மாத்திரமுள்ள தென்பது மன்றே. ஸ்வபாவத்திற் காதாரமான ஸ்வ ரூப வஸ்து நசிக்காமல் ஸ்வபாவத்திற்கு நாசமில்லையே. சர்க்கரை வேப்பிலை முதலியவைகளின் ஸ்வரூபம் அழிந்தால் அவைகளின் ஸ்வபாவமான தித்திப்பு கசப்பு முதலியவைகள் அழிகின்றன. இதுவேயன்றி ஸ்வபாவம் நசித்துப் போக ஸ்வரூப மாத்திரம் இருந்த தென்பது எக்காலத்திலு மியலாது. அறியும் ஆற்றலை ஸ்தூல தேகத்தின் ஸ்வபாவம் எனக் கொண்டோமாயின் முற் கூறிய நியாயத்தின்படி கவனித்தால் ஸ்தூல தேகம் இருந்தும் அறிவுத் தொழில் சிறி

தும் இராமல் நசித்துப்போச்சுது என்பதற்கிடமில்லையன்றோ? இறந்துபோன சவசரீரம் ஸ்தூலமேயல்லவா? அதனிடம் அறியும் ஆற்றலைக்காணோமே. ஸ்வரூபமிருக்கின்றது ஸ்வபாவம் மாத்திரமில்லை என்பது சிறிதேனும் பொருந்துமா? ஆதலால், ஸ்வாபாவிகம் என்போர் சவத்திற்கும் அறிவுள்ளதென்றே சொல்லவேண்டியதாகின்றது. அப்படிச்சொன்னால் அதனையாரேனும் ஒத்துக்கொள்ளுவாரா? அக்கினியிருக்கின்றது அதன் ஸ்வபாவமான உஷ்ணம்மாத்திரமில்லை என்பது எப்படி ஒவ்வுகின்றதில்லையோ அப்படியே ஸ்தூலசரீரமிருக்கின்றது அறிவுமாத்திரம் இல்லை என்பதும் ஒவ்வாமல் போகவேண்டுமே. அங்ஙனமில்லையே! ஸ்தூல சரீரம் முன்போலவே யிருந்தும் இறந்த சரீரத்தில் அறிவுமாத்திரம் இராமற்போவதைக்கவனித்தால் அறிவு ஸ்தூல சரீரத்தின் ஸ்வபாவம் அல்ல வென்றே நிர்ணயிக்கப்படுகின்றது. அன்றியும் ஸ்தூல சரீரத்திற்கு எக்கேடுமின்றியுள்ள ஸுஷுப்தி மூர்ச்சை ஸமயங்களில் அறிவு மாத்திரம் காணப்படாமலிருத்தலைக்கவனித்தாலும், அறிவை ஸ்தூலத்தின் ஸவபாவமாகச்சொல்லுதல் ஆராய்ச்சியின்மையே என்பது விளங்கும்.

இவ்விதம் ஸ்வாபாவிகமென்பது பொருந்தாமையால் இனி நைமித்திகமென்றே சொல்லவேண்டியதாகின்றது. ஸ்வாபாவிகம், நைமித்திகம் எனும் இவ்விரண்டையும் விட்டு மூன்றாவது பிரகாரமாக யாதும் சொல்லுதற்கில்லையாதலால் இதனையொத்துக்கொண்டே தீரவேண்டும். இனி இதனையும் சற்று விசாரிப்பாம். பானகத்திற்குத் தித்திப்பு, சர்க்கரை முதலியவைகளின் சேர்க்கையெனும் நிமித்தத்தினால் வந்ததுபற்றி நைமித்திகம் என்பதுபோல, ஸ்தூல தேகத்திற்கு அறியும் ஆற்றலானது ஓர் அறிவுப்பொருளின் ஸம்பந்தத்தினாலேயே வந்ததென்று சொல்லவேண்டியதாகின்றது. அங்ஙனமாயின் பானகத்தில் சேர்ந்திருக்கும் சர்க்கரை உண்மையில் அந்தஜலத்திலும் வேறாகவேயிருக்கின்றதுபோல, ஸ்தூலதேகத்தினில் ஸம்பந்தித்துள்ள அவ்வறிவுப்பொருள் உண்மையில் ஸ்தூல சரீரத்திலும் வேறே என அறியப்படுகின்றது. அன்றியும் பானகத்திலுள்ள சர்க்கரைமுதலியதை யந்திரத்தினால் பிரித்து விட்டோமாயின் அந்த ஜலத்தில் தித்திப்பு காணப்படாமல் போவதுபோல இந்த ஸ்தூலதேகத்தோடு ஸம்பந்தித்திருக்கும் அவ்வறிவுப்பொருள் பிரிந்துபோயின், பின்னர் இது அறியும் ஆற்றலற்றுக்கட்டைபோலாகும் என்றும் ஏற்படுகின்றது. பூர்வம் எங்கோயோ ஓர் இடத்திலிருந்த சர்க்கரையே ஜலத்தோடுகலந்து பானகம் எனப்பெயர்பெற்றுப்பின்னர் அதனினின்றும் பிரிக்கப்பட்டு மற்றோரிடம் சேருவதுபோல, பூர்வம் யாதானும் ஓர் ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டு ஜாக்கிரத் முதலிய அவஸ்தைகளைப்பெற்றுப் பிறகு இதனினின்றும் பிரிந்து வேறுயாதானும் ஓர் ஸ்தூலத்தைப்பற்றிக்கொள்ளவே இது சவமாகின்றதென்றும் அறியவேண்டியது உசிதமாகின்றது. இங்ஙனம் உசிதமாகிய யுக்தியைக்கொண்டு கவனித்தால் இந்த ஸ்தூல தேகத்திலும் அந்நியமாக ஜீவாத்மா எனும் பொருள் பிரத்தியேகமாய் யிருக்கின்றதென்று நிர்ணயிக்கப்படுகின்றது.

விசாரணையின்மையால் ஸ்தூல தேகத்திற் கந்நியமாய் யாதுமில்லை யெனத்தமது துர்வாஸனையின் வசமாகச்சிலர் பிதற்றுவாராயினும் அந்தநாஸ்திகரையே யுக்தி திருஷ்டாந்த வாயிலாக வினவுவோமாயின், அவர்களும் ஜீவன் என வேறு பொருள் ஒன்றுள்ளதென்பதை ஒத்துக்கொள்ளவேண்டியதே யாகின்றது.

இனி, அறிதல் எனும் யோக்கியதையானது மனவினுடையதென்றல்லவோ சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றது. இப்படியிருக்க தேகத்தினில் உள்ள அறிவின் வியவஹாரத்தை ஜீவனுடையது என்று சொல்லியது எப்படிப் பொருந்தும் எனின் சொல்லுவாம்.

மனஸோடுகூடியுள்ள ஆபாஸமான சித்வஸ்துவின் ஸம்பந்தத்தாலேயே அதற்குஅறியும் ஆற்றல் ஏற்பட்டிருக்கின்றது. இதுவேயல்லாமல்இயற்கையாய் அல்ல. இயற்கையில் துரும்புகளை எரிக்கும் சக்தியில்லாத சூரிய காந்தக்கல்லானது ஸௌரிய கிரணத்தின் ஸம்பந்தத்தாலேயே எரித்துபோடுவதுபோலச்சித்வஸ்துவின் ஸம்பந்தத்தாலேயே (சாயையாலேயே) மனம் விஷயங்களை அறிகின்றமையால் மனவின் வேலையை ஜீவனின் வேலையாகச்சொல்லப்பட்டது. உண்மையில் மோக்ஷபர்யந்தம் எப்போதும் மனதை விட்டுப்பிரியாமலிருப்பது பற்றியே மனம் விரும்பினால் ஜீவன் விரும்புகின்றானென்றும், மனம் ஸுகாகாரப்பட்டின் ஜீவன் ஸுகியென்றும், மனம் லோகாந்தரம் சென்றால் ஜீவன் லோகாந்தரம் சென்றானென்றும் சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றது.

இந்த ஸ்தூல சரீரமானது இதற்குள்ளிருக்கும் ஜீவாத்மாவுக்கு ஓர் வீடு போன்றதாகும். ஸ்தூல சரீரமாவது யாதெனின் தோல், சதை, நரம்பு, ரக்தம் மாம்ஸம், எலும்பு, மலம், மூத்திரம், கேசம், நகம் எனும் இப்பதார்த்தங்களின் சேர்க்கையைத் தவிரவேறுயாதுமல்ல. இவைகளை ஒன்றுசேர்த்தே மனிதர் முதலிய வடிவமாக்கப்பட்டிருக்கின்றது. கண் முதலிய இந்திரியங்களால் அறியப்படுவது இப்பதார்த்தங்களின் சேர்க்கையே. ஸ்தூலம் என்பது இந்திரியங்களால் அறியப்படுவதேயாம். ஆதலால் இந்தப்பதார்த்தங்களின் சேர்க்கையே ஸ்தூல சரீரமென்பது. வீட்டிலிருந்துகொண்டு மனிதர் குடித்தனம் செய்வதுபோல முற்கூறியபத்துப் பதார்த்தங்களின் சேர்க்கையாகிய ஸ்தூல சரீரத்திற்குள்ளிருந்துகொண்டு ஜீவன் ஜாக்கிரத் ஸ்வப்பனம் முதலிய நிலைமைகளைப் பெற்று இன்பதுன்பங்களைப் புசிக்கின்றான்.

குடித்தனம் செய்வோன் தனியாயிராமல் மனைவி புதல்வர் வேலைக்காரர் முதலியவர்களோடு கூடியிருப்பதுபோலவே, ஜீவனும் தனியாயிராமல் மனம் இந்திரியம் பிராணன் இவைகளோடுகூடவே இந்தஸ்தூலத்திலிருக்கின்றான். மனம் இந்திரியம் முதலியவைகளே ஸூக்ஷ்ம சரீரம் என்று சொல்லப்படுகின்றன. ஸ்தூல தேகம் என்று பொதுவாயச் சொல்லப்படினும் அதை ஆராய்ந்து பார்க்கும்போது தோல் சதை நரம்பு ரத்தம் மாம்ஸம் எலும்பு மலம் மூத்தி

ரம் கேசம் நகம் எனும் இப்பதார்த்தங்களின் சேர்க்கையைத்தவிர வேறு யாதும் காணப்படாமற் போகின்றதுபோல, ஸூக்ஷ்ம சரீரம் என்று பொதுவாய்ச்சொல்லப்படினும் அதையும் ஆராய்ந்துபார்க்கின் இந்திரியம் பிராணன் மனம் எனும் பதார்த்தங்களின் சேர்க்கைக்கந்யமாய் வேறுயாதும் காணப்படுவதில்லை என்றறிக.

இந்திரியம் என்று பொதுவாய்ச் சொல்லப்படினும் அது வாக்கு பாணி பாதம் குஹ்யம் குதம் எனும் கர்மேந்திரியம் ஐந்தும், சக்ஷு சுரோத்திரம் ஜிஹ்வை க்ராணம் தொக்கு எனும் ஞானேந்திரியமைந்தும் ஆகப் பத்து விதமாகும். இனிக் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களை ஸ்தூலசரீரத்திற் கந்யமான ஸூக்ஷ்ம சரீரத்தில் சேர்ப்பது உசிதமல்லவே. ஸ்தூலமாய்ப் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவனவாகிய இவைகளை ஏன் ஸ்தூல சரீரத்திலும் அந்யமாய்ச் சொல்ல வேண்டும் எனும் சங்கை சிலருக்கு நிகழும்.

இனி இவ்வுண்மையறிக. நம்மால் பிரத்தியக்ஷமாய்க் காணப்படும் கண், காது, மூக்கு முதலிய கோளகங்களையே இந்திரியங்களென்று எண்ணுதல் உசிதமல்ல. அந்த ஸ்தூல கோளகங்களில் வந்து நின்று பார்த்தல் கேட்டல் முகருதல் முதலிய அறிவுத்தொழில்களைச் செய்யும் நுட்பங்களாயுள்ள ஓர் வகைத் தத்துவங்களை இங்கு இந்திரியங்களென்று சொல்லப்படும். சக்திபோலுள்ளனவாகிய இந்திரியங்களுக்கு ஸ்தூலமாகிய கண் காதுமூக்கு முதலிய அவயவங்கள் ஸ்தானங்களேயாகும். நியாயாதிபதிக்கு அவரது நியாய ஸ்தலத்திலுள்ள ஆஸனம்போலவே இந்திரியத்திற்குக் கண்முதலிய ஸ்தூலகோளகம். இவ்விதமின்றி கண் முதலியஸ்தூல கோளகங்களையே இந்திரியங்களென்போமாகில் அவைகளிருந்தும் ஸுஷுப்தி மூர்ச்சை முதலிய ஸமயங்களில் எதிரிலுள்ள விஷயங்கள் அறியப்படாமலிருப்பதற்கு நியாயமில்லை. ஆதலின், இந்திரியங்கள் வேறு ஸ்தூல கோளகங்கள்வேறு என்றும், காதுமுதலிய அவயவங்களில் சுரோத்திரம் முதலிய இந்திரியங்கள் வந்து கூடியிருக்கும்போது சப்தம்முதலிய விஷயங்கள் அறியப்படுகின்றமையால் இவ்விந்திரியங்களுக்கு ஸ்தூல கோளகங்களாகிய அவயவங்கள் ஆஸனம் போலவே உள்ளன என்றும் நன்கு அறியக்கூடியதே. ஆதலின் இந்திரியங்கள் ஸூக்ஷ்ம சரீரத்தையே சேர்ந்தவை என்பதாம். பிராணனென்று பொதுவில் சொன்னாலும் அது பிராணன் அபானன் வியானன் உதானன் ஸமானன் என்று ஐந்து வகையாயுள்ளது. மனமானது அந்தக்கரணமென்று பொதுவில் சொல்லப்படினும் அது விருத்தி (தொழில்) பேதத்தால் மனம்புத்தி என்று இரண்டு விதமாகும். இங்ஙனம் இந்திரியங்கள் பத்து, பிராண பேதம் ஐந்து, மனம், புத்தி, ஆக இப்பதினேழு பதார்த்தங்களும் சேர்ந்தே ஸூக்ஷ்ம சரீரம் என்னப்படுவதாம். இவ்விஷயம்

புத்திகர்மேந்த்ரியப்ராணபஞ்சகைர்மநஸா தியா ||
சரீரம் ஸப்ததசபி: ஸூக்ஷ்மம் தல்லிங்கமுச்யதே ||

ஞான கர்மேந்திரியப் பிராணன்களின் ஐந்தும் மனமும் புத்தியும் ஆகிய இப்பதினேழும் சேர்ந்து ஸூக்ஷ்ம சரீரமென்றும் லிங்க சரீரமென்றும் சொல்லப்படும்.

என்பதாதி சுலோகங்களில் முன்னோர்களால் சொல்லப்பட்டுள்ளது.

இதுவரையில் செய்த ஆராய்ச்சியால் இந்த ஸ்தூலதேகத்திற்குள் ஸூக்ஷ்மசரீரமென்று ஒன்றிருக்கின்றது என்றும், தோல் சதை நரம்பு முதலிய பதார்த்தங்களின் சேர்க்கையே ஸ்தூலசரீரம்என்றும், இந்திரியம் பிராணமனங்களின் சேர்க்கையே ஸூக்ஷ்மசரீரமென்றும், ஸூக்ஷ்மசரீரத்தின் முக்கியமாயுள்ள அவயவமாகிய மனத்தோடு கூடியுள்ள ஆபாஸமாகிய சித்தே ஜீவன் என்றும், இறந்த பின்னர் இந்தஸ்தூலதேஹம் இங்கு மண் முதலியவைகளில் அழிந்து போயினும் ஜீவனோடுகூடி இதற்குள்ளிருக்கும் ஸூக்ஷ்மசரீரமானது அழிந்து போகாமல் ஸ்வர்க்க நரகங்களுக்குச்சென்று ஸுகதுக்கங்களை அனுபவிக்கின்றதென்றும் நிர்ணயிக்கப்பட்டது.

இனி இந்தஸ்தூலசரீரத்தோடுகூட ஸூக்ஷ்மசரீரமும் இவ்விடத்திலேயே அழிந்துபோகின்றது என்று சொல்லலாமே? இப்படிசொல்லுதலை விடுத்து ஸூக்ஷ்ம சரீரத்திற்குமாத்திரம் நாசமில்லை என்றும் அது லோகாந்தரம் செல்லுகின்றதென்றும் ஏன் சொல்லவேண்டும்? எனின் அவ்வுண்மையறிக. அதாவது, உலகில் ஓர் பொருள் நாசமடைகின்றதெனின் அதன் விகாரம் கெட்டுப் பிரகிருதித்தன்மையைப் பெறுதலேயாம். குடம், படம், செடி, கொடி, மாடமாளிகை, கோபுரம் முதலியன அழிந்துபோயின் அதன் பிரகிருதியாகிய மண்ணாகவேபோகுதல் பிரத்தியக்ஷமன்றோ; தோல் சதை முதலியவைகளின் சேர்க்கையாகிய ஸதூலதேகமானது மண்ஜலம் முதலியவைகளின் விகாரமாதலால் அழிந்தால் மண்ணாய்ப்போகின்றது. இதுபோல ஸூக்ஷ்மசரீரம் அழிந்துபோகுமென்றால் அது எத்தன்மையைப் பெறும்என்று சொல்லுவது? உலகில் பிரதிவியிலும் ஜலம் நுட்பம். ஜலத்திலும் அக்கினி நுட்பம். அக்கினியிலும் வாயு நுட்பம். வாயுவிலும் ஆகாயம்நுட்பம். ஆகாயத்திலும் இந்திரிய மனங்கள் நுட்பம். பஞ்சபூதங்களை பஞ்ச இந்திரியங்களால் அறியக்கூடும். இந்திரியப் பிராணமனங்களை எவ்விந்திரியத்தாலும் காணமுடியாது. இந்திரியங்களுக்கு விஷயமாகாதது பற்றியே ஸூக்ஷ்மசரீரமெனப்படுகின்றது. ஸூக்ஷ்மசரீரமானது இந்திரியங்களுக்கு விஷயமல்லாததாயிருந்துகொண்டு அபாரமாகிய காரியத்தைச்செய்கின்றது. இந்திரியப் பிராணமனங்களிலும் ஆச்சரியகரமாகிய பதார்த்தம் உலகில் யாதுமில்லை. இறந்தபின் ஸ்தூலசரீரமானது நீரிலாவதுநெருப்பிலாவது மண்ணிலாவது மடிந்து அழிந்துபோகின்றது. தீயில் அழிந்தால் சாம்பராப் மண்ணாகின்றது. ஸ்தூலமாகிய வஸ்துவையே மண்முதலியவை அழிக்குமன்றி ஸூக்ஷ்மமாகிய வஸ்துவை அழிக்க இயலாதன்றோ. மண் தீ நீர் இவை தம்மிலும் நுட்பங்களாகிய வாயு ஆகாயம் இவைகளை அழிக்க இயலுமா? இதற்கே இப்படியானால் வாயு ஆகாயங்களிலும் மிக்க நுட்பங்களாகிய இந்திரியப் பிராண மனங்களை மண்ணாவது தீயாவது நீராவது எப்படி அழிக்க இயலும்?

ஆதலால் ஸ்தூலசரீரத்திற்கே நாசமொவ்வுமேயன்றி ஸூக்ஷ்மசரீரத்திற்குநாசம் என்பது சிறிதும் ஸம்பவமில்லை என்றறிக.

இனி ஸூக்ஷ்மசரீரம் இந்த ஸ்தூலதேகத்திற்குள் எந்த பாகத்தில் இருக்கின்றது? ஸ்தூலதேகம் முழுவதும் வியாபித்துக்கொண்டிருக்கின்றதா? அல்லது யாதானுமோர் பாகத்திலிருக்கின்றதா? எனும் சங்கை நிகழும் ஆதலின் அதைச்சற்று நிர்ணயிப்பாம்

ஸூக்ஷ்மசரீரமாவது இந்திரியம் பிராணன் மனம் இவைகளின் சேர்க்கையே என்று பூர்வம் சொல்லப்பட்டது. இந்திரியங்கள் விழித்துக்கொண்டிருத்தலாகிய (ஜாக்கிரத்எனும்) ஸமயத்தில் கண் காது முதலிய கோளகங்களில் இருந்து தத்தம் வேலையைச் செய்கின்றன. தூங்கும் காலத்தில் மனஸோடு கூடி அடங்குகின்றன. பிராணன் முதலியன இருதயம், குதம், நாபி, கண்டம் மற்றுமுள்ள அவயவங்கள் இவைகளில் இருந்துகொண்டு தத்தம் வேலையைச் செய்கின்றன. மனமானது ஜாக்கிரத்காலத்தில் மூளையிலும் ஸ்வப்பனகாலத்தில் கண்டத்திற்குச் சற்று மேலுள்ள சிறு மூளையிலும் ஸுஷுப்திகாலத்தில் நாடிவழியாய்வந்து இருதயகமலத்திலுமிருக்கின்றது. மனதின் ஸ்தானபேதக்கிரியாபேதங்கள் முதலியவையெல்லாம் மனஸ்தத்துவமெனும் புஸ்தகத்தில் விரிவாய் எழுதப்பட்டிருக்கின்றன. ஆதலின் இங்கு எழுதவில்லை. மனஸோடுகூடிய ஆபாஸமாகிய சித்தே ஜீவன். ஆதலால் மனஸுக்குள்ள ஸ்தானங்களே ஜீவனது ஸ்தானங்களென்பதாம். மனம்வேலை செய்யும்போது மாத்திரம் மூளை கண்டம் எனும் இவ்விரண்டிடங்களிலிருந்துகொண்டும் வேலைசெய்யாத ஸுஷுப்தி காலத்தில் இருதயகமலம் வந்து அடங்கியுமிருக்கின்றமையால், மனவின் கிரியாஸ்தானம் மூளை, சிறு மூளை எனும் இரண்டிடங்களும் நிஜஸ்தானம் இருதயகமலமுமாம் என்றறிக.

தேஹமருதிகளின் பரிசோதனையில் மிக்கச் சிறந்தவர்களாகிய மேற்குத்திசைப்படிப்பினர் மனவின் ஸ்தானம் (Brain) மூளையே என்பதாக நிச்சயித்திருக்க இருதயகமலம் என்பது உசிதமோவெனின்? உசிதமேயாகும். மனஸுக்குக் கிரியாதெசை கிரியையின்றியிருக்குந் தெசைஎன்று இரண்டு நிலைமைகளுள்ளன. ஜாக்கிரத் ஸ்வப்பனம் (அதாவது விழித்திருத்தல், கனவு) எனும் இரண்டு அவஸ்தைகளும் மனந்தொழிற்படும் தெசைகளாதலால் இவைகளைக் கிரியாதெசையென்னப்படும். நல்லதூக்கமாகிய ஸுஷுப்தியில் எவ்வேலையுமின்றி மனம் ஒடுங்கியிருக்கின்றமையால் கிரியாபாவததெசையென்பதாம். மனம் ஜாக்கிரத்தில் செய்யும் வேலைக்கும் ஸ்வப்பனத்தில் செய்யும் வேலைக்கும் மிகுந்த வித்தியாஸமிருக்கின்றமையால் ஜாக்கிரத்கிரியாஸ்தானத்திற்கும் ஸ்வப்பனக்கிரியாஸ்தானத்திற்கும் பேதமிருக்கவேண்டும். ஜாக்கிரத்கிரியாஸ்தானம் ஒன்றையே மேற்குத்திசையோர் பரிசோதித்தவர். ஆதலின் மூளையே மனஸ்தானமென்றுவிட்டனர். மூளையே மனவின் ஜாக்கிரத்ஸ்தானம் என்பதை நம் ஆரிய சாஸ்திரமும் உபதேசிக்கின்றதாதலின் அதில் நமக்கு விவாதம் யாதுமில்லை,

ஸ்வப்பனக்கிரியாஸ்தானம் யாதெனின் அதற்குத் தக்கவிடைசொல்லவேண்டு மன்றோ ! அவ்வுண்மை நமது ஆரியசாஸ்திரங்களில் நன்கு சொல்லப்பட்டிருக்கின்றது. அது (Cerebellum) என்னப்படும் இடமாம். அது மூளைக்குக்கீழும் கண்டத்திற்குச்சற்று மேலுமிருக்கின்றதாதலின் நம்சாஸ்திரங்களில் "கண்டம்" என்று சொல்லப்படுகின்றது.

உலகில் எந்தத் திருஷ்டாந்தத்தைக்கவனித்தாலும் கிரியாஸ்தானத்திலும் கிரியையின்றியுள்ள நிஜஸ்தானம் வேறென்றே அறியப்படுகின்றது. இந்தநியாயத்தைக்கொண்டு ப்ரகிருதத்தைக் கவனிப்போமாயின் மூளைஜாக்கிரத்கால ஸ்தானமாகவும் கண்டம் ஸ்வப்பனகால ஸ்தானமாகவுமுள்ளதாதலால் இவ்விரண்டிடங்களும் இவ்விதம் கிரியாஸ்தானங்களாகின்றமையால்,கிரியையின்றி ஒடுங்கியிருக்கும் நிலமையாகிய ஸுஷுப்தியில் மனம் அடங்கியிருக்கும் இடம் வேறாகவே இருக்கின்றதென்றே நிச்சயிக்கப்படுகின்றது. தேகத்தினில் முக்கியமாகிய பாகம் மூளை, சிறுமூளை, இருதயகமலம் எனும் மூன்று இடங்களேயாம். மூளை சிறுமூளைகளுக்கும் ஆற்றலைக்கொடுப்பது இருதயகமலமே என்பது நம் ஆரியசாஸ்திரத்திலும் நிர்ணயிக்கப்பட்டவிஷயம். மூளைகெட்டுப்போனால் புத்திமாறுபாடுமுதலியது மாத்திரம் ஏற்படுதலையும், இருதயகமலம் கெட்டால் மரணமே ஏற்படுகின்றதையும் கவனித்தால் மூன்றிடங்களுள் இருதயகமலமே முக்கியமாயும் நுட்பமாயுமுள்ளபாகம் என்பது நன்கு அறியக்கூடியது. ஆதலின் மனவின் நிஜஸ்தானம் இருதயகமலமே என்பது நிர்ணயம்.

ஆரியசாஸ்திரம் கற்றுணர்ந்த முன்னோர் மனதின் மூன்று ஸ்தானங்களையும் தெரிந்துகொண்டவர்களாதலின் நமது பூர்வகிரந்தங்களில் மனவின் ஸ்தானம் மூன்று என்பதாகக்காணப்படுகின்றது. மேற்குத்திசையோரும் ஜாக்கிரத்தைப்பரிசோதித்திருப்பதுபோல மற்றிரண்டு நிலமைகளையும் பரிசோதித்திருந்தால் அந்த ஸ்தானங்களையும் தெரிந்துகொண்டிருக்கக்கூடும். ஜாக்கிரத்தையே பரிசோதித்தவர்களாதலின் அவர்கள் பரிசோதித்தவரையில் மூளையொன்றே மனஸ்தானம்என்று சொல்லும்படிஏற்பட்டது.

மனஸோடுகூடியுள்ள ஆபாஸசித்தே ஜீவனாதலின் மனஸுக்குச் சொல்லப்படும் ஸ்தானங்கள் ஜீவஸ்தானங்களேயாம். ஆதலின் நம் சாஸ்திரங்களில் ஜாக்கிர ஸ்வப்பன ஸுஷுப்திகளாகிய அவஸ்தை மூன்றிற்கும் ஸ்தான வேற்றுமையைக்காட்டி அவைஜீவஸ்தானங்களென்றும் சொல்லப்படுகின்றன. இனி அவ்விதம் சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்கள் யாவை எனின்

திவ்யே ப்ரஹ்மபுரே ஹ்யேஷ வ்யோம்ந்யாத்மா ப்ரதிஷ்டித꞉ ।
மநோமய꞉ ப்ராணஶரீரநேதா ப்ரதிஷ்டிதோऽந்நே ஹ்ருதயம் ஸந்நிதாய ॥

"முண்டகோ இரண்டா மத்தியாயம்."

விளங்கும் பிரம்ம புரமாகிய தேகத்தினில் ஆகாயத்தினில் இவ்வான்மா ப்ரதிஷ்டித்திருக்கின்றனன். மனோமயன்பிராணசரீரங்களை எவுவோன் (நடத்துவோன்) அந்த விகாரமாகிய தேஹத்தில் இருதயத்தில் ப்ரதிஷ்டைபெற்றுள்ளவன்.

"[illegible]" (ப்ருஹதாரண்யோப ஏழாமத்தியாய ஆறாவது கண்ட) மனோமயன் இப்புருஷன் அறிவுவடிவன் ஸத்தியன் அவ்விருதயத்தின் உள்ளில் உள்ளவன்

"[illegible]" (சாந்தோக்யோபநி எட்டாம்ப்ரபாட) இனி இந்தப்ரம்மபுரமாகிய தேகத்தினில் தெஹறம் எனப்படும் கமலமாகிய வீடு. இதற்குள்ளிருக்கும் ஆகாயத்தினில் யாதொன்று ளதோ அதனைத்தேடத்தக்கது."

"[illegible] । [illegible]" (ப்ரம்மோபநி) நேத்திரம் முதலியவைகளோடு கூடி சிரஸில் ஜாக்கிரதிலிருப்பதென்றறிக. ஸ்வப்பனத்தில்கண்டத்தை அடையும். ஸுஷுப்தியில் இருதயத்திலிருக்கும்.

"[illegible]" (மாண்டூக்கியகாரிகை) வலதுகண் முதலிய இந்திரியங்களில் ஸம்பந்தித்து வெளிநோக்காயிருப்பவன் ஜாக்கிராபிமானியாம். உள்ளத்தில் மனஸினில் ஸ்வப்பனாபிமானியாம். ஹ்ருதயத்தில் ஆகாயத்தில் ஸுஷுப்தியவஸ்தாபிமானியாம். இங்ஙனம் தேஹத்தினில் மூவகையாயுள்ளவன்."

"[illegible]"

(ப்ரஹதாரண் யோபநி நாலாமத்)

"இனி எப்போது ஸுஷுப்தனாகின்றானோ எப்போது எதனையும் அறிகின்ற தில்லையோ ஹ்ருதயத்திலிருந்து எழுபத்தீராயிரம் நாடிகள் மிக்க நுட்பங்களாயிருந்துகொண்டு புரீததியை வியாபித்து நிலைபெற்றுள்ளன. அவைகளின் வழியாய் இறங்கி புரீததியில் அடங்குகின்றான்,,

என்பது முதலியச்ருதிகளாலும்

"[illegible] ॥ (3-2-7)

என்ற ப்ரும்ம ஸூத்ரத்தாலும்

[illegible] ।

[illegible] ॥

கயொ2ூவ௦வ.தத்ராத்ரஸூக்ஷ௦ஸூஷிர2ூத்த2௦ ।
உஹராகாஶஸிதந்த்ரூ௦ .தத்ர ஜீவொவதிஷ்டதி ॥

நாபிக்குமேல் கண்டத்திற்குக் கீழ் யாதொன்று வியாபித்துளதோ அம்மார்பின் நடுவில் தாமரை மொக்குப்போலக் காம்போடு கூடியதும் கீழ் முகம் நோக்கியதுமாய் இருதய மிருக்கின்றது. அதில் மிகக நுட்மாகியப இடைவெளி யுள்ளது. அதுதெஹராகாச மெனப்படுவதாம். அங்கு ஜீவனிருக்கின்றான்

என்னும் சிவகீதாதி வாக்கியங்களாலும்

ஶநாஉஶெ௦ஜ்ரியாயக்ஷ௦ ஹ்ருத்வஉஹொஉகெலிதம் ।
நேத்ர ஜாக்ரணாகண்டெ ஸ்வப்நஸ்த்ரிஹஉ௦வேஜ ॥

மனம்பத்திந்திரியங்களுக்கு அதிபனாய் இருதயகமலத்திலிருக்கின்றது. சிரவில் ஜாக்கிரமும் கண்டத்தில் ஸ்வப்பனமும் இருதய கமலத்தில் ஸுஷுப்தியுமாம்.

என்பது முதலிய பிரமாண வாக்கியங்ளாலும் கண்டு கொள்க.

இங்ஙனம் யுக்திகளையும் பிரமாணங்களையும் கவனித்தால் மனவின் வேலையின்மையாகிய ஸுஷுப்தி ஸ்தானம் ஹ்ருதய கமலமே என்பது நிச்சயிக்கப்படுகின்றது. உதாரணமாக நியாயாதிபரின் இருப்பிடம் யாது எனின், அவருக்குக் கிரியாஸ்தான மாயுள்ள நியாயஸ்தலத்தைச் சொல்லுதல் எப்படி உசிதமாகாதோ அவர் வேலையின்றி இருக்குமிடமாகிய வீட்டையே எங்ஙனம் சொல்லுவது உசிதமோ, அப்படியே மனஸ்தானம் யாதெனின் அதன் கிரியாஸ்தானமான மூளையையாவது ஸ்வப்பனக் கிரியாஸ்தான மான கண்டத்தையாவது சொல்லுதல் உசிதமல்ல. அது வேலையின்றி யடங்கிச் சும்மா இருக்கு மிடமாகிய ஹ்ருதய கமலத்தையே அதன் ஸ்தான மென்பது மிகவும் உசிதமாகின்றது. இவ்வுண்மை பற்றியே நமது ஆரிய சாஸ்திரங்களில் மனஸ்தானம் ஹ்ருதய கமலமெனக் கண்டா கோஷம் செய்யப்பட்டுள்ளது.

இப்படிப்பட்டமனஸையே முக்கியமாய்க்கொண்டுள்ளது ஸூக்ஷ்மசரீரமாம்.

உத்ஸவாதி காலத்தில் வீதிகளில் வரும் பூதப் பொம்மைகளை அதற்குள்ளிருக்கும் மனிதன் சேஷ்டிக்கச் செய்வது போல, ஸ்தூல சரீரத்தி லிருந்துகொண்டு அதனைச் சேஷ்டிக்கச் செய்வது ஸூக்ஷ்ம சரீரமேயாம். ஆதலால் ஸூக்ஷ்ம சரீரத்தோடு கூடியிருக்கும் வரையில் ஸ்தூல சரீரம் சேஷ்டிக்கும். ஸூக்ஷ்ம சரீரம் பிரிந்து போயின் ஸ்தூல சரீரம் சவம் என்பதாம். ஸ்தூல சரீரத்தில் ஸூக்ஷ்ம சரீரம் இருக்கும் வரையில் ஜீவதெசை என்றும் அதனை விட்டுப் பிரிதலே மரணமென்றும் சொல்லப்படுவதாம்.

ஜீர்ணமாகிய (பழுதாகிய) வீட்டை விட்டு மனிதன் வேறு வீட்டுக்குக் குடிப் போவது போலக் கர்ம பல போகத்தினால் ஜீர்ணமாகிய இந்த ஸ்தூல சரீரத்தை விட்டு ஜீவன் (அதாவது ஸூக்ஷ்ம சரீரம்) வேறு ஸ்தூலத்தைப் பற்றிக்கொண்டு லோகாந்தரம் சென்று சுக துக்கங்களைப் புசிக்கின்றான்.

பழைய வீட்டை விட்டுப் போகும்போது மனிதன் பழய வீட்டிலுள்ள தனது சாமான் பொருள் முதலியவைகளை எடுத்துக்கொண்டே புதிய வீட்டிற்குப் புகுவதுபோல, இச்சரீரத்தை விட்டு மற்றோர் சரீரத்தைப் பற்றும் போது ஜீவன் இச்சரீரத்தில் தனக்குப் போக ஸாதனங்களா யிருந்த இந்திரியம் பிராணன் மனம் இவைகளைக் கூடச் சேர்த்துக் கொண்டே செல்லுகின்றான்.

புதிய வீட்டிற்குப் போகும் போது பழய வீட்டிலிருந்த ஸாமான்களைச் சேர்த்து மூட்டை கட்டிச் சித்தஞ் செய்தல் ஒன்றும், பிறகு அவைகளை எடுத்துக்கொண்டு புதிய வீட்டிற்குப் போகுதல் ஒன்றும் இங்ஙனம் இரண்டு விதமாகிய செய்கை யிருக்கின்றது போல, இந்த தேகத்தை விட்டு லோகாந்தரம் போகும் போது இந்த தேஹத்திலுள்ள இந்திரிய ப்ராண மனங்களாகிய ஸூக்ஷ்ம சரீராவய வங்களை ஒருங்கு சேர்க்கும் செயல் ஒன்லும் பிறகு அவைகளோடுகூடப் புறப்பட்டு லோகாந்தரத்திற்குப் பிரயாணம் செய்யும் செயல் ஒன்றும் இங்ஙனம் இரண்டு நிலமைகளுள்ளன. இஃது சுருக்கமாயறிக. லோகாந்தரம் செல்லும் ஜீவர்களுக்கு மரணாவஸ்தை உத்கிராந்தி யவஸ்தை என்றிரண்டு அவஸ்தைகளுள்ளன. மரணாவஸ்தை யாவது, இந்த ஸ்தூல தேசத்தின் ஸ்தூல கோளகங்களாகிய கண் காது முதலிய அவயவங்களிலுள்ள இந்திரியங்களையும் நாபி மார்பு முதலிய அவயவங்களிலுள்ள பிராணனையும் இருதய கமலத்தில் ஆகர்ஷித்து ஒருங்கு சேர்த்துக் கொள்ளும் அவஸ்தையாம். உத்கிராந்தி யவஸ்தையாவது, அங்ஙனம் ஒருங்கு சேர்த்துக் கொண்ட பின்னர் இத்தேகத்தை விட்டு வெளிப் பட்டு லோகாந்தரத்திற்கு பிரயாணம் செய்யும் நிலமையாம்.

உலகில் இறக்கின்றதாகிய எந்தப் பிராணியும் முன்னர் மரணாவஸ்தையைப் பெற்றுப் பின்னரே உத்கிராந்தி யவஸ்தையைப் பெறுகின்றது என்பது நிர்ணயம்.

இனி இந்திரியப் பிராண மனங்களாகிய ஸூக்ஷ்ம சரீராவயவங்களை ஒருங்கு சேர்த்துக் கொள்ளுதலாகிய மரணாவஸ்தையைப் பெற்றே உத்கிராந்தி யேற்பட வேண்டு மென்பதை உசித மென்று கொள்வோம். ஆனால் அங்ஙனம் இந்திரியப் பிராண மனங்களை ஜீவன் ஒரே ஸமயத்தில் ஒருங்கு சேர்த்துக் கொள்கின்றானா? அல்லது ஒன்றின் பின் ஒன்றாக முறையே சேர்த்துக் கொள்கின்றானா? எனின் அவ்வுண்மையறிக.

பழய வீட்டிலிருக்கும் ஸாமான்களை மனிதன் ஒவ்வொன்றாய் முறையே எடுத்துக்கொண்டு வந்து வீட்டின் நடுக்கட்டில் வைத்து மூட்டையாக ஒருங்கு சேர்த்து கட்டிக்கொண்டு எடுத்துப் போவது போல, ஜீவன் கண் காது முதலிய அவயவங்களிலுள்ள இந்திரியாதிகளை ஒன்றொன்றாய் முறையே இருதய கமலம் வந்து சேரும்படி ஆகர்ஷித்துக்கொண்டு, பிறகு அவைகளையெல்லாம் சேர்த்துக்கொண்டு வெளிப்படுகின்றான்.

மரணாவஸ்தையின் விபரமாவது, ரோகத்தினாலாவது மற்ற எக்காரணத்தினாலாவது மரணம் நேரும் காலத்தில் கை கால் முதலிய அவயவங்கள் முன் போலவே காணப்படினும் அவைகளிலிருந்து செய்தல் போதல் முதலிய வேலைகளைச் செய்து கொண்டிருந்த கர்மேந்திரிய சக்திகள் முறையே மனதில் அடங்குகின்றன. புத்திரன் பேரன் முதலியவர்கள் சமீபத்தில் வந்து நின்று அப்பா! தாத்தா! முன் தாங்கள் சில திரவியத்தைப் புதைத்து வைத்திருக்கின்றேன் என்று சொல்லி யிருந்தீர்களே; அப்புதையல் எங்குள்ளது? அதைச் சற்று சொல்லி விடுங்கள் என்று கேட்கும் போது அவ்வார்த்தைகள் செவியில் எட்டுகின்றன வாயினும் வாக்கு எனும் இந்திரியம் நாக்கை விடுத்து மனதில் சென்றடங்கிப் போனமையால் வாய் பேச முடியவில்லை. அவர் ஓஹோ இது காரும் புதைத்திருக்கு மிடத்தை நமது புதல்வருக்குச் சொல்லாமல் மோசம் போயினமே; இனி என்ன செய்வது என்று யோஜிக்கின்றவ ராவார். அத்தருணம் வாக்கு எனும் கர்மேந்திரியம் மனதிலடங்கிப் போனமையால் பேச்சு மனத்திலேயே இருக்கின்றது. பிறகு புத்திரர்கள் அப்பா! வாய் பேச முடியாமையால் தங்களால் சொல்ல முடியவில்லை. ஆயினும் புதையல் இவ்விடத்தி லிருக்கின்றது எனக் கைகளினாலாவது ஸம்க்ஞை செய்யுங்கள் என்று கேட்க, அப்போது கையைக்கொண்டு குறிப்பிட்டுக் காட்டுதற்கு மியலாமற் போகின்றது. ஏனெனின் பாணி எனும் இந்திரியமும் கைகளாகிய அவயவத்தை விட்டு மனதி லடங்கிப் போனமையால் அவ்வாறாகியது என்றறிக. அப்போது அக்கிழவர் ஓகோ நமக்குக்கைகளாலும் குறிப்பிட்டுப் போதிக்க இயல வில்லையே என்று சிந்திப்பார். அங்ஙனம் குறிப்பிட்டுக் காட்டுதலாகிய பாணியின் செய்கை மனோமாத்திரத்தில் அடங்கப் போனமை காண்க. இவ்வாறு ஐந்து கர்மேந்திரியங்களும் ஒவ்வொன்றாய் மனதை வந்து அடையும். பிறகு ஞானேந்திரியங்களாகிய கண் காது முதலிய இந்திரியங்களும் அவ்வாறே ஒவ்வொன்றாய் மனதில் வந்து அடங்கும். அந்த ஸமயம் அந்தவிருத்தர், ஓகோ நமக்குக் கண் காது முதலிய ஞானேந்திரியங்களும் வாக்கு பாணி முதலிய கர்மேந்திரியங்களும் சிறிதும் உபயோகப்படாமற் போயினவே. நமது பொருளைப் பற்றிய ஆதாயஞ்செலவுகளைப் புத்திரர்களுக்குச் சொல்லாமலிருந்து விட்டோமே! இனி நாம் யாது செய்வது எனும் சிந்தைக் கடலில் மூழ்கியிருப்பார். பிறகு அச்சிந்தனையும் ஓய்ந்து மஹாமோஹம் போன்ற நிலைமையிலிருப்பார். அப்போது ப்ராணனில் மனம் அடங்கியிருக்கும். அந்த ஸமயம் சுவாஸம் மாத்திரம் இருக்குமே யன்றி வேறில்லை. அந்த சுவாஸமாவது சரீரத்தின் நாபி குதம் முதலியவைகளி லிருக்கும் ஸமானன் அபானன் முதலிய ப்ராண பேதங்களை ஒருங்கு சேர்ப்பதேயாம். இங்ஙனம் இந்திரிய ப்ராண மனங்களை ஒருங்கு சேர்த்துக் கொள்ளும் போது சரீரத்தில் ஏற்படும் ஹிம்ஸையை இவ்வளவென்று சொல்லமுடியாது. எல்லாவற்றையும் ஆகரிஷித்து ஒருங்கு சேர்த்து அடக்கிக் கொண்டதும் பிறகு பற்றப்படுவதாகிய ஸ்தூல சரீரத்திற்கு முதற் காரணமாயுள்ள பிருதிவியாதி ஐம்பூதங்களின் நுட்பங்களாகிய அம்சங்களைப் பற்றிக்கொண்டு ஹ்ருதய கமலத்திலிருந்து வெளி வரும் சிறிய நாடியின் வழியாகக் கண் காது முதலிய இடங்

களுக்கு வந்து அவ்வழியாய் வெளிப்படும். இவ்வாறு இந்திரியங்கள் ஒடுங்க ஆரம்பித்தது முதல், தேகத்திலிருந்து வெளிப்படும் வரையில் உள்ள நிலைமைக்கு மரணவஸ்தை என்று பெயர். இதன் விபரமே

"வாங்மநஸி தர்ஶநாச்சப்தாச்ச | 4-2-1
"அத ஏவ ச ஸர்வாண்யநு | 4-2-2
"தந்மந: ப்ராண உத்தராத் | 4-2-3
"ஸோऽத்யக்ஷே ததுபகமாதிப்ய: | 4-2-4
"பூதேஷு தச்ச்ருதே: | 4-2-5

என்பது முதலிய ப்ரம்ம ஸூத்திரங்களினால்

"அஸ்ய ஸோம்ய புருஷஸ்ய ப்ரயதோ வாங்மநஸி ஸம்பத்யதே மந: ப்ராணே"

" இறக்கும் ஜீவனுக்கு வாக்கு மனத்தில் அடங்குகின்றது. மனம் ப்ராணனில்.

என்பது முதலிய விஷய வாக்கியங்களைக் காட்டி நிரூபிக்கப் பட்டிருக்கின்றது.

"தஸ்ய ஹைதஸ்ய ஹ்ருதயஸ்யாக்ரம் ப்ரத்யோததே தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷ்டோ வா மூர்த்நோ வாந்யேப்யோ வா ஶரீரதேஶேப்ய:"

(ப்ரஹதாரண்யோப 6 அத் 4 பாத)

அந்த இவ்விருதயத்தின் முனை துடிக்கின்றது. அவ்வழியாய் இவ் வான்மா வெளிப்படுகின்றான். கண் வழியாயாவது தலை வழியாயா வது மற்று முள்ள எந்த அவயவத்தினாலாவது வெளிப்படுகின்றான்.

என்பது முதலிய ச்ருதிகளாலும்

மந:ஷஷ்டாநீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தாநி கர்ஷதி | ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: | க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத் ||

இந்தஸ்தூலத்திலிருக்கும் மனம் ஆறாவதாய்க் கொண்ட இந்திரியங்களை இழுத்துக்கொள்கின்றான். மற்றோர் சரீரத்தையடைந்தாலும் லோகாந்தரத்திற்கு (உத்கிரமணம்) பிரயாணம் செய்யினும் இந்திரிய ப்ராண மனங்களோடுகூடியே, வாயு புஷ்பமுதலியவைகளிலுள்ள வாஸனைகளைப்பற்றிக்கொண்டு போவதுபோலப் போகின்றான்.

என்பது முதலிய பகவத்கீதாதி வாக்கியங்களாலும் இந்த மரணவஸ்தையின் க்ரமமே உபதேசிக்கப்படுகின்றது.

இனி உலகில் எல்லோருக்கும் மரணாவஸ்தை யுள்ள தென்ப தில்லையே சிலர் திடீரென இறந்து போகின்றதைக் காண்கின்றோ மன்றோ. அப்படி யிறப்பவர்களுக்கு முற்கூறிய இந்திரிய ப்பிராண மனங்கள் முறையே ஒருங்கு

சேருதலாகிய மரணாவஸ்தை காணப் படுகின்ற தில்லையே? ஆதலால் ஸகல மனி தர்களுக்கும் பொதுவாக மரணாவஸ்தை என்பதைச் சொல்லுதல் உசிதமோ? எனி ன் உசிதமேயாம். அதாவது மரணத்திற்கு ரோகம் முதலியதோ மற்றும் ஏதோ யாதானும் ஓர் நிமித்த மிருக்கவேண்டும். அப்படி நிமித்த முள்ளவர்களிடம் இந்த மரணாவஸ்தை நன்றாய்க் காணக் கூடியது. நிமித்தம் யாதும் வெளிப் படையாய்க் காணப்படாமல் திடீரென மரிப்பவர்க்கும் இம்மரணாவஸ்தை யுள் ளதே. ஆயினும் மிக்க நுட்பமாகிய காலத்திற்குள் அம்மரணாவஸ்தையின் காரி யங்கள் ஏற்படு கின்றமையால் நம் போன்றவர்க்கு வெளிப் படையாய்க் காணப் படுகின்ற தில்லை. இரண்டு மூன்று மணி நேரத்தில் ஏற்படும் மரணாவஸ்தை இரண்டோர் க்ஷணத்தில் ஏற்பட்டால் அதுகொண்டு அவ்வவஸ்தையை இல்லை என்பது அநுசிதமே யென்றறிக.

இனி, மரித்ததும் ஜீவன் ஸூக்ஷ்மசரீரத்தோடு மாத்திரம் சொல்லுகின்றானா? அல்லது மற்றோர் ஸ்தூலத்தைப் பற்றிக்கொண்டே லோகாந்தரம் செல்லுகின் றானா? எனும் சங்கை நிகழும். ஆதலின் அதனை நிர்ணயிப்பாம். ஸூக்ஷ்மசரீர மானது இந்திரியப் பிராண மனங்களின் சேர்க்கையேஎன்றும் அவை சக்தி போல் நுட்பங்களாயுள்ளன வென்றும் ஏற்கனவே சொல்லப்பட்டது. சக்திகள் வியக்தியாகிய ஸ்தூலமின்றி சேஷ்டியாது. மின்சாரம்முதலியவை கம்பிமுதலிய யாதானும் ஓர் ஆதாரத்தைப்பற்றிக்கொண்டே சேஷ்டித்தல் போலவும், வா ஸனை முதலியவை யாதானும் ஓர் பொருளைப்பற்றியே இருத்தல்போலவும் ஸூக்ஷ்மசரீரம் யாதானும் ஓர் ஸ்தூலத்தைப்பற்றியே சேஷ்டிக்கவேண்டும். ஆதலால் மற்றோர் ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டே லோகாந்தரம் செல்லுதல் என்பதே உசிதம் என்றறியப்படுகின்றது.

“ வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய நவாநி க்ருஹ்ணாதி நரோபராணி | ததா ஶரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ ||

> ஜீர்ணங்களாகிய வஸ்திரங்களை விடுத்துப் புதியவேறுவஸ்திரங்களை மனிதன் எப்படிக்கட்டிக்கொள்கின்றானோ அவ்வாறு பழுதாகிய இந்த ஸ்தூலத்தைவிட்டு ஜீவன் புதிய வேறு ஸ்தூலசரீரங்களை பற் றுகின்றான்.

எனும் பகவத்கீதாவாக்கியத்திலுள்ள திருஷ்டாந்தத்தாலும்மனிதர் மற் றோர் வஸ்திரத்தை ஏகதேசமாய்ப் பற்றிக்கொண்டே பழயவஸ்திரத்தை அவிழ்த்தெறிவதுபோல, ஜீவனும் மற்றோர் ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டே இதனை விடுகின்றானென்பது வியக்தமாகின்றது. அன்றியும்

“ஶரீரப்ரதிபத்திலோகாந்தரகதிஶ்ருதே:”

“ சரீரத்தைப்பற்றுதலும் லோகாந்திரத்திற்குச் செல்லுதலும்”

என்பது முதலிய வாக்கியங்களில் மற்றோர் தேசத்தைப்பற்றுதலையே முன்னர் கூறிப்பின்னரே உத்கிராந்தி (பிரயாணம்) சொல்லப்பட்டிருத்தலைக் கவனித்தாலும் இதுவே சாஸ்திரங்களின் கருத்தென்றறியப்படும்.

ஸ்ரீமஹாபாரதம் சாந்திபர்வம் ப்ருகு நாரத ஸம்வாதப்பிரகரணத்திலும் இங்ஙனமே

"ஜீவஸ்ஸாந்யதேஹாந் கதிச்சரீரம் பஞ்சபூதாத்மகம் ததுக்ராந்தம் ஸம்ஸ்ரித்யஸ்வர்க மாஸ்தாய ஸரீரஹை ||

" ஜீவன் வேறு தேஹத்தையுடையவனாய்ச் செல்லுகின்றான். அச்சரீரம் ஐம்பூதவிகாரமேயாம். அது வேற்றுமைப்பட்டசரீரம்"

என வேறு தேகத்தைப்பற்றிக்கொண்டே பிராயாணம் சொல்லப்பட்டிருக்கின்றது. சாஸ்திரப்பிரமாணங்கள் ஸகலமும் இவ்விடயத்தையே போதிக்கின்றனவன்றி ஸூக்ஷ்மசரீரமாத்திரமாகச் செல்லுகின்றதென ஓரிடத்திலும் சொல்லவில்லை.

சங்கை, "உபபந்நாஸ்தல்லக்ஷணார்த்தோபலப்தே:" எனும் ஆஹ்நிக அதிகாணத்திலுள்ள ஸூத்திரத்தின் பாஷ்யத்தில் புண்ணிய உலகம் செல்லுவோனுக்குமார்க்கத்தை அறிந்து செல்லத்தக்கதாகிய ஸ்தூல சரீரமில்லையென்றும் ஸூக்ஷ்ம சரீர மாத்திரத்தோடு செல்லுகின்றமையால் இந்திரியங்களுக்குச் சேஷ்டையில்லை யென்றும் சங்கர பகவத் பாதர் முதலியவர்களால் சொல்லப் பட்டிருக்கின்றதே. அவ்வான்றோர் வாக்கியத்திற்கு விரோதமாக இங்கு ஸ்தூல சரீரம் பற்றியே லோகாந்தரம் செல்லுகின்றானெனச் சொல்லி யிருத்தலை எப்படி அங்கீகரிப்பது? என ப்ரும்ம ஸூத்ரத்தை மேற் பார்வையாய்ப் படித்தவர்க்குச் சங்கை நிகழும். இனி இவ்வுண்மை வருமாறு.

ஜீவர் இந்த ஸ்தூல தேகத்தை விட்டு வேறு ஸ்தூல தேகத்தைப் பற்றிக்கொண்டே லோகாந்தரம் செல்லுகின்றனர் என்பதே சாஸ்திரங்களின் நிர்ணயம். ஆனால் புண்ணிய உலகம் செல்லும் ஜீவர் இச்சரீரத்தை விட்டதும் புண்ணிய உலகில் இன்பங்களைப் புசிப்பதற்கு வேண்டிய சரீரத்திற்கு ஆரம்பகமாயுள்ள ஸ்தூல பூதங்களின் அம்சங்களை இங்கேயே பற்றிக்கொண்டு செல்லுகிறானர். ஆனால் அந்த ஸ்தூலமானது இங்கிருந்து ஸ்வர்க்கம் செல்லும் வரையிலுள்ள மார்க்கத்தில் கொஞ்சம் கொஞ்சமாக அங்கப் பிரத்தியங்கங்கள் விருத்தியடைந்து ஸ்வர்க்கத்தில் பிரவேசிக்கும் தருணத்தில் ஸர்வலக்ஷண ஸம்பூர்ணமான தேகமாகின்றது. அங்ஙனம் ஸர்வாங்க ஸம்பூர்ணமானதேகமாக நிகழுவதற்கு முந்தின நிலமையாகிய மார்க்க மத்தியில் எல்லாவற்றையும் கண்டறியும் இயல்புஇராதாதலின் மார்க்கமத்தியில் ஸ்தூல சரீரமில்லையென ஆசிரியர்களால் சொல்லப்பட்டது. இதுவேயன்றி ஸதூலமே இல்லாமல் ஸூக்ஷ்ம சரீர மாத்திரத்தாலேயே ஜீவன் புண்ணிய உலகம் செல்லுகின்றானென்பது ஆசிரியர் கருத்தல்ல. புண்ணிய லோகம் செல்லும் ஜீவனுக்கு மார்க்கத்தில் ஸர்வாங்க லக்ஷணம் பூர்த்தியாகாத சரீரமாயிருத்தலின் ஆசிரியரால் ஸ்தூல சரீரமில்லை

யென்று ஔபசாரிகமாகவே சொல்லப்பட்டது. இதனை யறியாமல் ஸ்தூலமேயின்றி ஸூக்ஷ்ம மாத்திரத்தால் ஜீவன் லோகாந்தரம் செல்லுகின்றான் என ஆசிரியர் சொல்லியதாய்க் கருதுவது மிகவும் அறியாமையே. உண்மை யிவ்விதமானது பற்றியே.

𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 ‖ 4-2-5

எனும் அத்தியக்ஷாதி கரண ஸூத்திரத்தின் பாஷ்யத்தில் சங்கரபகவத் பாதரால்.

"𑌤𑍇𑌜𑌸𑍍𑌸𑌹𑌚𑌰𑌿𑌤𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌦𑍇𑌹𑌬𑍀𑌜𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑍇𑌷𑍍𑌵𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇"

> "தேஜஸோடு கூடியனவும் வரும் சரீரத்திற்கு வித்தாயுள்ளவையுமாகிய ஐம்பூதங்களில் ஸூக்ஷமமாய் அடங்குகின்றான்"

என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதுமட்டும் என்பதல்ல.

"𑌸𑌮𑌾𑌨𑌾 𑌚𑌾𑌸𑍃𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑍍𑌰𑌮𑌾𑌦𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂 𑌚𑌾𑌨𑍁𑌪𑍋𑌷𑍍𑌯 ‖4-2-7

எனும் ஆஸ்ருதியு பக்ரமாதி கரண ஸூத்திரத்தின் பாஷ்யத்தில்

"𑌦𑍇𑌹𑌬𑍀𑌜𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌹𑌗𑍍𑌰𑌹𑌣𑌮𑌨𑍁𑌭𑌵𑌿𑌤𑍁𑌂 𑌸𑌂𑌸𑌰𑌤𑌿 ‖

> இனி இன்பங்களை யனுபவிக்க வேண்டியதா யுள்ள தேஹத்திற்கு விதையா யமைந்துள்ள ஐம்பூதாம்சங்களைப் பற்றிக் கொண்டு கர்மத்தினுல் ஏவப் பட்டவனாய்த் தேஹத்தைப் பற்றி அனுபவிக்கச் செல்லுகின்றான்.

என ஸ்வர்க்கத்தில் அனுபவிக்க வேண்டிய ஸ்தூல சரீரத்திற்கு ஆரம்பகமான ஸ்தூல பூதாம்சங்களைப் பற்றிக் கொண்டே செல்லுகின்றானென வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

அன்றியும் பாஷ்யத்திற்கு வியாக்கியான கர்த்தாவாகிய வாசஸ்பதி மிசிராலும்.

"𑌸𑍍𑌥𑍂𑌲𑌶𑌰𑍀𑌰𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑍈𑌰𑍍𑌭𑍂𑌤𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑍈𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌮𑌨𑍁𑌮𑍇𑌯𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 ‖

> ஸ்தூலசரீர நிலைமைக்குத்தக்கபடி ஐம்பூதாம்சங்களால் அமையப் பெற்றதும் நுட்பமும் அநுமானிக்கத்தக்கதுமான சரீரத்தைப் பற்றிக்கொண்டு"

என்பது முதலிய வாக்கியங்களால் இவ்வுண்மையே சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்தூலமேயின்றி ஸூக்ஷ்மசரீர மாத்திரத்தோடு லோகந்தரம் செல்லுகின்றானெனக் கற்பனமாத்திரத்தால் தீர்மானித்துக்கொண்டோமாயின், இதுகாறும்காட்டிய மேற்படி பாஷ்ய வியாக்கியானகாரர்களாகிய பெரியோரது வாக்கியங்கள் அவலமாகவே முடியுமன்றோ. இது மட்டுமல்லவே

" 𑌤𑌦𑌨𑍍𑌤𑌰𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍌 𑌰𑌂𑌹𑌤𑌿 𑌸𑌂𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌕𑍍𑌤𑌃 ‖3-1-1

என்பது முதலிய ஸூத்திரங்களின் பாஷ்யங்களில், யாகதானாதிகளைச் செய்தவனது ஸூக்ஷ்மசரீரமானது பிருதிவிமுதலிய ஐம்பூதாம்சங்களாலமைந்ததும் ஜலாம்சம்மிகுதியாயுள்ளதுமான ஸ்தூலத்தைப்பற்றிக் கொண்டே செல்லுகின்றதெனை நிரூபிக்கப்பட்டிருத்தல் அவ்வளவும் அஸங்கதமென்றே ஏற்படும்.

அன்றியும் ருக்வேதத்தைச் சேர்ந்ததாகிய ஐதரேயோபநிஷதம் மூன்றுமத்தியாயத்தில்

"𑌸𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌮𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌅𑌥𑌾𑌸𑍍𑌯𑌾𑌯𑌮𑌿𑌤𑌰 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑍋 𑌵𑌯𑍋𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌸𑌃
𑌇𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌨𑍇𑌵 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑌦𑌸𑍍𑌯 𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌜𑌨𑍍𑌮 ॥

எனும் சுருதிவாக்கியங்களின் பாஷ்யத்தில்

𑌸 𑌇𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌨𑍇𑌵 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑌨𑍍𑌨𑍇𑌵 𑌤𑍃𑌣𑌜𑌲𑍂𑌕𑌾𑌵𑌤𑍍 𑌦𑍇𑌹𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 𑌉𑌪𑌾𑌦𑌦𑌾𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑌦𑌸𑍍𑌯 𑌮𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌜𑌨𑍍𑌮 ॥

என்பது முதலியவாக்கியங்களால் த்ருணஜலூகா எனும் (துரும்புஅட்டை எனும்) ஜந்துவானது வாய்ப்பக்கத்தால் மற்றோர் பக்கத்தைப் பற்றிக்கொண்டே பூர்வமுள்ள பற்றை விடுவதுபோல, ஜீவன் இந்தச்சரீரத்தை விட்டதும் மற்றோர் சரீரத்தை அந்தரமின்றிப் பற்றுகின்றானென்பதாக வெளிப்படையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றதே! இவ்வாக்கியத்தைக் கவனித்தால் சங்கராசார்யருக்கு, மற்றோர் ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டே ஜீவன் லோகாந்தரம் செல்லுகின்றானென்பதே கருத்தென்பது நன்கறியப்படுகின்றதன்றோ. இங்ஙனம் சங்கராசார்யரது முன் பின் ஸூத்திரங்களின் பாஷ்யத்திலுள்ள வாக்கியங்களையும் உபநிஷத்பாஷ்யங்களையும் நன்றாயறிந்தவர்களுக்கு இவ்விஷயத்தில் சிறிதும் சங்கை நிகழாதென்பது நிச்சயமே என்றறிக.

அன்றியும் பாரதம் பீஷ்மரது நிர்யாணப்பிரகாணத்தில் பீஷ்மர் இந்தச் சரீரத்தை விடும்போது ஆகாயத்தில் சோதிமாயமாய்ச் சொலித்துக்கொண்டிருக்கும் ஓர் ஸ்தூலம் தொன்றவே அதனைப் பற்றிக்கொண்டு அவரது ஆத்மா லோகாந்தரம் சென்றதென

𑌮𑌹𑍋𑌲𑍍𑌕𑍇𑌵 𑌚 𑌭𑍀𑌷𑍍𑌮𑌸𑍍𑌯 𑌮𑍂𑌰𑍍𑌧𑌦𑍇𑌶𑌾𑌜𑍍𑌜𑌨𑌾𑌧𑌿𑌪 ।
𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌮𑌾𑌵𑌿𑌶𑍍𑌯 𑌕𑍍𑌷𑌣𑍇𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌧𑍀𑌯𑌤 ॥

"ஓர் பெரும் பந்தம் (சூழ்ந்து வெளிச்சம்) போல பீஷ்மருடைய தலைப்பக்கத்தினின்றும் தோன்றி வெளிப்பட்டு க்ஷணத்தில் ஆகாசமடைந்து மறைந்து விட்டது.

எனும் சுலோகத்தினால் ஓர் பிரகாசமாகிய ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டே பீஷ்மருடைய உத்கிராந்தி சொல்லப்பட்டிருத்தலைக்கவனித்தாலும் ஸ்தூலப்பற்றின்றி லோகாந்தரம் போவதில்லை என்பது வியக்தமாகின்றது.

சங்கை, லோகாந்தரத்தில் ஜீவனுக்கு ஸ்தூலசரீரமிராமலே சூக்ஷ்மசரீர மாத்திரத்தில் ஸுகதுக்கானுபவம் உள்ளதென்பதே உசிதமென தோன்றுகின்றதே. மனோமாத்திரத்தின் செய்கையாகிய சுகதுக்கத்திற்கு ஸ்தூலதேஹம் வேண்டிதில்லையே எனின், இது அறியாமையே என்க. ஸுகமோ, துக்கமோ, அல்லது இச்சை கோபம் முதலியனவோ, எது ஏற்படினும் ஸ்தூலசரீரம் வேண்டியதவசியம். ஸுகதுக்கங்களாவன மனத்தின் விகாரமாகிய வேலையேயாம். மனம் வேலை செய்புமிடமானது மூளை. ஆதலால் (Brain) மூளையில் மனம் வந்து கூடாவிடில் ஸுகதுக்கம் ஏற்படுவதற்கு நியாயமில்லை. மூளையாவது ஸ்தூலசரீரத்தின் (Physical body யின்) ஓர் பாகமே. மூளையைப்பரிசோதித்தால் சதை மாம்ஸம் நரம்பு முதலியவைகளுக்கு அந்நியமாய் வேறுயாதும் காணப்படாமையால் அது ஸ்தூலசரீரத்தி லடங்கியுள்ள அவயவமே. மனம் வேலை செய்வதற்கு ஸ்தானமாயுள்ள ஸ்தூலமாகிய மூளையின்றி அது வேலை செய்யாதன்றோ. மனம் வேலை செய்யாவிடில் ஸுகதுக்கம் ஏற்படுவதில்லை. ஆதலால் ஸுகதுக்கமுள்ளதெனின் மூளையுமுள்ளதென்பதை ஒத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகின்றது. இந்த நியாயத்தாலேயே லோகாந்தரத்தில் ஸுகதுக்கானுபவமுள்ள தென்றதினால் ஸ்தூலசரீரமுமிருக்கவேண்டிய தென்றே நிர்ணயிக்கப்படுகின்றது.

அன்றியும் ஸுகதுக்கபோகம் ஏற்படவேண்டுமானால் அதற்குறிய கருவிகாணங்களாகிய இந்திரிய மனாதிகள் வேண்டிய தவசியமாகின்றது. இந்திரியங்கள் வேலை செய்யவேண்டுமாயின் அவைகளின் ஸ்தானங்களாகிய காது, கண், மூக்கு, முதலிய ஸ்துலசரீராவயவகோளகங்கள் வேண்டியதவசிய மன்றோ. கண் காது முதலிய அவயவங்களில், இந்திரியங்கள் இருந்து தத்தம் தொழில்களைச் செய்வதானால் அத்தேஹத்தினில் பிராணபானாதி வாயு பேதங்களும் இருக்கவேண்டும். பிராணபானாதிகளுள்ளன வெனின் அவைகளின் ஸ்தானங்களாகிய மார்பு கண்டம் நாபி வயிறு முதலிய அவயவங்களிருக்க வேண்டும். இங்ஙனம் விசாரிக்கு மளவில் ஸுகதுக்கபோகத்திற்கு இவ்வளவு நிலமை வேண்டியதென்றேற்படுகின்றமையால் லோகாந்திரத்தில் இன்பதுன்பமுள்ளதென்றதனால் அங்கும் இவ்வவயவங்களோடுகூடிய ஸ்தூலசரீரம் வேண்டிய தவசிய மென்றே நிர்ணயிக்கப் படுகின்றது.

இனி ஸ்வப்பனத்தில் மனோ மாத்திரத்தால் ஸுகதுக்கானுபவம் ஏற்படுகின்றது போல, லோகாந்தரத்திலும் ஸ்தூல சரீரமின்றி மனோ மாத்திரத்தால் இன்பதுன்பங்கள் அனுபவிக்கப் படுகின்றன என்பது கூடாதோ எனின் அல்ல. ஸ்வப்பனத்திலும் மனமானது ஸ்தூல தேகத்தின் ஓர் பாகமாகிய (Little brain) சிறு மூளையிலேயே நின்று தொழிற் படுகின்றது என்று ஏற்கனவே சொல்லப்பட்டது. ஆதலால் அக்காலத்திலும் ஸ்தூல சரீரம் வேண்டியது அவசியமென்றே ஏற்படுகின்றது. ஸ்வப்பனத்தில் மனமானது ஸ்தூல சரீரத்தி லிராமல் வெளிப் போய் விடுகிற தெனின், இது மிகவும் பேதமையேயாம். ஏனெனின் அப்படியானல் அச்சமயம் ஸ்தூல சரீரத்தில் எம் மாறுபாடும்

ஏற்பட நியாயமில்லை. மங்கையோடு கூடுவதாய்க் கனவு காணும் போது வீர்யம் நழுவுதலும், மித்திரன் இறந்ததாய்க் காணும் போது கண்ணீர் விட்டுக் கதறுதலும், மலையிலிருந்து உருண்டு விழுவதாய்க் காணும் போது மார்பு துடித்தலும் ஸ்தூல தேகத்தின் மாறுபாடன்றோ. ஸ்தூலத்திலிருந்து ஸ்வப்பனத்தில் மனம் வெளிப் போகின்றதெனின் இவ்வித மாறுபாடுகள் ஏற்படுதற்கு நியாயமில்லையென்க.

அன்றியும் இரண்டு மூன்று க்ஷணங்களுக்குள் இதர கண்டங்களிலுள்ள பற்பல தேசங்களைச் சுற்றிப் பார்த்து வந்து விட்டதாய்க் காண்கின்றோம். இவை முதலியது ஒவ்வாதன்றோ. அமெரிக்கா கண்டம் போய் அங்கிருக்கின்றதாய் இந்தியாவி லிருப்பவன் கனவு காண்கின்றான். ஸ்வப்பனத்தின் இடையில் விழித்துக் கொண்டானாயின் இந்தியாவில் தனதிருப்பிடத்தில் இருத்தலே காணப் படுகின்றதல்லாமல் அமேரிக்கா காணப்படுகின்றதுண்டா? ஸ்வப்பனத்தில் மனம் ஸ்தூலத்தை விட்டு வெளிப் போகின்றதென்பது விவேகமில்லாமல் சொல்லுதலேயாம் ஆனது பற்றியே.

𑌵𑍈𑌤𑌥𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨 𑌆𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 |
𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍𑌤𑍁 𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌂 𑌸𑌂𑌵𑍃𑌤𑌤𑍍𑌵𑍇𑌨 𑌹𑍇𑌤𑍁𑌨𑌾 ||

விவேகிகள் ஸ்வப் பனத்திலுள்ள ஸகல விஷயங்களும் பொய் என்றே நிர்ணயிக் கின்றனர். விஷயங்கள் உள்ளத்திலேயே இருந்து காணப்படுதல் எனும் ஏதுவினால் என்க

𑌅𑌦𑍀𑌰𑍍𑌘𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌕𑌾𑌲𑌸𑍍𑌯 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌶𑌾𑌨𑍍𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 |
𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌶𑍍𑌚 𑌵𑍈 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌦𑍇𑌶𑍇 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ||

காலம் நுட்ப மாதலின் போய்த் தேசங்களைப் பார்க்கின்றதில்லை. விழித்துக் கொண்டா னாயின் அவ்விஷயங்க ளெல்லாம் அங்கு இருக்கின்றதில்லை.

𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌵𑌪𑌿 𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌸𑌾 𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂 𑌜𑌗𑌤𑍍 ||

ஸ்வப்பனத்திலுள்ள ஜகமானது உள்ளத்தில் சித்தத்தால் கற்பிதமேயாம்

என்பதாதி கௌட பாதாசாரிய ஸ்வாமிகள் முதலிய அபியுக்தர்களாலும் இவ்வாறே உபநிஷத் காரிகையில் உபதேசிக்கப்பட்டது. ஆதலின் எவ்வகையாய் விசாரித்துப் பார்க்கினும் ஸ்தூல சரீரமின்றி ஸுகதுக்க ஞானாதிகள் ஏற்படா வென்பதே திண்ணம். அன்றியும் கைவல்யச்ருதியிலும்

" 𑌸 𑌏𑌵 𑌮𑌾𑌯𑌾𑌪𑌰𑌿𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌰𑍀𑌰𑌮𑌾𑌸𑍍𑌥𑌾𑌯 𑌕𑌰𑍋𑌤𑌿
𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 ||

அவ்வித்யையா மோஹிதனாகிய ஜீவாத்மா சரீரத்தை (ஆஸ்தானமாய் ஆதாரமாய்க் கொண்டே ஸகலத்தையும் செய்கின்றான்.

என்ற வாக்கியத்தால் சரீரத்தை ஆஸ்தானமாய்க் கொண்டே ஜீவர்களுக்கு ஸகல செயலும் ஏற்பட வேண்டும் என்று நிரூபித்திருக் கின்றமையால் (ஆஸ்தாய என்று சொல்லி யிருக்கின்றமையால்) ஆதாரமாயுள்ளது ஸ்தூல சரீரமே என்று நிச்சயிக்கப் படுகின்றது. இனி யிங்குள்ள சரீரம் என்ற சொல்லுக்கு ஸூக்ஷ்ம சரீரம் என்று பொருள் கொள்ளக் கூடாதோ எனின் கூடாதென்க. அதாவது ஜீவனது செயல்களுக்கு ஸூக்ஷ்ம சரீரமானது (ஸாதனம்) கரண மாத்திரமே என்பதாக சாஸ்திரங்களில் ஸ்பஷ்டமாய் பாலரும் அறியும்படி சொல்லப் பட்டிருக்கின்றமையால், கருவி கரணங்களை (ஆஸ்தாய, ஆச்ரயித்து என்பதாக) ஆதாரமாய்ச் சொல்லுவது இயலாது. கருவி காரணங்களோடு கூடி யிருக்கும் ஜீவனுக்கு ஆதாரமாயுள்ளது ஸ்தூல சரீரமே ஆதலால் இங்குள்ள சரீரம் எனும் சொல்லுக்கு ஸ்தூல சரீரம் என்றே பொருள் என்பது வியக்த மாகின்றது. இனி ஜாக்கிரத் எனும் ஓர் அவஸ்தைக்கு மாத்திரம் இதைக் கொள்ளக் கூடாதோ எனும் சங்கை நிகழுமாதலின், ஜாக்கிரம் ஸ்வப்பனம் ஸுஷுப்தி எனும் மூன்றவஸ்தை களுக்கும் ஸ்தூல சரீரம் வேண்டியது அவசிய மென்பதைப் போதிப் பதற்காகவே அதே உபநிடதத்தில் அவ்வாக்கியத்தை அடுத்தே.

"ஸ்வப்நேஸஜீவஸ்ஸுகது:கபோக்தா"
"ஸுஷுப்திகாலேஸகலேவிலீநே"

"ஸ்வப்னத்திலும் ஜீவன் ஸுக துக்கங்களைப் புசிப்பவன். ஸுஷுப்தியில் எல்லாம் ஒடுங்கவே"

என மற்றிரண்டு அவஸ்தகளையும் சேர்த்துச் சொல்லி மூன்றவஸ்தை களுக்கும் ஸ்தூல சரீரம் வேண்டியதவசியம் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. ச்ருதிகளில் மட்டும் என்பதல்லை.
பகவத்கீதை பதினெட்டா மத்தியாயத்தில்.

பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோதமே ।
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம் ॥

ஸகல கர்மங்களும் ஸித்திப் பதற்கு வேண்டியனவாய்த் தத்துவ சாஸ்திரத்தில் நிர்ணயிக்கப்பட்ட ஐந்து காரணங்களையும் என்னிடம் தெரிந்து கொள்வாயாக

அதிஷ்டாநம் ததா கர்தா கரணம் ச ப்ருதக்விதம் ।
விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥

இச்சாத்துவேஷ ஸுகதுக்க ஞானதிகள் அபிவ்யக்தமாவதற்கு ஆதாரமாகிய சரீரம், உபாதிலக்ஷணமாகிய சிதாபாஸனேடுகூடிய அகங்காரம், இந்திரியமனேபுத்திகள், பிராணுபானுதி வியாபாரங்களாகிய சேஷ்டைகள், ஐந்தாவதாகிய அநுக்கிரஹ தேவதை என்பவையாம்

என்று எந்தக்காரியமும் எந்த போகமும் ஏற்படுதற்கு ஸ்தூல தேஹமும் மற்றுமுள்ள நான்கு காரணங்களும் வேண்டியது அவசியமென்று பகவானால் அர்ஜ்ஜுனனுக்கு உபதேசிக்கப் பட்டுள்ளது.

இனி இங்குள்ள ஐந்து காரணங்களும் ஜாக்கிரதவஸ்தை யொன்றையே நோக்கி சொல்லப்பட்டன. கேவலம் மனோ மாத்திரத்தினாலேயே அனுபவிக்கப் படும் ஸ்வர்க்க நரகங்களிலுள்ள அனுபவத்திற்கு இவைகளைந்தும் வேண்டிய தில்லையே? எனின் இவ்வாசங்கை தவறு என்பதைப் போதிப்பதற்கெனவே அதற்கடுத்த சுலோகத்தில்

𑌶𑌰𑍀𑌰𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑍋𑌭𑌿𑌰𑍍𑌯𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌰𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃 ॥
𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌂 𑌵𑌾 𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑌵𑌃 ॥

> மனிதன் சரீரத்தாலாவது வாக்கி (வார்த்தையி) னாலாவது மனவினு லாவது நியாயமாகவோ அல்லது விபரீதமாகவோ எந்தச்செயலை செய்ய முயன்றாலும் அதற்கு இவ் வைந்துகாரணங்களும் வேண் டியன

என ஸ்தூலசரீரமில்லாமல் எந்தக்காரியமும் எவ்வனுபவமும் ஏற்படாது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. போகத்திற்கு ஸ்தானமாகிய ஆச்ரயமில் லாமல் போகமேற்பட நியாயமில்லை யாதலின், ஸ்தூல சரீரத்தையே போகாய தநமென்று சொல்லப்பட்டுளது. இனி அவ்வாறு எங்கு சொல்லப்பட்டது எனின்,

𑌪𑌞𑍍𑌚𑍀𑌕𑍃𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌭𑍂𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑍍𑌥𑍂𑌲𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 ।
𑌸𑌮𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌮𑌿𑌦𑌂 𑌸𑍍𑌥𑍂𑌲𑌂 𑌭𑍋𑌗𑌾𑌯𑌤𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

> பஞ்சீக்ருதங்களாகிய ஸ்தூலபூதங்களால் பூர்வகர்ம வசத்தாலுண்டா கிய இந்த ஸ்தூல சரீரமானது ஆத்மாவுக்குப் போகாயதநமாம்

என்பது முதலிய சுலோகங்களால் சங்கரபகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் முதலியவர்களால் விவேகசூடாமணி முதலிய கிரந்தங்களில் உபதேசிக்கப்பட்டி ருக்கின்றது காண்க. அன்றியும்

"𑌚𑍇𑌷𑍍𑌟𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍"

> "சேஷ்டை இந்திரியார்த்தங்களுக்கு ஆச்ரயம் ஸ்தூல சரீரம்"

எனும் கௌதம ஸூத்திரத்தாலும் ஸ்தூல சரீரத்தை யாச்ரயித்தே சேஷ் டை ஏற்படுகின்றதென்பது நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இங்ஙனம் ஸ்தூல சரீரமி ன்றி லிங்கசரீரம் சேஷ்டை பெறாதெனும் விஷயமே ஸாங்கிய காரிகையிலும்

𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌯𑌥𑌾𑌶𑍍𑌰𑌯𑌮𑍃𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌨𑌾 𑌯𑌥𑌾 𑌛𑌾𑌯𑌾 ।
𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌵𑌿𑌨𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑍈𑌰𑍍𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍍 ॥

சுவர்முதலிய ஆதாரமின்றி சித்திரம் இராததுபோலும் கட்டை முதலியனவின்றி நிழல் இராததுபோலும் லிங்க சரீரமானது ஸ்தூல சரீரமின்றி நிராச்ரயமாய் இருப்பதில்லை.

என்று ஈச்வர கிர்ஷ்ண முனிவரால் போதிக்கப்பட்டிருக்கின்றது. இங்குள்ள "விசேஷ" எனும் சொல்லுக்கு ஸ்தூல சரீரமென்று பொருள் கொள்ளுவது உசிதமோ எனின் அதுவே உசிதமென்பது அச்சுலோகத்தினுரையில்

" ஸுமுவிஶெஷஸூதாநூவாவெதஶரீரஂவஂவஸூதஆ஬ஂ வெவஶெஷிணாஶரீரெணவிநாகுவீஂஸூாநாவ "

" இனிவிசேஷங்களாயுள்ளனவாவன, பஞ்சபூதமயமாகிய சரீரமே விசேஷங்கள் என்பதாம். வைசேஷியாகிய சரீரமின்றி ஸூக்ஷ்ம சரீரத்திற்கு எங்கு ஸ்தானம்

எனக் கௌடபாதாசாரிய ஸ்வாமிகளால் சொல்லப்பட்டவாக்கியங்களைக் கண்டுகொள்க. இவ்விஷயத்தினில் இன்னமும் காட்டக்கூடிய ஏராளமான பிரமாணவாக்கியங்கள் ஸ்தூல சரீரபேதத்தை நிரூபிக்கும் இடத்தில் நிரூபிக்கப்படுகின்றமையால் அங்கு விசேஷமாய்க்காணலாம். உசிதமான யுக்தி திருஷ்டாந்தங்களாலும் இது காறும் காட்டப்பட்டச்ருதி, ஸ்ம்ருதி, ஸூத்திரம், ஆன்றோர்மொழி முதலிய பிரமாண வாக்கியங்களாலும் ஸ்தூல சரீரமின்றி இன்ப துன்ப அனுபவம் நிகழாதென நிச்சயிக்கப்படுகின்றமையால் ஸ்வர்க நரகங்களில் அனுபவிக்குமின்பதுன்பங்களுக்கு ஸ்தூல சரீரம் வேண்டியது அவசியமென நிர்ணயிக்கப்படுகின்றது.

உண்மை யிவ்விதமென்பதில் புத்தியை ஆழ்ந்து செலுத்தாதவர்களாய் ஸரியான குருவினிடமும் சிரவணஞ்செய்யாதவர்களாய் "ஜீவன் ஸ்தூல சரீரமின்றி ஸூக்ஷ்ம சரீரமாத்திரத்தோடு (லோகாந்தரம்) ஸ்வர்க்க நரகம் சென்று அங்கும் ஸூக்ஷ்ம சரீர மாத்திரத்தாலேயே இன்பதுன்பங்களைப் புசிக்கின்றான் எனச்சொல்லிக்கொண்டு அதனையே சாதிக்கவும் முயலும் பண்டிதர்களது மொழி எவ்விதம் என்பது இனி நன்கு விளங்கும்.

சங்கை, பிரும்மலோகம்சென்ற உபாஸகர் ஸ்தூல சரீரமில்லாமலே இன்பங்களைப் புசிக்கின்றனர் என

"ஶூாவஂவாஉமிபாஸுவெவ" (4-4-10)

எனும் ப்ரும்மஸூத்திரத்தினில் சொல்லப்பட்டிருக்கின்றதே. இதனால் ஸ்தூல சரீரமில்லாமல் மனோ மாத்திர ஸங்கற்பத்தாலேயே இன்பதுன்பங்கள் அனுபவிக்கக்கூடும் என்றல்லவோ அறியப்படுகின்றது. இப்படியிருக்க ஸ்தூல சரீரமின்றி இன்பதுன்பம் இல்லவேயில்லை என்பதை எப்படி ஒவ்வுவது? எனும் சங்கை ப்ரும்ம ஸூத்திரம் படித்தவருக்கு நிகழும். ஆதலின் இவ்வுண்மையைச் சற்று விளக்குவாம்.

இச்சங்கை ஸத்குருமூலமாய் ஸரியாய் ஓதியவருக்கு நிகழாதென்பது நிச்சயம். இந்த ஸூத்திரத்தினால் ப்ரும்மலோகம் சென்றவருக்கு ஸ்தூல சரீரமில்லாமலே இன்பமனுபவிக்கப்படுகின்றதென்பது ப்ரும்ம ஸூத்திரத்தின் கருத்தெனச் சிறிதும் கொள்ள இடமில்லை. ஏனெனின் இதற்கடுத்த

"ஹாவம்ஜெஜெமிநிவிகல்பாநநாத ||4-4-11

எனும் ஸூத்திரத்தில் ப்ரும்மலோகம் சென்ற உபாஸகரும் ஸ்தூலசரீரத்தைப் பற்றிக்கொண்டே இன்பமனுபவிக்கின்றனரென வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றதே. இப்படியிருக்க ஸ்தூலசரீரமில்லாமலேபோக மனுபவிக்கப்படுகின்றதென்பது ப்ரும்ம ஸூத்திரத்தின் கருத்தெனின் அதனை எப்படி ஒத்துக்கொள்ளுவது? உண்மையாது என்று அறியவேண்டுமாயின் அந்தப் பிரகரணத்திலுள்ள முன் பின் வாக்கியங்களை ஆராய்ந்து விரோதம யாதுமில்லையா என்பதை நன்றாய்க் கவனிக்கவேண்டுமன்றோ? அங்ஙனமின்றித் தடபுடலாய் ஏதோ ஓர் வாக்கியத்தைமாத்திரம் மேற்பார்வையாய்ப் பார்த்துவிட்டு அதைக்கொண்டுவிஷயத்தை நிர்ணயிக்க இயலுமா? அங்ஙனமாயின் அது மிகவும் மாறுபாடாகவே தோன்றுமன்றோ. அன்றியும் அதற்கும் அடுத்துள்ள

"த்வாதஶாஹவதுபயவிதம்பாதராயணோ" 4-4-12

எனும் ஸூத்திரத்தினால் ஸ்தூலசரீரத்தோடு ஜாக்கிரத் நிலைமையைப் பெற்றாவது, அல்லது ஸ்வப்பனம்போல மனச்சங்கற்பமாத்திரத்தாலாவது இங்ஙனம் இருவகையாய் ப்ரும்மலோகம் சென்றவருக்கு இன்பபோகமுள்ளது என்பதே பாதராயணர் கருத்தென விஸ்தாரம் செய்யப்பட்டிருத்தலைக் கவனித்தாலும் ப்ரும்மலோகம் சென்றவருக்கும் ஸ்தூலசரீரமுள்ளதென்பது நன்றாயறியலாம். "இங்கு மனஸின் ஸங்கற்பமாத்திரத்தாலும் புசிக்கலாம்" என்றதனால் ஸ்தூலசரீரமிராமலேயே என்று பொருள் கொள்ளக்கூடாதோ எனின் அல்ல. இந்தப் பிரகரணத்தில் ப்ரும்மலோகம்சென்ற உபாஸகருக்கு வெளிப்படையாகவாவது உள்ளத்திலேயேயாவது இவ்விருவகையாய் இன்பானுபவமுள்ளதென்பதே கருத்து. அங்ஙனம் பதமுக்தி யெய்தியவருக்கு ஸத்தியஸங்கற்பத்துவம் வந்திருக்குமாதலின் மனோமாத்திரத்தினால் வெளிஸாதனங்களின்றியே ஸ்வப்பனத்தில்போலவே இன்பங்கள் நிகழும், எனும் இவ்வுண்மையானது இதற்கடுத்ததாயுள்ள

"தந்வபாவே ஸந்த்யவதுபபத்தே:" 4-4-13

"ஸ்தூலசரீரமிராதபோது ஸ்வப்பனத்தில் போல அனுபவம் பொருந்தும்" எனும் ஸூத்திரத்தினால் வியக்தமாய் ஸ்வப்பன திருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருத்தலால் அறியப்படுகின்றது. அதாவது ஸ்வப்பனம் ஸ்தூலசரீரமின்றி நிகழுவதில்லை என்பதாம். ஸ்தூலசரீரத்தின் ஓர் பாகமான சிறு மூளையில் நின்று மனம் ஸங்கற்பித்தலையே ஸ்வப்பனம் என்பதும் ஏற்கனவே மாண்டூக்கிய உப

நிஷத்காரிகை முதலிய பிரபலப்பிரமாணவாக்கியங்களைக்கொண்டு நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றது. ஜீவனுக்கு ஸ்தூலசரீர ஸம்பந்தமின்றி ஸ்வப்பனம் நிகழா தாதலால் அந்த திருஷ்டாந்தத்தினல் உபாஸகர் ப்ரும்மலோகத்தில் அனுபவிக் கும் இன்பத்திற்கும் ஸ்தூலசரீர முள்ளதென்பது வியக்தமாகின்றது. இந்தப் பிரகரணத்தினல் அறிந்துகொள்ளவேண்டிய மர்மம் வேறொன்றுள்ளது. அதா வது உபாஸகர் ப்ரும்மலோகத்தில் ஜாக்கிரத் எனும் அவஸ்தையைப்பெற்று வெளிப்படையான ஸாதநங்களைக்கொண்டே இன்பங்களை அனுபவிக்கவேண்டு மெனும் நியமமில்லை. ஸத்தியஸங்கற்பத்துவமெனும் உபாஸ்தி பலஸித்தியினல் வெளி ஸாதனங்களைச் சிறிதும் வேண்டாமல் மனச்சங்கற்பத்தாலேயே ஸ்வப் பனத்தில்போல இன்பங்களைப்புசிக்கத்தகும் என்பதே. இந்தப் பிரகரணத்தை ஆழ்ந்து கவனித்து ஸத்குரு மூலமாய்ப் படிப்பவருக்கு இவ்வுண்மை நன்கு விளங்கும். இங்ஙனமின்றி ஸ்தூலசரீர மில்லாமலே அனுபவமுள்ளதென்பது இவ்வதிகரணத்தின் கருத்தெனக்கொள்வோமாயின்

"ஹாவம்ஜெஜிநிவிருகஷாஈநநாகூ" 4-4-11

"ஓாஉஶாஹவஉஹயவியம்பாஉஶாயணீ" 4-4-12

எனும் இவ்விருஸூத்திரங்களிலும் ஸ்தூலசரீரம் பெற்றே அனுபவம் நிக ழுகின்றதென்று சொல்லப்படுகின்றமையால் இவ்விருஸூத்திரங்களும் இதற் குப்பின் உள்ள ஸ்வப்பனதிருஷ்டாந்தமும் அவலமாகவேமுடியும். ஆதலால் ஸ்தூலசரீரம் பெற்றே அனுபமுள்ள தென்பதே ப்ரும்மஸூத்திரத்தின் கருத் தென்றறிக.

சாஸ்திரங்களின் கருத்து ஸ்தூலத்தைப்பற்றிக் கொண்டே லோகாந்தரம் செல்லுகின்முனென்பதனில் இன்னம் ஏராளமாய்ப் பிரமாணங்கள் காட்டக் கூடும். விரிவஞ்சிவிடுகிருேம்.

இனிப்பிரகிருதத்தைநாடுவோம். ஜீவன் இனி எங்கு சென்ருலும் அவனது தர்மா தர்மங்களும் கூடவே செல்லுகின்றனஎன்று நம் சாஸ்திரத்தினில் சொல் லப்படுகின்றதே. அவை ஸூக்ஷ்மசரீரத்தினிலுள்ள எந்த அவயவத்தைப் பற் றிக்கொண்டு செல்லுகின்றன எனின், புதுவீட்டிற்குக் குடிப்போகும் மனிதன் பழயவீட்டிலுள்ள தனது ஆடையாபரணங்கள் முதலிய முக்கியப் பொருள்களை தனது முக்கியமாயுள்ளதாகிய கைப்பெட்டியில் வைத்துக்கொண்டுபோவது போல, முக்கிய அங்கமான மனஸ்எனும் பொருளில் வைத்துக்கொண்டு போகின்முன்.

ஐந்து அல்லது ஆறு பிராயங்களில் பள்ளிக்கூடத்தில் பாடம் செய்தவாக்கிய மானது ஐம்பதாம் பிராயத்தில் நினைவுக்கு வருகின்றதல்லவா. அப்படி நினை வில் வருவதற்குக்காரணம், படிக்கும்போதே அவ்வாக்கியம் ஸம்ஸ்காரம் எனும் நுட்பமான விசேஷமாய் மனஸினில் பதிந்துபோவதே. ஜீவன்செய்த ஸகல கர்மங்களும் அவ்வாறே ஸம்ஸ்காரவடிவமாய் மனஸினில் பதிந்திருக்கின்றன.

உண்மையில் மனமானது மிக்க நுட்பமான பொருளாயினும் அதனில் அதிலும் மிக்க ஸூக்ஷ்மங்களாயுள்ள எண்ணிறந்த பலகோடிஸம் ஸ்காரங்கள் அடங்கி யிருக்கின்றன. மிக்க நுட்பமாயுள்ள ஆலம் விதையில் பெருங்கூட்டம் தங்கி யிருக்கக் கூடிய நிழலையும், எண்ணிறந்த பறவைகளின் ஆகாரத்திற்குறிய கனி களையும் கொடுக்கக்கூடிய மஹா விருக்ஷத்தை யுண்டாக்குவதான அரிய சக்தி அமைந்திருப்பதுபோலவே ஒவ்வொரு ஜீவனுக்கும் அவனவன் மனதில் பல கோடி பிறவிகளுக்கும் ஏதுவாகிய எண்ணிறந்த (தர்மாதர்மங்களென்னப்படும்) ஸம்ஸ்காரங்கள் பதிந்துள்ளன. புண்ணியச் செய்கை தர்மமென்றும் பாவச் செய்கை அதர்மமென்றும் சொல்லப்படுவதாம்.

சுருட்டு காபி புகையிலை முதலியவைகளை உபயோகிப்பவனுக்கு அவ்வுப யோகத்தினால் தேஹத்திற்கு யாதானும் வியாதி, மீண்டும் அவ்வாறே உபயோ கிக்கச் செய்வதாகிய அப்பியாஸப்பற்று, எனும் இரண்டுவகையான விசேஷம் ஏற்படுவதுபோல, புண்ணிய பாபங்களைச் செய்யும் ஜீவனுக்கு அவைகளின் பயனாகிய இன்பதுன்பங்களை விளைவிக்கும் சக்தி ஒன்றும், மீண்டும் அவ்வா றுள்ள செய்கைகளிலேயே பிரவர்த்திக்கச் செய்வதாகிய அப்பியாஸப்பற்றுஒன் றும், இங்ஙனமிருவகையாய் ஸம்ஸ்காரங்கள் அந்தக்கரணத்தில் ஊன்றப் பெறு கின்றன. ஸுகதுக்க ஏதுவாகிய ஸம்ஸ்காரமே தர்மாதர்மமல்லது கர்மா என வும் அப்பியாஸஸம்ஸ்காரமே வாஸனை யெனவும் சாஸ்திரங்களில் வழங்கப்படு கின்றன. மனம் வேறு ஸ்தூலத்தைப்பற்றிக்கொண்டு லோகாந்தாம் செல்லு கின்றதாயின் மனத்திலுள்ள இரண்டுவித ஸம்ஸ்காரங்களாகிய கர்மாவும் வாஸ னையும் அவ்வாறே செல்லுகின்றன வென்பது சொல்லாமலே நன்கு அறியக் கூடியதாம். இவ்வுண்மையானது

“தம் வித்³யாகர்மணீ ஸமந்வாரபே⁴தே பூர்வப்ரஜ்ஞா ச”

> “பரலோகம் செல்லுகின்றவனாகிய ஜீவனை அவன் செய்திருந்த உபாஸனையும் புண்ணிய பாபகர்மமும் பூர்வம் அடுத்தடுத்த பழக்கத் தினால் ஏற்பட்ட சுபாசுப காரிய விஷயபோகங்களுக்குத் தக்கபடி ஊன்றியுள்ள வாஸனைகளும் நன்கு பற்றி கூடச்சொல்லுகின் றன

எனும் பிருஹதாரண்யாதிச்ருதிகளாலும்

வித்³யாகர்மஸமாயுக்தோ வாஸநாபி⁴ஸ்ஸமந்விதঃ
ப்ராஜ்ஞாத்மாநமாஸ்ரித்ய விஜ்ஞாநாத்மா ப்ரயாதி ஹி ||

> உபாஸ்தி, கர்ம, இவைகளோடு கூடியவனாய் வாஸனைகளோடும் கூடி யவனாய் அஞ்ஞானத்தோடு கூடியவனான ப்ராஞ்ஞனையடைந்து ஜீவன் வெளிப்பட்டுச் செல்லுகின்றான்.

எனும்சிவகீதாதி வாக்கியங்களாலும் உபதேசிக்கப்பட்டுள்ளது. ஜீவன் லோகாந்தரம் செல்லும்போது கர்மாக்களோடும் வாஸனைகளோடும் கூடியுள்ள

மனமும் செல்லுகின்றது. மனமிராவிடில் ஜீவனில்லை. மனஸிலுள்ள தெல்லாம் ஜீவனுடையதே. ஆதலின் மனஸிலுள்ள தர்மாதர்ம வாஸனை ஜீவனுடையதே என்று சொல்லப்படுகின்றது.

ஜீவன் இந்த ஸ்தூல சரீரத்தைவிட்டுப் பிரிந்து போகும்போது இவனால் இங்கு அபிமானிக்கப்பட்டிருந்த செல்வமாவது புத்திரராவது மித்திரராவது சுற்றத்தாராவது தேகபலமாவது புகழாவது மற்றுமுள்ள யாதாவது கூடப்போகின்றதில்லை. எவர் இவனைவிட்டுப்பிரிய க்ஷணநேரமும் மனங்கொள்ளுகின்றதில்லையோ; அப்படிப்பட்ட இவனது புத்திர மித்திர களத்திராதியர்களாலேயே ஜீவனினின்றும் பிரிந்த இவனது தேகமானது நிர்த்தயையாய்க் கட்டைகளிலும் முட்டைகளிலும் வைத்துக் கொளுத்தப்படுகின்றதன்றோ. அந்தோ ? ஸ்தூலதேகத்தை விட்டு ஜீவன் வெளிப்பட்டுப்போகும்போது புத்திர பார்யாதியர், ஸம்பாதித்த பொருள் முதலியயாதும் கூடப்போகாவிடினும் பெயராவது கூடப்போகக்கூடாதா ? அதுவுமில்லையே. பெயருமிழந்து பிணமெனும் புதுப் பெயரோடு மாத்திரமன்றோ செல்லுகின்றான். அதுவும் மயானத்துக்கப்பாலுண்டா ? இல்லையல்லவா. ஜீவன் இத்தேகத்தைவிட்டு நீங்குங்காலத்தில் புத்திரபௌத்திர களத்திராதிகள் அருகில் வந்து அப்பா ! தாதா ! நாதரே ! இதுகாரும் தாங்கள் ஸம்பாதித்த பணத்தில் எங்களுக்குத்தெரியாமல் யாரிடத்திலாவது யாதானும் கொடுத்திருக்கின்றீரோ ? நாங்களறியாமல் எவ்விடத்திலாவது வைத்திருக்கின்றீரோ? சுளுவாய்ப் பேசமுடியாவிடினும் கொஞ்சம் கஷ்டப்பட்டாவது சொல்லும். அல்லது ஜாடையாவது காட்டும். அந்தோ நீங்கள் போய்விட்டால் பிறகு நாங்கள் யாது செய்வோம் ? எங்களுக்குக் கதியாதுமில்லாமல் போச்சுதே. என்று இவ்விதம் சொல்லுகின்றார்களேயன்றி உங்களோடு நாங்களும் மரித்து விடுகின்றோம் எனச் சொல்லி அவ்வாறு செய்வார்களில்லை. அந்தோ நமக்கு எவ்வழியும் சொல்லாமற் போய்விட்டாரே என்று கதறுவார்களே யன்றி அந்தோ அவர் எவ்வுலகம் சென்றாரோ. அவரது கர்மா எவ்விதமாயுள்ளதோ. அவர் எக்கர்மப்பயனை யனுபவிப்பாரோ என்று புலம்புவாரில்லை. இவ்வாறு இவனது புத்திர மித்திர களத்திராதிகளெல்லாம் இந்த ஸ்தூல சரீரம் சேஷ்டித்துக்கொண்டிருக்கும் வரையிலேயேயன்றி ஜீவன் இதை விட்டுப் பிரியும்போது இங்கு ஸம்பாதிக்கப்பட்ட பொருள்களில் தர்மா தர்மங்களுக் கந்நியமாய் யாதும் கூடச் செல்லுகின்றதில்லை. அவ்வாறுள்ள தர்மாதர்மங்களுள் தர்மமே மித்திரனும். அதர்மமே சத்துருவாம். தர்மாதர்மங்களாகிய இவ்விரண்டிற் கந்நியமாய் யாதும் வருகின்ற தில்லை என்பதையறிந்தும் மனிதர் தர்மங்களை செய்யாமலும் அதர்மங்களையே செய்துகொண்டுமிருக்கின்றார்களே?

“அஹந்யஹநி பூதாநி ப்ரவிஶந்தி யமாலயம் |
ஶேஷா: ஸ்திரத்வமிச்சந்தி கிமாஶ்சர்யமத: பரம் ”

பிரதி தினமும் ஜீவர்கள் இறக்கின்றதைக் கண்டுகொண்டே யிருக்கும் மனிதர் தமக்கு அம்மரணமுண்டென்றெண்ணி நல்லகாரியம்

செய்யாமல் தம்மைசாச்வதராய் எண்ணுகின்றனரே இதனிலும் ஆச்சரியம்யாதுளது

எனத்தரும நந்தனர் சொல்லியவண்ணம் இதனிலும் ஆச்சரியம்உண்டா ?

ம்ருதம் ஶரீரமுத்ஸ்ருஜ்ய காஷ்டலோஷ்டஸமம் க்ஷிதௌ |
விமுகா பாந்தவா யாந்தி தர்மஸ்தமனுகச்சதி ||

மரித்த சரீரத்தைக் கட்டை மண்ணாங்கட்டிகளுக்கு நிகராய் விட்டுத் தள்ளி திரும்பிப்பாராமல் பந்துக்கள் செல்லுகின்றனர். தர்மா தர்மங்களே அச்சீவனோடுகூடச் சொல்லுகின்றன

என்பது முதலிய ஆன்றோர் வாக்கியங்களாலும் கடைசியில் கூடவருவது புண்ணிய பாவங்களே என்பது நன்கறியப்படுகின்றது.

இனி ஜன்மாந்தரமுள்ளதென்பது ஸித்தித்தால் ஜீவன் லோகாந்தரம் செல்லுகின்றான் என்பது ஸித்திப்பதாகும். ஏதோ இறந்தால் அத்தோடு ஒழிந்து போகின்றது என்று கொண்டு ஜந்மாந்தரமே இல்லை என்று சொல்லக்கூடாதோ எனின், கூடாதென்க. அதாவது சாஸ்திரம்சொல்லுகின்ற தென்பதைக் கொண்டு மாத்திரம் ஜந்மாந்தரமுள்ளதென்பதில்லை. யுக்தியாய்க்கவனித்தாலும் ஜன்மாந்தரம் உள்ளதெனவே ஏற்படுகின்றது. அதாவது

உலகில் கிரியையின் காலத்திலும் அதன் பலபோக காலம் வேறாயிருக்கின்றது. க்ருஷி (பயிரிடுதல்) பாகம் (சமையல்செய்தல்) முதலியகிரியைகள் ஏற்படும் காலத்திலேயே அவைகளின் பயனாகிய தான்யலாபம் போஜனம் முதமுயன நிகழ்வனவல்ல. கிரிஷிபாகம் முதலியவைமுந்தியும் தான்யலாபம் போஜனம் முதலியன பிந்தியுமே ஏற்படுகின்றன. உலகிலுள்ள ஸகல கிரியைகளுக்கும் இவ்விதமே. ஜன்மாந்தரமில்லை யென்றால் இப்போது செய்யும் புண்ணிய பாபங்களின் பயன் இப்போதே புசிக்கப்படுகின்றன என்றேற்படும். உலகில் புண்ணியம் செய்வோர்களெல்லோரும் இப்போதே அதன் பயனாகிய இன்பத்தையும் பாவம் செய்வோர்களெல்லோரும் இப்போது துன்பத்தையும் அனுபவிக்கிறார்களெனும் நியமம் காணப்படுகின்றதா? சிலர் விசேஷமாய்ப்புண்ணியங்களையே செய்து கொண்டிருந்தும் துன்பங்களையே அனுபவிக்கின்றதையும் அவ்வாறே சிலர் பாபங்களைச் செய்து கொண்டிருந்தும் இன்பத்தையே அனுபவிக்கின்றதையும் காண்கின்றன மன்றோ. புண்ணியத்தின்பயன் இன்பமும் பாவத்தின் பயன் துன்பமும் என்பதே உசிதமல்லவா. இங்கு செய்யும் புண்ணியபாபங்களின் பயன் இப்போதே புசிக்கப்படுகின்றதென்றால் புண்ணியங்களைச் செய்பவர் துன்பத்தையும் பாபங்களேயே செய்பவர் இன்பத்தையும் அனுபவிக்கக்காரணமில்லையே. இதனால் இங்கு செய்யும் புண்ணியபாவங்களின் பயன் இப்போதே அனுபவிக்கப்படுகின்றதெனும் நியமமில்லை என்றறியப்படுகின்றது. இந்த ஜன்மத்தில் ஸுஷுப்தி மூர்ச்சைகாலந்தவிர மற்றகாலங்களி

லெல்லாம் ஸகலமனிதரும் சரீரமனோவாக்குகளால் ஏதாவது கிரியையைச் செய்துகொண்டிருக்கின்றனரேயன்றி சும்மா இருக்கின்றதில்லை.

𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ।

ஒருவனும் ஒருக்ஷணமுங்கிரியையின்றி சும்மா இருப்பதில்லை'

என்பது முதலிய வாக்கியங்களால் பகவத்கீதாதி நூல்களிலும் இவ்வாறே சொல்லப்படுகின்றது. ஆதலின் இந்த ஜன்மகாலம்முழுவதும் கிரியாகாலமே யாகின்றமையால் இதன் பயனைப்புசிக்கவேண்டியதாகிய போகாலம் வேறு ஜன்மமாகவே யிருக்கவேண்டு மென்பது நிச்சயம்.

𑌕𑌾𑌲𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑌾𑌕𑌵𑌿𑌤𑍍𑌤𑌭𑍋𑌗𑌸𑍍𑌯 𑌕𑌾𑌲𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌕𑍃𑌷𑌿𑌪𑌾𑌕𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌾𑌤𑍍 𑌧𑌾𑌨𑍍𑌯𑌭𑍋𑌜𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌤𑌃 ॥

> கிரியையின்காலத்திலும் அதன் பலபோகத்தின் காலம் வேறேயாம்.
> கிருஷிபாகாதிகாலத்திலும் தான்யபாலாபபோஜனாதிகாலம் வேறாக வேயன்றோ காணப்படுகின்றது.

என்று எனது ஆசிரியராகிய ஸஹஜானந்தஸ்வாமி நிரூபித்திருக்கும் வண்ணம் இங்ஙனமே யுக்தியைக்கொண்டும் நிர்ணயிக்கப்படுகின்றது. ஆதலின் ஜன்மாந்தரம் உண்டென்பது நிர்ணயமேயாம்.

இனி ஜன்மாந்தரம் உள்ளதாயினும் ஆகுக. ஸ்வர்க்க நரகங்களாகிய வேறு உலகங்கள் இருக்கின்றன என்பதை என் ஒத்துக்கொள்ளவேண்டும்? உலகங்களைப் பரிசோதித்தவர்களாகிய மேற்குத்திசையோர்களால் வேறு உலகங்கள் இருக்கின்றன என்பதாக ஒத்துக்கொள்ளப்படவில்லையே. அவர்கள் உலகைப் பிரத்தியக்ஷமாய்க்கண்டு ஆசியா முதலிய ஐந்து கண்டங்கள் மாத்திரமிருக்கின்றன என தீர்மானித்திருக்கின்றார்களேயன்றி வேறு லோகமிருப்பதாய்த் தீர்மானிக்கப்படாமலிருக்கும்போது, ஏதோ புராணச் சுவடிகளில் எழுதியிருப்பதை மாத்திரம் கொண்டு ஸ்வர்க்க நரகங்களாகிய உலகங்கள் உள்ளனவென்று சொல்லும் உனது வாக்கியத்தை எப்படி ஒக்கூக்கொள்ளக்கூடும்? என்று பலர் வினவக்கூடும். ஆதலின் இவ்விஷயத்தைச் சற்று நாடுவோம். அதாவது

ஆகாயத்தில் நம்மால் சூரிய சந்திராதிக்ருஹ நக்ஷத்திரங்கள் காணப்படுகின்றனவே. இவை தீப்பொறிகள்போலத் தோற்றுகின்றனவன்றோ. இவை தீப்பொறிகளேயா? அல்லது பஞ்சபூதமயங்களாகிய உலகங்களா? என விசாரித்துப்பார்க்கின் தீப்பொறிகளல்லவென்றும் இங்கிருந்து பார்ப்பவர்களுக்குத் தீப்பொறிகள்போலத் தோன்றினும் உண்மையில் அவை இவ்வுலகம் போன்ற எண்ணிறந்த உலகங்களே என்றும் நிச்சயிக்கப்படுகின்றன.

இவைகளுள் சில நீரம்சம் மிகுதியாயுள்ளனவும், சில அக்கினி யம்சம் மிகுதியாயமைந்தனவும், சில வாயுவம்சம்மிகுதியாயுள்ளனவும், சிலஸுக ஏதுவாயிருக்கும்படி அக்நியம்சம் அமைந்தனவும், சில துக்கஹேதுவாய் அக்நியம்சம்

அமைந்தனவும், சிலஸூர்ய ஏதுவாய் ஜலாம்சம் அமைந்தனவும், சிலதுக்கஹேது வாய் ஜலாம்சம் அமைந்தனவும் சில ஸுகஹேதுவாய் வாயுவம்சம் அமைந்தன வும், சில துக்கஹேதுவாய் வாயு வம்சம் அமைந்தனவும், அவ்வாறே பிருதிவி யம்சம் அமைந்தனவுமாய்ச்சிலவும் இருக்கக்கூடும்.

இனி ஸூர்யன் முதலியனவை எரிந்துகொண்டிருக்கும் தீச்சுவாலையைத்தவி றவேறல்ல என்று கொண்டு அக்கினிமாத்ரமாயுள்ளன என்று சொல்லக்கூடா தோ எனின் அல்ல.

அதாவது, நெருப்பு ஜ்வாலையிருக்குமிடம் ஆக்ஸிஜனும் கார்பனும் இருக்க வேண்டும். ஆக்ஸிஜன் கார்பன் இவ்விரண்டும் சேராமல் ஜ்வாலை ஏற்படாது என்பது தற்காலம் யாவராலும் அறியப்பட்டவிஷயம். அன்றியும் அக்கினியா னது யாதானும் ஓர் பொருளை ஆச்ரயித்தே (பற்றியே) இருக்குமன்றி நிரா தாராமாயிருக்கின்றதில்லை. தீபம் முதலிய ஜ்வாலைகள் திரி முவலியவைக ளிரா மல் தனியாய் இருப்பனவல்ல. ஆதலால் ஸூரிய மண்டலமானது ஜ்வாலை மாத்திரமாகிய ஜோதி மண்டலமே என்று சொல்லுவது உசிதமல்ல. அங்கு சோதி காணப்படுவது பிரத்தியக்ஷமாதலாலும் அதன் கிரணங்களும் தஹித்தல் பிரத்தியக்ஷமாய் அனுபவிக்கப்படுகின்றமையாலும் அங்கு தீ உள்ளது என் பதை மறுக்கவும் முடியாது. தனித்துத்தீயிராதாதலால் தீயிருத்ததற்கு ஆதார மாகிய வேறு பொருள் அம்மண்டலத்திலிருக்கின்றதென்றே சொல்லவேண் டும். அங்கு அக்கினிக்கு ஆதாரமாயுள்ள பொருள்யாதெனின் வாயுமாத்திரமே யாவது அல்லது ஜலமாத்திரமேயாவது உள்ளதென்பதும் உசிதமல்ல. வாயு மாத்திரத்தையாவது ஜலமாத்திரத்தையாவது பற்றிக்கொண்டு அக்கினியிராதாத லின் பிருதிவியும் அங்கிருக்கவேண்டுமென்று ஊஹிக்கப்படுகின்றது. வாயு வின்றி கேவலம் பிருதிவிமாத்திரத்தில் அக்கினியிராதாதலால் வாயுவும் இருக்கக் கூடும் என்று அறியப்படுகின்றது. மண்ணும் வாயுவும் அக்கினியுமிருக்க வேண்டு மாயின் அதற்காதாரமாகிய ஆகாயமும் இருக்கவேண்டுமென்றே அறியப்படு கின்றது. இவ்வாறு ஆராய்ந்து பார்த்தால் பிருதிவி அப்புதேயு வாயு ஆகாயம் எனும் ஐம்பூதங்களின் அம்சங்களாலேயே ஸூர்யாதி மண்டலங்கள் அமைந் துள்ளன என்பதுநிர்ணயம். இவ்வுண்மையானது

"[illegible]"

"ஆதித்தனிடம்வெளுப்பாயுள்ளது ஜலத்தினது கறுப்பாயுள்ளது பிருதிவியினது.

எனச் சாந்தோக்கியாதி உபநிஷதவாக்கியங்களால் உபதேசிக்கப்பட்டிரு க்கின்றது.

சூரியன் முதலிய மண்டலங்களில் அக்கினியம்சம் மிகுதியாகவும் ப்ருதிவி யாதி ஏனையபூதங்களின் அம்சங்கள் ஸ்வல்பங்களாகவும் இருத்தலின் ஆக்கினேய மண்டலங்கள் எனவும் சோதிலோகங்களெனவும் சொல்லப்படுகின்றன. அம் மண்டலங்களில் ஐம்பூதங்களின் அம்சங்களேயிருக்கின்றனவாதலின் அங்கு ஜீவர்களும் வஸிக்கக்கூடும். இவ்வுலகிலுள்ள ஜீவர்களின் தேகம் அங்கு ஜீவி

யாவிடினும் அம்மண்டலங்களின் சீதோஷ்ணநிலைமைக்குத்தக்கவாறு அமையப்பெற்றசரீரிகள் அவ்விடத்தில் ஜீவிக்கக்கூடும் என்பது நிச்சயம். ஸமுத்திரம், ஏரி, தடாகம், நதி, முதலியவைகளில் ஜலமே மிகுதியாயிருக்கினும் அதற்குத்தக்கபடி ஜலாம்சத்தையே மிகுதியாய்க்கொண்டுள்ளனவும் இதரபூதாம்சங்களை ஸ்வல்பமாகக்கொண்டுள்ளனவுமாகிய மீன் முதலிய ஜலீயசரீரிகள் வஸிக்கின்றதுபோல, அக்கினியம்சம் விசேஷமாக அமையப்பெற்ற சரீரம் ஆதித்தியாதி புவனங்களில் வஸிக்கக்கூடும்என்பதில் சிறிதும் ஸந்தேகமில்லையன்றோ. சூரியன்போலவே சந்திரன், அங்காரகன், புதன், முதலிய மண்டலங்களெல்லாம் ஜீவர் வஸிக்குமிடமாகிய உலகங்களேயாம். சூரியசந்திராதிகள் லோகம் என்பது வெகு காலம் வரையில் மேனாட்டார்களுக்குத் தெரியாத விஷயம். நம்மவர்களுக்கோவெனின் பன்னெடுங்காலமாய் இவ்விஷயம் நன்கறியப்பட்டதே என்றறிக. இவ்வாறு

> [illegible] |
> [illegible] ||
> [illegible] |
> [illegible] |
> [illegible] |
> [illegible] ||

> ஜீவர்மேனோக்கிச்சென்று எந்த ஸ்தாநங்களில் நிலைபெறுகின்றனரோ அவைகளை உள்ளபடி கூறுகின்றேன். என்னிடம் தெரிந்து கொள்வாயாக. அதனைக்கேட்டு கர்ம நிச்சயத்தையும் திடமான புத்தியையும்பெறுவாய். நக்ஷத்திர வடிவங்களாய்த் தோன்றுகின்றனவன்றோ. அங்கு சந்திரமண்டலமும் தனது காந்தியால் ஜொலிக்கும் சூரியமண்டலமும் காணப்படுகின்றதே. இங்கு புண்ணியம்செய்தவர்களான ஜனங்கள் சென்று வஸிக்குமிடங்களே அவை என்றறிவாயாக.

என்பத முதலிய வாக்கியங்களால் ஸ்ரீ மஹாபாரத அநுகீதாதிகளில் சொல்லியிருத்தலை நன்குணரயறிந்துகொள்க. இன்னம் இவ்விஷயத்தில் ஏராளமாய்ப் பிரமாணவாக்கியங்கள் இதனிலேயே உதகரிக்கப்படும். அங்கு கண்டு கொள்க.

சந்திராதிமண்டலத்திலிருந்துவரும் கிரணம் மிகவும் குளிர்ச்சிபொருந்தியதாயிருக்கின்றமையால் அதற்கு ஏதுவாகிய ஜலாம்சம் அம்மண்டலத்தில் அமைந்திருக்கவேண்டுமென்பது நிச்சயம். காரணமின்றிக் காரியமில்லையாதலால் சந்திரகிரணத்தின் குளிர்ச்சியாகியகாரியத் திற்குக் காரணமான ஜலாம்சம் அம்மண்டலத்திலிருக்கவேண்டுமென்பதை யாராவது மறுக்க முடியுமா? இயலாதன்றோ.

ஜலம் தனித்து நிராதாரமாய் இராதாதலின் அங்கு பிருதிவிமுதலியற்ற பூதங்களின் அம்சங்களும் அமைந்திருக்கவேண்டும். ஆயினும்ஜலாம்சம்

மிகுதியாய் உள்ளதென்பதே உசிதம். இனி அம்மண்டலத்தின் அமைப்புக்குத்தக்கபடி ஜலாம்சம் மிகுதியாயும் இதர பூதாம்சங்கள் ஸ்வற்பங்களாயும் அமைந்த சரீரமுடைய ஜீவர்கள் அம்மண்டலத்தில் வஸிக்கக்கூடும் என்றும் ஊஹிக்கக் கூடியதே.

இவ்வாறே வாயுவம்சம் மிகுதியாய் அமைந்துள்ள மண்டலங்களுமிருக்கக் கூடுமென்றும் அம்மண்டலங்களுக்குத்தக்கபடி வாயுவம்சத்தை மிகுதியாயும் இதர பூதாம் சங்களை ஸ்வல்பங்களாயுமுடைய சரீரஜீவர்கள் அம்மண்டலங்களில் ஜீவிக்கக் கூடுமென்றும் விளங்கக் கூடியதே.

இவ்விதம் ஆகாயத்தில் நம்மால் பிரத்தியக்ஷமாய்க் காணப்படும் ஸூரிய சந்திர கிருஹ நக்ஷத்திரங்க ளெல்லாம் இங்கிருந்து பார்க்கும் போது சிறிய சோதிக் கூட்டம் போலத் தோன்றினும் உண்மையில் அவைக ளெல்லாம் பஞ்ச பூதங்களால் அமைந்துள்ள உலகங்களே என்பது நிர்ணய மாதலின் லோகாந்தரம் என்னப்படும் ஸ்வர்க்க நரகங்கள் அவைகளேயாம் என்றறிக. இனி நம்மால் காணப்படாமல் இதற்குக் கீழ்ப்பிரதேசத்திலும் ஏராளமாகிய மண்டலங்களிருக்கின்றன. விசேஷமாய் அவை நரகலோகமென்றும் சொல்லப்படும்.

மேற்குத் திசையோர்களால் இங்ஙனம் நன்றாய் அறியப் படாததைக் கொண்டு மாத்திரம் ஸ்வர்க்க நரகங்கள் வேறு இல்லை என்பது உசிதமா? மேற்குத் திசையோர்களால் அங்காரகன் பிருஹஸ்பதி முதலிய கிருஹங்கள் பெரிய உலகங்க ளென்பதாகக் கண்டு பிடிக்கப் பட்டு அவ்விடங்களிலுள்ள விசேஷங்களைப் பற்றித் தற்காலம் பரி சோதிக்கப் பட்டு வருகின்றது. இதுபோல மற்றுமுள்ள கிருஹங்களை இன்னமும் நன்கு பரி சோதித்தார் களாயின் நம் சாஸ்திரங்களில் சொல்லியபடி ஸூரிய சந்திராதி கிருஹங்களெல்லாம் உலகங்களே என்றும் அங்கு வஸிக்கத்தக்க சரீரத்தோடு ஜீவர்கள் அங்கும் ஜீவிக்கக் கூடும்என அறிந்து கொள்ளஇயலும்.

மேற்குத் திசையோர்களால் கண்டு பிடிக்கப் படாதவைகளை யெல்லாம் பொய் என்பது உசிதமாகுமா? சில நூற்றாண்டு களுக்கு முன் அமேரிக்காக் கண்டம் இருக்கின்ற தாகவும் பூமி உருண்டையா யிருக்கின்ற தாகவும் கண்டு பிடிக்கப் படவில்லையே. அப்போதுள்ளவருக்கு அவ்விதம் அறியப் பட்டிராததினால் அக்காலம் இவை பொய்யா யிருந்தனவா? தற்காலமும் அவர்களால் கண்டு பிடிக்கப் படாமல் இப் பூ மண்டலத்தில் எவ்வளவோ இடங்க ளிருக்கக் கூடும். தற்காலம் கண்டு பிடிக்கப் பட்டிருப்பது ஆசியா முதலிய ஐந்து கண்டங்களே யாதலால் இவைகளைத் தவிர வேறிடம் இப் பூமண்டலத்தி லாவது வேறு எங்கே யாவது இல்லவே யில்லை யென்று சாதிக்க முயலுவது உசிதமாகுமா? அநுசிதமே யன்றோ.

ஸ்தூல தேஹத்தைத் தவிர ஆத்மா எனும் ஓர் பொருள் உள்ளதாக மேற்குத் திசையோர்களால் வெகு காலம் வரையில் அறியப் படாம லிருந்தது. பிறகு சாஸ்திரவிசாரணையால்தேகேந்திரிய மனாதிகளுக் கந்யமாய் ஆத்மா எனும் ஓர் பொருள் உள்ள தென்றும் அதனை உள்ளபடி அறிந்து கொண்டு ஜன்மத்தை ஸபல மாக்கிக் கொள்ள வேண்டு மென்றும் தற்காலம் மிக்க முயற்சி செய்யும்

மேதாவிகள் அமேரிக்கா ஆஸ்ட்ரேலியா முதலிய கண்டங்களில் பலரிருக்கின் றனர் என்பது நம்மவரால் நன்கறியக் கூடியதே யன்ரே.

இது போல மேற்குத் திசையோரால் அறியப் படாமலும் நம்மவரால் வெகு காலமாய் அறியப் பட்டு முள்ள விஷயம் இன்னம் ஏராளமாய் இருக்கக் கூடும் அல்லவா. பதஞ்ஜலி முதலியவர்களி. யற்றிய யோக ஸூத்திராதிகளைக் கண்டு அமேரிக்காவில் உள்ள பலர்களால் இந்து யோக சாஸ்திர மானது வாஸ்தவ மென்பதாகத் தற்காலம் நன்கொத்துக் கொள்ளப் பட்டும் அப்பியஸிக்கப்பட்டும் வருகிறது பிரஸித்தமே. நமது முன்ஞோர்கள் இவ்வாறு மிக்க மேதாவிகளா யும் வேத சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கும் விஷயங்களை அனுபவத் தில் கொண்டு வந்தவருமா யிருந்தனர். மேற்குத் திசையோர் உலகிலுள்ள பொருள்களை மிக்க முயற்சியோடு அபாரமாய்ப் பரிசோதித்து அறிந்து கொண்டு தற்காலம் நமது சாஸ்திரங் களிலுள்ள மர்மங்களையும் அறிந்துகொள்ள முயலுகின்றனர். நம்மவரோ எனின் இவ்வுலக வாழ்க்கை மறுமைப் பயன் எனும் இவ்விரண்டையும் இழந்து, வேத சாஸ்திரங்களில் அசிரத்தை யுடையவர் களாய் அவைகளில் சொல்லப் படும் விஷயங்கள் யாவை யென்பதை ஓர் சிறிது மறியாமல், நமது வேத சாஸ்திரங்க ளெல்லாம் சுத்தப் பிசகு என்று பிறருக்கும் போதிக்க முயலுகின்றனர். நிற்க, இனி எடுத்த விஷயத்தை நாடுவோம். இவ் வாறு ஆதித்திய சந்திராதிகள் லோகங்கள் என்பதும் அங்கு பிரிதிவீ ஜலம் முதலிய பூதாம்சங்களும் உள்ளன என்பதும் நம் சாஸ்திரத்தில் எங்கு சொல் லப் பட்டிருக்கின்றது எனின்

யஜுர் வேதம்.

“[illegible] ||

தேவர்களுக் குறிய பெருமையைப் பெற்று ஆதித்திய மண்டலம் செல்லுகின்ருன். பிதிரர்களுக் குறிய பெருமையைப் பெற்று சந்திர உலகம் அடைகின்ருன்

ப்ருஹதாரண்யம்.

“[illegible]” “[illegible] ||

எவர் வேள்விதானம் தவம் முதலியவைகளை அநுஷ்டித்துச் செல்லு கின்றனரோ மாஸாதிஷ்டான தேவதையின் உலகத்திலிருந்து பிதி ரர்களைக் காணக் கூடிய இடத்தையும் அங்கிருந்து சந்திர லோகத் தையும் அடைகின்றனர்.

கௌஷீதகிப்ராஹ்மணம்.

‘[illegible]

யுலோகம் ஸ வருணலோகம் ஸ ஆதித்யலோகம் ஸ இந்த்ரலோகம் ஸ ப்ரஜாபதிலோகம் ஸ ப்ரஹ்மலோகம்"

இவ்விந்த தேவயானமாகிய மார்க்கத்தை யடைந்து அக்கிநியின் லோகத்தையடைகின்றான். வாயுலோக மடைகின்றான் வருணலோக மடைகின்றான் ஆதித்த லோகமடைகின்றான் இந்திரலோக மெய்துகின்றான் ப்ரஜாபதி லோக மடைகின்றான் பிறகு பிர்ம்ம லோக மெய்துகின்றான்.

ப்ருஹதாரண்யம்.

" நக்ஷத்ரலோகேஷு மாமீடதீ ||

" ஓகார்க்கி நக்ஷத்திர லோகங்களில் என்று."

மண்டல ப்ராம்ஹணம்.

" யாஜ்ஞவல்க்யோ மஹாயோகீ நிராதித்யலோகம் ஜகாம ||

"யாக்ஞவல்கிய மஹா முனிவர் ஆதித்த லோகம் சென்றார்."

சிவ கீதை.

சந்த்ரலோகே திவ்யதேஹம் ப்ராப்ய புங்க்தே பராம் ச்ரியம் ||

" சந்திர லோகத்தில் திவ்விய தேஹத்தைப் பெற்று மிகுந்த இன்பங்களைப் புசிக்கின்றான்."

என்பது முதலிய வாக்கியங்களால் சூர்ய சந்திர கிருஹ நக்ஷத்திராதிகள் லோகாந்தர மென்பதாக வியக்தமாகின்றது.

அன்றியும் தைத்திரீயோப நிஷதம் சீக்ஷாவல்லியில் பிரபஞ்சத்தை ஆத்ம (ஜீவ) வர்க்கம், அவைகள் வஷிப்பதற் கிடமாகிய பூத (விகாரமாகிய) லோக வர்க்கம் என்றிரண்டு வகையாய்ப் (பங்தியாய்) பிரித்து ஸூர்ய சந்திர நக்ஷத்திராதிகளை ஜீவர்கள் வஷிப்பதற் கிடமாய் நன்கு உபதேசிக்கப் பட்டிருக்கிறது. அதாவது,

" ப்ருதிவ்யந்தரிக்ஷம் த்யௌர் திசோவாந்தரதிச: அக்னிர்வாயுராதித்யஸ்சந்த்ரமா நக்ஷத்ராணி "

"பிருதிவி அந்த ரிக்ஷம் த்யௌ: திசை அவாந்தரதிசை அக்நி வாயு ஆதித்தியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் ,,

" இத்யதிபூதம் " இவை பூத விகாரத்தில் அடங்கியுள்ளன "

என்று போதித்துப் பிறகு

அதாத்யாத்மம் " இனி ஆத்ம (ஜீவ) வர்க்கமாவது " என்று சொல்லி

ப்ராணோ வ்யானோபான உதான ஸமான: " சக்ஷு: ச்ரோத்ரம் மனோ வாக் த்வக் "

பிராணன், வ்யானன், அபானன், உதானன், ஸமானன் " சக்ஷூஸ் செவி மனம் வாக்தொக்" என்று கூறி "பாங்க்தம் வா இதம் ஸர்வம்"

"வாஜ்தெநெவவாஜ்தஂஹுஜணாதி"

"இவை எல்லாம் இருவகையே ஆத்ம பங்க்திகளாலேயே ஆதித்திய சந்திர நக்ஷத்திராதி பூதபங்க்திகள் நிறைந்திருக் கின்றன"

எனச் சொல்லி யிருப்பதைக் கவனித்தாலும் ஸூர்ய சந்திராதிகள் ஜீவ வர்க்கங்களால் நிறைந்த வுலகம் என்பது நன்ருய் விளங்கும். உண்மை இவ் வித மாதலின்

[illegible] ||

" [illegible] ||

என்று எனது ஆசிரியராகிய ஸஹஜாநந்த உபாத்தியரும் இவ்வாறு நிரு பித்திருக்கின்றனர்.

இனி ஸ்வர்க்க நரகங்கள் எவை எனின், ஆதித்தியன் சந்திரன் புதன் பிருஹஸ்பதி முதலிய மண்டலங்களும் இவ்வாறுள்ள நக்ஷத்திரங்களும் புண் ணியஞ் செய்தவர் செல்லுமிட மாதலின் ஸ்வர்க்கங்க ளென்பதாம். சனி முதலிய கிருஹங்களும் அவ்வாறு மற்றுமுள்ள நக்ஷத்திரங்களும் பாபஞ் செய் தவர்களால் அடையக் கூடிய இடங்களாதலின் நரகங்க ளென்றும் அறிக. இனி இப்பூ மணடலத்திற்குக் கீழ்ப் பிரதேசத்திலுள்ளதும் தக்ஷிணத் துருவத் திற்கு நேர் தெற்கில் காணப் படுவது மாகிய சில மண்டலங்களும் யாதனைகளை யனுபவிக்கு மிடங்களாதலின் நரகமெனப்படும். இவ்வுண்மையும்,

"[illegible] ||

என்பது முதலிய சுலோகங்களில் சொல்லியபடி அவ்வாசிரியரால் நன்கு போதிக்கப் பட்டுள்ளது.

உண்மை யிவ்விதமென்று யுக்தி களாலும் சாஸ்திர வாக்கியங் களாலும் நன்கு நிர்ணயிக்கப் படுவதாயிருக்க

" [illegible] ||"

இதுவே உலகம் இதற்கு அந்நியமாய் வேறு உலகமில்லை யென்று எண்ணுவோன் அடிக்கடி என்னிட மகப்பட்டுத் துன்புறுகிறான்.

என்று தர்மராஜன் நசிகேதஸுக்கு உபதேசித்ததாய்ச் சொல்லப்படும் கடவல்லி யுபநிடத வாக்கியத்தின்படி ஸ்வர்க்க நரகங்கள் வேறு இல்லை யென்றும் சொல்லிக்கொண்டு மிக்கப் பாபங்களைச்செய்து கெட்டழியும் தற்காலப்போதகர் சொல்லும் வாக்கியங்கள் மோஹத்தினல் நிகழ்வன என்றேயறிக.

இனி இங்கு புண்ணிய பாபம் செய்த மனிதர் இவ்வாறுள்ள ஸ்வர்க்கநரகங்களுக்கு சென்று அங்கு இன்ப துன்பங்களைப் புசிக்கின்றனர் என்று சொல்லப்படுகின்றதே. இங்குள்ள ஸகல ஜீவர்களும் இறந்ததும் ஸ்வர்க்க நரகம் செல்லுகின்றனரா? அல்லது மனிதர் எல்லோரும் செல்லுகின்றனரா? அல்லது சிற்சில மனிதரே ஸ்வர்க்க நரகம் செல்லுகின்றனரா? எனின் அவ்வுண்மையறிக. அதாவது உலகில் புண்ணிய பாபங்களைப் பகுத்தறியும் பரிபாகமுடைய ஜீவர்களான மனிதர்களே அவைகளின் பயனை அனுபவிக்க வேண்டியதாகும்.

மாடு குதிரை முதலியன, மனிதரை இடித்து மிதித்துத் தள்ளினல் அவைகளுக்கு ராஜாங்கத் தாரால் தண்டனை விதிக்கப்படாமல் மற்றவரை ஹிம்ஸை செய்தல் முதலிய குற்றங்களைச் செய்யும் மனிதருக்கே தண்டனை விதிக்கப்படுவதுபோலப்புண்ணிய பாபங்களைப் பகுத்தறியும் மனிதருக்கே ஸ்வர்க்கநராகாதி இன்ப துன்பங்களாம். புண்ணிய பாபங்களை யறியும் இயல்பு கிருமி கீடம் பசுபக்ஷி முதலிய திர்யக்ஜந்துக்களுக் கில்லையன்றே. ஆதலின் மனிதஜன்மமே கர்மா வைஸம்பாதிக்கும் ஜன்ம மாகின்றது. பசு பக்ஷி யாதி ஜன்மங்களோ வெனின் பூர்வம் மனிதராய்ப் பிறந்த ஜன்மத்தில் செய்திருந்த பாப புண்ணியங்களை அனுபவிக்க வந்தன வாதலின் போக ஜன்மங்கள் என்பது உசிதம். மனிதராய்ப் பிறந்தவ ரெல்லோரும் ஸ்வர்க்க நரகம் செல்ல வேண்டு மென்ற நியமமில்லை. உலகில் மிகவும் சிரேஷ்டமாகிய புண்ணியத்தைச் செய்தவர் ஸ்வர்க்கத்திற்கும் மிகவும் கொடும் பாபங்களைச் செய்தவர் நரகத்திற்கும் செல்லுவோர்களென்றும், ஸாமான்னிய புண்ணிய பாபங்களைச் செய்தவர் இறந்த பின்னர் ஸ்வர்க்க நரகம் செல்லாமல் இங்கேயே மீண்டும் ஜனிக்கின்றனர் என்றுமறிக. இவ்விஷயம் இதிலேயே விபரமாய்ச் சொல்லப் படுகின்றது. அங்கு கண்டுகொள்க.

இனி ஸ்வர்க்க நரகங்களில் சென்று இன்ப துன்பங்களைப் புசிப்பவர் அவ்வாறு புசித்த பின்னர் கர்மங்களெல்லாம் ஒழிந்து போகின்றமையால் அங்கிருந்து முக்திபெற வேண்டிய தென்ப தல்லவோ உசிதம். அப்படி யிருக்க மீண்டும் இங்கு வந்து ஜனிப்பது உசிதமோ எனின், அஃதறிக. இவ்வுலகில் மனிதரா யிருந்த காலத்தில் பிராணி வதை, பதிவிருதையின் கற்பழித்தல், பிறன்மங்கையோடுகூடுதல் முதலிய பாபங்களைச் செய்தவர் இவைகளோடுகூடச்சிற்சில புண்ணியங்களையும் செய்திருக்கக்கூடும். அவ்வாறே ஆலயம் தடாகம் முதலியவைகளைப் பிரதிஷ்டித்தல் ஏழைகளுக்கு உபகரித்தல் சத்திரம் சாவடி முதலியவைகளை ஸ்தாபித்தல் முதலிய புண்ணியங்களைச்செய்தவரும் அக்கருமங்களோடு கூடச்சிற்சில பாபங்களையும் செய்திருக்கக் கூடும். இவர்கள் இறந்ததும் இங்கு

குறித்தது போன்ற முக்கியமாகிய புண்ணிய பாபங்களின் பயனை யனுபவிக்க ஸ்வர்க்க நரகங்களில் சென்று அங்கு அக்கர்மங்களுக்குத் தக்கபயனாகிய இன்ப துன்பங்களைப் புசிக்கின்றனர். இவர்கள் செய்திருந்த ஸகலமும் அங்கு புசிக்கப் படுவனவல்ல. ஏதோ முக்கியமாய்க் குறிப்பிட்ட கர்மங்களின் பயனை மாத்திரம் அங்கு புசித்து, மிச்சமாயுள்ள ஸாமான்னியகர்மங்களைப் புசிப்பதற்கு இங்கு வர வேண்டியது அவசியமேயாம். பூர்வம் செய்திருந்த ஸகலகர்மங்களின் பயன்களை ஸ்வர்க்க நரகங்களில் புசிப்பார் களாயின் அவ்விடத்திலிருந்து இங்கு வராமலே முக்தி யடையக் கூடு மென்று சொல்லலாம். அவ்வாறின்றி ஏதோ முக்கியமா யுள்ள புண்ணிய பாபங்களின் பயனையே புசிப்பதற்காக ஸ்வர்க்க நரகம் செல்லுகின்றமையால் அக்கர்மத்தின் பயனைப் புசித்ததும் மீண்டு முள்ள மற்ற கர்மங்களின் பயனைப் புசிக்க இவ்வுலகு வந்து சேருகின்றனர் என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றது.

இங்கிருக்கும் மனிதர் இறந்ததும் வேறு ஸ்தூலத்தைப் பற்றிக் கொண்டு ஸ்வர்க்க நரகம் செல்லுவது உண்மையானல் அப்படிப் புதிதாய்ப் பற்றப் படுவதாகிய ஸ்தூல சரீரம், இறப்பவர்களின் ஸமீபத்திலுள்ள நம்மவர்க்கு ஏன் காணப்பட வில்லை? எனும் ஆசங்கை நிகழும். ஆதலின் அவ்விஷயத்தின் உண்மை யறிக.

ஸ்தூல சரீரம் என்று பொதுவாய்ச் சொல்லப் படினும் அதினில் மிகுந்த பேதமுள்ளது. இறக்குங் காலத்தில் வரும் மற்றோர் சரீரமானது இங்கு நம்மவர்க் குள்ள சரீரம் போலிருக்கு மானல் நம்மவரால் காணக் கூடும். அவ்விதமின்றி வேறு விதமாகிய சரீரமாதலால் காணப் படுவதில்லை என்றறிக. அதாவது ஸ்தூல சரீரமானது பார்த்திவம் ஜலீயம் ஆக்கிநேயம் வாயவீயம் என்று நான்கு வகைப் படும்.

பார்த்திவ சரீரமாவது பிரிதிவியின் அம்சமே முக்கிய மாயும் மற்ற ஜலம் அக்கினி வாயு இவைகளின் அம்சங்கள் ஸ்வற் பங்களாயும் அமைந்துள்ள தேஹமேயாம். அது பிரிதிவி யாகிய இவ்வுலகி லுள்ள ஜீவப் பிராணிகளின் சரீரமேயாம். எறும்பு கொசுகு முதல் மனுஷ்யன் ஈறாகிய ஸகல ஜீவர்களின் தேகங்களும் பார்த்திவ சரீரங்களே. பார்த்திவ சரீரத்தி லடங்கி யுள்ள அவாந்தர பேதம் இவ்வள வென்று கணக்கிடக் கூடிய தல்ல. ஆமை முதலிய சில ஜந்துக்களுக்கு வெளியில் எலும்பும் உள்ளில் மாம்ஸமும், மனிதர்முதலியவர்களுக்கு உள்ளில் எலும்பும் வெளியில் மாம்ஸமும், பாம்புமுதலியவைகளுக்குக் கண்ணே காதாகவும் காக்கை முதலியவை களுக்கு மூக்கே வாயாகவும் இவ்வாறு எண்ணிறந்த வித்தியாஸங்கள் இருக்கின்றன என்பது யாவராலும் அறியக் கூடியதேயாம். பார்த்திவ சரீரம் பிரிதிவியினலேயே தோன்றி பிரிதிவியினலேயே வளர்ந்து பிருதிவியிலேயே ஒடுங்குவதாம். பார்த்திவ சரீரத்திற்கு ஜலம் வாயு முதலியனவும் வேண்டு மாயினும், அவை பிரிதிவி ஸம்பந்த மாகவே இருக்க வேண்டியன. ஜலத்திற்குள் மூழ்கிய மனிதன் முதலிய ஜீவப் பிரா

ணிகள் ஜலத்திற் குள்ளிருக்கும் வாயுவைக் கொண்டு ஜீவிக்க முடியாது. அவ்வாறே பூமியிலிருந்து மிக்க உயரச் சென்ற மனிதன், அங்குள்ள காற்று முதலியவைகளைக் கொண்டு ஜீவிக்க இயலாது. ஏனெனின் அங்குள்ள காற்று முதலியதற்குப் பார்த்திவ தர்ம மாகிய கனம் குறைந்திருக்கு மாதலின் என்க. பார்த்திவ சரீரமாகிய நம்மவரது தேஹத்தில் ஜலம் முதலியவைகளின் அம்சங்களும் இருக்கினும் பிருதிவியின் அம்சமே மிகுதியாய் முக்கியமா யிருக்கின்றமையால் பார்த்திவ தேஹம் எனப் படுவதாம்.

ஜலீயசரீரமாவது, ஜலாம்சத்தையே முக்கியமாய்க்கொண்ட சரீரமாம். அச்சரீரத்திலும் இதரபூதாம்சங்களுமுண்டு. ஆயினும் ஜலாம்சமே மிகுதியாயிருக்கும். அந்தச் சரீரம் ஜலத்திலேயே உண்டாய் ஜலத்திலேயே வளர்ந்து ஜலத்திலேயே ஒடுங்கும். அந்தச்சரீரம் ஜீவிப்பதற்குவேண்டிய ஸகலமும் ஜலஸம்பந்தமாகவே இருக்கவேண்டும். ஜலீயசரீரமாவது மீன்முதலிய பிராணிகளுக்குள்ளதேயாம். மீன் முதலிய பிராணிகளைக் கரையிலெடுத்துப்போட்டு விட்டால் அங்குள்ள ஆகார வாயுவாதிகளைக்கொண்டு ஜீவிக்க இயலாது. ஜலீய சரீரத்திலும் உத்தமமத்திமாதமமெனும் தாரதம் மியமுண்டு. பார்த்திவ சரீரம்பெற்ற ஜீவஜெந்துக்களில் எப்படி உத்தமமத்திமாதமமெனும் மூவகை காணப்படுகின்றதோ. அப்படியே இதனிலு மென்க மரவட்டை சாணப்புழு முதலிய பார்த்திவசரீரங்கள் அதமங்களாம். பசு பக்ஷி முதலியன மத்திய பார்த்திவசரீரங்களாம். மனிதர் உத்தமபார்த்திவ சரீரிகளாம். சுத்த ஜலம் சுத்தமாகிய காற்று இவையுள்ள விடங்களில் பிராணிகளுக்குமிக்க ஸுகம் இருக்கக்கூடியது. சந்திராதிமண்டலங்களில் ஜலம் உள்ளதாக வெளி நாட்டார்களால் அறியப்படா விடினும் அற்புதமாகிய தீர்த்தம் அங்குள்ளதென்று நம் முன்னோர்களால் அறியப்பட்ட விஷயமே. காரணமிராமல் காரியம் இல்லை எனும் நியாயத்தைக்கொண்டு சூரியகிரணத்தில் உஷ்ணம் காணப்படுகின்றமையால் அம்மண்டலத்தில் அதற்கேதுவாகிய அக்கினியம்சம் விசேஷமாயிருக்கவெண்டுமென்றூஹிக்கப்படுவதுபோல, சந்திரகிருணத்தில் குளிர்ச்சி அனுபவிக்கப்படுகின்றமையால் அக்குளிர்ச்சிக்கு ஏதுவாகிய ஜலம் அம்மண்டலத்தில் அமைந்திருக்கவேண்டுமென்றூஹிக்கக்கூடியதே. சந்திராதிலோகங்களில் ஜலம் விசேஷமாய் இருக்கின்றமையால் அங்குள்ள ஜீவர்களுக்குஜலயசரீமே இருக்கவேண்டும் என்பது நிச்சயம். அம்மண்டலத்தில் பிதிரர் எனப்படும் ஓர் வகைதேவர் இருக்கின்றனர். அன்றியும் இவ்வுலகில் இஷ்டாபூர்த்தாதிதானதர்மங்களைச் செய்தவரும் இறந்ததும் சந்திராதிலோகம் சென்று ஜலீய தேகத்தோடு இருந்து அங்கு இன்பதுன்பங்களைப் புசிப்பவராவார். இங்கு செய்தகர்மத்தினால் தேவத்தன்மை பெற்றவர் கர்மதேவர் எனப்படுவோர். இக்கர்மதேவரும் வெகுகாலமாய் சந்திராதிமண்டலத்திலேயே இருக்கும் பிதிரரும் இவ்வாறு ஜலீயசரீரம் பெற்றவர்களே. மரவட்டை முதலிய அதமபார்த்திவ சரீரிகளுக்கும் மனிதராகிய உத்தமபார்த்திவசரீரிகளுக்கும் எவ்வளவு வித்தியாஸமுள்ளதோ அவ்வளவு வித்தியாஸம், இங்கு நதி தடாகம் முதலியவைகளிலுள்ள மீன்முதலிய அதமஜலீயதேகிகளுக்

கும் சந்திரமண்டலத்திலுள்ள தேவர்களுக்கும் என்றறிக. மீன் முதலியவை ஜலீயாதமதேஹம் பெற்றுள்ளன. இங்கிருந்து கர்மவசத்தால் தேவத்தன்மை பெற்றுச் சந்திரலோகஞ்சென்றவர் மத்திம ஜலீயதேஹமுடையவர். அவ்விடத்திலேயே உள்ளவராகிய பிதிரர் முதலியவர் உத்தமஜலீயதேஹம் பெற்றுள்ளவர்களாய். பிதிரர்கள் என்பவர் யாவர் எனின், இவ்வுலகில் இருக்கும் மனிதரை அபிமானித்துக்கொண்டு இவர்களால் செய்யப்படும் சிராத்தாதிகளைப் பெற்றுத் திருப்திசெய்விப்பவராகிய ஓர்வகைத்தேவராம். ஜலீயதேஹிகளுக்கு ஆகாரம் முதலிய ஸகலமும் ஜலஸம்பந்தமாகவே இருக்கவேண்டுமெனும் உண்மைபற்றியே பிதிரர்களுக்கு ஜலதர்ப்பணம் விதிக்கப்பட்டிருக்கின்றது. பிதிரர்களுக்கு ஜலீயசரீரமுள்ளதுபற்றியே புண்ணிய தீர்த்தங்களுக்குச்சென்றால் அங்கு மனிதர் பிதிரர்களை உபாஸிக்கவேண்டும் என்று நமது ஆரியசாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது.

இனி ஆக்கிநேய சரீரமாவது, ஜ்வலித்தல் என்பது அக்கினியின் தர்மம். ஆதலின் ஆக்கிநேயசரீரம் பெற்றவர்கள் மிகவும் சோதிமயமாய் ஜ்வலிப்பவர் என்று அறியப்படுகின்றது. ஆக்கிநேய சரீரிகளின் தேஹத்தில் பிருதிவி ஜலம் முதலியவைகளின் அம்சங்களும் இருக்கினும் விசேஷமாயுள்ளது அக்கினியின் அம்சமேயாதலின் அப்பெயர் வழங்கப்படுவதறிக. ஜலத்திற்கும் அக்கினிக்கும் பகையாதலின் ஆக்கிநேய சரீரத்தில் ரக்தம் அவ்வளவாக இராதென்றும், சுக்கிலம் ஆக்கிநேயதர்மம் ஆதலின் ஆக்கிநேய சரீரிகளுக்குச் சுக்கிலம் எனும் தாது மிக்க விசேஷமாயிருக்ககூடும் என்று மறிக. சுக்கிலதாது மிகவும் விசேஷமாய் அமையப்பெற்ற வர்களுக்கு அதுதேஹத்திலிருந்து வெளிச்செல்ல வேண்டியதாகும் ஆதலின் அவர்களுக்கு ஸ்திரீகாமனை மிக்க விசேஷமாய் ஏற்படக்கூடும் என்றும் அறிக. உஷ்ணம் மிகுதிப்பட்டுள்ள ஸமயம் தூக்கம் விசேஷமாயிருப்பதில்லை என்பது நம்மவர்க்கு அனுபவஸித்தம். இதனால் ஆக்கிநேயசரீரம்பெற்றுள்ளவர்க்கு விசேஷமாய்த் தூக்கம் வராது என்றும் அறியக்கூடியது. விசேஷமாய் அக்கிநியம்சம் தேஹத்திலிருக்குமாயின் அசுத்தியும் அவ்வளவாயிரு து. உலகில் அசுத்தியை நீக்கிச் சுத்தி செய்யும் பொருள்ஜலம். ஜலத்தினாலும் நீக்கமுடியாத அசுத்தியை நீக்கும் பொருள் அக்கிநி. ஆதலின் ஆக்கிநேய சரீரம் அமைந்தவரிடப் அசுத்தியிராதென்பதும் தவிர அவரருகில் சென்ற அசுத்தி தேஹமுடையவரும் சுத்திபெறலாகும் என்றும் அறிக. தந்ததாவனம் (பல்துலக்கல்) ஸ்நாநம் முதலியகாரியங்கள் தேகத்திலுள்ள அசுத்தியை நீக்கிச்சுத்திசெய்தலின் பொருட்டேயாம். சகல அசுத்தியையும் சுத்தம் செய்வதாகிய அக்கிநியின் அம்சம் விசேஷமாய்அமையப்பெற்றுள்ள சரீரத்தில் எவ்வித அசுத்தியும் இருப்பதற்கு இடமிராதாதலால் ஆக்கிநேய சரீரிகளுக்குப் பல்துலக்கல் ஸ்நாநம்முதலியன அவசியமில்லை என்றும் அறியப்படுகின்றது. இனிஆக்கிநேயசரீரம் பெற்றவர் எவர்எனின் தேவர்களேயாம். ஆனதுபற்றியே தேவர் ஜோதிமயமாய் ஜ்வலிப்பவர் என்றும், லௌகிக ஸுகத்தில் மிகுந்த விரு

பமுள்ளவர் என்றும், நித்திரை யில்லாதவர் என்றும், மிக்கச் சுத்தர் என்றும், மற்றவரையும் தமது ஸாந்நித்தியத்தால் சுத்த ராக்குவோர் என்றும், அவர்கள் தந்ததாவன ஸ்நாநாதிகளையும் அவசியமாய் வேண்டுவோ அல்லர் என்றும், நம்சாஸ்திரங்களில் சொல்லப் படுகின்றது. இவ்வுலகிலும் புத்தி விசேஷமாய் வேலை செய்வோருக்குத் தேஹத்தில் உஷ்ணமே விசேஷமாய் ஓங்கிக் கொண்டிருக்கும் என்பது அனுபவ ஸித்தம். இவ்வனுபவத்தால் ஆக்கிநேயாம்சம் விசேஷமாய் அமைந்துள்ளவர்க்குப் புத்தி அபாரசக்தி யுடையதா யிருக்கும் என்றறியப் படுகின்றமையால் தேவர்கள் மிகுந்த புத்திமான்கள் என்பதும் உசிதமென் றறியப் படுகின்றது. ஆக்கிநேய சரீரிகளுக்கு அந்நம் ஜலம் வாயு முதலியன அக்கிநி ஸம்பந்தமாகவே இருக்க வேண்டும். ஆதலின் தேவர்களை யுத்தேசித்து அக்கிநியில் ஹோமம் முதலியது விதிக்கப் பட்டிருக்கிறது. ஆக்கிநேய சரீரிகளுக்கு அக்கிநி மூலமாக அந்ந பாநாதிகள் வேண்டு மெனும் உசிதம் பற்றியே நமது முன்னோர் பரம் பரையிலும் அவ்வாறே செய்யப்பட்டு வருகின்றது. இங்கு இறக்கும் மிகுந்த சிரேஷ்டமாகிய புண்ணியத்தைச் செய்த ஜீவர்களும், ஸகுணோ பாஸகர்களும், யோகிகளும், இறந்ததும் ஆக்கிநேயம் (திவ்வியம்) எனப்படும் ஜோதி சரீரமாகிய ஸ்தூலத்தைப் பற்றிக்கொண்டு ஸூர்யன் இந்திரன் பிருஹஸ்பதி பிரும்மன் முதலியவர்களது உலகம் செல்லுகின்றனர். இவ்வுண்மை பற்றியே மஹாபாரதம் ஆநுசாஸனிக பர்வாவில் பீஷ்மர் உத்கிராந்தி பெறும் பிரகரணத்தில்

ஜமாஃஹிக்ஷாஃஃயடிாநாம் ஷிவஃஹ)ாதூவாதஹ |
ஃஹொஜெவவஹீஷவஸ)ஃஃயடிஜெஶாஜநாயிவ |
நிஷூரதவ்ாகாஶஃாவிஶ)க்ஷணோநாதாரயீயத |

மூர்த்தாவை (தலையை) ப்பேதித்துக் கொண்டு ஆகாயத்தை யடைந்தனர். பீஷ்மருடைய தலைப்பக்கத்தினின்றும் மஹாஜ்வாலை போல் ஒன்று தோன்றி ஆகாயத்தில் சென்று மறைந்து விட்டது

என்று சொல்லப் பட்டிருக்கின்றது. இவ்வாக்கியத்தினால் பீஷ்மர் முதலியவர்களுக்கு ஜோதி: சரீரம் அதாவது ஆக்கிநேய சரீரம் பற்றப்பட்டு லோகாந்தரத்திற்கு உத்கிராந்தி யுள்ளது என்பது நன்ருய் விளங்கும். இனி பீஷ்மர் முதலிய யோகிகளுக்கு மாத்திரமே இவ்வகை சரீரத்தோடு லோகாந்தர கமனம் என்று எண்ணக் கூடாது. ஸகுணோபாஸ்நி செய்தவர்களும் அபாரமாகிய தேவாலயப் பிரதிஷ்டை, ஸ்வர்ண தானம் முதலியவைகளையும் ஸகுண வித்தியாப் பிரவர்த்தனம் முதலியவைகளையும் செய்தவர் களுக்கும் இவ்வாறு ஆக்கிநேய சரீரத்தோடு கூடவே லோகாந்தர கமனம் என்றறிக.

இனி "ததந்தர ப்ரதி பத்தி" யதி கரணத்தில் இஷ்டா பூர்த்தம் (யாகம் அன்னதானம்) முதலியவைகளைச் செய்தவர்கள், இறந்ததும் ஜலாம்சம் மிகுதியாயமைந்துள்ள சரீரத்தைப் பற்றிக் கொண்டு சந்திராதி லோகங்களுக்குச் செல்லுகின்றதாகச் சொல்லப் பட்டிருக் கின்றதே. "[illegible] ஃ" எனும் ஸூத்திரத்தின் பாஷ்யத்தில் சங்கர பகவத் பாதர் முதலிய

பெரியோர்களும் அவ்வாறே உரை செய்திருக்க, அதற்கு விரோதமாய் இங்கு மிகுந்த புண்ணியவான்களுக்கு ஆக்கிநேய ஸ்தூல சரீரம் பற்றப் படுகின்றது என்றது உசிதமாருமோ? எனின் அவ்வுண்மை அறிக. அதாவது அங்கு இஷ்டா பூர்த்தாதி ஸாமான்ய புண்ணியங் களைச் செய்தவர்களுக்கு மாத்திரம் அவ்வாறு சொல்லப் பட்டதே யன்றி சிவாலய ப்ரதிஷ்டை ஸ்வர்ணதானம் ஸகுண வித்யா ப்ரவர்த்தனம் முதலிய அபார புண்ணியங்களைச் செய்தவருக்குச் சொல்லியதல்ல என்றறிக. ஆனது பற்றியே அங்கு சங்கர பகவத் பாதர் முதலிய பெரியோர்களால் "இஷ்டா பூர்த்தாதி கர்மங்களைச் செய்தவர்" என்று ஸ்பஷ்டமாய்ச் சொல்லப் பட்டிருக்கின்றது.

தேவர்களுக்கும், மிகுந்த அபார புண்ணிய வசத்தால் இந்திர ப்ருஹஸ்பதியாதியரது உலகம் சென்றவருக்கும் திவ்விய (ஆக்கிநேய) சரீரமுள்ள தென்பதை எப்படி ஒத்துக் கொள்ளுவது? ஸ்ரீமஹாபாரதத்தில் தர்ம புத்திரர் இந்த மானுஷ சரீரத்தோடு கூடவே இந்திர லோகம் சென்றதாகச் சொல்லப் பட்டிருக்கின்ற தன்றோ. இந்திராதி லோகத்தில் திவ்விய சரீரம் பெற்றவர் மாத்திரம் இருக்கக் கூடுமென்றும் இம்மானுஷ சரீரமாகிய பார்த்திவ தேஹம் பெற்றவர் அங்கிருக்க முடியாது என்றும் சொல்லியது உண்மை யானால் பார்த்திவ சரீரத்தோடு கூடவே தர்ம புத்திரர் அங்கு சென்றதாகச் சொல்லப் படும் பாரத வாக்கியம் அப்பிர மாணம் என்றல்லவோ ஏற்படும்? எனின் இவ்வுண்மையறிக.

மஹா பாரதத்தில் தர்ம புத்திரர் இம்மானுஷ தேஹத்தோடு ஸ்வர்க்கத்தில் பிரவேசித்ததாக ஓர் வாக்கியமும் காணப்பட வில்லை. அவரும் இச்சரீரத்தை விட்டு ஓர் திவ்விய சரீரத்தைப் பற்றிக் கொண்டே இந்திர லோகம் சென்றதாகச் சொல்லப் படுகின்ற தென்பதை

𑌗𑌂𑌗𑌾𑌂 𑌦𑍇𑌵𑌨𑌦𑍀𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌂 𑌪𑌾𑌵𑌨𑍀𑌂 𑌋𑌷𑌿𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌾𑌮𑍍 ।
𑌅𑌵𑌗𑌾𑌹𑍍𑌯 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌤𑌨𑍁𑌂 𑌤𑌤𑍍𑌯𑌾𑌜 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 ।
𑌤𑌤𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌵𑌪𑍁𑌰𑍍𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌧𑌰𑍍𑌮𑌰𑌾𑌜𑍋 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃 ।

> புண்ணியமும் ருஷிகளால் போற்றப் பெற்றது மாகிய தேவ கங்கையை அடைந்து அதனில் இறங்கி ஸ்நானம் செய்து ராஜா மானுஷ்ய தேகத்தை விட்டு விட்டார். பிறகு தர்மராஜனுகிய யுதிஷ்டிரர் திவ்ய சரீர்த்தோடு கூடியவராய்

என்பதாதி சுலோகங்களைக் கண்டு தெளிக. அன்றியும் தேவ லோகம் சென்றவர்க ளெல்லோருக்கும் திவ்விய மெனப்படும் ஆக்கிநேய சரீரமே உள்ள தெனும் நியமத்தை மஹாபாரதாதி இதிகாசங்களால் நன்கறியலாம். அதாவது,

[illegible] ।
[illegible] ॥

> மற்றோர்! இடத்தில் துவாச ஆதித்தியர் களுக்கு ஸமானமாய் ஒவ்விக்கும் வீரனை கர்ணனைத் தரும நந்தனர் கண்டார்.

[illegible] ||

> சரீரத்தோடு கூடியுள்ள வாயு பகவானது பக்கத்தில் திவ்விய தேகம் பெற்றுள்ளவனை பீமஸேநனைக் கண்டார்

[illegible] ||

> அங்ஙனம் அச்வினி தேவர்களின் பக்கத்தில் தேகக் காந்தியால் ஜ்வலிக்கின்றவர் களாகிய நகுல ஸஹ தேவர்களைக் குரு நந்தனர் கண்டார்

என்பது முதலிய சுலோகங்களினல் ஸ்வர்க்கம் சென்றவர்களான பாண்டவர்களின் தேகத்தைச் சொல்லும் போது ஜ்வலிக்கும் தேகம் திவ்யதேகம் முதலிய சொற்களே சொல்லப் பட்டிருத்தலால் இவ்வுண்மையை யறிந்து கொள்ளலாம்.

இனிப் பார்த்திவ ஜலீய சரீரங்களில் உத்தம மத்திம அதம தார தம்மியங் காணப் படுவது போல ஆக்கிநேய சரீரத்திலு முண்டு. ப்ரும்மா வஸிஷ்டாதி மஹாருஷிகள், ப்ருஹஸ்பதி, சுக்கிரன் முதலியவர்களுக்கு உத்தமமான ஆக்கிநேய சரீரம். இந்திராதி களுக்கு மத்திமமாம். இங்கிருந்து ஸத்தியம் தானம் தருமம் முதலிய பெரும் புண்ணியங்களைச் செய்து அங்கு சென்றவர்க்கு அதம ஆக்கிநேயம். அன்றியும் ப்ருஹஸ்பதி முதலியவரது உலகத்தை யடைவோருக்கும், யோகி, ஸகுணோ பாஸகர் இவர்களுக்கும் அங்ஙனமே.

வாயவீய சரீரமாவது, வாயிவினம்சம் விசேஷமாகவும் மற்றப் பூதங்களின் அம்சங்கள் ஸ்வல்பங்களாகவும் அமைந்துள்ள தேஹமே என்றறிக. வேகம் வாயுவின் காரிய மாதலால் வாயவீய சரீரம் மிகுந்த வேகமாக சஞ்சரிக்கு மென்றறியப் படுகின்றது.

பிராண பலம் விசேஷமா யிருக்கின் மரணம் நேரா தாதலின் வாயவீய சரீரிகளுக்கு எவ்வளவு நிமித்தங்கள் ஏற்படினும் மரணம் நேருதல் அரிது என்பதாம். வாயவ்ய சரீரத்தில் மற்றப் பூதங்களின் அம்சங்களும் இருக்கினும் மிகுதியாயுள்ள வாயு வம்சத்தில் அவைகலந்துள்ளமையால் வியக்தமாய்க் கண்ணுக்குத்தெரிதல் அரிது. அதனைக் காணவேண்டு மாஞல் நமது நேத்திரேந்திரிய சக்தியை விசேஷமாய் விருத்தி செய்து கொள்ள வேண்டும். மிகுதி யாகிய வாயுவினில் கலந் தொற்றுமைப் பட்டு வேற்றுமை பெறும விருக்கும் பிருதிவி முதலியவைகளின் அம்சங்களைத் தக்க ஸாதன மின்றிச் சுளுவாய்க் காண இயலாது. அப்படிப் பட்ட ஸாதனம் யாதெனின் யோகம் ஆதித்தோ பாஸ்தி முதலியனவாம் என்க. இப்படிப் பட்ட சரீரிகள் யாவர் எனின், பூதப்ரேத பிசாசங்களேயாம். பிசாசங் களுக்கு வாயவ்ய சரீர மாதலின் அவை நமது கண்ணுக்குத் தெரிவதில்லை. பிரேதங்க ளாவன இங்கிருந்து இறந்தவர் களாகிய பாப ஜீவர்களால்

பற்றப் பட்டு நரகம் செல்லுவன வாகிய சரீரங்களே யாம் என்றறியத் தகது.

நம்மவர் களுக்கு இருளில் உள்ள பொருள்களைப் பார்க்க முடியா விடினும் பசு, நாய், பூனை, கோட்டான், முதலிய ஜந்துக் களுக்கு காணக் கூடிய சக்தி நேத்தி ரேந்திரியத்திற் குள்ளது. ஆதலால் அவைகள் ஒருக்கால் வாயவ்ய சரீரத்தைக் காணக் கூடுமெனும் சங்கைக் கிடமாகின்றது. ஆனது பற்றியே இராக் காலத்தில் பசு கதறினாலும் பூனை நாய் இவைக ளழுதாலும் கோட்டான் கத்தினாலும் அது மரண ஸூசகம் என்று கிராமாந்தரங்களில் விருத்த பரம்பரையில் வழங்கப் பட்டு வருகின்றது. வாயவ்ய சரீரத்திலும் உத்தம மத்திமாதம தார தம்மிய முண்டு. பிரேத பிசாசங்களுக்கே அதம வாயவ்ய சரீரம். பாபிகள் இறந்ததும் இந்த அதம வாயவ்ய சரீரத்தைப் பற்றிக் கொண்டு நரகம் செல்லு கின்றமையால் மார்க்க மத்தியிலும் துன்பங்களை யனுபவிக் கின்றதாய்ச் சொல்லப் படுகின்றது. " [illegible] " எனும் ப்ரும்ம ஸூத்திரத்தி னுரையில் ஆசிரியர் ஸுரேச்வரராலும் இங்ஙனமே சொல்லப் பட்டிருக்கின்றது. யாதனா சரீர மென்பது இந்த வாயவீய தேகமே. பாபிகள் பற்றுவதாகிய பிரேத சரீரம் வாயவீய அதமமே யாம்.

'[illegible] |
[illegible] |
[illegible] ||

> மனிதன் அவ்வாறு இச்சரீரத்தை விடுத்துக் கண்ணால் காணமுடியாத தான வேறு சரீரத்தைப் பற்றிக் கொள்கின்றான். ஸ்தூலமான பஞ்ச பூதங்களிலேயே விட்டு விட்டு ஸ்தூல பஞ்ச பூதங்களாலேயே ஆகிய வேறு சரீரத்தைப் பற்று கின்றான்

என்பது முதலிய வாக்கியங் களால் சாந்தி பர்வாவிலும் இவ்வுண்மையே சொல்லப் பட்டிருக் கின்றது.

[illegible] | [illegible] ||

> பாப போகத்தின் பொருட்டுச் செல்லுவோன் யம தூதர்களால் அதிஷ்டிக்கப் பட்ட யாதனா தேகத்தைப் பற்றிக் கொண்டு நரகம் செல்லு கின்றான்

||[illegible] | [illegible] ||

> பாவம் செய்தவர்கள் இறந்ததும் யாதனையின் பொருட்டாவதும் அப் பூதங்களின் அம்சங் களாலேயே ஆகியதுமான வேறு சரீரம் அங்கு தோன்று கின்றது

என்று சிவ கீதை, மனுஸ்ம்ருதி, முதலிய நூல்களில் இந்த வாயவ்ய தேகம் சொல்லப் பட்டிருக்கின்றது. இங்ஙனம் ஸ்தூல சரீரம் நான்கு வகைப் படுமென்பது நம் சாஸ்திரங்களில் மிகவும் பிரஸித்த மாயுள்ளது. ப்ருதி வியாதி ஐம்பூதங்களையும் அவைகளின் பிரிவினையையும் குழேப யோகங்களையும் நன்கு போதிக்க வந்த நியாய தர்சநம் கௌதம ஸூத்திரம் மூன்று மத்தியாயம்

||பார்திவம் குணாந்தரோபலப்தே:||

எனும் ஸூத்திரத்தின் பாஷ்யத்தினில்

||ஆப்யதைஜஸவாயவ்யானி லோகாந்தரே ஶரீராணி தேஷ்வபி பூதஸம்யோக: புருஷார்த்ததந்த்ர: ||

> ஜலீய ஆக்கிநேய வாயவீய சரீரங்கள் லோகாந்தரத்தி லுள்ளன. அவைகளிலும் ஏனைய பூதங்களின் ஸம்பந்தம் உபயோக யோக்கியமாம்.

என்பது முதலிய வாக்கியங்களால் இவ்விஷயத்தை நன்கறியலாம். சாஸ்திரங்களி லுள்ள இத்தகைய அரிய மர்மமே எனது ஆசிரியரால்

தேஹஸ்து [illegible] பார்திவோ ஜலீய: தைஜஸோ வாயவீயஶ் ச | [illegible] பூதவர்தீஸித: ||

> தேஹம் பார்த்திவம் ஜலீயம் தைஜஸம் வாயவீயம் என நான்கு வகையாம். ஏனைய பூதாம்சங்க ளிருக்கினும் அவ்வம்ச மிகுதியினால் அந்தப் பெயர் கொண்டு வழங்குவதாம்.

இஹ ப்ராணின: பார்திவதேஹஜீவா: ஜலாம்ஶாதிகே ஜலீயதேஹா: | வாயவ்யதேஹா: ஸர்வே பாதாளே [illegible] தைஜஸதேஹா தேவலோகே ||

> இப்புவியினில் உள்ள ஜீவர் பார்த்திவ தேஹிகளாம். ஜலாம்சம் மிகுதியாயுள்ள லோகத்தில் ஜலீய தேகங்களாம். யாதனா சரீரமும் வாயவீய தேகமேயாம். ஆக்நேய தேகங்கள் தேவர் புவனங்களாகிய சோதி லோகங்களிலாம்.

எனப் போதிக்கப் பட்டுள்ளது. இங்ஙனம் சொல்லப் பட்ட நால்வகை ஸ்தூல சரீரங்களும் பஞ்சீ கிருதங்களான ஸ்தூல பூதங்களின் அம்சங்களாலுண்டாவன. போகாயதனம், போகா திஷ்டானம், போகாச்ரயம், போகாதாரம், எனும் சொற்களால் ஸ்தூல சரீரமே சொல்லப் படுகின்றது.

ஶரீரமேவ போகாயதனம் போகாதிஷ்டானம் போகாஶ்ரயம் போகாதாரம் ஶரீரம் ||

[illegible]

[illegible] ||

என்பதாக மஹா பாரதாதி நூல்களிலும் சங்கர பகவத் பாதர் முத
லியவர் களாலும் இங்ஙனம் வழங்கப் பட்டிருத்தல் காண்க.

ப்ரும்மா, வஸிஷ்டாதி மஹருஷிகள், ஸநகாதி யோகிகள், மனு, ப்ருஹஸ்
பதி, இந்திரன் முதலிய தேவர், நரகர், மனிதர், பூத பிசாசர், திர்யக் யோநிகள்
இங்ஙன முள்ள ஸகல ஜீவராசிகளும் பஞ்ச பூதாம்சங்களா லுண்டாகிய ஸ்தூல
தேகத்தை யுடையவர்களே. ஸ்தூல சரீரத்தின் ஸகல பேதங்களும் பஞ்ச
பூத விகாரங்களே யாதலால் ஜரா மரணாதிகளை யுடையன வென்பது நிர்ணயம்.

சங்கை : தேவர் ஜராமரணாதிகளில்லாதவர் என சாஸ்திரங்களில் பிரஸித்த
மன்றோ. அந்தப் பிரஸித்திக்கு விரோதமாய் அவர்களுக்கும் பஞ்சபூத விகாரத்
தால் வந்த தேகமென்றும், ஜராமரணாதிகளும் உள்ளன என்றும் சொல்லியது
உசிதமோ எனின், இங்குள்ள உண்மை இதுவேயாம். அதாவது தேவர்
அஜராமரர் எனின் நம்மவர்போல அடிக்கடி ஜனன மரணப்பிணிக்குட்படுவ
தில்லை என்பது மட்டில் அறிந்து கொள்ளவேண்டுமேயன்றி மரணமே இல்லா
தவர் எனப்பொருள் கொள்ளுதல் உசிதமல்ல. ஏனெனின்

" [illegible] ||

" ப்ரும்மன் முதல் ஸ்தம்பம் எனும் நுட்பமான பூச்சிவரையிலும்
ப்ரக்ருதிவசமாயுள்ள பிரபஞ்ச வியவகார ஸ்ருஷ்டியானது ஞானோ
தயம் வரையிலு முள்ளது "

" [illegible] "

" தேவவகையில் ஸத்துவகுணம் விசாலமாம் "

" [illegible] "

" பசுபக்ஷியாதி திர் யக்யோநிகளிடம் தமோகுணம் விசாலமாம் "

" [illegible] "

" மனிதர் முதலியவர்களிடம் ரஜோகுணம் விசாலமாம் "

என்பது முதலிய ஸூத்திரங்களினல் ஸாங்கிய தர்சனம் மூன்றாமத்தி
யாயத்தில் தேவர் மனிதர் திர்யக் எனும் மூவகை ஜீவர்களையும் நிரூபித்து

" [illegible] "

" ஜராமரணாதியாலுண்டாகும் துக்கம் அவர்களெல்லோருக்கும் ஸமா
னமே" என மஹா முனிவராகியகபிலபகவானல் நிரூபிக்கப்பட்டிருக்
கின்றது.

ஸாங்கிய காரிகையிலும்

[illegible]
[illegible]

எனச்சொல்லிய ஈச்வர கிருஷ்ண முநிவரது வாக்யத்திற்கு உரையில்

[illegible]
[illegible]

“தேவமாநுஷதிர்யக் யோநிகளில் ஜராமரண ஸம்பவமாகிய துக்க முளது”

எனக் கௌடபாத ஸ்வாமிகளாலும் விசத்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் கர்மவசமாய் ஸ்தூல சரீரம் பெற்ற தேவாதி ஸகல ஜீவர்களுக்கும் இன்பதுன்பங்களில் தாரதம்மிய மிருக்கினும் ஜராமரண முதலியவைகளாலுண்டாகும் துக்கம் உள்ளதென்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இதுவரையில் செய்த விசாரணையால் வாயவீயதேக (யாதநாதேக) த்தைப்பற்றிக்கொண்டே பாவிகள் நரகம் செல்லுகின்றார்களென்றேற்பட்டது. அங்ஙனமாயின் இங்கிருந்து நரகலோகம் செல்லுவதற்கு எவ்வளவு காலம்செல்லும்? அங்ஙனம் செல்லும்போது மார்க்கத்தில் அநுபவம் எப்படி? என்பது முதலிய சங்கைகளேற்படும். ஆதலின் அவ்வுண்மையைச் சற்றுச்சொல்லுவாம்.

இச்சரீரம் இங்குவிட்டதும் வாயவீயமெனும் யாதநாதேகத்தைப்பற்றிக் கொண்டு மார்க்கமத்தியிலும் யமதூதாதிகளாலேற்படும் யாதனைகளை யநுபவித்துக்கொண்டே இரண்டு அல்லது மூன்று முகூர்த்தங்களுக்குள் நரகலோகம் போய்ச்சேருகின்றான். இவ்விஷயமாய் கருடம் முதலியபுராணங்களிலும்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

அங்குஷ்டபரிமாண (நுட்பமான) வடிவமுடையோனாகிய ஜீவன் ஹா! ஹா! எனக்கதறிக்கொண்டு சரீரத்தினின்றும் அப்போதே யமதூதர்களால் கிரஹிக்கப்படுகின்றான். தனது கிருஹத்தையே நோக்கிக்கொண்டுள்ள அவனை யாதநாதேகத்தைப்பற்றச்செய்து பலாத்காரமாகக்கழுத்தில் பாசங்களைக்கட்டி மூன்றுஅல்லது இரண்டு முகூர்த்தங்களுக்குள் அங்கு கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகின்றனர். ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் வாயுவானது இந்தப்பாபியின் கர்மபோகத்தின் பொருட்டு யாதநாதேகமாய்த்தோன்றி வர அங்குஷ்ட மாத்

திரணுகிய இவன் அதனைப்பற்றிக்கொண்டு யமதூதர்களோடு கூடச்
செல்லுகின்றான்.

என்பது முதலிய வாக்கியங்களால் சொல்லப்படுகின்றது.

சங்கை: பாபிகளை நரகலோகத்திற்கு யமதூதர்களே கொண்டு போகின்றன
ரெனச் சொல்லப்பட்டதன்றோ. இது அவ்வளவாக யுக்தமாய்க்காணப்பட
வில்லையே. அதாவது, உலகில் ஓரோர் தினமும் இறக்கும் ஜீவர்கள் கணக்கில்
அகப்படாதன்றோ? ஓர் வீட்டில் ஓரோர் தினமும் மடியும் எறும்பு, கொசுகு,
கரையான், முகடு முதலிய ஜந்துக்களைக் கணக்கிடயாராலாவது இயலுமா?
இவைகளெல்லாம் பாப ஜீவர்களல்லவா. பாப ஜீவர்கள் யாதனுதேகத்தைப்பற்
றிக்கொண்டு யமதூதர்களின் ஹிம்ஸையோடுகூட நரகம் செல்லுகின்றன ரெ
னின், இத்தனை அளவிறந்த பலகோடி பாபஜீவர்களுக்கும் யமதூதர்கள் அளவிற
ந்தனராக வேண்டப்படுமே. அவ்விதமாயின் அது யுக்திக்குப்பொருத்தமுடைய
தாகத்தோன்றவில்லையே என்பதாம். இச்சங்கை விசாரியாத குற்றமேயாம்.

இனி இவ்வுண்மையறிக. உலகில் மரிக்கும் ஜந்துக்களெல்லாம் நரகலோ
கம் செல்லவேண்டுமெனும் நியமமில்லை. பகுத்தறிவோடு கொடும்பாவங்களைச்
செய்த மனிதர் மாத்திரம் நரகம் செல்லுவோர். பசு பக்ஷி யாதி ஏனைய ஜந்துக்
கள் மரித்ததும் அத்தருணம் பயன்பட்டுவரும் கருமத்திற்குத் தக்கபடி வேறு
ஜன்மங்களையே பெறுமன்றிப் புண்ணியபாவங்களைச் செய்த மனிதர்போல
ஸ்வர்க்க நரகங்களுக்குச் செல்லவேண்டியதில்லை. அன்றியும் உலகிலுள்ள
ஸகல மனிதரும் நரகம் போகவேண்டுமென்பதில்லை. மிக்கக்கொடும்பாவங்
களைப்பகுத்தறிவோடு செய்தவர்களே நரகலோகம் செல்லவேண்டும். யமதூதர்
களும் ஈசாக்ஞையால் எண்ணிறந்த பல உருவங்களை யெடுக்கத்தக்க வித்தியுள்
ளவர். ஆதலின் அத்தகைய வித்தி மகிமையால் கொடும்பாவிக ளெதிரில் தோ
ன்றி அவர்களை ஹிம்சைசெய்து கொண்டே நரகம் கொண்டுபோய்ச் சேர்க்கின்
றனர் என்பதே உண்மை. இதனைத் தெரிந்துகொண்டால் முற்கூறியசங்கைக்
கிடமில்லை.

சங்கை, கருடபுராணத்தில் உலகில் மரிக்கும் ஸகல ஜீவர்களும் மரித்
ததும் யமலோகம் சென்று பிறகு அந்த லோகத்ததிபரது ஆணையின் பேரில்
அவரவர் கர்மத்திற்கேற்ப ஸ்வர்க்கம் ப்ரும்மலோக முதலிய உலகங்களுக்குச்
செல்லவேண்டும் எனச்சொல்லப்பட்டிருக்கின்றதே. கொடும்பாவிகள் மாத்
திரம் மரித்ததும் நரகம் செல்லுகின்றனரெனின், இங்குகூறியபடி கருடபுரா
ணத்தில் சொல்லியிருத்தலுக்கு முறணுகின்றதே என்பதாம்.

இச்சங்கையைப் பற்றிய உண்மையிதுவேயாம். அதாவது உலகில் மரிக்
கும் புண்ணியவான்களும் நரகம்சென்று தர்மராஜனது ஆஞையைப்பெற்றே
செல்லவேண்டுமென்பது உண்மையல்ல. உலகில் மிகவும் கடும்பாவங்களைச்
செய்தவரே நரகலோகம் செல்லவேண்டுமென்பது நிர்ணயம். மிகவும் புண்ணிய
த்தைசசெய்தவர், தூம்ராதிமார்க்கம் அதாவது பிதிருயாணம் எனும் மார்க்கத்தி
னில் சென்று சந்திராதி ஸ்வர்க்கமண்டலங்களை யடைவார். உபாஸகர் தேவ
யாநமெனும் அர்சிராதிமார்க்கத்தில் சென்று மஹர் லோகம், தபோலோகம்,

ஸத்தியலோகம் வைகளுக்குசெல்லுவோர்களே. இங்ஙனம் உபாஸகர் புண்ணியவான் பாபி இம்மூவருக்கும் மார்க்கம் பிரத்தியேகமேயாம். மார்க்கம் பிரத்தியேகமாயிருந்து வேற்றுமைப்பட்டிருக்கும்போது எல்லோரும் நரகஞ் சென்று தர்மராஜனது ஆணைக்குள்ளாக வேண்டுமென்பது உசிதமல்லவல்லவா. உண்மையிங்ஙனமிருக்க எல்லோரும் நரகம் செல்லவேண்டுமெனின் அது

"அதைதயோ: பதோர்ந கதரேண சந தாநீமாநி க்ஷுத்ராண்யஸக்ருதாவர்த்தீநி பூதாநி பவந்தி ||

"இனி இவ்விருமார்க்கங்களில் ஒன்றின் வழியாகவும் பாபிகளாகிய துச்ச ஜீவர்செல்லுகின்றவரல்ல

"ஜாயஸ்வ ம்ரியஸ்வேதி த்ருதீயம் ஸ்தாநம்"

"அடிக்கடிச் செத்துச் செத்துப்பிழை எனச்சொல்லப்படுவதாகிய மூன்றாவது மார்க்கமேயாம். (சாந்தோக்-ஐந்தாம்பிரபா.)

என்பது முதலிய சாந்தோக்கியாதி உபநிஷதங்களில் மார்க்கம் பாவிகளுக்குத் தனியே எனச்சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்களுக்கு விரோதமேயாகும்.

அக்நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் |
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா: |
தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் |

என்பது முதலிய வாக்கியங்களால் பகவத் கீதாதிகளிலும் உபாஸகர், புண்ணியவான் எனும் இவர்களுக்கு மார்க்கம் வேறாக சொல்லப்பட்டிருக் கின்றமையாலும்

"ந த்ருதீயே ததோபலப்தே:"

என்பது முதலிய ப்ரும்ம ஸூத்திரங்களில் பாபிகளுக்கு வேறாகிய மூன்றாவது மார்க்கம் என நிர்ணயிக்கப் பட்டிருத்ததாலும்

வித்யாகர்மவிஹீநோ யஸ்த்ருதீயம் ஸ்தாநமேதி ஸ: |

ஸ க்ருத்வா நரகாநுக்ரான் கோராந் ரௌரவரௌரவாந் ||

பஶ்சாத்ஸ்வகர்மஶேஷேண க்ஷுத்ர ஜந்துர்பவேதஸௌ ||

மஶகாதிகஜந்மாநி ஜந்மாஸௌ லபதே புவி ||

உபாஸ்தியும் விஹித கர்மமும் இல்லாதவன் மூன்றாவது மார்க்கத்தையடைகின்றான். கோரமான மஹா ரௌரவம் முதலிய யாதனைகளையுடைய நரகங்களைப் புசித்துப் பிறகு பூர்வ கர்ம சேஷத்தினால் துச்ச ஜந்துவாகப் பிறக்கின்றான். ஈ கொசுகு முதலிய ஜன்மங்களை இப்பூவுலகில் பெறுகின்றான்

என வியக்தமாகப் பாத்ம புராண சிவகீதை முதலிய பிரமாண நூல்களில் போதிக்கப் பட்டிருந்த லாலும், இவைகளுக்கு முற்றும் விரோதமாக ஸகல மனிதரும் மரித்ததும் நரகம் செல்லவேண்டு மென்பதும், எல்லோருக்கும் மார்க்கம் ஒன்றே என்பதும், சாஸ்திரங்களின் கருத்தறியாமையே என்க.

இனி அவரவர் கருமத்திற்குத் தக்கபடி மனிதர் லோகாந்தரத்தை யடைந்து இன்ப துன்பங்களைப் புசிக்க வேண்டு மென்பது இதுகாறும் நிரூபிக்கப் பட்டதே. இங்ஙனமாயின் இறந்தவர்களைக் குறித்துத் தர்ப்பணம் ச்ராத்தம் முதலியவைகளைச் செய்வதனால் பயனில்லை என்றல்லவோ ஏற்படு கின்றது. அவனவன் கருமத்தின் பயனை அவனவன் புசித்துக் கொண்டிருக்கும் போது இங்குள்ளவர் செய்யும் சிராத்தாதிகளின் பயனை அங்குள்ளவன் எப்படிப் புசிப்பது? எனின் இதனையறிக இறந்து நரகலோகம் சென்ற பாபியையும் அமாவாஸ்யை, மாஸ ஸங்க்ரமணம், வ்யதீபாதம், கிரஹணம் முதலிய புண்ணிய தினங்களில் தமது புதல்வர் முதலியவர் செய்யும் சிராத்தாதிகளின் பயனைப் பெற்றுக் கொள்வதின் பொருட்டு நரகயாதனையி னின்றும் கரையேற்றப் படும். அச்சமயம் இவர்கள் சிராத்தம் முதலியவைகளைச் செய்யாதிருப்பார் களாயின் அவர்கள் தம் பின்னவராகிய இப்பாபிகளைச் சபித்துக் கொண்டே அச்சமயமும் நரகத்தில் தள்ளப் படுவார். ஆனது பற்றி, சிராத்தம் முதலிய கர்மங்களால் இறந்தவர்களைத் திருப்தி செய்வித்தல் அவசியமே என்பதறிக.

சங்கை, இறந்தவர்களை யுத்தேசித்து சிராத்தம் செய்வது உசிதமாகக் காணப் படவில்லை. இறந்து போன முன்னோர் நரகம் முதலிய லோகாந்தரத்தை யடையாமல் ஒருக்கால் முக்தி யடைந்தனரோ? அல்லது ப்ருஹ்மாதி லோகம் சென்றிருக் கின்றனரோ? அல்லது ஸ்வர்க்கம் சென்றிருக் கின்றனரோ? அல்லது எவ்வுலகத்திற்கும் செல்லாமல் மீண்டும் இவ்வுலகிலேயே பிறந்திருக்கின்றனரோ? அல்லது நாய் நரி கழுதை பன்றி முதலியவைகளாய் ஜனித்திருக்கின்றனரோ? எக்கதி யடைந்திருக்கின்ற ரென்பது நமக்குத் தெரிய வில்லையே. ஆதலால் இவ்விதமாயினர் என்று சொல்ல நம்மால் இயலாதன்றோ. இதற்கு இயலாதாதலின் அவர் எங்கிருக்கின்றவர் என நன்கு அறிந்து செய்ய வேண்டிய சிராத்தம் எங்ஙனம் ஸபலமாகும்? நரகத்திலாவது அல்லது வேறு ஜன்மத்தை எடுத்தாவது இருந்தார் களாயின் பரதந்த்ரத் தன்மையுடன் கூடிய அவர் நம் சிராத்தத்திற்கு வந்து புசித்துப் போதல் எப்படி ஒவ்வும்? அன்றியும் தேவர்களைக் குறித்து இங்கு அக்கினியில் ஹோமம் செய்வது ஸ்வர்க்க லோகத்திலுள்ள தேவருக்கு எங்ஙனம் சேரும்? எனும் சங்கையாம். இவ்விஷயத்தினுண்மையை யறியத் தக்க ஆராய்ச்சியை ஓர் சிறிதும் செய்யாமல் நம் சாஸ்திரங்களில் ஏதோ உபயோக மில்லாத சில கர்மங்கள் விதிக்கப் பட்டிருக்கின்றன என்றும் இக்காரியங்களின் பயன் புத்தி பௌருஷ மில்லாத வாத்தியார்கள் பிழைப்பதற்கு ஏதுவாதல் ஒன்றே என்றும்,

அக்நிஹோத்ரம் த்ரயோ வேதா: த்ரிதண்டம் பஸ்மகுண்டநம்|
புத்திபௌருஷஹீநாநாம் ஜீவிகா தாத்ரு நிர்மிதா||

> அக்கினி ஹோத்திரம், மூன்று வேதம், முப்பட்டையாகிய விபூதிப் பூச்சு இவைகள் புத்தி பௌருஷ மில்லாதவர்களின் ஜீவனத்திற்காகக் கற்பிக்கப் பட்டவைகளே

என்று நாஸ்திகாசிரியர் சொல்லியிருக்கும் வாக்கியார்த்தத்தையே உபதேசிக்கின்றனர். நம் சாஸ்திரங்களிலுள்ள விடயங்களில் முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டியது இதுவுமொன்று. ஆதலின் இவ்வுண்மையைச் சற்று நிரூபிப்பாம்.

இங்கு நம்மவர் செய்யும் சிராத்தம் முதலியவைகளால் பிதிரு லோகத்திலுள்ளவராகிய பிதிரர் எனும் ஓர் வகைத் தேவரே நேரில் ஆராதிக்கப் படுகின்றனர். லோகாந்தர மடைந்த தாய் தந்தையர் முதலிய நம்முன்னோருடைய ஜீவாத்மா அவர்கள் மூலமாக சிராத்தாதிகளைப் பெற்றுத்திருப்தியெய்துகின்றனர். நாம் செய்யும் சிராத்தத்தை நம்முன்னோர்களே நேரில் வந்து பெற்றுக் கொள்ளுகின்றன ரெனின், பாதந்திரரா யிருக்கும் அவர்களுக்கு அதுஇயலாதெனச்சொல்வது உசித மாகும். நாம் அப்படிச் சொல்ல வில்லையே. நாம் செய்யும் சிராத்தத்தை நேரில் பெற்றுக் கொள்வோர், பிதிரர் எனும் ஓர் தேவ வகையர் என்பதே நம் சாஸ்திரத்தில் சொல்லப்படும் உண்மை. அவர்கள் லோகாந்தரத்தை யடைந்துள்ள நம் முன்னோருக்கு அந்த சிராத்தத்தின் பயனைச் சேர்ப்பிக்கின்றனர் என்பதே அறிய வேண்டியது.

உலகில் பிராம்மணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் எனும் நான்கு வர்ணத்தார் செய்யும் சிராத்தங்களை ஒரே பிதிருக்கள் புசிக்கின்றனரா? அல்லது வேறு வேறு வகையினரா? பிதிரர் என்பவர் யாவர்? அவர்களின் செயல் யாது என்பது முதலிய சங்கை நிகழும். ஆதலால் அவ்வுண்மையைச் சற்றிங்கு சொல்லுவாம்.

ஹிரண்ய கர்ப்பரா லுண்டாக்கப் பட்ட மனுப்பிரஜாபதியினிடம் தோன்றியவர்களாகிய மரீசி முதலிய மஹாருஷிகளின் புதல்வரே பிதிரர் என்பவராம். அவர்கள் ஸ்வர்க்க பேதமாகிய சந்திர மண்டலம் முதலிய இடங்களில் இருப்பவர்களாம். இங்கு செய்யும் சிராத்தம் முதலியவைகளில் நேரில் உபசரிக்கப் படுவோர் இவர்களே. இவர்களுக்கு ஸந்தியா வந்தனம், ஈச்வரோபாஸ்தி, ப்ரும்ம விசாரம், முதலிய காரியங்கள் அநுஷ்டிக்கப் பட்டு வருகின்றன. நான்கு வர்ணத்தார் செய்யும் சிராத்தங்களில் பலவகைப் பட்டுள்ள இந்தப் பிதிரர் தனித்தனியே ஆராதிக்கப் பட்டு வருகின்றனர். இவர்கள் ஸோமஸதர், அக்நிஷ்வாத்தர், பர்ஹிஷதர், ஸோமபர், ஹவிர்புஜர், ஆஜ்யபர், ஸுகாலினர், எனப் பல வகைப் பட்டிருக் கின்றனர். பிராமணர் செய்யும் சிராத்தத்தினில் ஸோமபர் எனும் வகையினர் உபசரிக்கப்படுகின்றனர். க்ஷத்திரியர்கள் செய்யும் சிராத்தத்தை ஹவிர்புஜர் எனும் கூட்டத்தினர் கிரஹித்துக் கொள்கின்றனர். வைசியரது சிராத்தத்தில் ஆஜ்யபர் எனும் வகையினரும் நான்காம் வருணத்தாரது சிராத்தத்தினில் ஸுகாலினர் எனும் வகையினரும் உபசரிக்கப் படு

கின்றனர். இப்படி மட்டுமென்பதல்ல. தேவர் தானவர் முதலியவர்களுக்கும் பிதிரர்களிருக்கின்றனர். அவர்கள் சிரப்பும் சிராத்தங்களில் அவாவர்க்குரிய அபிமானிகளாகிய பிதிருவகையினர் உபாசிக்கப்படுகின்றனர். இவ்விஷயத்தை விஸ்தாரமாகத் தெரிந்து கொள்ளவேண்டுமாயின்

மநோர்ஹைரண்யகர்ப்பஸ்ய யே மரீச்யாதய: ஸுதா: |
தேஷாம்ருஷீணாம் ஸர்வேஷாம் புத்ரா: பித்ருகணா: ஸ்ம்ருதா: ||
விராட்ஸுதா: ஸோமஸத: ஸாத்யாநாம் பிதர: ஸ்ம்ருதா: |
அக்நிஷ்வாத்தாஸ்ச தேவாநாம் மாரீசா லோகவிஸ்ருதா: ||

"ஹிரண்ணிய கர்ப்பரா லுண்டாக்கப் பட்ட மனுவுக்குப் புத்திரர்களாகிய மரீசி முதலிய ருஷிகள் யாவரோ அந்த ருஷிகளின் புதல்வர் பிதிருகணங்கள் என்பவராம்" "விராட் என்பவரின் புதல்வரான ஸோமஸதர் என்பவர் ஸாத்தியர்களுக்குப் பிதிரர்களாம். மரீசியின் புதல்வரான ஜகத்பிரஸித்தராயுள்ள அக்நிஷ்வாத்தர் என்பவர் தேவர்களுக்குப் பிதிரர்களாம்.

தைத்யதாநவயக்ஷாணாம் கந்தர்வோரகரக்ஷஸாம் ||
ஸுபர்ணகிந்நராணாஞ்ச ஸ்ம்ருதா பர்ஹிஷதோத்ரிஜா: |

"தைத்தியர், தாநவர், யக்ஷர், கந்தருவர், உரகர், ராக்ஷஸர், ஸுபர்ணர், கிந்நரர் ஆகிய இவர்களுக்கு அத்திரியின் புதல்வரான பர்ஹிஷதர் என்பவர் பிதிரராம்.

ஸோமபா நாம விப்ராணாம் க்ஷத்ரியாணாம் ஹவிர்புஜ: |
வைஸ்யாநாமாஜ்யபா நாம ஸூத்ராணாம் து ஸுகாலிந: ||

விப்ரர்களுக்கு ஸோமபர் என்பவர் பிதிரராம். க்ஷத்திரியருக்கு ஹவிர்புஜரும், வைசியருக்கு ஆஜ்யபர் என்பவரும், சூத்திரருக்கு ஸுகாலிநர் என்பவரும் பிதிரராம்.

ஸோமபாஸ்து கவே: புத்ரா ஹவிஷ்மந்தோங்கிர:ஸுதா: |
புலஸ்த்யஸ்யாஜ்யபா: புத்ரா வஸிஷ்டஸ்ய ஸுகாலிந: ||

"கவியின் புதல்வர் ஸோமபர். ஹவிர்புஜர் அங்கிரஸ்ஸின் புத்திரர். புலஸ்தியரின் புதல்வர் ஆஜ்யபர் என்பவர். வஸிஷ்டரின் புதல்வர் ஸுகாலினர் என்பவர்"

அக்நிதக்தாநக்நிதக்தாந் காவ்யாந்பர்ஹிஷதஸ்ததா |
அக்நிஷ்வாத்தாம்ஸ்ச ஸௌம்யாம்ஸ்ச விப்ராணாமேவ நிர்திஸேத் ||

"அக்நிதக்தர், அநக்நிதக்தர், கவ்யர், ப்ரஹிஷதர், அக்நிஷ்வாத்தர் ஸோமபர். ஆகிய இவ்வகையோர் எல்லோரும் ப்ராம்மணருக்கே பிதிரர் என்றறிக"

என்பது முதலிய மனுஸ்ம்ருதி மூன்றுமத்தியாயத்திலுள்ள வாக்கியங்களை யும் இதுபோல் மற்றுமுள்ள பிரமாண நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்களையும் காண்க.

இங்ஙனம் இங்கு செய்யும் சிராத்தாதிகளில் நேரில் உபசரிக்கப்படும் அதிகாரநிலைமையில் அமர்ந்தவர்களான முற்கூறிய பலவகைப்பட்டுள்ள பிதிரர் களுக்கும் ஸந்தியாவந்தனம் ஈச்வரோபாஸ்தி முதலிய கர்மங்கள் அநுஷ்டிக்கப் பட்டுவருகின்றமையால் அவ்வநுஷ்டானங்களும் ஸாத்விககாரியங்களாதலால் அவைகளை ஸாத்விககாலத்திலேயேசெய்யவேண்டுமென்பதுபற்றி அவர்களுக்கு க்காலைமுதல் மத்தியான்னகாலம் வரையில் செய்ய வேண்டியனவாக அவ்வநுஷ் டானங்களுக்கு அவகாசம் வேண்டியிருத்தலால் அவ்வநுஷ்டானங்களைச்செய்து கொண்டிருக்கும் காலத்தில் அவர்கள் இங்கு நம்மவர் செய்யும் சிராத்தங்களைக் கிரஹித்துக் கொள்ள இயலாது. இவ்வுண்மை பற்றியே பிதிருகாரியங்களை மத்தியான்னகாலம் வந்தபின்னரே செய்யவேண்டுமென்று நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. அக்காலமே குதபம் என்பதாம். இனி இங்குநடக்கும் சிராத்தாதிகள் அங்குள்ள பிதிரர்களது அறிவுக்கு எப்படியெட்டும் எனின், இங்கிவ்விதமறிக.

உலகில் மனதிலும் ஆச்சரியமாகிய பொருள்யாதுமில்லை. அதுமுனைந்தால் உலகம். அதுஅடங்கிப்போனால் யாதுமில்லை. அது ஒன்றையே விஷயமாய்க் கொண்டு ஏகாக்கிரப்பட்டால் அப்பொருளின் ஸம்பந்தமாயுள்ள மர்மங்கள் நன்கு விளங்கும். யாதானுமொன்றைக் கவனித்துக் கொண்டிருக்கும் போது அங்கு நடக்கும் மற்ற விஷயங்கள் அறியப்படுவனவல்ல என்பது உலகானுபவஸித்த மேயாம். ஆதலின் மனம் ஏகாக்கிரப்படாவிட்டால் விஷயங்களின் மர்மம் நன்குயறிய இயலாது. நீராவியானது வண்டி மரக்கலம் முதலியவைகளை இழுத்துச்செல்லுதல், இங்குபேசுதல் தந்திமூலமாய் மற்றக்கண்டங்களிலிருப் பவர்களால் அறியப்படுதல், ஆகாயத்தில் விமானங்கொண்டு ஸஞ்சரித்தல், முதலிய இவை போன்ற அற்புதமாயுள்ள செயல்களெல்லாம் நடைபெறுதல் மனதின் சக்தியாலேயேயன்றோ. மனதை ஏக்கிரப்படுத்தியதானலேயே பிறர் மனதை வசப்படுத்துதல் முதலிய ஸித்திகள் அனுபவத்தில் கொண்டுவரப்பட்டி ருக்கின்றன என்பது விசேஷமாய் யாவராலும் அறியப்பட்டவிஷயமே. இயற்கையில் அதற்கு அபாசமாகிய சக்தியுள்ளது என்பது ஸ்வப்பனத்தைக் கவனித்தாலும் நன்கு விளங்கும். எந்த ஸாதனமுமின்றி ஸ்வப்பனத்தில் மனஸே அற்புதமாகிய பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்தல் அனுபவஸித்தமன்றோ. தாண்ட முடியாத ஸம்ஸாரக்கடலையும் மனதினால் தாண்டக்கூடும் என்பதாயின், அதனால் இயலாதகாரியம் யாதிருக்கின்றது என்று சொல்லத்தகும்.

சலித்துக்கொண்டேயிருக்கும் ஊசியில் எப்படி நூலைச் கோர்க்கமுடியா தோ, சலித்துக் கொண்டேயிருக்கும் கண்ணாடியில் எப்படிமுகத்தை நன்குப் பார்க்க இயலாதோ, அப்படியே சலித்துக்கொண்டிருக்கும் மனதினால் எந்தப்

பொருளினுண்மையும் அறியப்படுகின்றதில்லை. மனமே ஓர் க்ஷணத்தில் பல உலகாய்த் திரிபடைகின்றது. இப்படி அபாரசலனமுள்ள மனத்தைக் கண் காது முதலிய இந்திரியங்களில் யாதானுமொன்றிலேயே நிறுத்தியப் பியஸிந் தால் அவ்விந்திரியத்திற்கு விஷயமாகிய மிக்கநுட்பமாயுள்ளபொருளும் நன்கறி யப்படும். பற்பலவிடங்களில் சிதறிப் போகும் கால்வாயின் ஜலத்தை எவ்விடத் திலும் சிதறவிடாமல் கரைகளைக்கெட்டி செய்து, ஒரே இடத்தில் பாயச் செய்த லால் எங்ஙனம் மிக்க வேகமாய் ஜலம் செல்லுகின்றதோ அவ்வாறே பற்பல இந்திரியங்களில் கலந்திருக்கும் மனஸை, மற்ற இந்திரியங்களை யெல்லாம் நன் ருயடக்கி அவைகளைவிட்டுப் பிரித்து ஒரே இந்திரியத்தில் நிறுத்தினுல் அவ் விந்திரியத்திற்குவிஷயமாயுள்ள பொருளை மனஸ்ஸானது ஏகாக்கிரமாய்க் கவனி த்து அங்குள்ள ஸகல மர்மங்களையும் அறிந்து கொள்ளும். அப்போது ஸூக்ஷ்ம மாயுள்ள விஷயமும் அறியப்படும்.

உலகில் உள்ள எந்தட் பொருளைக் கவனித்தாலும் ஸூக்ஷ்மம் ஸ்தூலம் எனும் இரண்டு நிலமைகளுள்ளன என்பது நன்ருயறியப் படுகின்றது. ஸ்தூல மே வியக்தம் என்றும் ஸூக்ஷ்மமே அவ்யக்த மென்றும் சொல்லப் படுவதாம். அக்கினியானது ஜ்வாலை ரூபமாய் இருக்கும் போது ஸ்தூலமென்றும் ஆக்ஸிஜன் கார்பன் எனும்காற்றுகட்டைகளில்அடங்கியிருக்கும் காலத்தில் அவ்யக்த மல்லது ஸூக்ஷ்ம மென்றும் சொல்லத்தகும். அப்படியே விதையில் மரம் ஸூக்ஷ்மமும் முளைத்த பின்னர் ஸ்தூலமுமா யிருப்பது என்பது தகும். கிராமபோன் எனும் சப்தானுகரண யந்திரத்தினுருளையில் கிரஹிக்கப் பெற்றுள்ள கீதமானது அவ் யக்த மென்றும் பின்னர் அது பாடும் போது பிறர் காதுக்குக் கேழ்க்கப் படும் நிலமையில் ஸ்தூலம் என்றும் சொல்லலாம். இவ்விதம் உலகிலுள்ள எந் தப் பொருளுக்கும் வியக்தம் அவ்யக்தம் எனும் இரண்டு நிலமைகளுள்ளன என் பது நியாயவாயிலாய் ஊஹிக்கக் கூடியதேயாம்.

இவ்வாறுள்ள நிர்ணயத்தால், நாம் பேசுதல் பாடுதல் முதலிய ஸகல நாதங் களுக்கும் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்றிரண்டு நிலமைகளிருக்க வேண்டு மென்ப தும் நிச்சயமே. உலகில் நம்மவர் பேசுதல் முதலிய சப்தமானது பேசி யோய்ந்த தும் காதுக்குக் கேட்கப் படாமற் போயினும் ஸூக்ஷ்ம வடிவாய் இருக்கின்ற தென்றே சொல்லுவது உசிதம். இல்லது வாராது உள்ளது போகாது எனும் நியாயத்தைக் கவனித்தால் சப்தம் அங்ஙனம் ஸ்தூலமாய் உதிப்பதற்கு முன்ன ரும் ஸூக்ஷ்மமாய் இருந்த தென்பதே உண்மை. இனி உச்சரித்த சப்தம் ஓய் ந்து போயினும் ஸூக்ஷ்மமா யுள்ள தென்று சொல்லப் பட்டதே அப்படி ஸூக்ஷ்மமாய் எங்கிருக்கின்றது? எனின் அதன் குணியாகிய ஆதாரத்தைப் பற் றிக் கொண்டிருக்கின்ற தென்றறிக. அதற்கு ஆதாரம் யாதெனின் ஆகாயமே யாம் என்க. வாயுவே சப்தத்திற்கு ஆதாரமாயிருக்க ஆகாயத்தைச் சொல்லு வது உசிதமோ எனின் உசிதமேயாம். அதாவது ஸூக்ஷ்மமாயுள்ள சப்தமா னது ஸ்தூலமாய்ப் பிறர் காதுக் கேட்டக் கூடிய யோக்கியதையைப் பெறுதற்கு வாயு நிமித்தமாத்திரமாகலாமன்றி, சப்தத்திற்கு ஆதாரம் ஆகாயமே. ஆகாச

மே சப்தத்திற்கு ஆச்ரய மாதலால் உச்சரித்து ஓய்ந்து போயினும் சப்தமானது ஆகாயத்தை ஆச்ரயித்து ஸூக்ஷ்ம வடிவம் பெற்று அடங்கிப் போகின்றது.

மடுவினில் ஓர் சிறிய கல்லை யெறிந்தால் அதனாலுண்டாகும் அதிர்ச்சியானது தடாகம் முழுதும் வியாபிக்கப்பட்டுக் கிரமமாய்ச் சுருங்கிக் குன்றி யடங்குவது போல, ஆகாயத்தில் யாதாயினும் ஓர் நிமித்தமாய் உதிக்கும் சப்தமானது ஆகாயத்தையே பற்றிக்கொண்டு கிரமமாய் ஒடுங்கி அவ்யக்தமாகின்றது. ஆதலின் எவ்வளவோ சப்தம் அவ்யக்தமாய் அடங்கியுள்ளது என்பதே உண்மை. இவைகளே ஸூக்ஷ்ம சப்தங்களாம் என்றறிக.

சுரோத்திரம் எனும் காதிந்திரியமானது ஆகாயத்தின் அம்சம் ஆதலால் அந்த சுரோத்திரேந்திரியத்தில் மனம் வந்து நின்று ஆகாயத்தின் வழி வரும் சப்தங்களை அறிகின்றது. ஆகாயமானது நமது ஸ்தூலமாகிய பார்வைக்கு சூந்யமாயுள்ள இடைவெளியாய்த் தோன்றினும், அதற்கு சூக்ஷ்ம சப்தங்களுக்கு ஆதாரமாயிருக்கத் தக்க ஓர் அபார சக்தியுள்ளது. நமது சுரோத்திரேந்திரியத்தோடு கூடி மனமானது சப்தங்களைக் கிரஹிக்கின்றதாயினும், அது மற்ற இந்திரியங்களோடும் கலந்தே நின்று ஏகாக்கிரப் படாமல் காதிலும் இருந்து கொண்டு சப்தங்களைக் கிரஹிக்கின்றமையால், மிக்க ஸ்தூலமாகிய நாதமே நம் காதுக் கெட்டுகின்றது. அங்ஙனம் கலந்துள்ள மனத்தை மற்ற இந்திரியங்களில் நின்றும் நன்றாய்ப் பிரித்து முழு அம்சத்தையும் காதுள்ளும் இந்திரியத்திலேயே ஏகாக்கிரமாய் நிறுத்தி விட்டோமாயின் நுட்பமாயுள்ளநாதமும் நம்மால் கேட்கப் படும். இனிக் காதிலேயே ஏகாக்கிரமாயுள்ள மனதை அக்காதிற்கும் ஆகாயத்திற்கு முள்ள ஸம்பந்தத்திலே (பொருத்தத்திலே) யே நிறுத்தி அப்பியஸித்து வந்தால், அந்த ஸமயம் மனமானது காதின் முனையையும் ஆகாயத்தையும் பற்றியதாய்ஏகாக்கிரமாய்நின்றுவிடும். சப்தத்திற்கு ஆதாரமாயுள்ள ஆகாசமானது அகில பூமண்டலங்களிலும் அகில லோகங்களிலும் வியாபித்துக் கொண்டு ஒன்றாகவே யிருக்கின்றது. அப்படி ஒன்றாகவே யிருக்கின்றமையால் அந்த ஸமயம் ஆகாசமுள்ள இடங்களிலெல்லாம் மனம் ஸம்பந்தித்ததாகும். மனம் சுரோத்திரேந்திரியத்தை மாத்திரம் பற்றிக் கொண்டு ஆகாசத்தில் சிறிதும் நில்லை பெறாத காலத்தில் ஸ்தூலமாய் ஏற்படும் சப்தமும் ஸமீபத்தில் ஏற்படும் சப்தமுமே கிரஹிக்கப் படும். சுரோத்திர இந்திரிய முனையில் ஸவற்பமாகவும் ஆகாசத்தினில் மிகுதியாகவும் நிற்கும்படி மனத்தை ஊசி முனையில் நிற்பது போலஏகாக்கிரமாய்நிறுத்தினால், மிக்கத் தூரத்தில்ஏற்படும் சப்தத்திற்கு ஆதாரமாகிய ஆகாசமே ஸமீபத்திலுமுள்ளதாதலால் அவ்வாகாசத்தைப் பற்றி யிருக்கும் மனமானது அதனில் ஸம்பந்தித்து உதிக்கும் சப்தங்களை யெல்லாம் அறிந்து கொள்ளும். சப்தாதாரமாகிய ஆகாசமானது ஸம்பந்தியாத இடம் எவ்விடத்திலு மில்லை யாதலால் எவ்வுலகில் நடக்கும் சப்தமும் அந்தச் சப்தாதார சக்தியில் ஸம்பந்தித்திருக்க வேண்டும். ஆகையால் அச்சக்தியினைப் பற்றியமனம் அவ்வழியாய் மிக்கத் தூரத்திலுள்ள சப்தங்களை யெல்லாம் கிரஹித்து அறிந்து கொள்ளுந் தல்யுக்தமே என்றறிக. சுரோத்திரத்தின் முனையிலும் ஆகாச சப்

தாதாரசக்தியிலும் இவ்வாறு மனஸை நிறுத்தி ஏகாக்கிரப் படுத்துதலே சுரோத்திராகாச ஸம்பந்த ஸம்யமம் என்று யோகிகளால் வழங்கப் படுவதாம். இந்த ஸம்யமத்தினால் மிக்கதூரத்திலுதிக்கும் சப்தங்களையும் ஸூக்ஷ்மமாயுள்ள சப்தங்களையும் மற்றெதனாலாவது தகையப் பட்டுள்ள சப்தங்களையும் ஸமீபத்திலுதிக்கும் சப்தத்தைப் போலக் கேட்க்கலாம். இதுவேதிவ்யசுரோத்ரம் எனப் படும் யோகஸித்தி என்றறிக. இவ்வுண்மையே

"ஶ்ரோத்ராகாஶயோஸ்ஸம்பந்தஸம்யமாத் திவ்யம் ஶ்ரோத்ரம்॥"

எனும் யோக ஸூத்திரத்தினால் முன்னோரால் போதிக்கப் பட்டுள்ளது. இந்த நியாயத்தினால் சிராத்தம் முதலியவைகளில் உபயோகிக்கப் படும் மந்திரங்களும் சப்தாதார சக்தியில் ஸம்பந்தம் பெறும் என்பது யுக்தி யுக்தமேயாம். சப்தாதார சக்தியோடு கூடியிருக்கும் ஆகாயத்திற்கும் சுரோத்திரேந்திரியத்திற்கு முள்ள ஸம்பந்தத்தில் மனஸை ஸம்யமம் செய்யக் கூடிய யோக்கியதையானது சந்திராதி லோகங்களிலுள்ள பிதிரர் தேவர் முதலியவர்களுக்கு ஈசாக்ஞையால் ஸ்வபாவமாய் அமைந்துள்ளதாதலால், அவர்கள் அவ்வாறு சுரோத்திராகாச ஸம்பந்த ஸம்யமத்தினால் இங்கு நம்மவர் உச்சரிக்கும் வாக்கியங்களை ஸமீபத்தி லிருக்கின்றவர்கள் போலத் தெரிந்துகொண்டுவந்து சிராத்தத்தைப் பெற்றுத் திருப்தி யடைகின்றனர் என்பதறிக.

இனி வெகுகாலம் உண்மை யனுபவம்பெற்ற யோகிவரரை அடைந்து அவரது உபதேசத்தைப்பெற்று அவ்வாறு பலகாலம் அப்பியாஸம் செய்தபின்னரேயன்றோ இவ்வாறுள்ள ஸித்திகள் கைகூடுமென்று யோகசாஸ்திரத்தில் சொல்லப்படுகின்றது. இப்படி யிருக்கப்பிதிரர் முதலியதேவர்களுக்கு ஸ்வபாவமாய் ஸித்திகள் கிடைத்திருக்கின்றன என்பது உசிதமாகுமா? எனின், இச்சங்கை உசிதமன்று. அதாவது ஸித்திகளை ஈசானுக்கிரஹத்தால் ஜன்மமுதலாகவேயாவது, அல்லது திவ்யஔஷதிமூலிகைகளினாலாவது, அல்லது யோகாப்பியாஸத்தினாலாவது ஸம்பாதிக்கக்கூடும். அபாரமாகிய பிரபஞ்சத்தை ஆக்ஞை மாத்திரத்தால் ஸ்ருஷ்டிக்கவும் ரக்ஷிக்கவும் லயமடையச்செய்யவும் சக்தனும் திவ்விய மாயாசக்திகளையுடையோனும் ஆகிய ஈசனுடைய அனுக்கிரஹத்தால் லௌகிகங்களாயுள்ள அற்பஸித்திகளைப்பெறுதல் ஆச்சரியமாகாது. இவ்விதம் ஸித்திகளுக்கு ஐந்து ஹேதுக்கள் இருக்கின்றன என்பதும் யோகசாஸ்திர ஸம்மதேயாம் என்பதை

"ஜந்மௌஷதிமந்த்ரதபஸ்ஸமாதிஜாஸ்ஸித்தய:"

எனும் கைவல்யபாதத்தில் சொல்லப்பட்டிருக்கும் யோகஸூத்திரத்தைக் கண்டு நிச்சயித்துக்கொள்க.

இனிப்பிதிரர்முதலியவர்களின் திருப்தியின் பொருட்டு நாம் சிராத்தாதிகளைச் செய்வதில்லையே? இறந்துபோனவர்களாகிய ஜீவர்களின் திருப்தியின்

பொருட்டன்றோ சிராத்தாதிகளைச் செய்கின்றோம். பிதிரர் எனும் தேவவகுப்பினர் திருப்தியடைவதினால் இறந்துபோன முன்னோர்களுக்குப் பயன்யாது? எனும் சங்கை நிகழும். அது இவ்விதமறிக. இறந்துபோனவர்களாகிய ஜீவர்கள் ஸ்வர்க்கத்திலிருந்தாலும் அல்லது நரகத்திலிருந்தாலும் ஸரியே! பிதிரர்கள் அவர்களுக்கு அபிமானிகளாதலின் ஸ்வர்க்க நரகங்களிலுள்ள நமது முன்னோராகிய ஜீவர்களுக்குநாம்செய்யும் சிராத்தாதிகளின்பயன்களைச்சேர்ப்பிப்பவர்களென்றறிக. அல்லது நமது முன்னோர் இழிய ஜன்மங்களைப் பெற்றிருந்தாலும் சிராத்தஞ்செய்யப்படும் தினத்தில் அச்சீவன் திருப்திபெறும். இனி எவருக்குச் சிராத்தம் செய்கின்றனமோ அவர் முக்திபெற்றிருந்தால் சிராத்தப்பயன்யாரைச் சேரும் எனின், பிதிரர் எனும் தேவவகையினர் அதனால் ஆராதிக்கப்பட்டு அதன் கர்த்தாவாகிய நம்மையே அநுக்கிரஹிக்கின்றனர். ஆதலின் அப்பயன் நமக்கே ஒருவாறு கிடைக்கும் என்பதே உண்மை. காசியில் உள்ள ஒருவருக்கு இங்கிருந்து (மணியார்டர்) தொகை அனுப்பினோமாயின் பெற்றுக்கொள்பவர் இராவிடில் அனுப்பியவர்களாகிய நம்மிடத்திலேயே திரும்பிவருதல் போல முக்தியடைந்தவர்களை யுத்தேசித்துச்செய்யும் சிராத்தத்தின்பயன் கர்த்தாவாகிய நம்மையே வந்தடைதல் உசிதமென்க.

இனி, இங்கு சிராத்தாதிகளில் நம்மவரால் உச்சரிக்கப்படும் மந்திரவாக்கியங்களை ச்ரோத்திராகாச ஸம்பந்த ஸம்யமத்தினால் தெரிந்துகொண்டு பிதிரர்கள் சிராத்தத்தை க்ரஹித்துக்கொள்கின்றனர் என்பது யுக்திக்கிணங்கியிருக்கின்றமையால் ஒத்துக்கொள்ளக்கூடியதேயாயினும், நாம் இங்கு ஸம்ஸ்க்ருதபாஷையிலுள்ள மந்திரங்களையே சொல்லவேண்டியதேன்? ஸ்வபாவத்தில் ஈசாக்ஞையால் அபாரசித்தியுள்ளவர்களாகிய பிதிரர் முதலியவர்களுக்குநாம்எந்தப்பாஷையில் சொன்னாலும் தெரிந்துகொள்ளக்கூடிய யோக்கியதை இருக்கலாமன்றோ. இங்கு வழங்கும் மற்றுமுள்ள தேசபாஷைகளில் சொன்னாலும் பிதிரர்கள் அறிந்துகொண்டு சிராத்தத்தைக்கிரஹிக்கக்கூடுமல்லவா? எனின் இஃதறிக. பிதிரர் முதலியவர்களுக்கு இங்கு எப்பாஷையில் சொன்னாலும் தெரிந்துகொள்ள யோக்கியதையிருக்கினும் அவர்களிடம் இயற்கையில் வழங்கும் பாஷையானது ஸம்ஸ்க்ருதம் எனப்படும் தேவபாஷையேயாதலின் அப்பாஷையிலுள்ள மந்திரத்தை உச்சரித்தலே அவர்கள் விஷயத்தில் உசிதமாகுமென்றறிக.

வேள்வி முதலியவைகளிலுள்ள அவிர்ப்பாகத்தைக்கிரஹிக்கும் இந்திராதி தேவர்களுக்கும் இவ்வாறு யோகஸித்தியுள்ளதாதலால் இங்குநம்மவர் யாககாலத்தில் உச்சரித்து அழைக்கும் மந்திரங்களை அங்கிருந்து அறிந்துகொண்டு வந்து இங்கு அளிக்கப்படும் ஹவிர்ப்பாகங்களைக் கிரஹித்துக்கொண்டு போகும் தன்மை அவர்களுக்கும் ஒவ்வும் என்க.

இனி ஒரே ஸமயத்தில் பலர் யாகங்களைச் செய்கின்றவர்களாய் இந்திராதிகளை யழைக்கக்கூடுமன்றோ. அப்படியானால் அவ்வியாகங்களெல்லாவற்றிற்கும் ஒருவனாகியஇந்திரன் முதலியதேவர் ஏககாலத்தில்சென்று ஒரேகாலத்தில் அவ்வவிர்ப்பாகத்தைக் கிரஹிபபதெப்படி? எனின், அவர்களுக்கு அணிமா முத

லிய யோகசக்திகள் இயல்பாகவே அமைந்திருக்கின்றமையால் அச்சக்தி விசேஷத்தால் அநேகசரீரங்களை ஒரேகாலத்தில் எடுத்துக்கொண்டு பலவிடங்களில் நடக்கும் யாகங்களில் கொடுக்கப்படும் ஹவிர்ப்பாகங்களைக் கிரஹித்துக்கொள்கின்றனர். தேவர்களுக்கும் அணிமாதிசக்திகள் இயல்பிலமைந்திருக்கின்றனவென்பது உசிதமோ? எனின், நம்மவர்களாகிய அற்பசரிபாகமுடைய மனிதரும் மனத்தைவசப்படுத்தி அப்பியாசமாகிய செயல்களைச் செய்யக் கூடுமெனின் பிறவியாகவே அணிமாதிசக்திகளைப்பெற்றுள்ளவர்களாகிய இந்திராதிகளுக்கு அந்த சக்திவிசேஷத்தால் அநேக சரீரங்களை உண்டாக்கிக்கொள்ளுதல் உசிதமேயாம் என்றறிக. இவ்வுண்மையே

ஆத்மனோ வை ஶரீராணி பஹூனி பரதர்ஷப| குர்யாத்யோகீ பலம் ப்ராப்ய தைஶ்ச ஸர்வைர்மஹீம் சரேத்| ப்ராப்நுயாத்விஷயாந்கைஶ்சித்கைஶ்சிதுக்ரம் தபஶ்சரேத்| ஸம்க்ஷிபேச்ச புநஸ்தாநி ஸூர்யோ ரஶ்மிகணாநிவ ||

> ஓ பரதகுலசிரேஷ்டனாகிய அரசனே! யோகியானவன் யோகபலத்தினால் தனக்குப் பலசரீரங்களைச் செய்துகொள்வான். அச்சரீரங்களால் உலகம் முழுதும் ஸஞ்சரிக்கக்கூடும். சில சரீரங்களால் விஷயங்களை அனுபவிப்பான். சில சரீரங்களால் உக்கிரமாகிய தவத்தைச் செய்வான். அவைகளெல்லாவற்றையும் ஸூர்யகிரணம் ஒடுங்குதல் போலத் தன்னிடம் ஒடுக்கிக்கொள்வான்

எனும் பாரதாதி வாக்கியங்களால் போதிக்கப்பட்டிருத்தல் காண்க. அன்றியும்

விரோத꞉ கர்மணீதி சேந்நாநேகப்ரதிபத்தேர்தர்ஶநாத் ||

(ப்ரம்ஹஸூ 1-3 27.) எனும் ப்ரம்ஹஸூத்திர பாஷ்யத்தினில் சங்கரபகவத்பாதாசாரியார் அவர்களால் ப்ரஹதாரண்ணியாதி சுருதிகளை எடுத்து விசாரித்து இவ்வுண்மையே நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றதும் காண்க.

இனி இங்கு நம்மவர்கள்போல இந்திராதிதேவர் பிதிரர் முதலியவர்களெல்லோரும் ஜீவகோடிகளேயல்லவா. அவர்களுக்குக் கர்மங்களைச் செய்தற்கு அறிவுசரிபாகமும் உள்ளதன்றோ. அப்படியானல் அவர்கள் செய்யும் யாகம் முதலியவைகளுக்கு வேறு இந்திரன் அக்கினி முதலியவர்களும் அவ்வாறே அவர்களுக்கும் வேறு இந்திராக்கினியாதிகளும் வேண்டுமென்பதாய்க் கொண்டு கவனிப்போமாயின் எல்லையின்றி இங்ஙனம் சொல்லிக்கொண்டேயிருக்கவேண்டுமாதலால் இவ்விதம் அநுசிதம் நிகழாதவாறு தேவர்கள் முதலியவர்களிருக்கின்றனர் என்பதைக்குறித்தே நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருத்தல் மாத்திரமேயன்றி தேவர் முதலியவர்கள் இல்லையென்பதே உண்மையென்று கொள்ளக்கூடாதா? எனின், இது உண்மையறியாது நிகழும் வாக்கியமென்க. இங்கு நம்மவர்கள்போலத்தேவர்களுக்கு ஸகல கர்மங்களும் செய்யவேண்டுமென்பதில்லை. தேவர்களுக்குத் தேவர்களை யாராதிக்கும் கர்மங்களும்

பிதிரர்களுக்குப் பிதிரர்களை ஆராதிக்கும் கர்மங்களும் ரிஷிகளுக்கு ரிஷிகளை யாராதிக்கும் கர்மங்களும் செய்யவேண்டியன வல்ல. பின்னை யாதெனின் ஸந்தியாவந்தனம், ஈச்வர உபாஸ்தி, ப்ரஹ்மவிசாரம் முதலியகர்மங்களேசெய்யப்படுவனவாம் என்று அறியத்தக்கது. ஏனெனின் தேவர்களுக்கும் வேறு தேவர், ரிஷிகளுக்கும் வேறு ரிஷிகள், பிதிரருக்கும் வேறு பிதிரர் என்பது அநுசிதமாதலால் என்பதாம். இவ்வுண்மையும்

"[Grantha text]"

எனும் பிரும்ஹஸூத்திரபாஷ்யத்தில் ஆசிரிய ஸ்வாமிகளால் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றது.

இனி, அநேக சரீரத்தைப் பெற்று இந்திராதிகள் அநேக இடங்களில் நடக்கும் யாகாதிகளுக்குச் சென்று அவிர்ப்பாகங்களைப் புசுப்பது வாஸ்தவ மாயின், அவ்விதம் யாகம் செய்யு மிடங்களில் இந்திராதிகளின் தேஹம் நம்மவர்களால் ஏன் காணப் படுகின்றதில்லை? எனின், அவர்கள் அந்தர்த்தானம் எனும் யோக ஸித்தியைக்கொண்டு அவ்வாறு வருகின்றனர். ஆதலால் நம்மால் காணப் படுவதில்லை என்பதாம். அந்தர்த்தானம் எனும் ஸம்ஸ்க்ருத பதத்தைச்சொல்லி விட்டால் அதை மாத்திரம்கொண்டு கண்மூடித்தனமாய் நம்பி விடலாமா? எனின்,

"[Grantha text] ||"

எனும் யோகதர்சன விபூதிபாத ஸூத்திரத்தைக் கண்டு நிச்சயித்துக் கொள்க. இந்த ஸூத்திரத்தின் அர்த்தமாவது

[Grantha] = சரீரத்தின் [Grantha] = சக்ஷுரிந்திரியத்தால் கிரஹிக்கப் படுவதாகிய ரூபமெனும் குணத்தில் ஸம்யமம் செய்தலால் [Grantha] = பாவனை வசத்தால் அதனால் கிரஹிக் கப்படும் சக்திக்குப் பிரதிபந்தம் நிகழ [Grantha] = சக்ஷுரிந்திரிந் திரியத்தின் பிரகாசமாகிய ஸத்துவதர்ம ஸம்பந்தம் ஒழியவே [Grantha] = எவனாலும் பார்க்கப்படாமல் போதலாம்.

என்பதாம். இந்த ஸூத்திரத்தைப் பற்றி மிக்க எழுத வேண்டியதிருக்கின்றது. விரியும் என்றஞ்சி இவ்வளவே எழுதப் பட்டது. இதன் விரிவை மேற்படி ஸூத்திரத்தின் பாஷ்யத்தில் யுக்தியுக்தமாய் அபாரமாய் எழுதப் பட்டிருக்கும் வியாஸ வாக்கியங்களால் கண்டு கொள்க.

இனி யிங்கிருந்து ஸ்வர்க்க நரகம் சென்ற ஜீவர் அங்கு இன்பதுன்பங்களைப் புசிப்பதுமாத்திரமா? அல்லது கர்மாவையும் செய்யவேண்டியதுண்டா? எனின் அதனை யிங்கு அறிக. ஸ்வர்க்க நரகம் கேவலம் கர்மபலமாகிய இன்ப

துன்பத்தைப்புசிக்கு மிடமாக மாத்திரம் உள்ளது. அங்கு கர்மம் செய்யப்படு கிறதில்லை. கர்மம்செய்தல் இன்பதுன்பத்தைப்புசித்தல் ஆகிய இவ்விரண்டும் கர்மபூமி எனப்படுவதாகிய இவ்வுலகிலேயேயாம். இனிக்கர்ம, போகம் இவ்விர ண்டும் இங்குள்ளது பற்றி இதனை உபயபூமி (அதாவது இரண்டிற்குமிடம்) என்று சொல்லுவது உசிதமாயிருக்க, இதனைக்கர்மபூமி என்று மாத்திரம் சொல் லுவது உசிதமோ? எனின், போகமும் உள்ளதாயினும் கர்மமே விசேஷமாய்ச் செய்யப்படுகின்றமையால் கர்மபூமி என்பதே யுசிதம் என்பதறிக.

இனிக்கர்மபூமியிலுள்ள ஸகலரும் கர்மாவைச் செய்யவேண்டும் என்பதல்ல வோ உசிதம். இப்படியிருக்கச் சிலமனிதரே கர்மாவைச்செய்யவேண்டும் என் றும் அவர்களுக்கே அக்கர்மங்கள் பயன்படும் என்றும் சிலர் கர்மாவைச்செய் யவேண்டியதில்லையென்றும் சொல்லுவது உசிதமோ? எனின், சொல்லுவாம்.

அதாவது உலகில் மிக்க ஸுக போகத்திலிருக்கும் அரசர் முதலியவர்களும் மிக்கத் துன்பத்திலுள்ளவர்களாகிய ரோகிஷ்டர் முதலியவர்களும் மூடவர் குரு டர் அங்கஹீனர்முதலியவர்களும் சிறு குழந்தைகளும் யாதானும் ஓர்வேலையைச் செய்து அதனுல் வரும் பொருளைச் சம்பாதிப்பது என்பது எப்படி முடியாதோ, அப்படியே அபார ஸுக போகத்தி லிருக்கும் ஸ்வர்க்க வாசிகளும் மிகுந்த துன் பத்தை யனுபவிக்கும் நரகவாஸிகளும் கர்மாவைச் செய்யத் தக்க தேஹாதி கர ணங்களில்லாதனவாகிய பசு பக்ஷி யாதிகளும் பால விருத்தர்களும் கர்மாவைச் செய்ய இயலாதது பற்றியே அவர்களுக்குக் கர்மா செய்ய வேண்டியதில்லை யெ ன்று சாஸ்திரம் சொல்லுகின்றது. மிகுந்த துன்பத்திலேயேயாவது பெரும் ஸு கத்திலேயேயாவது இராமல், மிதமாயுள்ள இன்பதுன்பங்களைக் கலந்து அனுப விக்கும் மனிதர்களுக்கே கர்மாவைச் செய்யவும் பூர்வ கர்மங்களினின்றும் பிரா ரப்தமாய் வந்திருக்கும் பயனுகிய இன்ப துன்பங்களைப் புசிக்கவும் கூடும். கர்மம் செய்யத்தக்கவரை நோக்கிக் கர்மசாஸ்திரம் பிரவர்த்திக்குமேயன்றி கர்மா செய் வதற்கு அவகாசமேயின்றி மிகுந்த இன்பத்தையே யாவது துன்பத்தையே யா வது புசித்துக் கொண்டிருக்கின்றவர்களை நோக்கி பிரவர்த்தியாதன்றே.

இனி மனிதர்களே கர்மாவைச் செய்ய இயலும் என்றதனுல் உலகில் தற் காலத்தவரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஐந்து கண்டங்களிலிருக்கும் மனிதர்க ளெல்லோரும் கர்மங்களைச் செய்ய வேண்டு மென்று கொண்டு, சாஸ்திரங்களில் ஸகலருக்கும் அதிகாரமுள்ளது என்று சொல்லக் கூடாதோ ? எனின், இதனை இவ்விதமறிக. மனிதரையே நோக்கி சாஸ்திரம் பிரவர்த்தித்திருக்கினும் எவ் வெவரால் எவ்வெக்கர்மம் தடைப் படாமல் செய்ய இயலுமோ அவரவர்க்கு அவ் வக்கர்மம் செய்ய வேண்டிய தென்பதையே சாஸ்திரம் விதிக்கின்றது. நமது சாஸ்திரங்களில் ஸாமான்னியம் விசேஷம் என்றிரண்டு விஷயங்களடங்கி யிருக்கின்றன. அதாவது பொய், களவு, ஹிம்ஸை, மோசம் செய்தல், முதலிய கெட்ட காரியங்களைச் செய்யக் கூடா தென்ற விலக்கு, இவர்களால் கூறப் படும் ஐந்து கண்டங்களிலிருக்கும் மனிதர்களெல்லோருக்கும் பொதுவில் ஏற்பட்

டிருப்பது என்று அறிக. இன்னம் தற்காலத் தவர்களால் கண்டுபிடிக்கப் படாமல் எவ்வளவோ இடங்களிருக்கக் கூடும். அங்குள்ளவர்களுக்கும் இது பொதுவே என்றறிக. இவர்களுக்கு மட்டும் இவ்விலக்கென்பதில்லை இந்திராதி தேவர்களுக்கும் இங்ஙன மென்பதாம். தான தர்மம் முதலிய நல்ல காரியங்களும் ஸகல மனிதர்களுக்கும் பொதுவில் ஏற்பட்டிருப்பதேயாம். இது போல ஔபாஸநம் வைச்வதேவம் முதலிய கர்மங்களும் எல்லோருக்கும் பொது என்பதல்ல. இரு பிறப்பாளருக்கே ஸோம ஸம்ஸ்தங்கள் ஏழு, ஹவிஸ்ஸம்ஸ்தங்கள் ஏழு, பாகஸம்ஸ்தங்கள் ஏழு, கர்ப்பாதாநாதிஸம்ஸ்காரங்கள் பதினாறு, ஆத்ம ஸம்ஸ்காரங்கள் எட்டு, முடிவிலுள்ள ஸம்ஸ்காரங்கள் மூன்று எனும் நாற்பத்தெட்டு ஸம்ஸ்காரங்கள் அநுஷ்டிக்க வேண்டியனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இனி மனிதர் எல்லோரும் கர்ப்பவாஸத்திலும் பிறவியிலும் ஒரேவகையாயிருக்கச் சைசவம் பால்யம் யௌவனம் முதலிய அவஸ்தைகளின் தன்மைகளிலும் ஒரேவகையாயிருக்க, எல்லோருக்கும் எல்லாக்கருமங்களையும் பொதுவாகச் சொல்லாமல் பிராம்மணர் முதலிய ஜாதிபேதங்களை வகுத்து இச்சாதியோர் இக்கருமத்தைச்செய்குக, இச்சாதியோர் இதனைச் செய்யற்க, என்பது முதலிய நியமங்களைவைத்துப்பாரபக்ஷமாகக்கூறும் நம் சாஸ்திரங்களை எப்படிப் பிரமாணமாகக்கொள்ளுவது? எனும் சங்கை தற்காலம் விசேஷமாகப் பலருக்கு நிகழக்கூடும். ஆதலின் இவ்வுண்மையைச்சற்று நிரூபிப்பாம்.

ஈசனாவது மஹரிஷிகளாகிய பூர்வசிரியர்களாவது பாரபக்ஷமாகச் சாஸ்திரங்களை இயற்றியவர்களல்ல. உலகிலுள்ள மனிதர்களின் பூர்வபரம்பராக்கிரமம் அவர்கள் வஸிக்கும் தேசம், காலம் முதலியவைகளின் நிலைமை, ஆகாரம் அறிவுபரிபாகம் (அவரவரின்) நடையுடை முதலியவைகளுக்குத் தக்கபடியே கருமங்களைப்பகுத்து விதித்திருக்கின்றனர். மிக்கக்குளிர்ச்சிபொருந்தியஐரோப்பாமுதலிய இடங்களில் உள்ளவர் ப்ராதஸ்நாநம் தேவருஷி பிதுர்தர்ப்பணம், சௌசநியமம் முதலியவைகளை அநுஷ்டிக்க இயலுமா? அப்படியே மிகவும் உஷ்ணம் பொருந்திய ஆப்பிரிக்கா முதலிய இடங்களிலுள்ளவர் அக்கிநிஹோத்திரம் ஔபாஸனம் முதலிய கர்மங்களை அநுஷ்டிக்க இயலுமா? இயலாதன்றோ. சீதோஷ்ணம் முதலியவை ஸமமாக இருக்குமிடங்களிலன்றோ இவை யநுஷ்டிக்க இயலும். அன்றியும் ஐரோப்பா அமேரிக்கா முதலிய இடங்களில் கர்மாநுஷ்டானத்திற்கும் லௌகிக காரியங்களுக்கும் வேண்டிய வெய்யிற் போதுமானது இல்லையன்றோ? இம்மட்டுமல்ல. அவரவர் அறிவுபரிபாகம் ஆகாரம் முதலியவைகளையும் அவ்வக்குலத்தின் முறையைத்தழுவிநிலைபெற்றுவரும் பூர்வபரம்பராக்கிரமத்தையும் நோக்கியேயன்றோ அநாதிகாலமாக வருணாச்ரம தர்மபேதங்களை விதித்து சாஸ்திர வாக்கியங்கள் நிலைபெற்று வருகின்றன.

தற்கால நிலைமையை நோக்கும்போது ச்ரௌதஸ்மார்த்த கர்மங்களைச் செய்யவேண்டியவர்களாகிய அதிகாரிகளே அவைகளைச் செய்ய அஸாத்தியமாயிருக்

கிறது. இப்படி யிருக்க ஸகல மனிதரும் முற்கூறிய நாற்பத்தெட்டு ஸம்ஸ்காரங்களையும் செய்து விடவேண்டுமெனின், எங்ஙனம் அப்படிச்செய்ய இயலும்? அது அஸாத்தியமென்பதைக்கருதியே வருணாச்ரம தர்மங்களைச் சாஸ்திரம் பன்னெடுங்காலமாகச் சொல்லிவருகின்றது.

இனி வெளிதேசத்திலுள்ளவரும், இத்தேசத்தில் வந்திருந்துகொண்டுச்ரௌதஸ்மார்த்தங்களை அநுஷ்டிக்கஇயலுமே! ஆதலின் அங்ஙனமுள்ளவர்கள் கர்மங்களைஅநுஷ்டித்தல் பொருந்தாதோவெனின், சிறிதும்பொருந்தாதென்க. ஆனது பற்றியே பூர்வபரம் பராக்கிரமத்தையும் நோக்கிச் சாஸ்திரம் கர்மங்களை விதித்திருக்கின்றதெனப் பூர்வமே சொல்லப்பட்டது. பூர்வபரம்பராக்கிரமமாவது சாஸ்திரங்களில் சொல்லியபடி ப்ரும்ம க்ஷத்திராதி வர்ணங்களில் பிறந்திருத்தலேயாம் என்றறிக.

இனி ப்ராமணர் க்ஷத்திரியர் முதலிய ஜாதி பேதத்தைப் பிறவியினால் வந்ததென்று கொள்ளாமல், ஞானம் வைராக்கியம் முதலிய நற்குணங்களையே நோக்கிச்சொல்லப்பட்டதென்று கொள்ளக்கூடாதோ? ஸத்துவ குணம் மேலிட்டு ஸத்தியம் முதலிய நற்குணங்களமைந்தவர் எவ்வகுப்பில் தோன்றியவராயினும் எத்தேசத்தில் பிறந்தவராயினும் அவர்களையே ப்ராமணர் என்பது சாஸ்திரங்களின் கருத்தென்பது தகுமே! எனெனின்

(1) வஜ்ஜிரஸூசி எனும் உபநிஷத்தில் "ப்ராமணன் என்பது ஜாதியினால் அல்ல" என்று சொல்லப்படுகின்றது.

(2) பகவத் கீதை முதலியவை களிலும்

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 |

என்றால் குணகர்மங்களை நோக்கி நான்கு வர்ணங்கள் ஸ்ருஷ்டிக்கப் பட்டன. எனப் பகவானாலும் உபதேசிக்கப்பட்டுள்ளது.

(3) பாரதம் வனபர்வாவில் கௌகிகன் எனும் வேதியன் தர்ம வியாதன் எனும் ஓர் வேடனிடம் உபதேசம் பெற்றதாகச் சொல்லப் படும் சரிதத்தினாலும் ஸாத்துவிக குணமுடையோனே ப்ராமணனென்றறியப்படுகின்றது.

(4) வனபர்வாவில் அஜகர உபர்க்கியானம் எனும் தர்ம நகுஷ ஸம்வாத சரிதத்தில் உள்ள

𑌸𑌤𑍍𑌯𑌂 𑌦𑌾𑌨𑌂 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌶𑍀𑌲𑌮𑌾𑌨𑍃𑌶𑌂𑌸𑍍𑌯𑌂 𑌤𑌪𑍋 𑌘𑍃𑌣𑌾 | 𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑌤𑍍𑌰 𑌨𑌾𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌸 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ||

ஓ நாகேந்திரா! ஸத்தியம், தானம், பொருமை, நடத்தை, அஹிம்ஸை, தவம், தயை, இவை எவனிடம் காணப் படுகின்றனவோ அவனே ப்ராம்மணன் என்பதாம்.

என்பது முதலிய தர்மநந்தனர் வாக்கியத்தினாலும் இப்படியே அறியப் படுகின்றது.

(5) உத்தியோக பர்வாவில் "விதுரப்ரஜாகரம்" எனும் பிரகரணத்தில் வருணத்தில் கீழ்ப்பட்டவராகிய விதுரர் மேற்பட்டவராகிய திருதராஷ்டிரனுக்கு ஞானோபதேசம் செய்ததாகச் சொல்லப்படுகின்றது. அதனாலும் குணத்தினாலேயே ப்ராம்மணன் என்பதாம்.

(6) ஸ்ம்ருதிகளிலும்

ஜந்மநா ஜாயதே ஶூத்³ர꞉ ஸம்ஸ்காராத் த்³விஜ உச்யதே। வித்³யயா யாதி விப்ரத்வம் ப்³ரஹ்மவித் ப்³ராஹ்மணஸ்ம்ருத꞉

> பிறவியினால் சூத்திரத்தினாகப் பிறக்கின்றான். ஸம்ஸ்காரத்தினால் த்விஜன் என்பதாம். வித்யையினால் விப்ரன் என்பதாம். ப்ரும்மத்தை உணர்ந்தவன் ப்ராம்மணன் என்பதாம்

என்பது முதலிய வாக்கியங்களால் சாதாதபர் முதலிய பெரியோர்களால் இவ்வாறே கூறப் பட்டிருக்கின்றது. இங்ஙனம் கூறிய ஆறு எதுக்களால் ப்ராம்மணன் என்பது ஞானம் முதலிய தன்மைகளாலேயே என்று சொல்லுவது தகுமே! எனும் சங்கை தற்காலம் விசேஷமாக நிகழுகின்றது.

இவ்விதம் தற்காலத்தவர் சங்கித்தலுக்குக் காரணம் ஆராய்ச்சிக் குறைவும் ஸத்ஸஹவாஸ மின்மையும் கலியின் கொடுமையுமே யாம் என்றறிக. அதாவது குணத்தினாலேயே பிராம்மண்யம் முதலிய ஜாதி பேதம் எனின், ஒரே மனிதனுக்கு அடிக்கடி குணம் மாறுபாடடைகின்றது. ஆதலால் பிராம்மண்ணியம் முதலிய ஜாதி பேதமும் அடிக்கடி மாறுபா டடைகின்றது என்றல்லவோ சொல்லவேண்டியதாகும். மனஸுக்குள்ளாகவே நடக்கும் குண மாறுபாடுகளை வெளிப்படையாய் மற்றவர் அறிந்துகொள்ள இயலாதாதலால், அவ்வப்போது அவ்வம் மனிதனை எந்த ஜாதியோன் என நிச்சயமாகச் சொல்லுதற்கு இடமில்லாமற் போகின்றமையால், பிராம்மணன் என்பது முதலிய வியவகாரமே ஸித்தியாமற் போகும். அங்ஙனமாயின் பிராமணன் என்பதாதி ஜாதிகளை ஸித்தமாகக் கொண்டு கர்மங்களை விதிக்கின்றனவாகிய மனு முதலியோருடைய தர்ம சாஸ்திரங்களெல்லாம் அவலமாகவே முடியும். ஆதலால் குணத்தினால் ப்ராமணன் என்பது மிகவும் அநுசிதமே யாகின்றது.

இனி முதலாவது ஹேதுவாய்ச் சொல்லப்பட்ட வஜ்ஜிரசூசிகோப நிஷத்தை விசாரிப்போம். இவ்வுபநிஷத்தில் 'தர்ஹி ஜாதிர் ப்³ராஹ்மண இதி சேத் தந்ந' ஜாதிப் பிராம்மண்யம் எனின் அல்ல " என்றது போலவே " தர்ஹி ஜ்ஞாநம் ப்³ராஹ்மண இதி சேத் தந்ந " ஆனால் ஞானம் பிராம்மண்யம் எனின் அதுவுமல்ல " என்று ஞானத்தினாலும் ப்ராம்மணன் என்பதல்ல என்று அதே உபநிஷத்தில் சொல்லப் பட்டிருக்கின்றதே. அப்படியிருக்க ஜாதி ப்ராம்மண்யமல்ல என்பதை மட்டும் பிரமாணமாகக் கொண்டு ஞானத்தினால் ப்ராமணன் என்பதல்ல என்று சொல்லி யிருப்பதை பிரமாணமாகக் கொள்ளாமலிருத்தல் உசிதமாகுமோ? அல்லவன்றோ. உண்மையில் இவ்வுபநிஷதமானது

ஞானபாகத்தை ஸ்துதிப்பதன் பொருட்டு மாத்திரம் பிரவர்த்தித்துள்ளது என்பதே அறியத் தக்கது. எனெனின் அவ்வுபநிஷத்தில்.

“ 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑍋 𑌵𑌰𑍍𑌣𑌾 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑍈𑌶𑍍𑌯𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨 𑌇𑌤𑌿 𑌵𑍇𑌦𑌵𑌚𑌨𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌭𑌿𑌰𑌪𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍”

> “நான்கு வர்ணங்களாம். அவைகளில் ப்ராம்மணனே ப்ரதானன் என வேத வசனங்களை அநுசரித்து ஸம்ஸ்ருதிகளிலும் சொல்லப் பட்டிருக்கின்றது”

என உபக்கிரமத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றமையால் உபஸம் ஹாரத்திலும் அதனை யனுஸரித்தே ஸ்ம்ருதி புராணேதி ஹாஸங்களையும் ப்ர மாணமாகச் சொல்லியிருக்கின்றமையாலும் வஜ்ஜிர சூசிகோப நிஷத்திற்கு ஜாதி ப்ராமண்யத்தை நிஷேதித்தலில் கருத்தென்பது மிக்க ஆராய்ச்சிக் குறைவேயாம் என்க. ஞானியைச் சிறப்பிக்க இவ்வுபநிஷதம் ப்ராம்மணனோடு ஐக்கியப்படுத்தி ஔபசாரிகமாகக் கூற வந்ததானது பற்றியே பிராம்மணன் முதலியது ஞானத்தி னாலேயே என்பதல்ல இயற்கையில் வேறு வகையே என் பதை நன்கு விளக்க வந்ததாகின்றது.

இனி இரண்டாவது ஹேதுவாகிய பகவத் கீதையை விசாரிப்பாம்.

॥𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃॥ நான்கு வர்ணங்கள் என்னால் குண கர்மப் பிரிவினைகளைக் கொண்டு ஸ்ருஷ்டிக்கப் பட் டன எனும் இச்சுலோகத்தில் என்னால் நான்கு வர்ணங்கள் ஸ்ருஷ்டிக்கப் பட் டன என்றதனால்

“𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌬𑌾𑌹𑍂 𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑌃 ।
𑌊𑌰𑍂 𑌤𑌦𑌸𑍍𑌯 𑌯𑌦𑍍𑌵𑍈𑌶𑍍𑌯𑌃 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑍋 𑌅𑌜𑌾𑌯𑌤 ”

> இவன் முகத்தினின்றும் பிராம்மணன் தோன்றினான், கைகளினின் றும் க்ஷத்திரியன் உண்டானான், துடையினின்றும் வைசியனும், கால்களினின்றும் சூத்திரனும் தோன்றினான்

என்பது முதலிய சுருதிகளில் கூறியபடி ஸ்ருஷ்டியாதி யிலேயே பிறவி மாத்திரத்திலேயே பிராமணன் முதலிய ஜாதிப் பிரிவினர் என்னால் ஸ்ருஷ்டிக் கப் பட்டனர் என்றதனால், ஞானத்தினாலாவது குணங்களினாலாவது ப்ராம் மண்யம் முதலியன என்று ஏற்பட வில்லை. இனி ஸர்வலோகங்களுக்கும் ஸர்வ ஜீவர்களுக்கும் பொதுவாயிருக்கும் ஈசன் சிலரைப் பிராமணராகவும் சிலரை மற்ற வருணத்தோராகவும் உண்டாக்கினார் என்றதினால் அவர் பாரபக்ஷமும் வைஷம்ய தோஷமு முடையோர் என்றேற்படுமே எனும் சங்கை நிகழும். ஆதலின் அங்ஙனம் நிகழா வண்ணம்

“ 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃”

ஓ அர்ச்சுன நான் பாரபக்ஷம் வைஷம்யம் முதலியவைகளினல் வர்ண பேதத்தை உண்டாக்கினேன் என்பதில்லை. ஆனல் அவர்களின் பூர்வ ஜன்ம குணத்தையும் கருமத்தையும் நோக்கியே ஸ்ருஷ்டித்தேன்

என்று அந்த சுலோகத்திலேயே சொல்லப் பட்டது. இதனல் ப்ராமணன் முதலிய பேதம் பூர்வ கர்மத்திற்குத்தக்கபடி ஸ்ருஷ்டிக்கப் பட்டதென்று ஏற்படுகின்றமையால் பிறந்த பிறகு நிகழும் ஞானத்தினலேயே பிராம்மணனென்பதான "குணப்பிராம்மண்யம்" எனும் விஷயத்திற்கு இச்சுலோகம் சிறிதும் ஸாதகமாகவில்லை. ஆனல் பூர்வ கர்மத்தினல் பிறவி மாத்திரத்திலேயே ப்ராம்மணன் என்பதையே இச்சுலோகம் போதிக்கின்றது. ஆதலால்பகவத்கீதையும் ஜாதியினல் பிராம்மணன் என்பதையே ஸ்தாபிப்பது என்பதறிக.

இனி, "கௌசிகன் எனும் வேதியன் தர்ம வியாதன் எனும் வேடனிடம் உபதேசம் பெற்றதாகக் கூறப்படும் சரிதத்தினுலும் ப்ராம்மணன் என்பது ஞானத்தி னலேயே" எனச் சொல்லிய மூன்ருவது ஹேதுவைச் சற்று கவனிப்பாம்.

கௌசிகன் என்னும் பிராமணன் தான்தாய் தந்தையரோடிருத்தல் வேதாத்தியனத்திற்கு இடைஞ்சலாகின்றது என யோஜித்து, அங்ஙனம் இடைஞ்சல் நிகழாவண்ணம் ஓர் நாள், கிழவர்களாகிய அவ்விருவர்களையும் விடுத்துத் தனியே சென்று அரண்யத்தில் ஓர் மரத்தடியில் உட்கார்ந்து வேதம் ஓதிக்கொண்டிருந்தான். அப்போது அம்மரத்தின் கிளையிலிருந்த ஓர் கொக்கு அவன் தலையில் விழும்படி மலவிஸர்ஜனம் செய்யவே, அந்தப் பிராமணன் கோபத்தோடு பார்க்கும்போது அந்தக்கொக்கு அவனது கோபாக்கினியால் எரிந்து சாம்பராகியது. பிறகு அந்தப் பிராமணன் பசியினல் பிக்ஷை வாங்குவதன் நிமித்தம் சற்றுத்தூரத்தில் உள்ள ஓர் பிராமணன் வீட்டிற் சென்று பிக்ஷை கேட்கவே, அவ்வில்லத்திலுள்ள அம்மாள் வெளியிலிருந்து அப்போது வந்த பர்த்தாவுக்குப் பணிவிடை செய்ததனல் சற்றுத்தாமதித்துப் பிக்ஷையிடவந்தாள். அப்போதுபிராமணன், தாமதித்ததற்காகக்கோபங்கொள்ளவே அவ்வம்மாள் ஓபிராம்மணரே? நானும் கொக்கல்ல. கோபிக்கவேண்டாம் என்றனள். அதைக் கேட்டு அவன்மிகவும் ஆச்சரியத்தோடு திடுக்கிட்டு ஓஅம்மா!நான்கொக்கை எரித்தது உன்னல் எப்படி அறியப்பட்டது? எனக்கேழ்க்க அதற்கு அவ்வம்மை

ശുശ്രൂഷാഫലംപശ്യ ഭർത്തുർബ്രാഹ്മണപുംഗവ |
ബലാകാഹിത്വയാക്രോധാത് ദഗ്ധാ തദ്വിദിതം മയാ ||

ஓப்ராம்மணரே! எனது பர்த்தாவின் சிச்ருஷையின் பயன்எப்படிப் பட்டதென்பதைப்பாரும். உம்மால் கோபத்தால் கொக்கு தஹிக்கப் பட்டதென்பது என்னல் அறியப்பட்டது

என்பது முதலிய சுலோகங்களால் ஓ ஸ்வாமி நான் வேதசாஸ்திரங்களை ஓதியவளல்ல. யோகம் தவம்முதலியவைகளிலும் சென்றதில்லை. இவ்வாறுஅறி

ந்ததற்குக்காரணம் பதிசுச்ரூஷையே. ஸ்வதர்மத்திஞல் அடையக்கூடாதபயன் யாதுமில்லே. எனது ஸ்வதர்மம் பதிசுச்ரூஷையைத் தவிரவேறில்லையன்ருே என்பது முதலியவாக்கியங்களேச் சொன்ஞள். பிறகு ஸ்வதர்மத்தை யநுஷ்டிப் பவன் எவஞபினும் அவன் மிக்கப் பாக்கியங்களேப் பெறுவான் என்பதற்குத் திருஷ்டாந்தத்தைக் காண்பிக்கவே மிதிலேயிலுள்ள தர்ம வியாதன் எனும் வேட ஞிடம் அந்தப்பிராமணனே அனுப்பிஞள். இதுவே தவிர அவனிடம் உபதேசத் திற்கனுப்பியதில்லே. பிராமணனும் அவ்வாறே அங்குசெல்ல, அவரைக்கண் டதும் அந்த தர்ம வியாதன் ஓடி வந்து,

[illegible] ||
[illegible] ||

> ஓ பகவனே தங்களே நமஸ்கரிக்கின்றேன். தங்களுக்கு நல்வரவா? நான்வேடன். தங்களுக்கு யாதுசெய்யவேண்டும்? ஆக்ஞைசெய் யுங்கள்?

என்பது முதலிய சுலோகங்களில் சொல்லியபடி அந்தப்பிராமணனே வே டன் நமஸ்கரித்துக் கைகட்டிநின்முன். ஞானமுள்ளவனே பிராமணனெனின் ஞானத்தினில் சிறந்த தர்ம வியாதன் பிராமணனென்றல்லவோ ஏற்படும். அங் ஙனமாயின், ஞானமில்லாதவனும் கோபமுதலிய இழிய குணங்களுடையோ னுமாகிய அவ்வந்தணனே அந்த வியாதன் நமஸ்கரித்துக்கைகட்டி நிற்க நியாய மிருக்குமா? இதஞலேயே ஞானத்திஞல் பிராம்மணனல்ல, ஞானமில்லாதவஞ யினும் பிறவியிஞல் மட்டும் பிராமணஞயுள்ளவனே அபாரஞான குணங்கள் பொருந்திய மற்றவர்களும் நமஸ்கரிக்கவேண்டியது எனும் மர்மமே அறியப் படுகின்றது. அன்றியும் பிறகு அந்தவேடன், பிராம்மணர் அங்கிருக்க மாம்ஸ வியாபாரமாகிய தனதுகொடிய வேலேயைச்செய்யத்தலேப்படவே, பிராம்மணன் அந்த வேடனே நோக்கி உனக்கேனிந்த ஹிம்ஸைத்தொழில்? இதனேவிட்டு விடேன்? என்றுசொல்ல அதற்கு அவ்வேடன், ஓஸ்வாமி? தன் ஜாதிக்கு இது ஸ்வதர்மம். ஆதலின் தனக்கு இதுபாபமாகாது. தனது பிறவியால் வந்த ஜாதி தர்மத்தை விடுதலே பாபமன்றி ஸ்வதர்மத்தை அநுஷ்டிப்பதில் சிறிதும் கேடி ல்லே. அதுவே பெரும்புண்ணியம். ஸ்வதர்மாநுஷ்டானத்திஞல் ஸகலபேறுகளே யும் பெறலாம் என்பதைத்தெரிவித்துக்கொள்ளக்கருதி, தன் ஜாதிமுறையின் தர்மத்தைச்சிறிதும் வழுவாமல் ஸகல ஜனங்களேயும் பாதுகாக்கும் ஜநகனு டைய ராஜ்யபாலனச்சிறப்பை எடுத்துச்சொன்ஞன்.

அதனேக்கேட்டு அந்தப்பிராம்மணன் தர்மவியாதனே நோக்கி

[illegible] | [illegible] | [illegible] | [illegible]

[illegible]

ஸத்தியத்தையும் தர்மத்தையும் சொல்லுகின்ருய். எந்த உண்மையைச் சொல்லுதல் அரிதோ ? ஆதலால் உன்னைத் திவ்யமஹிமையுடையோனுகிய மஹருஷியென்றே நினைக்கின்றேன். எந்தச் சூத்திரன் தவம், ஸத்தியம், தர்மம் முதலியவைகளிலேயே எப்போதும் செல்லுகின்ருனே அவனைப் பிராமணனென்றே நான் எண்ணுகிறேன். குணத்தினுலல்லவோ பிராமணன்

என்பது முதலிய சுலோகங்களில் கூறியவாறு ஓ தர்மவியாதா! உன்னைப் பிராமணன் என்றே எண்ணுகின்றேன். பிராமணன் என்பது குணத்தினுலன்ரே எனச்சொல்லிக்கொண்டு தனக்கு ஏதோ உபதேசம் பெற்றுக்கொள்ள விருப்பமிருத்தலைத் தெரிவித்துக்கொள்ள, அப்போது அதனைக்கேட்ட தர்மவியாதன் ஓ ஸ்வாமீ!

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ப்ராம்மணர்களே பெரியோர். ஸகலத்திலும் முந்தினவர். எல்லோருக்கும் தந்தைகளாயுள்ளவர். ஓ பிராமணரே ! பிராமணரைச்சென்றடைந்து நமஸ்கரித்து ப்ரும்ம வித்தையை அறிந்துகொள்ளும். எனக்குறிய தர்மத்தைப்பிரத்தியக்ஷமாய்ப் பாரும். எதனுல் இவ்வளவு ஸித்திகளைப்பெற்றேனே அதனைக்காண்பிக்கின்றேன்.

எனத்தன்னிடம் உபதேசம் பெறக்கூடாதென்பதையும், தான் உபதேசம் செய்யத்தக்க யோக்கியதையாகிய ப்ராமண்யம் இல்லாதவனென்றும், பிராமணர்களை நமஸ்கரித்து அவ்வுபதேசத்தைப்பெற்றுக்கொள்ளும் என்றும், பிராமணர் இயல்பாகவே பெரியோர் என்றும், தனக்கு இத்தகைய ஸித்திகளுக்கு ஹேது ஸ்வதர்மத்தில் நின்றும் வழுவாதிருத்தலே என்றும் சொல்லிக்கொண்டு அந்தப் பிராமணரை வீட்டிற்குள் அழைத்துச்சென்று தன்தாய் தந்தையரைக் காண்பித்து

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஓ பகவனே பிதாவும் மாதாவுமே எனக்குப் பரமதேவதை. தேவர்களுக்குச்செய்யவேண்டியதை இவர்களுக்கே செய்கின்றேன். எனக்குஅக்கினிகள் இவர்களே. எவ்வக்கிநிகளைப்பெரியோர்கள் கூறு கின்றனரோ. வேள்விகளும் வேதங்கள் நான்கும் இங்ஙனமாகிய ஸகலமும் எனக்கு இவர்களே. இருபிறப்பாளரைப் பூசிப்பதிலும் தர்மத்திலுமே நான் விருப்பமுடையோன்

எனத்தனக்குப் பிதிருமாதிருசிச்ரூஷையும் ஸ்வதர்மானுஷ்டானமுமே ஸகலசித்திகளுக்கும்ஏதுவாயுள்ளதென்று சொன்னான்.

இதைக்கேட்டதும் அந்தணன் அவனது ஸ்வதர்மாநுஷ்டானத்தையும் பிதிருமாதிருசிச்ரூஷையையும் த்விஜர்களிடம் பக்தி சிரத்தையையும் கண்ணுற்று, இவ்வளவு தன்மையும் வேதசாஸ்திராத்தியயனம் தவம் முதலிய யாது மில்லாத உனக்கு எப்படி வந்ததெனக்கேட்க, அதற்கவ்வேடன் பூர்வம் தான் பிராமணனாகப் பிறந்து வேதசாஸ்திரங்களை நன்கோதியறிந்தும், ஓர் அரசனோடு ஸ்நேஹம் செய்துகொண்டு அவனோடு வேட்டைக்குக் கானகம் சென்று அங்குள்ள மிருகங்களைத் தானும் வதைத்துக்கொண்டிருக்கும்போது,தவறுதலாக ஓர் ரிஷியினிடம் பாணத்தைப் பிரயோகிக்க, அதனால் அவர் வருந்தி மரணமடையும்படி நேர, அப்போது அவர் கோபத்தினால் அடா! நீ பிராமணனாகப் பிறந்தும் சமதமாதிகளாகிய ஸ்வதர்மத்தை விட்டுத் துலைத்து அஸ்திரசஸ்திரமெடுத்து நிக்கிரஹித்தலாகிய பரதர்மத்தைக்கைக்கொண்டதினால் கடோரமான செய்கைகளாலேயே நிறைவேறுவதாகிய தன்மையையுடைய வேடனாகப் பிறக்கக்கடவாய் எனச்சபித்தனர். பிறகு அவரை நான் மிகவும் வேண்டிக்கொள்ளவே பூர்வஜன்மஞானமுமுண்டாகும்படி அநுக்கிரஹித்தார். அங்ஙனமாகிய முனிவர் சாபத்தால் இக்கொடிய யோநியையடைந்துளேன். ஆனால் பூர்வஜன்ம ஞானத்தினால் இவ்விஷயங்களைச் சொன்னேன். இத்தகைய நிலைமியிலிருக்கிறேன். இனியான் எனதுவேலையைத் தொடங்கவேண்டும். நீவிர் உமது ஆச்ரமத்தின் ஸ்வதர்மமாகிய மாதிரு பிதிரு சுச்ரூஷையை விட்டு வேதமோதுதலையே முக்கியமாய்க் கருதிநீர்

𑌤𑍍𑌵𑌯𑌾 𑌵𑌿𑌨𑌿𑌕𑍃𑌤𑌾 𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌚 𑌦𑍍𑌵𑌿𑌜𑌸𑌤𑍍𑌤𑌮 ।
𑌅𑌨𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑍋𑌽𑌸𑌿 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍋 𑌗𑍃𑌹𑌾𑌤𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤 ।
𑌵𑍇𑌦𑍋𑌚𑍍𑌚𑌾𑌰𑌣𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌮𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑌾 𑌕𑍃𑌤𑌂 ।
𑌤𑌵 𑌶𑍋𑌕𑍇𑌨 𑌵𑍃𑌦𑍍𑌧𑍌 𑌤𑌾𑌵𑌨𑍍𑌧𑍀𑌭𑍂𑌤𑍌 𑌤𑌪𑌸𑍍𑌵𑌿𑌨𑍌 ।
𑌤𑍌 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌯𑌿𑌤𑍁𑌂 𑌗𑌚𑍍𑌛

ஓ பிராமணரே உம்மால் தாயும் தந்தையும் வஞ்சிக்கப்பட்டனர். அவர்களது அநுமதியைப் பெறாமல் இல்லத்தினின்றும் வேதோச்சாரணத்திற்கென புறப்பட்டது மிகவும் அயுக்தம். உம்மைக்குறித்து அவர்கள் சோகத்தினால் மிகவும் துன்புறுகின்றனர். அவர்களை ஸந்தோஷப்படுத்தச் சொல்லுவீராக

என்பது முதலிய வாக்கியங்களைச் சொன்னதும், பிராமணரும் தாய் தந்தையருக்குச் சிச்ரூஷை செய்ய வந்து சேர்ந்தனர், என மஹாபாரதம் தர்மவியாதோபாக்கியானத்தில் சொல்லப்படுகின்றது. இங்ஙனமேயன்றி தர்மவியாதனைப் பிராமணன் குருவாக அடைந்து பணிந்து உபதேசம் பெற்றதாக ஓர் வாக்கியமேனுமில்லை.

இனித் தர்மவியாதன் அந்தணரை நோக்கி "கோபம் மிக்க கெடுதி" ஸ்வதர்மத்தை வழுவவிடக்கூடாது" "தந்தையருக்குச் சிச்ரூஷைசெய்ய வேண்டும்" என்பது முதலிய வாக்கியங்களைச் சொல்லியது உபதேசமாகாதோ எனின் அல்ல என்க.

உபதேசமாவது, குருவினை அடி பணிந்து பிரார்த்திக்கும் சிஷ்யனுக்கு உண்மையைப் போதித்தலேயன்றி வேறல்ல. வேடன் மாதா பிதாவுக்குத்தான் செய்யும் சிச்ரூஷை முதலிய தனது ஸ்வதர்மாநுஷ்டானத்தினால் ஸகலமும் அறியும்படியாகிய வித்திகிடைத்ததையும் அந்தணனுக்குச் சொல்லிக்கொண்டு வந்ததைக்கொண்டே தர்மவியாதனிடம் கௌசிகர் உபதேசம் பெற்றனர் என்பது உசிதமாகுமா? அப்படியானால் நாம் தினந்தோறும் எத்தனையோ பேர்களிடம் எவ்வளவோ ஸமாசாரங்களைச் சொல்லிக்கொண்டிருக்கின்றோமன்றோ. அதனால் அவ்வளவு ஜனங்களுக்கும் நாம் குருவென்று சொல்லலாமா? தர்மவியாதனிடம் பிராமணன் உபதேசம் பெற்றது வாஸ்தவமாயின்

"நஶுஶ்ரூஷஸ்வ ப்ராஹ்மணாந் ப்ராஹ்மீம் வித்யாமவாப்ஸ்யஸி॥"

பிராமணர்களை வணங்கி அவர்களிடம் ப்ருஹ்ம வித்தையை உபதேசம் பெற்றுக்கொள்"

எனத் தர்மவியாதன் ஏன் அந்தப் பிராமணனை நோக்கி சொல்லவேண்டும்?

உண்மை யிவ்விதமாதலால் தர்ம வியாத சரித்திரத்தினாலும் ஞானத்தினால் பிராம்மணன் என்பது ஸித்தியாது.

இனி நான்காவது ஹேதுவை விசாரிப்பாம். அஜகர உபாக்கியானத்தில் ஸத்தியம் அஹிம்ஸை முதலிய நற்குணங்களை யுடையோனே பிராமணன் என்று தருமர் சொல்லியதில் உள்ள மர்மம் இதுவேயாம். அதாவது, உலகில் மனிதனுடைய சூரத் தன்மையைக் கொண்டு இவன் புலியே என்று சொல்வதுண்டு. வாஸ்தவமாகிய புலியையும் புலி என்பதுண்டு. வாஸ்தவமாகிய புலியையே புலி என்பது "முக்கிய விருத்தி" யென்றும், புலிக்குறிய சூரத்தன்மை முதலிய குணங்களையுடைய மனிதனை நோக்கி இவன்புலி என்பது "கௌண விருத்தி" யென்றும்சொல்லப்படும். முக்கிய விருத்தி, கௌண விருத்தி, என இரண்டு விருத்திகளைக் கொண்டு சொற்களை பிரயோகிப்பது கீர்வாண பாஷையின் வழக்கம். உதாரணமாக

நவிஷம் விஷமித்யாஹுர் ப்ரஹ்மஸ்வம் விஷமுச்யதே।
விஷமேகாகிநம் ஹந்தி ப்ரஹ்மஸ்வம் புத்ரபௌத்ரகம்॥

> விஷத்தை விஷமென்று சொல்லுவதில்லை. பிராமணனது ஸொத்தே விஷமாம். விஷம் புசித்த ஒருவனையே கொல்லும். பிராம்மணனுடையது புத்திர பௌத்திராதிகளையும் கொல்லும்

என்பது முதலிய இடங்களில் கௌண விருத்தியால் சொல்லப்பட்டிருப்பது போல நற்குணங்களுள்ளவன் சண்டாளனாயினும் பிராம்மணனே என்பது கௌணவிருத்தியினாலேயே என்றறிக.

சூரத்தன்மையுள்ள மனிதனை "இவன் புலியே" என்றாலும் அவன் எப்படி வாஸ்தவமாகவே புலியல்லாதவனோ. அங்ஙனமே வாஸ்தவமாகவேயுள்ள புலி வியாதி முதலியவைகளால் சும்மாகவே படுத்திருத்தலைநோக்கி "இதுநாயே" என்றாலும் அது எங்ஙனம் உண்மையில் நாயாகாதோ, அவ்வாறே நற்குணங்களுடையவனாகிய நீசனைப் பிராம்மணன் என்பதும் நற்குணங்களில்லாத தீயகுணங்களையுடைய அந்தணனைநோக்கிச்சண்டாளன் என்பதுமாம். இங்ஙனம் வடமொழி வழக்கமாதலால் இத்தகைய கௌணவிருத்தியைக்கொண்டே 'அஹிம்ஸை முதலிய நற்குணங்களையுடையவனே பிராம்மணன்' எனத்தர்மபுத்திரரால் நகுஷனை நோக்கிச் சொல்லப்பட்டது. வடமொழி வழக்கத்தையறிந்தவராயின் புராணேதிஹாஸங்களில் குணத்தினால் பிராம்மணனென்றது கௌணவிருத்தியாலேயேயன்றி முக்கிய விருத்தியாலல்ல என்பதை நன்றாயறிந்திருப்பார். ஆதலால் ஞானத்தினால்பிராம்மணன் என்று சொல்லமாட்டார். ஆதலால்அஜகரவிருத்தாந்தத்தைக்கொண்டும் பிறவிப்பிராமண்யமே ஸித்தாந்தமாகின்றது.

இனி ஐந்தாவது ஹேதுவை விசாரிப்பாம். பிறவியினாலேயே பிராம்மண்யமெனின் நான்காம் வருணத்தாராகிய விதுரர், க்ஷத்திரியவர்ணத்தானாகிய திருதராஷ்டிரனுக்கு உபதேசம் செய்ததாக உத்தியோக பருவாவில் சொல்லியது எப்படி ஒவ்வும்? என்பது மிகவும் பேதமையே. திருதராஷ்டிரன் ஏக்கத்தினால் தூக்கங்கொள்ளாமலிருக்கும்போது, போதுபோக்காகயாதானும் பேசி மனஸை ஸமாதானப்படுத்திக் கொள்வோமென்று விதுரனை வரவழைக்க அவ்வாறே அவன் போதுபோக்காகிய வசனமாயினும் ஹிதமாயும் நீதியாயும் உள்ளவாக்கியங்களைச் சொல்லிக்கொண்டு வந்தான். அங்ஙனம் திருதராஷ்டிரனுக்கு விதுரன் சொல்லியதே "விதுரப்ரஜாகரம்" எனும் பிரகரணம். அங்ஙனம் சொல்லியநீதி மொழிகளைக்கேட்டதும்அந்தத் திருதராஷ்டிரனுக்கு விதுரனிடமேஞானதத்துவத்தையும் கேட்க விருப்பம் வந்தது. அங்ஙனமே தனக்கு அதனையுபதேசிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொள்ள, அதற்கு விதுரன்

> " 𑌶𑍂𑌦𑍍𑌰𑌯𑍋𑌨𑌾𑌵𑌹𑌂 𑌜𑌾𑌤𑍋 𑌨𑌾𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌦𑍍𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍁𑌤𑍍𑌸𑌹𑍇 ।
> "𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀𑌂 𑌹𑌿 𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌸𑍍𑌸𑍁𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌪𑌿 𑌯𑍋 𑌵𑌦𑍇𑌤𑍍 ॥

> சூத்திரயோநியில் யான் தோன்றியவனாதலின் மற்றும் கேட்டுக் கொண்ட விஷயத்தை உமக்குச் சொல்ல மனந்துணியவில்லை. பிராமணயோநியில் பிறந்தவனேதத்துவத்தைச் சொல்லத் தக்கவனாவன்.

எனத்தான் சூத்திர யோநியில் தோன்றியமையால் உபதேசம் செய்ய அர்ஹனல்லன். பிராம்மண யோநியில் தோன்றியவனே தத்துவ முபதேசிக்கத்

தக்கவன். என அதே பர்வாவில் ஸநத்ஸுஜாதீய ஆரம்பத்தில் வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றமையால் அச்சரிதத்தாலும் பிறவியிலேயே பிராம்மண்ய மென்பதே வியக்தமாகின்றது.

இனி ஸ்ம்ருதிகளிலும்

ஜந்மநா ப்ராஹ்மணோ ஜ்ஞேய: ஸம்ஸ்காரைர் த்விஜ உச்யதே| அத்ரி.

பிறவியினால் பிராமணனென்று அறிக. ஸம்ஸ்காரங்களால் த்விஜன் என்பதாம்.

ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணேநைவ உத்பந்நோ ப்ராஹ்மண: ஸ்ம்ருத: |

ஹாரீதர்:—பிராம்மணியினிடம் பிராமணனாலேயே உண்டானவன் பிராமணனென்பதாம்.

“ ஶூத்ராத் ஜ்ஞாநம் க்ருஹீத்வா தபஸா ஜ்வலிதம் பரம்|| ஆபஸ்தம்பர்

சூத்திரனிடம் ஞானம் ஸம்பாதித்தல் தபஸினால் ஜ்வலிப்பவனையும் பாதகம் செய்தவனுக்கும்

ஸமமப்ராஹ்மணே தாநம் த்விகுணம் ப்ராஹ்மணப்ருவே| ஸஹஸ்ரகுணமாசார்யே ஹ்யநந்தம் வேதபாரகே || பராசரர்

அப்ராமணனிடம் (ப்ராமண துல்யனிடம்) தானம் சாதாரண பலத்தை யுடையது. ப்ராமண ப்ருவனிடம் தானம் இரட்டிப்புப் பயனும். ஆசார்யனிடம் ஆயிரம் பங்காம். வேத பாரகனிடம் அளவைகடந்துள்ள பயனும்.

ப்ராஹ்மணீஜஸ்ஸமுத்பந்நோ மந்த்ர ஸம்ஸ்கார வர்ஜித:||
ஜாதிமாத்ரோபஜீவீ ச ஸ பவேத் ப்ராஹ்மணஸ்ஸம: ||

ப்ராமண பீஜத்தினு லுண்டாய் மந்திர ஸம்ஸ்காரங்களின்றிஜாதி மாத்திரத்தைக் கொண்டு ஜீவிப்பவன் ப்ராமண ஸமனென்பதாம்.

கர்ப்பாதாநாதிபிர்யுக்தஸ்ததோபநயநேந ச |
நாத்யாபயதி நாதீதே ஸ பவேத் ப்ராஹ்மணப்ருவ:||

கர்ப்பாதனம் முதலிய ஸம்ஸ்காரங்களையும் உபநயன காயத்திரி உபதேச மாத்திரத்தையும் உடையவனாய் அத்தியயனம் செய்விக்காமல் தானும் அத்தியயனம் செய்யாமலுள்ளவன் ப்ராமண ப்ருவன் என்பதாம்.

அக்நிஹோத்ரீ தபஸ்வீ ச வேதமத்யாபயேச்ச ய: |
ஸகல்பம் ஸரஹஸ்யம் ச தமாசார்யம் ப்ரசக்ஷதே ||

அக்கினி ஹோத்ரமுடையவனும் கிருச்சிரசாந்திராயணாதிகளையுடையவனுமாய் கல்ப ஸூத்திரங்களோடும் நிருக்தத்தோடும் வேதத்தை யோதியவன் ஆசார்யன் என்பதாம்.

ஸாங்கோபாங்காந் வேதாந் ஷட்தர்ஸநைஸ்ஸஹ விந்ததே ।
இதிஹாஸ புராணாநி ஸஹவேதைஸ்து பாரகः ॥

ஆறு அங்கங்களோடும் தரிசனந்தரங்களோடும் கூடியவனாய் வேதங்களின் அர்த்தத்தையும் இதிஹாஸ புராணங்களையும் விசாரித்தவன் வேதபாரகன் என்பதாம்

என்பது முதலிய ஸ்ம்ருதிவாக்கியங்களினாலும் பிறவியினாலேயே பிராமணன் என்பது நன்றாயறியப்படுகின்றது. ஆதலால் ஆறாவது ஹேதுவினாலும் பிறவியினாலேயே ப்ராம்மண்ய மென்பது நிர்ணயிக்கப்படுகின்றது.

தபோதமோ தயா தாநம் ஸத்யம் ஸௌசம் ஸ்ருதம் க்ருணா ।
வித்யா விஜ்ஞாநமாஸ்திக்யமேதத் ப்ராஹ்மணலக்ஷணம் ॥

தவம், தமம், தயை, தானம், சத்தியம், தர்மம, சிரவணம், இரக்கம், வித்யை சாஸ்திரஞானம், இவை ப்ராம்மணலக்ஷணமாம்

என்பது முதலிய வாக்கியங்கள் சிறப்பையே போதிக்க வந்தன. அதாவது இத்தகைய நற்குணங்களுள்ளவன் பிராமண சிரேஷ்டனென்றும் இவையிராவிடில் ஸாதாரண பிராமணனென்றும் அறிக. நற்குணங்களுள்ளவனைப் பிராமணோத்தமனென்பதும் கெட்ட குணமுடையோனைப்பிராமணாதமனென்பதுமே நம் சாஸ்திரங்களின் கருத்து. இக்கருத்தையறியாமல் சொற்களின் பொருளைமாத்திரம் கொண்டு விஷயத்தை நிர்ணயிக்கப்பிரவர்த்தித்தால் அஸங்கதமாகவே முடியும்.

இவ்விசாரணையால் பிராமணன் முதலிய ஜாதி வேற்றுமை பிறவிமாத்திரத்தினாலேயே என்று நன்றாயறியப்படுகின்றமையால் பிராமணாதி வர்ணங்களையும் அவ்வவ்வாச்ரமங்களையும் பற்றி விதிக்கப்பட்ட கர்மங்கள் வெளிதேசங்களிலிருந்து இங்குவந்தவர்களுக்காவது இவ்விடத்திலேயே இருக்கும் நற்குணங்களமைந்த நீசர்களுக்காவது சிறிதேனும் பொருந்தாவென்றறிக.

உண்மையில் உலகிலுள்ள ஜனங்களின் பூர்வகர்மத்திற்குத் தக்கபடியே இறைவன் பிறவியைத் தருகின்றமையால் பிராமணன் முதலிய ஜாதி பேதத்தை ஏற்படுத்தியிருத்தல் சிறிதும் பாரபக்ஷத்தன்மைக்கு ஏதுவாகாது.

பாலூட்டி வளரும் குழந்தைகளுக்குப் பாலூட்டியும் சோறூட்டி வளரும் குழந்தைகளுக்குச் சோறூட்டியும் கலத்திலிட்டுப் புசிக்கின்ற குழந்தைகளுக்குக் கலத்திலிட்டும் பத்திய யிருக்கவேண்டிய குழந்தைகளுக்குப் பத்தியத்தோடும் வளர்க்கும் அன்னைக்கு அக்குழந்தைகளிடம் பாரபக்ஷ முள்ள தென்பது எப்படி அனுசிதமோ, அப்படியே உலகிலுள்ள ஜனங்களின் நிலைமைக்குத் தக்கபடி கர்மங்களை விதித்திருக்கும் சாஸ்திரங்களுக்கு உலகிலுள்ள மனிதர்களிடம் பாரபக்ஷமுள்ள தென்பதும் அநுசிதமே என்க. பள்ளிக்கூடத்தில் படிக்கும் பாலர்கள்வயதோடொத்தவரேயாயினும் அவர்களின் புத்தி பரிபாகத்திற்குத் தக்கபடி உபாத்தியாயர் பாட பேதங்களை வைத்துக் கற்பிப்பதுபோல, மனிதமாத்திரத்தில் உலகிலுள்ள ஸகலரும் ஒரே விதமாய்க் காணப்படினும் அவரவர்

பரிபாகத்திற்குத் தக்கபடி கர்மங்களை சாஸ்திர கர்த்தர்களாகிய நமது பூர்வாசாரியர் விதித்திருக் கின்றனர்.

இது வரையிலும் செய்த ஆராய்ச்சியால் பாபிகள், ஸாமான்னிய கர்மமுடையோர்,புண்ணியவான்கள், யோகிகள், ஸகுணஉபாஸகர் எனும் இவர்களுக்கு மாத்திரம் பரலோக (லோகாந்தர) கதிசொல்லப்பட்டதேயன்றி நிர்க்குணோபாஸகருக்கும் ஞானிகளுக்கும் எக்கதி என்பது சொல்லப்படவில்லையாதலால் அதனை இவ்விதமறிக.

நிர்க்குணஉபாஸகர், பரமாத்மஸ்வரூபமுணர்ந்து அவ்வாறு அனுபவிக்கும் ஞானிகள் ஆகிய இவ்விருவகையோருக்கும் மரணாவஸ்தைமாத்திரமன்றி உத்கிராந்திஎனும் லோகாந்தரகதி இல்லவேயில்லைஎன்றறிக. ஏனெனின், அவ்விருவர்களின் சித்தமானது பரிபூர்ணமாகிய பரமாத்மவஸ்துவையேபலகாலம் சிந்தித்து அவ்வாறே பரிபூர்ணத்தன்மை பெற்றுள்ளமையால் மரணாவஸ்தையில் இந்திரியப் பிராணாதிகள் ஒருக்கு சேர்ந்தும், மனம் மாத்திரம் பரிபூர்ணமாகவேயிருப்பதாதலால் அது வெளிப்பட்டுப்போவதில்லாமல் ஸர்வபரிபூர்ணமாகிய பரமாத்மவஸ்துவினிடம் ஒன்று பட்டுப்போகவே இந்திரியப்பிராணாதிகள், காரணமாகிய பூதங்களில் இவ்விடத்திலேயே ஒடுங்கிப்போக, மனோபந்தம் நீங்கப்பெற்று ஜீவாத்மத்தன்மை நீங்கிப் பரம்பொருளாகின்றனர் என்பதே சாஸ்திரமர்மம்.

ஸகுணோபாஸகர் ப்ருஹ்மலோகம் செல்லுகின்றதாய்ச் சொல்லப்பட்டது. அவர்கள் அங்கு எவ்வளவு காலமிருக்கின்றனர்? எனின், ப்ருஹ்மலோகத்திலேயே வெகு காலமிருந்து அஞ்ஞானபந்தம் முற்றும் ஒழிந்து முக்திபெறுவார்களேயன்றி மீண்டும் இங்குவந்து ஜனிக்கின்றதில்லை. இவ்விஷயம்

"தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி" — சந்தோக் 8-6-6

"தேஷாம் நபுநராவ்ருத்தி:|" — ப்ருஹதா 6-2 15

என்பது முதலிய ச்ருதிகளாலும்,

தத்ரபுக்த்வா மஹாபோகாந் திவ்யதேஹோ யதேப்ஸிதாந் | — பகவத்கீதா-

ப்ரஹ்மணா ஸஹ காலேந முக்தி மாப்நோதி தந்நு ||

ததோ த்ராக்ஷி கலாமீசம் ப்ரஹ்மணா ஸஹ முச்யதே ||

ப்ரும்ம லோகத்தில் திவ்விய தேஹத்தைக் கொண்டு வேண்டிய போகங்களைப் புசித்து வெகுகாலமிருந்து பிரும்மனோடுகூட முக்தனாகின்றான் (சிவகீதா)

எனும் கீதா வாக்கியங்களாலும்,

"கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹாத: பரம்" — ப்ரம்மஸூ 4-2-1

"அநாவ்ருத்தி: சப்தாத் அநாவ்ருத்தி: சப்தாத்" — ப்ரம்மஸூ 4-4-22

எனும் ப்ரும்ம ஸூத்திரங்களாலும் ஸ்பஷ்டமாய் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. ராகத்தோடு உபாஸித்தவராயின் அவ்வுலகினின்றும் நழுவுவார்.

இனி ஸ்வர்க்க நரகங்களுக்குச் சென்றவர் அங்கு எவ்வளவு காலம் இன்ப துன்பங்களைப் புசிப்பார்? பிறகு இங்கு எப்படி வந்து பிறப்பார்? எனின்,

தமது புண்ணிய பாபங்களுக்குத் தக்கபடி ஈசாக்ஞா நியதமாகிய காலம் எவ்வளவோ, அவ்வளவு காலம் அங்கு இன்ப துன்பங்களைப் புசித்துப் பின்னர் இவ்வுலகத்திற்கு ஆகாசாதிக் கிரமமாயிறங்கி வந்து பிறப்பார்.

அதாவது ஸ்வர்க்க நரகங்களிலிருந்து இங்கு வரும் ஜீவர்கள், அங்கு பெற்றுள்ள சரீரத்தோடு கூடவே அவ்விடங்களிலிருந்து நழுவுகின்றனர். அப்படி நழுவி யிறங்கும்போது அச்சரீரம் கொஞ்சம் கொஞ்சமாய் அழிந்து, மேக மண்டலம் வந்திறங்குங் காலத்தில் சிறிதுமின்றி முற்றும் அழிந்து, ஆகாய வாயு அக்கினியாதிகளில் வந்து ஒடுங்கினவராய் ஸூக்ஷ்ம சரீரத்தோடு மாத்திரம் மேகத்தில்சேருகின்றனர். பிறகு மேகத்திலிருந்துமழைத்துளி மூலமாய்ப்பூமியில்வந்து சேருகின்றனர். பூமியில் விழும் மழைத் துளிகள் யாதானும் செடி கொடி மரம் முதலியவைகளுக்கு ஏதுவாகின்றமையால், அவ்வழி யிறங்கும் ஜீவர்கள் அவைகளிலுண்டாகும் காய் கறி நெல் முதலிய பதார்த்தங்களை யடைந்து, பிறகு மிருகம் பறவை மனிதர் முதலிய பிராணிகளை யடைந்து ரக்த மூலமாய் சுக்ல சோணித உருவம் பெற்று ஸ்திரீ கர்ப்பத்தை யடைந்து, மிருகம் பறவை மனிதர் முதலிய பிறவிகளைப் பெறுகின்றனர். இவ்வாறு பிறக்கும் கிரமத்தில் சிற்சில செடி கொடி காய் கறி தானிய முதலிய வகைகளில் பாப ஜீவர்களும் சிற்சில வகைகளில் புண்ணிய ஜீவர்களும் வந்தடைந்திருக்கக் கூடும். ஆதலின் பாப ஜீவர்கள் நம்மை வந்தடையக்கூடாது என்பதையே முக்கியமாய்க் கருதித் தர்ம சாஸ்திரங்களிலும் இவை புசிக்க வேண்டியன இவை புசிக்கக் கூடாதன என்பதாக விதி நிஷேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

ஆதலால் சொல்லப் பட்டிருக்கும் போஜ்ய பதார்த்தங்களின் ஸம்பந்தமாயுள்ள விதிநிஷேதங்களைக் கொண்டே பாப ஜீவர் இப்பதார்த்தங்களின் மூலமாய்ப் பிறப்பார் புண்ணிய ஜீவர்கள் இப்பதார்த்தங்களின் மூலமாய்ப் பிறப்பார் எனும் உண்மையை ஒருவாறு கண்டுகொள்ளலாம்.

இவ்விதம் கர்மவசப்பட்டு லோகாந்தரமடைவதையும் இங்குவந்து ஜநிப்பதையும் சீலமாய்க்கொண்டு, வாஸனையின்படி கர்மங்களைச்செய்துகொண்டு ஓய்வொழிவின்றிச்சுழல்காற்றிலகப்பட்ட துரும்புபோல்ஸம்ஸாரமண்டலத்தில் சுழன்று கொண்டிருக்கும் இச்சீவன் அநாதியான இப்பவப் பிணியினின்றும் விமுக்தனாகவேண்டுமாயின், அநாதிமுக்தனும் நித்திய சுத்த ஸுகபோதவடிவனும் பராசக்தியெனும் திவ்வியமாயாவிலாஸமுடையோனும் ஸர்வக்ஞத்வம் முதலிய தன்மைகளையுடையோனுமான ஸர்வவல்லமை பொருந்திய முழுமுதற்கடவுளை ஆச்ரயித்தல் அவசியமே. அறியப்பட்டிராத பொருளை உபாஸிக்க இயலாதாதலால் அவ்விறைவனை நன்குய்த்தெரிந்துகொள்ளவேண்டும்.

ஸுஹ்ரு ஸுஹ்ரு ஸுஹ்ரு

ஸ்ரீமதாநந்தஹயக்ரீவாய நம:

# வேதசாஸ்திரதத்துவம்

## மூன்றாம் பாகம்

## "ஜீவனும் ஈசனும்"

ஜீவன், ஈச்வரன் எனும் இவ்விரண்டு பதார்த்தங்களையும் பற்றிச்சற்று இங்கு விசாரணை செய்வாம்.

ஜீவனாவது, காணப்படும் இந்த ஸ்தூல தேகத்திற்குள்ளிருக்கும் ஸூக்ஷ்மசரீரத்தின் முக்கியமான அவயவமாயுள்ள மனஸோடு கூடியிருக்கும் சித்தாகிய அறிவுப்பொருளேயாம். ஈச்வரனாவது, ஸ்தூலசரீரம் முழுதும் வியாபித்துக் கொண்டு அதனில் நடக்கும் ஸகலஸங்கதிகளையும் ஜீவன் அறிந்துகொண்டிருப்பதுபோல, ப்ரும்மாண்டங்களெல்லாவற்றிலும் வியாபித்துக்கொண்டு ஸகலஜீவ கோடிகளின்செயல்களையும் அறிகின்றவனும் அவரவர் கர்மத்திற் கேற்ப பயனைத் தருவோனும் ஸகலவல்லமை பொருந்தியவனுமான முழுமுதற்கடவுளேயாம்.

அரசனுக்கும் அற்பயோக்கியதையுடைய சேவகனுக்கும்போல ஈச்வரனுக்கும் ஜீவனுக்கும் மிகவும் தாரதம்மியமிருக்கின்றது.

இனி, உண்மையறிவானந்தமாயுள்ள ப்ரும்மமே ஸகலமும் என்றல்லவோ சுருதிகள் முழங்குகின்றன.. இப்படியிருக்க, ஜீவன் வேறு ஈச்வரன் வேறு எனச்சொல்லுவதை எப்படி ஒத்துக்கொள்வது ?எனின் கூறுவோம். தோல், சதை, ரக்தம், மாம்ஸம், எலும்பு, நரம்பு, மலம், மூத்திரம், கேசம், நகம், எனும் இந்தப் பதார்த்தங்களின் சேர்க்கையாகிய ஸ்தூலசரீரத்தை நோக்க அரசனும் ஸேவகனும் ஒரேவகையாயிருக்கினும், ராஜ்யாதிபத்யம், ராஜோபசாரம், சேவகத்துவம், எனும் இத்தன்மைகளை நோக்க அவ்விருவருக்கும் மிகவும் தாரதம்மியமிருக்கின்றது போல, அறிவாகிய சின்மாத்திரத்தை நோக்க ஜீவனும் ஈசனும் ஒன்றாய்க் காணப்படினும், அபாரமஹிமை பொருந்திய திவ்வியமாயாசக்தியால் அமைந்துள்ள அற்புதமான ஆற்றலாலும், அற்பயோக்கியதையுடைய மனஸின் குணங்களாலுமே ஈச்வரனுக்கும் ஜீவனுக்கும் மிகுந்த தாரதம்மியமிருக்கின்றதென்றறிக.

ஈச்வரன் ஸ்வதந்திரன், பேரானந்தமயன், மாயா கர்மங்கள் ஸம்பந்தியாதவன், அனாதிமுக்தன், ஸர்வக்ஞன். ஜீவனோவெனின் இதற்கு முற்றும் விரோதமாய்ப் பரதந்திரனும், க்ருமிகீடம் முதல் தேவசரீரம் வரையிலும் தேவசரீரம் முதல் கிருமிகீடம் வரையிலும் உள்ள ஒவ்வொன்றிலும் புகுந்து புகுந்து இன்பதுன்பங்களை யனுபவிப்பவனும், பெருஞ்சுழல் காற்றில் அகப்பட்ட

திருணம் போல ஓய்வொழிவின்றி ஜனனமாண நரகங்களுள் சுழலுவோனும், கர்மங்களினுல் பந்திக்கப்பட்டவனும், அற்ப அறிவுடையோனுமாயுள்ளவன்.

இனி சங்கராசாரியார் முதலிய முன்னோர், ஜீவனும் ஈசனும் ஒன்றே. ஜீவன் ஈச்வரனிலும்வேருயுள்ளவனல்ல என ச்ருதிஸூத்திரங்களின் பொருளை விளக்கியிருக்க ஜீவனும் ஈசனும் வேறென இங்ஙனம் வேற்றுமைப்படுத்திச் சொல்லுதல் உசிதமோ? எனின், உசிதமேயாம். அதாவது அவர்கள் முக்தி நிலையினை நோக்க எல்லாம் நிர்க்குணமாகியப்ரும்மமே என்றனரே யன்றி வியாவஹாரிகமாய் ஜீவேசர்களை ஒன்றெனக் கூறியவர்களல்ல. முக்கியார்த்தத்தை நோக்க ஜீவேச்வரார்களுக்கு மிகுந்த பேதமிருக்கின்றதென்றே சொல்லியிருக்கின்றனர் என்பதை

> தெ௱கூ(ா)ஂ_தவொடூ-(ஙூ_தயொ_நூவாவு)யொஃ
> நிறஃ(ா)தெ௯நெ(ா)_ந(ா)விஜ-ஙயகி-(ணொஃ॥
> வசெ(ா)_தஹாநெ(ாவிஜராஜஹ)ந-த(ா)யொஃ
> கூ௰வாஂவ-ஜாபெ(ா)ஃவஜாணஂெ௯வெ-(ாஃ ॥

> மின்மினிப் பூச்சிக்கும் ஸூர்யனுக்கும் போலவும் அரசனுக்கும் சேவகனுக்கும் போலவும் கிணற்றிற்கும்ஸமுத்திரத்திற்கும் போலவும் பரமாணுவுக்கும் பெரிய பொன் மலைக்கும் போலவும் மிக்க வித்தியாஸகுணமுடையோர்களாகிய தத்துவம் பதங்களுக்கு முக்கியார்த்தமாயுள்ள அச்சீவேச்வரர்களுக்கு ஐக்கியம் ஒவ்வாது. ஆதலால் லக்ஷியார்த்தத்திற்கே ஐக்கியமாம்

எனச்சங்கராசாரியஸ்வாமிகள் முதலியவர்கள் விவேக சூடாமணி முதலிய நூற்களில், வித்தியாஸகுணமுடைய ஜீவேசர்களுக்கு ஐக்கியம் ஒவ்வாதென்று உபதேசித்திருத்தலைக் கண்டு தெளிக.

உண்மையில் மனிதமாத்திரமாயுள்ளவனைத் துப்பாக்கி, கத்தி, உடுப்பு, செய்யவேண்டிய வேலை இவைகளை வஹிக்கச் செய்து பராதந்திரனுகச் செய்திருப்பது பணத்தாசையேயன்ருே. அதுபோல உண்மையில் நித்தியானந்தமாயுள்ள அறிவைக் கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம் எனும் இவைகளே ஜனமரணப் பிணிக்குட்படுத்திப் பரதந்திரனுகிய ஜீவனுக்கி வைத்திருக்கின்றன. சேவகவேலையினுல் கிடைப்பதாகிய பணத்திலுள்ள ஆசையை விட்டுவிட்டானுபின் சேவகத்துவமாகிய பரதந்திரத்தன்மை நீங்கி ஸ்வதந்திரனுவதுபோல, க்கிலேச கர்மா திபந்தங்களை நீக்கிக்கொண்டானுபின் ஜீவத்தன்மை நீங்கி நித்தியானந்த அறிவாகிய முக்தி நிலையைப் பெறுவான்.

இனி க்கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம், எனும் இவைகளை விட்டுவிட்டால் ஜீவத்துவம் நீங்கி ஸுகம் பெறலாம் என்று சொல்லப்பட்டதன்ருே. வஸ்துவை இன்னதென்று நன்ருயறிந்து கொண்டாலல்லவோ அதை நீக்கிக் கொள்ளும் வழியைத்தேடலாம். ரோகம் யாதென்று நன்ருய்த் தெரிந்து கொள்

ளாவிடில் தக்க ஔஷதத்தைக்கொண்டு அதனை நீக்கி ஸௌக்கியப் படுத்துதல் என்பது எப்படி இயலாதோ, அப்படியே நித்தியானந்தமாயுள்ள அறிவை ஜனனமரணத்துன்பங்களுக்குட்படுத்தி ப்பரதந்திரனுன ஜீவனுக்கிவைத்திருக்கின்றன வெனக் கூறப்பட்ட அந்த க்கிலேசம் கர்மா, முதலியவைகளை நன்ருய்த் தெரிந்து கொள்ளுதல் அவசியமாகின்றமையால் அவ்விஷயத்தில் சற்று நாடுவோம்.

கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம், இந்நான்குமே ஜீவதர்மங்களாம். ஜீவதர்மங்களெனின் ஜீவனிடம் உள்ள விசேஷங்கள் என்பதாம். எங்கும் வியாபித்து நித்தியானந்த முக்தமாயுள்ள அறிவானது மனஸ் உள்ளவிடத்திலும் இருக்கும். ஆதலின் அங்ஙனம் மனஸோடு கூடியிருக்கும் ஆபாஸஅறிவை ஜீவாத்மா என்பது. இதனுல் ஜீவத்தன்மையாகிய விசேஷமானது மனேமூலமாகவே வந்திருக்கின்றதென்றறியப்படும். இதனுல் கிலேசகர்மவிபாகாசயங்களெனும் நான்கு விசேஷங்களும் மனஸ் என்னப்படும் அந்தக்கரணத்தைப் பற்றியனவாய்க்கொண்டு ஆத்மாவுக்குப் பந்தஹேது வாயுள்ளன என்பதறிக.

கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம், எனும் நான்கு தன்மைகளுள் ஒவ்வொன்றும் பலவாருய்ப் பிரிவு படும். அதாவது, கிலேசம் என்பது அவித்தை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம், எனஐந்து வகையாய்க் கொள்ளத்தகும். அவித்தையே ஆணவம், அஞ்ஞானம், தமஸ் மோஹம், முதலிய சொற்களால் வழங்கப்படுவதறிக. அஸ்மிதை ராகம், த்வேஷம், அபினிவேசம், எனும் பிந்திய நான்கு விசேஷங்களுக்கும் அவித்தையே (மூலபூமி) உற்பத்திக்கிடமாயுள்ளது.

இனி அவித்தையாவது யாது? எனின், அதனுல் நிகழும் செயல்களைக் கொண்டே அதனை யறிந்துகொள்ள வேண்டும். அதனுல் நடைபெறுங் காரியமோ எனின், அது நான்குவகையாயுள்ளது. அதாவது, அநித்தியப் பொருளை நித்திய மென்றும் அசுத்தப் பொருளைச்சுத்த மென்றும் துக்கப் பொருளை சுகமென்றும் அனுத்மப் பொருளை யாத்மா என்றும் எண்ணும்படி செய்விப்பது அவித்தையே. திருஷ்டாந்தமாக, இந்த ஸ்தூல தேஹமானது எவ்வளவு ஜாக்கிரதையாய்க் காப்பாற்றப்படினும் ஓர் ஸமயம் அழிவுள்ள தென்பதில் ஸந்தேகம் சிறிதுமில்லை. இது நீரில் குமிழி போன்றதே. இருநூறு வருஷங்களுக்கு முன் இருந்த மனிதரை இப்போது எங்கேயாவது காணக் கூடுமா ? அப்போதிருந்த தேஹங்களெல்லாம் அழிந்து போக இப்போதுள்ள தேஹங்களெல்லாம் புதிதாய்த் தோன்றினவையே யன்ருே. இதைச் சற்று யோஜித்துப் பார்த்தால் இத்தேஹம் அழிவுடையதாகிய அநித்தியப் பொருள் என்பதில் சிறிதும் ஸந்தேஹம் உண்டாகாதல்லவா ? இந்தத்தேஹத்தை மூன்று கால ஸ்நாநம், அழுக்கில்லாத வஸ்திரம், அரிய பரிமளவாஸனைப்பூச்சு முதலியவைகளால் எவ்வளவோ ஜாக்கிரதையாய்ச் சுத்தப்படுத்திவைத்தாலும் இவ்வளவும் கெட்டு அசுத்தமாய் நாறுகின்றதன்ருே. இதற்குக் காரணம், தேஹமென்பது தோல் சதை ரக்தம், நரம்பு, எலும்பு, மாம்ஸம், மலம், மூத்திரம், கேசம், நகம் எனும் இவ்வசுத்தபதார்த்தங்களின் சேர்க்கைக்கந்நியமாய் யாது மில்லை யென்பதே. இதனைச் சற்று

கவனித்தால் இத்தேஹமானது அசுத்த மென்பதில் சிறிதேனும் ஸந்தேஹம் நிக ழுமா ? அமேத்தியம் மூத்திரம் ஜடராக்கினி கிருமிகீடங்கள் ரப்பம் போன்ற எலும்புகள் ஆகிய இவைகளின் நடுவினில் அகப்பட்டுச்சலிப்பதற்கும், வாய் திற ந்து கதறுவதற்கும் இடமில்லாத கர்ப்பவாஸ காலத்திலாவது, ஹிதாஹிதம் தெரியா மல்நெருப்பைப் பழமென்றெண்ணித்தேள் பாம்பு முதலியவைகளைத் துர் ஜந்து க்களென்றும் அறியாமல், மலமூத்திரங்களை யசுசி யென்றுமறியாத சிசுப்பர்வத்தி லாவது, கடாபோலும், கழுதைபோலும், நாய்போலும், ஸ்திரீ போகம் ஒன்றை யே முக்கியமாய்க் கருதியவனுப் அடி, உதை, தண்டனை, மானக்கேடு, ரோகம், முதலியவைகளைப் பெற்றுழலும் யெளவனப் பருவத்திலாவது, பெண்டீர் புதல் வர் முதலியவர்கள் வெறுக்கவும் இந்திரிய சக்தி குன்றிப் போகவும், அறிவு கல ங்கவும், கவலையேமேலிடவும்ரோகம்முதலியவைகளால் துன்புறுதலுக்கேஹேது வாயுள்ள கடைசி காலத்திலாவது ஸுக மென்பதுஉண்டா ? யோஜித்துப் பார்த் தால்இத்தேஹமானது எப்போதும் துன்பத்திற்கேயன்றோமூலமாயிருக்கின்றது. உலகிலுள்ள ஸகல ஜனங்களும் நானிதைத் செய்தேன், நானிதைச் சம்பாதித் தேன் என்பது முதலிய வியவஹாரங்களில் நான், நான், என்றோர் சொல்லை வழங்குகின்றனரே. இப்படி வழங்கும்நான் எனும்சொல்லுக்கு இந்தத்தேஹமே அர்த்தமா? அல்லதுவேறு யாதானும் ஒன்றா? இந்தத்தேஹமே நான் எனப்படுவது என்போமாளுல் இந்தத்தேஹமிருந்தபடியே இருக்கின்றதன்றி எங்கேயாவது போகின்றதில்லையே. இறந்த தேஹமாகிய சவத்தினிடம் நான் எனும் வியவ ஹாரத்தைக் காணேமே. இதைச் சற்று யோஜித்துப் பார்த்தால் நான் எனப்ப டும் ஆத்மா இந்தத்தேஹமல்ல, இது அனாத்மாவே என்பதாக நிச்சயமாய் அறியப் படுகின்றது. இங்ஙனம் தேஹமானது அநித்தியம் அசுத்தம் அஸுகம் (துக் கம்) அனாத்மா என்று நிச்சயமாய் அறியப்படினும் மீண்டும் இந்தத் தேஹத் தை நித்தியம் சுத்தம் ஸுகம் ஆத்மா (நான்) என்று எண்ணுகின்றோமன்றோ. உண்மை தெரிந்திருந்தும் மீண்டும் முன்போலவே இப்படி மோஹத்தை யுண்டு பண்ணும் பொருள் யாது எனின், அதுவே அவித்தை யென்பதாம். இங்ஙனம் அவித்தையே ஸகல ஜீவர்களுக்கும் அநித்தியமும், அசுசியும், அஸுகியும் அனாத்மாவுமாயுள்ள இத்தேஹத்தை நித்தியமாயும், சுசியாயும், ஸுகமாயும், ஆத் மாவாயும், தோன்றும்படி செய்விக்கின்ற தென்றறிக.

இவ்வுண்மையே

"𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌿𑌤𑌾𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑌾𑌃 𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌃"

"கிலேசங்கள் அவித்தை அஸ்மிதை ராகம் துவேஷம்அபிநிவேசம் என்பவையாம்

"𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌶𑍁𑌚𑌿𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌸𑍁 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌚𑌿𑌸𑍁𑌖𑌾𑌤𑍍𑌮𑌖𑍍𑌯𑌾𑌤𑌿𑌰𑌵𑌿𑌦𑍍𑌯𑌾"

"அநித்தியமும் அசுசியும் துக்கமும் அனாத்மாவுமாகிய பொருளில் நித்தியம், சுசி, சுகம், ஆத்மா எனும் எண்ணத்தை உண்டு பண்ணுவ தே அவித்தை"

எனும் பதஞ்ஜலி யோக ஸூத்திரங்களால் உபதேசிக்கப் பட்டுள்ளது. ஐந்து வகைக் கிலேசங்களில் அவித்தை எனும் கிலேசம் நிரூபிக்கப்பட்டது.

இனி அஸ்மிதையாவது, த்ருக்தரிசனசக்திகளை ஒன்றாய்க் கொள்ளுதலாம். அதாவது, அறிவோனையும் அறிதலையும் ஒன்றாய் நினைத்தலென்பது பொருள். அறிவோனாவது ஜீவாத்மா எனப்படும் அறிவே. அறிதலாவது ரஜஸ்தமோ குணங்களால் அடக்கப்படாத ஸத்துவகுண மாத்திரமாய் விஷயங்களின் வடிவமாய் நிகழுவதாகிய மனஸின் பரிணாமமாம். இவ்விரண்டையும் பிரித்தறியாமல் விஷயாகாரமாகும் மனஸின் பரிணாமத்தையும் அதனை யறியும் ஆத்மாவையும் ஒன்றெனக் கொண்டு, நான் புசித்தேன், நான் செய்தேன், என்பது முதலிய வியவகாரங்கள் நிகழுவன என்பதறிக. இதனால், போக்தாவையும் போக்கியத்தையும் ஒன்றென்றெண்ணுதலே அஸ்மிதை என்றறிக.

ராகமாவது, ஸுகத்திற்கு ஸாதநமாய்க்காணப்படும் பொருளில் நிகழும் மனோபாவனையே.

துவேஷமாவது, துக்கஸாதநமாய்த் தோன்றும் பொருளில் நிகழும் மனோபாவனையே.

அபிநிவேசமாவது இங்கு இது விசாரிக்கத் தக்கது. புலி, பாம்பு, நெருப்பு முதலிய பதார்த்தங்களைத் தனக்கு இவைக் கேட்டை விளைவிப்பன என்று அறியாதவர்க்கு புலி, பாம்பு முதலியவைகளைக் கண்டு பயமுண்டாகாதன்றோ. இதனால் பயத்திற்குக் காரணம் கெட்டது எனும் அறிவே என்பது நிச்சயம். திடீரென ஓர் பெரும் சப்தம் ஏற்படும் போது, ஸகல மனிதர்களுக்கும் ஓர் பரபரப்பை உண்டாக்குவதாகிய பயம் ஏற்படுகின்றதல்லவா. இதற்குக் காரணம் யாதென்றறியவேண்டும். அதாவது இதற்கு முன் அனந்த கோடிப் பிறவிகளில் மரணம் ஏற்பட்டிருக்கின்றமையால் அங்ஙனம் தேஹத்தை விட்டுப் பிரியும் போதுண்டான துன்பத்தின் அனுபவமானது நுட்பமாய் மனஸினில் பதிந்திருப்பதேயாம். அந்தப் பதிவினால் தேஹத்தை விட்டுப் பிரியும் விஷயத்தில் மனம் கொள்ளாமல் இந்தத்தேஹத்தை விட்டுப் பிரியக் கூடாது எனும் பாவனையே. இங்ஙனம் தேஹத்தை விட்டுப் பிரியக் கூடாது எனும் பாவனையையுண்டு பண்ணும் விசேஷமே அபிநிவேசம் என்றறிக.

இவ்வுண்மைகளே

"𑌦𑍃𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑍋𑌰𑍇𑌕𑌾𑌤𑍍𑌮𑌤𑍇𑌵𑌾𑌸𑍍𑌮𑌿𑌤𑌾"

"த்ருக்தரிசன சக்திகளின் ஒற்றுமைப் பாடே அஸ்மிதா"

"𑌸𑍁𑌖𑌾𑌨𑍁𑌶𑌯𑍀𑌰𑌾𑌗𑌃"

"ஸுகத்தை அநுசயித்தலே ராகம்"

"𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑍁𑌶𑌯𑍀𑌦𑍍𑌵𑍇𑌷𑌃"

"துக்கத்தை அநுசயிப்பதே துவேஷம்"

"𑌸𑍍𑌵𑌰𑌸𑌵𑌾𑌹𑍀𑌵𑌿𑌦𑍁𑌷𑍋𑌽𑌪𑌿𑌤𑌥𑌾𑌰𑍂𑌢𑍋𑌽𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑌃"

> "வித்வானுக்கும் நன்கு ஊன்றியுள்ளதும் தானே நிகழ்வதுமாகிய தேகவியோக பீதியே அபிநிவேசம்

என்பது முதலிய யோக ஸூத்திரங்களில் உபதேசிக்கப்பட்டுள்ளன. இதுகாறும் கிலேசத்தின் ஐந்து பிரிவுகள் சொல்லப்பட்டன. இனிக்கர்மாவென்பதை நிரூபிப்பாம்.

கர்மாவாவது இதற்குமுன் ஜன்மங்களில் செய்யப்பட்டு அங்ஙனம் செய்யும் காலத்திலேயே மனஸில் பதிவுரூபமாய் மிக்க நுட்பமாய் ஊன்றியுள்ள விசேஷங்களாகிய ஸம்ஸ்காரங்களேயாம். அவைகளே ஜந்மங்களையும் ஜந்மத்தைப்பெற்று அனுபவிக்கவேண்டிய இன்பதுன்பங்களையும் தருவனவாம். அவை புண்ணியம், பாபம், மிசிரம் எனமூவகையாயுள்ளன. இப்படிப்பட்ட கர்மாக்கள் எதனால் ஏற்பட்டுள்ளன எனின், அவை பூர்வம் நிரூபிக்கப்பட்டவைகளாகிய அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசம், எனும் ஐந்து கிலேசங்களாலேயே ஏற்படுவன என்றறிக. இவ்வுண்மையே

"க்லேசமூல: கர்மாசயோ த்ருஷ்டாத்ருஷ்டஜந்மவேதநீய:"

> "கிலேசங்களையே மூலமாய்க்கொண்டனவும் பிரத்தியக்ஷமும் பிரத்தியக்ஷமல்லாதனவுமாகிய ஜந்மங்களால் கண்டுகொள்ளக்கூடியவைகளாயுள்ள ஸம்ஸ்காரங்களே கர்மங்களாம்

எனும் ஸூத்திரத்தினால் சொல்லப்பட்டுள்ளது.

இனி விபாகமாவது, இதற்கு முன்னெடுத்திருந்த மனுஷ்ய ஜன்மங்களில் செய்த சுபாசுபவினைகளெல்லாம் மனஸினில் பதிந்துள்ளனவாய், அப்பதிவுகள் ஈச்வராக்ஞைப்படி பயனை அனுபவிக்கும் காலத்தில் பரிபக்குவங்களாகின்றன. உதாரணமாக, இதற்கு முந்திய ஜன்மங்களில் லக்ஷம் கர்மங்கள் செய்திருந்ததாக வைத்துக்கொள்வாம். அவைகளுள் ஏதோ ஐந்தாறு கர்மங்களே புண்ணியங்களென்றும் மற்றவைகளைப் பாவகர்மங்களென்றும் வைத்துக்கொள்வோம். அப்புண்ணியகர்மங்களெல்லாம் ஓர் தொடர்பாய்ச்செய்யப்பட்டனவல்ல. ஆதலால் மற்றைய பாபங்களோடு முன்னது பின்னதாய்க் கலந்தே இருக்கும். அவைகளுள் ஏதோ கொடிய பாபமாகிய ஓர் கர்மத்தின் பயனை அனந்தகோடி காலம்நரக யாதனைகளால் அனுபவித்தோம். பிறகு ஓர் பாபகர்மம் பரிபக்குவப்படவே அதன் பயனை பல இழிய ஜந்துக்களின் பிறவிகளால் அனுபவித்தோம். பிறகு சற்று மத்திமமாயுள்ள ஓர் கர்மம் பரிபக்குவப்படவே அதன் பயனைப் பசுவாதி ஜன்மங்களினால் அனுபவித்தோம். பிறகு ஓர் புண்ணிய கர்மம் பரிபக்குவப்படவே அதன் பயனாய் இந்த மனிதஜன்மம் கிடைத்தது. இங்ஙனம் பூர்வம் சம்பாதித்த லக்ஷம் கர்மங்களில் நரக யாதனைகளாலும் இழியஜன்மங்களாலும் மூன்று கர்மங்கள் தொலையவே இம்மனித ஜன்மத்தை ஓர் கருமம் கொடுக்கவே மீதியுள்ள கர்மங்கள் 99996 ஆகும்.

இங்ஙனம் இதுவரையில் பயன்தராமல் மீதியாயுள்ளனவாகிய 99996 கர்மங்களே சஞ்சிதங்களென்னப்படுவனவாம். இம்மனித ஜன்மரூபமாய் அநுபவிக்கத்தலைப்பட்டிருக்கும்கர்மமே ப்ராரப்தகர்மம் என்னப்படும். இந்த மனுஷ்ய ஜன்மத்தை யெடுத்த பிறகு இப்போது புதிதாய்ச் செய்யப்படுவனவாகிய கர்மங்களே ஆகாமி கர்மங்கள் என்பனவாம். இவ்வாகாமி கர்மங்களும் செய்து முடிந்ததும் சஞ்சிதகர்மங்களில் சேர்ந்து போகின்றன. ஆதலால் ஆகாமிகர்மங்களையும் ஸஞ்சித கர்மங்களென்றே வழங்கலாம். இங்ஙனம் ஸஞ்சிதங்களாயுள்ள கர்மங்களை யெல்லாம் ஒவ்வொன்றாய் அநுபவித்தே துலைக்கவேண்டும். ஓர் கர்மத்தின் பயனை யனுபவித்தலின் பொருட்டு எடுக்கப்பட்ட இம்மனித ஜன்மத்தில் புதிதாய் இன்றுவரையில் செய்திருக்கும் கர்மங்கள் எவ்வளவோ லக்ஷக்கணக்காயிருக்கும். இவ்வாறிருக்கும்போது இக்கர்மங்களெல்லாவற்றையும் எக்காலத்தில் அநுபவித்துத் துலைப்பது? எனின், அது நமது புத்திக்கு எட்டுவதில்லை. ஏதோ ஓர் கர்மப்பயனை அநுபவிப்பதற்காக எடுக்கும் மனித ஜன்மத்தில் புதிதாய் மீண்டும் பலகோடி கர்மங்களைச் செய்யும்படி இருத்தலைக் கவனித்தால், ஒருவன் ஆயிரம் ரூபாய்கடனால் மிக்கக்கஷ்டப்பட்டு அதனைத் தீர்ப்பதன் பொருட்டுப் பொருளைச்சம்பாதிக்கவேண்டுமென்று ஓர் வியாபாரம் செய்யவே அந்த வியாபாரத்தில் புதிதாய் 10,000 ரூபாய் கடனாகுமானால் அது எப்படியோ, அப்படியே இதனையும் சொல்லத்தக்கதாயிருக்கின்றது. இனி இக்கர்மங்களை அநுபவித்தே துலைக்கவேண்டுமோ? வேறு யாதானும் வழியுண்டா? எனின், இன்னம் இரண்டு வழிகளுள்ளன. அவை ப்ரம்ம ஞானம் ஒன்றும், மற்றொன்று பிராயச்சித்தமுமாம். இவ்விஷயம் நிற்க, இனி எடுத்த விஷயத்தை நாடுவாம்.

இவ்விதம் பூர்வம் செய்த கர்மங்களுள் ஏதோ சில கர்மங்களை அநுபவித்து ஒழித்ததுபோக மீதியுள்ள கர்மங்களில், ஏதோ ஓர் புண்ணியமானது இம்மனிதப் பிறவியைத் தந்து அநுபவிக்கத்தலைப்பட்டிருக்கின்றது. இதுவே ப்ராப்த கர்மம் என்பதாம். இதுவே விபாகமென்றும் சொல்லப் படுவது. ப்ராரப்தம் = பயன் கொடுக்க ஆரம்பிக்கப்பட்டிருப்பது, விபாகம் = பயன் தரப் பக்குவமாயிருப்பது என்ற அர்த்தத்தால், ப்ராரப்த கர்மம் விபாகம் எனும் இரண்டும் ஒரே அர்த்தத்தில் உபயோகப்படும் சொற்களென்றறிக.

இனி இவ்வாறுள்ள விபாகமானது எத்தனை வகையா யிருக்கின்றதெனின், ஜன்ம, ஆயுள், போகம் என மூன்று விதமாய்ப் பயன்படுகின்றது என்றறிக. சிலர் இவ்வுண்மை யறியாமல், தமக்கு ஸகல வேதாந்த மர்மங்களும் தெரிந்திருக்கின்றன என்றெண்ணிக் கொண்டு ப்ராரப்த கர்மமாவது தேஹத்தைத் தவிர வேறில்லை யென்கின்றனர். சிலர் ப்ராரப்த கர்மமாவது இத்தேஹத்தினால் அநுபவிக்கத் தலைப்பட்டிருக்கும் இன்ப துன்பங்களைத் தவிர வேறல்ல என்றும், மற்றும் சிலர் இந்தத் தேஹம் இவ்வளவு காலம் ஜீவிக்க வேண்டும் எனும் நியதியே ப்ராரப்த கர்மப்பயன் என்றும் இங்ஙனம் தத்தமக்குத் தோன்றியவாறு சொல்லுகின்றனர்.

உண்மை யிதுவே. அதாவது, ப்ராரப்த கர்மமானது தேஹம், ஆயுள், இன்ப துன்பங்களாகிய போகம் என மூவகையாய்ப் பிரிந்து பயன்படுகின்றதென்பதே சாஸ்திரங்களிலுள்ள மர்மம். இதனால் ஓர் விசேஷம் அறியக் கூடியது. தேஹத்தின் நிலையானது நாள் மாஸம் வருஷம் முதலிய கணக்கைச் சேர்ந்ததல்ல. இந்தத் தேஹத்தினால் இவ்வளவு ச்வாஸங்கள் விடவேண்டும் என்பதே ஈசாக்ஞை. இங்ஙனம் ஒவ்வொரு தேஹத்திற்குங் கர்ப்பத்தில் பிண்டோத்பத்தியாகும் போதே இந்தத் தேஹம் இவ்வளவு சுவாஸம் விடவேண்டும் என்று விதிக்கப் பட்டிருக்கின்றமையால், அந்தச் சுவாஸக் கணக்கை நாம் மீற முடியாது. ஆனால் பிராணாயாமம் முதலிய அப்பியாஸங்களால் கிரமமாய்ப் போகும் சுவாஸங்களில் நாள் தோறும் கொஞ்சம் கொஞ்சம் மிச்சம் பிடித்துக் கொண்டுவரலாம். அப்படி வருவோமானால் அப்படிமிகுந்திருக்கும் சுவாஸங்களை விடுவதற்காக வேண்டிய காலம் வரையில் அதிகமாய் ஜீவிக்கலாம். மனிதர் ஸாதாரணமாய் விடக் கூடிய சுவாஸங்கள் நாள் ஒன்றுக்கு 21600. இவைகளில் யோகாப்பியாஸம் முதலியவைகளால் இடையில் சில காலம் சுவாஸத்தை விடாமல் தடுக்கக்கூடும். அப்படி விடாமலிருக்கும் சுவாஸங்களை விட்ட பிறகே இச்சரீரம் ஒழியும். ஆதலால் முன்னோர்கள் வெகு காலமிருந்ததாகப் புராணேதிஹாஸங்களில் சொல்லியிருப்பது பிசகல்ல என்பது மறிக.

இனி இங்கோர் சங்கை; ஏதோ ஓர் புண்ணிய கர்மத்தினால் இம்மனித தேஹம் ஏற்பட்டது என்றும் சொல்லிப் பிறகு, இதனால் அனுபவிக்க வேண்டியனவான இன்ப துன்பங்களையும் பிராப்த கர்மப்பயனாகவே சொல்லப்பட்டதன்றோ. புண்ணியத்தின் பயன் இன்பமாகவேயல்லவோ இருக்க வேண்டும். அப்படியே யில்லாமல் துன்பமுமல்லவோ வருகின்றது. ஒரே கர்மத்திற்கு இன்பம் துன்பம் எனும் இரண்டும் பயனாகும் என்பது உசிதமல்லவே. இப்படியிருக்கப் பூர்வ புண்ணியத்தின் பயனாக தேஹம் ஆயுள் இன்ப துன்ப போகம் எனும் மூன்றையும் சொல்லுதல் பொருந்தாதே; எனும் இந்த ஸந்தேஹம் பலருக்குண்டாகக் கூடியது. இப்படிச் சங்கித்தல் உண்மையறியாமையால் நிகழ்வது என்றறிக. அதாவது, மனிதர் யாதானும் ஓர் பெரிய புண்ணியத்தைச் செய்து கொண்டிருக்கும் போதே அதனிடையில் அநேக (சில்லரை) ச்சிறிய அவாந்தர பாப புண்ணியங்களையும் செய்கின்றனர். அப்படியே ஓர் பெரிய பாபத்தைச் செய்வதற்கிடையிலேயே அவாந்தரங்களாயுள்ள புண்ணிய பாபங்களையும் செய்கின்றனர் என்பது உலகில் காணக் கூடியது. உதாரணமாக, ஓர் மனிதன் சிவாலயப் பிரதிஷ்டை, தீர்த்த யாத்திரை முதலிய யாதானும் ஓர் நீடித்த பெரும் புண்ணியத்தைச் செய்யுங்காலத்தினிடையிலேயே பிறன் பொருளைக்கவர்தல், பிறன் பெண்டீரைச் சேர்தல் முதலிய அவாந்தர பாபங்களையாவது ஏழைகளுக்குதவுதல் முதலிய அவாந்தர புண்ணிய கர்மங்களையாவது செய்யக்காண்கின்றோம். இவைகளில் நீடித்துச் செய்யப்படும் பெரிய கர்மமானது முக்கிய மென்றும், இடையில் அவாந்தரமாய்ச் செய்யப் படுவன அவாந்தர கர்மங்களெனவும் சொல்லப்படும். இப்படிப் பட்ட கர்மங்கள் பயன்

தருவதாகிய ப்ராரப்த காலத்திலும் ஓர் பெரிய போகத்தினிடையிலேயே அவாந்தரங்களாயுள்ள பற்பல இன்பதுன்பங்களாய் வந்து விடும். இந்த நியாயத்தினால், ஓர் புண்ணிய கர்ம விசேஷத்தாலேயே இம்மனித ஜன்மம் வந்திருக்கினும், அம்முக்கிய கர்மத்தினிடையில் பூர்வம் செய்யப்பட்ட பல அவாந்தர கர்மங்களே இப்போது இம்மனிதஜன்மத்தினில் பற்பலவாறாகிய இன்பதுன்பங்களையும் அனுபவிக்கச் செய்கின்றது. உண்மை யிவ்விதமாதலால் முற்கூறிய சங்கை உசிதமன்று. அதாவது முக்கியமாயும் அவாந்திரங்களாயும் உள்ள இருவகைக் கர்மங்களே தேஹம், ஆயுள், இன்பதுன்ப போகம், என மூவகையாய்ப் பயன்படுகின்றன என்றறிக. இங்கு எழுத வேண்டியன மிகவுள. விரியுமென்றஞ்சி விடுகின்றனம். இங்கிதனைச் சுருக்கமா யறிக. விபாகமாவது, ஜாதி, (ஜன்மம்) ஆயுள், போகம், எனும் மூவகையாம் என்பதே சாஸ்திரங்களின் மர்மம். இவ்வுண்மையை

"ஸதி மூலே தத்விபாகோ ஜாத்யாயுர்போகா:"

> "மூலமிருக்கின் கர்மவிபாகப் ஜாதி ஆயுள் போகம் என மூவகையாய்ப் பரிணமிக்கின்றன"

எனும் பாதஞ்ஜல சூத்திரத்தினில் காண்க. இதுகாறும் ஜீவத்துவத்திற்கு ஹேதுவாய் ஆன்மாக்களிடம் அமைந்துள்ள விசேஷங்களாகிய கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம், எனும் நான்கினில் முதல் மூன்றும் விபரமாய் விசாரிக்கப்பட்டன.

இனி ஆசயம் என்பதை விசாரிப்பாம். ஆசயமாவது, வாஸனையென்பதே. ஒவ்வொரு ஜீவனுக்கும் மனஸினில் கர்மா, வாஸனை யென இருவிதமாகிய ஸம்ஸ்காரங்கள் (பதிவுகள்) உள்ளன. கர்மாவானது இன்பதுன்பானுபவங்களுக்கு மாத்திரம் ஹேதுவாகின்றது. வாஸனையானது பூர்வம் செய்த காரியத்தை மீண்டும் செய்யும்படி ஸங்கற்பத்தை உண்டுபண்ணுவதாகிய அப்பியாஸ ஸம்ஸ்காரமாம். வாஸனையாதானும் ஓர்காரியத்தில் ஸங்கற்பத்தை யுண்டு பண்ணிக்கொண்டேயிருக்கும். இவ்விஷயம் தைவ ... ம் பௌருஷமும் எனும் முதற்பாகத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டது. அந்த ஸங்கற்பத்திற்கிடங்கொடுத்தால் அதுவே இச்சைய (காமம)ய்ப்பரிணமிக்கும். அந்த இச்சையை நமது விவேகத்தினால் வென்றுபோடலாம். அப்போது அந்த வாஸனை பயனற்றதாகும். இச்சையின்படி நடந்தோமாயின் வாஸனைபயன் பட்டதாகும். வாஸனையாவது, சுபவாஸனை, அசுபவாஸனை என இரண்டு வகைப்படும். சுபவாஸனையாவது, இதற்கு முன்னெடுத்த ஜன்மங்களில் நல்லகாரியங்களையே செய்திருந்தமையால் ஏற்பட்ட அப்பியாஸ ஸம்ஸ்கார்மாம்.

அசுபவாஸனையாவது கெட்டகாரியங்களைச்செய்ததனால் ஏற்பட்ட அப்பியாஸ ஸம்ஸ்காரமாகும். அசுபவாஸனைகள் முளையும்போது கெட்டகாரியம்செய்யவிருப்பமுதிக்கும். இங்ஙனம் வாஸனையால் வரும் ஸங்கற்பங்களை விவேகாதி

பௌருஷயத்தினத்தால் மீறிவிடலாம். நல்ல வாஸனையின்படியோ அல்லது கெட்டவாஸனையின்படியோ எவ்வழி நடக்கினும், அச்செய்கை நிமித்தமாய் வரும் பயனாகிய இன்பதுன்பம் பூர்வகர்மாயத்தமாதலால் ஒரே விதமாகவே ஏற்படும். பூர்வகர்மாவாகிய ப்ராரப்தம் சுபமாயிருக்குமாயின் இப்போது அசுப வாஸனையின் வழியோ அல்லது சுபவாஸனையின் வழியோ எவ்வாஸனையின் வழி நடந்தாலும் இன்பம் வந்தே தீரும். ப்ராரப்தம் அசுபமாகவரின் இப்போது எவ்வளவு நல்லகாரியங்களைச்செய்யினும் அந்த ப்ராரப்த கர்மாவின் பயனை துன்பம் வந்தேதீரும். ப்ராரப்தகர்மா வேறு, வாஸனை வேறு, இரண்டிற்கும் ஸம்பந்தம் யாதுமில்லை.

அசுப ப்ராரப்தம் வந்திருக்கும்போது சுபவாஸனையேவுவதும் அல்லது சுபப்ராரப்தம் வந்திருக்கும்போது அசுபவாஸனை முனைந்து ஏவுவதுமுண்டு. சுபவாஸனையின் வழியோ அசுபவாஸனையின் வழியோ எப்படி நடந்தாலும் பயன் ப்ராரப்தாதீனமாவதுபற்றி ஒன்றே எனின், எதைச்செய்வது நலம் என்று யோஜிக்கவேண்டும். அப்படி யோஜிப்போமானால் இப்போது கெட்ட வாஸனையின்படி நடந்தோமாயின் இதுவே பாபமாய் மீண்டும் ஜன்மாந்தரத்தில் துன்பத்திற்கே ஏதுவாகுமென்றறியப்படும். ஆதலால் நல்ல வாஸனையின் வழியே நடக்கவேண்டும். கெடடவாஸனையின் வழி நடக்கவே கூடாது என்று சாஸ்திரங்களில் விதிக்கப்படுகின்றது. இவ்வுண்மையறியாமல் ப்ராரப்தத்தையும் வாஸனையும் பிரித்தறியும் ஞானமில்லாதவராய், வாஸனையால் வரும் செய்கையையும் ப்ராரப்த கர்மாவினால் வருவதாய் எண்ணிக்கொண்டு, நான் என்ன செய்வேன், எனது பிராரப்த கர்மாவானது என்னைக் கெட்டகாரியத்தில் ஏவியது, அதனால் அவ்விதம் செய்தேன். விதி அவ்வாறு கெட்டகாரியத்தில் ஏவும் போது அதனை என்னால் மீறமுடியுமா! என்று சொல்லிக்கொண்டே கெட்ட காரியங்களைச் செய்யும் சோம்பேரி ஞானிகளாகிய அறிவிலிகளைத் தற்காலம் மிகுதியாய்க்காணலாம். நமது சாஸ்திரத்தினில்" பூர்வ வினையின்படி எந்த ஸமயத்தில் எது வருமோ அது வந்தே தீரும் அதை மீற எவனாலும் இயலாது" என்று சொல்லப்படுகின்றது. ஆனால் இதைச்சற்று யோஜித்தால் சாஸ்திர மெல்லாம் வீணென்றும் புருஷயத்னமும் அவலமென்றும் ஏற்படுகின்றது. அன்றியும் இதற்கு முற்றும் விரோதமாய்" கர்மாவைச் சொல்லிக் கொண்டு கெட்டுப் போகாதே. நீ செவ்வையாய் நடந்து கொள்! கெட்டகாரியஞ் செய்யாதே" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறு முன்னுக்குப் பின் விரோதமாய்த் தோன்றினும் அது விரோதமல்ல. அதாவது" பூர்வ கர்மாவின்படி வருவது வந்தேதீரும்" என்ற வாக்கியம் ப்ராரப்தாயத்தமாய் வரும் இன்பதுன்பங்களை நோக்கியதென்றும், " நல்லது செய் கெட்டது செய்யாதே " என்றது வாஸனையால் ஏற்படும் ஸ்ங்கற்ப காமங்களை நோக்கியது என்றும், விஷயத்தைப் பகுத்துப் பிரித்துக் கொண்டோமாயின் சாஸ்திரம் மிக்க அருமை என்பது அறியப்படும். இங்ஙனம் கர்மாவையும் வாஸனையையும் பிரித்து வேற்றுமைப்படுத்தியே வேதம் முதலியவைகளில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இதனை

பருஹதாரண்யச்ருதி

“ तं विद्याकर्मणी समन्वारभेते पूर्वप्रज्ञा च ॥

” அவனை வித்தியாகர்மங்களும் வாஸனையும் கூடப்பற்றிச் சொல்லு கின்றன.

சிவகீதை

विद्याकर्माशयाभ्यां वासनाभिस्समन्वितः ।

வித்யாகர்மங்களோடும் வாஸனைகளோடும் கூடியவனாய்

யோகவாஸிஷ்டம்

[illegible] ।

[illegible] ।

[illegible] ।

[illegible] ।

[illegible] ।

ஓ ராமா வாஸனை சுபம் அசுபமென இருவகையாயுள்ளது. சுபவா ஸனை உன்னை ஏவும்போது அவ்வழியே நடப்பாயானால் கிரமமாய் சீக்கிரம் நலம் பெறுவாய். அசுபவாஸனையேவும் போது அதனை நீ விவேகம் முதலிய யத்தினத்தால் வென்று போடுவாயாக.

என்பது முதலிய முன்னூல் பிரமாணங்களில் வாஸனையை வென்று விடலாம் என்றும், கர்மாவிலும் வாஸனைவேறு என்றும், பிரித்து உபதேசிக்கப் பட்டிருப்பதைக்கண்டு தெளிக. இங்ஙனம் இங்கு சொல்லப்பட்ட வாஸனையே ஆசயம் என்பதாம். இதனால் ஆசயம் ஹாவம் வாஸனை முதலிய சொற்கள் ஒரோ அர்த்தத்தில் உபயோகிக்கப்படுவனவாகிய பர்யாயபதங்களே என்று நிர்ணயிக்கப்பட்டது.

நித்திய ஞானனந்தமாகிய அறிவுப்பொருளை (ஆத்மாவை) இது காறும் நிரூபிக்கப்பட்ட கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம், எனும் இந்நான்கு விசேஷங்களே ஜீவனுக்கிப் பரதந்திரப்பட்டு ஜனனமரண நரகாதியாதனைகளில் கிடந்து உழலும்படி செய்திருக்கின்றன.

இங்ஙனமாகிய கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம் எனும் நான்கும், நீங்கியவர்களே முக்தர்களாம். ஆதலால் ஆத்மாவுக்குப் பந்தம், ஸம்ஸாரம், எனப்பலவாறுய்ச் சொல்லப்படுவனவெல்லாம் இந்த நான்கிலும் அந்நியமாய் வேறில்லை என்றறிக. இந்நான்கும் ஆத்மாவுக்கு என்றுமுதல் ஏற்பட்டிருக்கின்றனவெனின் அவை அனுதியாயிருக்கின்றமையின் இன்றுமுதல் ஏற்பட்டனவெனக் குறித்துச் சொல்ல எவராலும் இயலாது என்பது நிச்சயம்.

இனி இந்நான்கையும் துலைப்பதற்குத் தக்க நிலமையானது மனிதப்பிறவி ஒன்றிலேயே. இப்பிறவியைக் கொண்டு இதனைத் தொலைக்கும் வழியை நாடு ஞேமாயின் இந்த ஜன்மத்திலேயே தொலையாவிடினும், இவ்வப்பியாஸவலியால்

அடுத்தஜன்மத்திலும் இம்முயற்சியேற்பட அப்போது தொலைத்து முக்தராக லாம். ஆனால் இப்பிறவியிலேயே ஸம்ஸாரத்தைத் தொலைக்கும் வழியை நாடா மல் அரிய இம்மனிதப்பிறவியை வீணாக்கிக்கொண்டோமானால், இதற்கடுத்து எப்பிறவியோ! அல்லது எந்தக் கொடும் நரகயாதனையை அனுபவிக்கவேண்டி வருமோ! யாதுமறியேம். ஆதலால் இத்தனைகாலம் அரிய இம்மனிதப்பிறவி யை வீணில் கெடுத்துக்கொண்டோமாயினும் இனியாவது இவ்வாறு கெடாமல் கரையேறும் வழியைத் தேடவேண்டும் என்பதே விவேகம். எவ்வளவோ ஆயா ஸப்பட்டுத்தேடிய திரவியமாவது, புத்திரபாரியாதிகளாவது, மித்திரர் புகழ்பலம் முதலியயாதாவது கூடவருமா? இச்சரீரம் தொலைந்தால் கூடவருவது தர்மாதர் மங்களாகிய இரண்டிற்கந்நியமாய் யாதுமில்லையன்றே. தர்மமே எப்போதும் கூட இருந்து உதவும் துணையாகிய மித்திரனாகும். அதர்மமானது கேட்டை விளைவிக்கும் சத்துருவே. ஆதலால் நீடித்த சத்துருவாகிய அதர்மத்தினிடம் பரிசயம் செய்யாமல் எக்காலத்திலும் கூடவிருந்து ஹிதம் செய்யும் மித்திரனா கிய தர்மத்தினில் பழகுவதில் சிரத்தையுடைவராயிருக்கவேண்டும். அவ்வாறி ருந்து தத்தமக்குறியவர்ணாச்ரமதர்மங்களைக்கால தேசவர்த்தமான இயல்புக்குத் தக்கபடிசிரத்தையோடுசெய்துபசுபதியாகிய பரம்பொருளையும் உபாஸித்துவரு வோமானால் கொடிய நரகயாதனைகளுக்கும் இழிய பிறவிகளுக்கும் ஆளாகாமலி ருக்கலாம். வேதசாஸ்திரங்களில் சிரத்தையின்றி மனம்போனவாறு நடந்தோமா னால் பசுத்தன்மையாகிய ஜீவத்துவம் நீங்காமல் கிலேசமாகிய அவித்தியை முதலியவைகளோடும் கர்ம விபாக ஆசயங்களோடும் பொருந்தியவராய் ஜனன மரணநரகயாதனாதித்துன்பங்களைச் சுற்றிச்சுற்றி அடைந்துகொண்டிருக்கவேண் டிவரும். இங்ஙனமாகிய ஜீவத்துவத்தின் ஸ்வரூபமானது

"அநாத்யவித்யாப்ரமுக க்லேசகர்மவாஸநாஸங்கல்ப விகல்ப பாசபத்தா: | விஷயாஸக்தா: பரவிஷயே விவேகஶூந்யா: பசவோ ஜீவகா:||

> "அனாதியாயுள்ள அவித்தையை முக்கியமாய்க் கொண்டவையா கிய கிலேசபேதங்களோடும் கர்மவோடும் கூடிய வாஸனைகளால் எவப்பட்ட ஸங்கற்பவிகற்பங்களாகிய பாசங்களால் கட்டப் பட்டு விஷயங்களிலேயே சென்று துன்புறுவோர்களும் பரம்பொரு ளின் விஷயத்தில் சிறிதும் விவேகமின்றி மூடர்களுமாயுள்ள பசுக் களே ஜீவர்களாம்"

என்று எம் ஆசிரியராகிய ஸஹஜானந்தஸ்வாமிகள் அவர்களால் விஞ்ஞான ஸுதாதரங்கிணீ முதலிய நூற்களில் சொல்லப்பட்டுள்ளது. மற்றும் முன் னோர்களாலும் இவ்வாறே உபதேசிக்கப்பட்டு வருகின்றது. இவ்வாறு ஜீவ ஸ்வரூபம் சொல்லப்பட்டது. இனி ஈச்வர ஸ்வரூபத்தைச் சற்று விசாரிப்பாம்.

ஈச்வரனாவது, பந்தகங்களாகிய கிலேசம், கர்மா, விபாகம், ஆசயம் எனும் இந்நான்கினில் ஒன்றோடும் சிறிதும் ஸம்பந்தியாமல் எங்கு முள்ளவனாய் எல்லா மறிவோனாய் ஸகல வல்லமையும் பொருந்தியவனாய் அனாதி முக்தனாயுள்ள பேரானந்த வடிவனேயாம். இவ்வுண்மையும்,

"𑌕𑍍𑌲𑍇𑌶𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌪𑌾𑌕𑌾𑌶𑌯𑍈𑌰𑌪𑌰𑌾𑌮𑍃𑌷𑍍𑌟𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌶𑍇𑌷 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃"

> "கிலேச கர்ம விபாகாசயங்களால் சிறிதும் சம்பந்திக்கப்பட்டிராத புருஷ விசேஷன் ஈச்வரன்

என்பது முதலிய பதஞ்சலி ஸூத்திரத்தினால் காண்க.

ஈச்வரன் ஸகல உலகங்களின் உற்பத்திஸ்திதிலயங்களுக்கு ஏதுவா யுள்ளவன். அவனில்லாத இடம் ஓர்சிறிதுமில்லை. நாமவனைக்காணாவிடினும் அவன் நாம் செய்யுங் காரியங்களெல்லாவற்றையும் கண்டுகொண்டேயிருக்கின்றான். அவனது பெருமை மனோவாக்குகளுக்கெட்டாதது என்பதுஉண்மை. ஜீவர்களுக்குக்கிலேசாதிகள் போல் இவ்விறைவனுக்குச்சுத்த மாயையாகிய திவ்விய சக்தி மஹிமைகளிருக்கின்றன.

இனி ஈசன் எங்குமிருக்கின்றானென்றதினால் அவன் நாமிருக்குமிடத்திலுமிருக்கின்றானென்றே ஏற்படுகின்றது. அப்படியானால் அவன் நமக்கெதிரில் காணப்படவேண்டும். அவ்விதம் எவராலும் காணப்படவில்லையே. ஆதலால் ஈசன் கெட்ட காரியஞ் செய்வோர்களைத் தண்டிப்பவன் என்ற எண்ணமிராவிட்டால் ஸாமான்னிய ஜனங்கள் ஒன்றுக்குமஞ்சாமல் தோன்றியவாறு நடந்து, உலகநிலை ஸரிவர நடைபெறாமல் கெட்டுபோகும்படியாகும். அப்படி ஸாமான்னிய ஜனங்கள் கெட்ட காரியம் செய்யாமலிருக்க வேண்டு மென்பதையே கருதி நமது முன்னோர்களால், ஈசனிருக்கின்றான் என்று கட்டுப்பாடாகவே எழுதி வைக்கப்பட்டதாகச்சொல்லக் கூடாதோ? எனின், இது அறியாமல் சொல்லுவதே.

அதாவது உலகம் யாவும் மண், ஜலம், தீ, வாயு, ஆகாயம், எனும் ஐந்து மூலப்பொருள்களிலேயே அடங்கும் என்பது நிச்சயம். இவ்வைந்து பொருள்களையும் நாம் பிரத்தியக்ஷமாய்க் காண்கின்றோமென்பதில்லை. நம்மால் காணப்படும் பொருள்கள் மண், ஜலம், தீ, எனும் மூன்றே. இங்ஙனம் நமக்கெதிரில் காணப்படாமையால் ஈசனில்லை என்போமானால் வாயுவாகாசங்களும் காணப்படாமைபற்றி அவைகளிரண்டையும் இல்லையென்றே சொல்ல வேண்டியதாகும். பிரத்தியக்ஷமாய்க்காணப்படாவிடினும் யுக்தி யனுபவங்களுக் கொட்டிய சாஸ்திரங்களால் கண்டு நிச்சயிக்கப்பட்டிருக்கும் வாயு, ஆகாசங்களை இல்லை யென்பது உசிதமா? இல்லை யன்றோ.

பிரத்தியக்ஷமாய்க் காணாவிட்டாலும் அதனாலேற்படும் செய்கைகளைக் கண்டு அப்பொருளை நிச்சயித்துக்கொள்கின்றனம். இதுவே அநுமானம் என நமது சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றது.

உதாரணமாக, நள்ளிருளில் வீட்டிற்குள் உடம்பு முழுதும் போர்த்திக்கண் மூடிப்படுத்திருக்கும் காலத்திற் கேட்கப்படும் இடிச்சத்தத்தைக்கொண்டு நேரில் காணப்படாத மேகத்தையுள்ளதென்று அனுமானித்துக்கொள்கின்றனம். மேகத்தைக் காணவிடினும் அதன் செயலாகிய இடிச் சத்தத்தைக் கொண்டு அதனையுள்ளதாக நிச்சயிட்பது போன்ற காரியங்கள் உலகில் ஏராளமாய் அனுபவத்திலிருக்கின்றன. உலகில் ஏதானும் ஓர் வேலை நடக்கவேண்டுமானால் அதனைச் செய்யும் வஸ்து ஒன்று இருக்க வேண்டியது அவசியம். பெரிய மரங்களை வேற் பிடுங்கிச்சாய்த்தல் கப்பல்களைக் கவிழ்த்தல் முதலிய அஸாத்திய வேலைகளைச் செய்துபோடும் பொருள் வாயுவே யன்றோ. ஓர் விதமான உருவமுமில்லாமலிருந்துகொண்டு இது இப்படிப்பட்ட காரியங்களை எங்ஙனம் செய்கின்றதென்று யோஜிப்போமாயின் அது நமது புத்திக்கெட்டவில்லை. ஏதோ இப்படிப்பட்ட செயல்களை செய்யும் யோக்கியதை இதற்கிருக்கின்றதென்றே சொல்ல வேண்டியதாகின்றது.

இவ்விதம் வாயு எனும் பூதத்தை நேரில் காணக்கூடாவிடினும் அதன் குணமாகிய பரிசத்தையும் நமக்குப் பரிச உணர்ச்சி யிராதபோதும் தூரத்தில் காணப்படும் மரங்களின் அசைதலாகிய செய்கையையும் கொண்டு, அத்தகைய செய்கைகளைச் செய்யும் பொருளாகிய வாயுவென ஒன்று உள்ளதாகத் தீர்மானிக்கின்றோம். இது போல ஈசன் எனும் பொருள் நம்மெதிரில் காணப்படாவிடினும் உலகெங்கும் நடைபெறுவதாகிய அவனது அரிய செய்கைகளைக்கொண்டு அச்செயல்களையுடையோன் ஒருவன் இருக்கின்றான் என்று நிச்சயிக்கத் தகும்.

இனி, வாயுவின் செய்கையாகிய விருக்ஷசலனம் முதலியது பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றமையால் அச்செய்கையையுடைய பொருள் ஒன்று இருக்கவேண்டுமென்று நிச்சயிக்கின்றோம். அதுபோல ஈசனது செயல் ஒன்றும் உலகில் பிரத்தியக்ஷமாய்க் காணப்பட வில்லையே எனின் அல்ல. அதாவது வாயுவின் செயல்களைக் காட்டிலும் உலகில் நடை பெறுகின்றதாய்ச் சொல்லப்படும் ஈசன் செயல் மிக்க நுட்பமாயிருக்கின்றமையால் அது எல்லோருக்கும் வெளிப்படையாய்க் காணப்படுகின்றதில்லை. இனி அந்தச் செயல் யாதென்றும் அது எதனால் நிகழுகின்ற தென்றும் சற்று யோஜித்துப் பார்ப்போமாயின் ஈசனை உள்ளபடி கண்டுகொள்ளலாம். சற்று யோஜித்துப்பார்க்கின் பிறகு புலப்படுவனவாகிய செயல்கள் உலகில் ஏராளமாயிருக்கின்றன. உலகிலுள்ள ஸகல செயல்களும் ஒரே மாதிரியாய் வெளிப்படையாய்க் காணக்கூடுமென்பவையல்ல. பொருள்களின் நிலமைக்குத் தக்கபடி அவைகளின் செய்கைகள் ஏற்படுகின்றன. ப்ருதிவியிலும் ஜலமும் ஜலத்திலும் அக்கினியும் அக்கினியிலும் வாயுவும் வாயுவிலும் ஆகாயமும் நுட்பம். ஆதலின் அதனதன் நிலமைக்குத் தக்கபடி செய்கைகளும் முறையே நுட்பமாயமைந்திருக்கின்றன.

வாயுவின் செயலாகிய மரத்தையசைத்தல் முதலியவை போலப்பிரத்தியக்ஷமாய்க் காணக்கூடியனவாயிராவிடினும் உள்ளத்திலேயே நடைபெறும்

சிந்தனை முதலிய மிக்க நுட்பமான செயலைக் கொண்டு, அந்தச் செயலைச் செய்யும் மனம் எனும் ஓர் பொருள் இருக்க வேண்டுமெனத் தீர்மானிக்கின்றோமன்றோ.

இனி, கத்தி முதலிய கருவிகளால் மனுஷ்யாதி தேஹங்களை அறுத்துச் செய்யும் பரிசோதனையில் மிகவும் சிறந்தவர்களான (டாக்டர்கள்) வைத்தியர் இதுவே மூளை; இதுவே சுவாஸாசயம், இவே ரக்தாசயம், என்பதாகப் பிரத்தியக்ஷமாய்ச் சரீரத்திலுள்ள ஸ்தூலாவயவங்களைக் காண்பிக்கின்றனரே அவ்வாறு கத்தி கொண்டறுத்து "இதுவே மனஸ்" எனக் காண்பித்த வைத்தியர் இது காலம் வரையில் யாரேனும் ஒருவரிருந்ததாக நிரூபிக்க முடியுமா? எவ்வளவோ அனுபோகமுடைய வைத்தியர்களின் பரிசோதனைக்குமகப்படாமல் பூதக் கண்ணாடி முதலிய எக்கருவிகளாலும் காண இயலாமல், இப்படியோர் பதார்த்தம் எங்ஙனமிருக்கும் என யோஜித்துப் பார்ப்பவர்க்கும் எட்டாமலிருக்கினும், அபாரமாயும் அற்புதமாயுமுள்ள சிந்தனைகளைச் செய்துகொண்டிருக்கும் பொருளாகிய மனஸ் எனும் ஓர் பதார்த்தமிருக்கவேண்டுமெனத் தீர்மானிப்பது போல, அதனிலும் நுட்பமாய் உலகில் நடைபெற்று வரும் ஆச்சரியமான செயலைக் கொண்டு அந்தச் செய்கையைச்செய்யும் அற்புதவல்லமை பொருந்திய பொருள் ஒன்றுள்ள தெனத்தீர்மானிப்பது குற்றமற்றதே என்றறிக.

கருவி கரணங்களின் பரிசோதனைக் கெட்டாத பொருளை அறிவின் ஆழ்ந்த விசாரணையாலேயே தெரிந்து கொள்ளவேண்டுமன்றி வேறு வழியில்லை. ஓர் பொருளிருக்கு மிடத்தில் மற்றோர் பொருள் இராதென்பது ஸ்தூலமாய் அறியப்படுகின்றது. மாம்ஸம் ரக்தம் நரம்பு எலும்பு முதலியவையடர்ந்து நெருங்கியுள்ள இத்தேஹத்தில் மனம் எனும் ஓர் பொருளிருந்துகொண்டு ஆச்சரியமான வேலைகளைச் செய்கின்றதே. இது எப்படி நடக்கின்றதெனின் அதற்கு விடையாது சொல்லுவது? ஏதோ இவ்விதம் இது ஆச்சரியமாகத்தான் இருக்கின்றது என்றே சொல்ல வேண்டியதாகின்றது. புத்தியைச் சற்றுத் தீக்ஷணமாய்ச் செலுத்திப் பார்க்கின் உலகில் ஒரே இடத்திலிருந்து ஏககாலத்தில் ஆச்சரியமாகிய கிரியைகளைச் செய்துகொண்டிருப்பவைகளாகிய பல பொருள்களுள்ளன என்று அறியப்படுகின்றது. அதாவது, பிருதிவி ஜலாக்கினிகள் இருக்குமிடத்திலேயே வாயுவும், வாயு இருக்குமிடத்திலேயே ஆகாசமும் இருக்கின்றதன்றோ. இதனிலும் ஸூக்ஷ்மமாய் மனஸ் எனும் பொருளானது மாம்ஸம் ரக்தம் முதலியவைகளடர்ந்திருக்குமிடத்திலேயே இருக்கின்றது. இப்படியிருந்துகொண்டு அதனதன் வேலையையும் செய்துகொண்டிருக்கின்றதன்றோ. அவ்வாறே இவ்வளவு பொருள்களிருக்கினும் அவைகளிலும் ஸூக்ஷ்மமாய் உலகெங்கும் நடைபெறும் ஆச்சரியமாகிய செயலொன்றிருக்கின்றது. இனி அச்செயல் யாதெனின் அதனைச் சற்றுச் சுருக்கமாய் நிரூபிப்பாம்.

"நமக்குத் துன்பம் வரக்கூடாது; இன்பமே வரவேண்டும்" எனும் எண்ணத்தைக்கொண்டே ஸகல ஜீவர்களும் தத்தம் யோக்கியதைக்குக் தக்கவாறு

முயற்சியைச்செய்துகொண்டிருக்கின்றனர். அங்ஙனமாயினும் ஓரோர்ஸமயம் எவ்வளவோ அரிய முயற்சிகளைச்செய்தும் அவையெல்லாம் சிறிதும் பயன்படாமல் பெருந்துன்பத்திற்கே ஆளாகும்படியாகின்றதன்றோ. அப்படி இவர்களது செய்கைகளாகிய முயற்சிகள் பயனற்றவையாவதற்குக் காரணம் யாதானும் ஒன்றிருக்கவேண்டுமென்பது நிச்சயமல்லவா. இவர்களது முயற்சியை வீணாக்கும் பொருள் யாதென்பது நமதுஸ்தூலமாகிய பார்வைக்குத்தெரியாவிடினும் நம் திருஷ்டிக்கெட்டாமல் இதற்குப் பிரதியாய் நடந்துகொண்டிருக்கும் அரிய பெரியமுயற்சியென்று இராவிடில் இவர்களது முயற்சி பயனற்றதாவதற்கு நியாயமில்லை என்பது நிச்சயம்.

சங்கை, முயற்சியை எப்படிச்செய்தால் அத்துன்பம் வாராமற்போகுமோ அப்படிச்செய்திருந்தால் அத்துன்பம்வந்திருக்காது. புருஷயத்தினத்தைச்சரியாய்ச் செய்யாமையினாலேயே அந்தந்த த்துன்பத்திற்காளாகும்படியாகின்றதென்று சொல்லாமே! இதற்கெனவேறு காரணத்தைத்தேடவேண்டியதில்லையே எனின், இது அறியாமையேயாம். ஏனெனின், அபாரமான தேகபலமும் புத்திபலமும் பொருந்தியவராய் ஆக்ஞை, செல்வம், முதலிய ஏனையஸம்பத்துகளிலும் மிக்கப் பெருமை பெற்றவாராயுள்ள மனிதரும் “ இத்துன்பம் வாராமலிருக்கும் வழியை நாம் தேடிக்கொள்ளவேண்டும்! எனப்பற்பலவாறுய்ச்செய்யும் முயர்சிகளும் வீணாய்ப்போய் முடிவில், அங்ஙனம் எத்துன்பத்திற்குப்பயந்து முயற்சியைசெய்தனரோ அத்துன்பத்திற்கே உட்படும்படியாகின்றதே. அதற்கு எக்காரணத்தைச் சொல்லஇயலும்? அந்தோ காலம் சென்றசக்கிரவர்த்தியாகிய நமது ஏழாவது எட்வர்டு மஹாராஜாதிராஜாவாகிய ஸ்ரீமானுக்கு மரணம் வரக்கூடாதென நம்சக்கிரவர்த்தியாகிய ஜார்ஜ் மஹாராஜா முதலிய ராஜவர்க்கத்தார் செய்தசிகித்ஸையிலும் சிறந்தசிகித்ஸையைத்தற்காலத்தவராகிய மற்றவர் செய்ய இயலுமோ? அவர்களுக்கு அனுபவமுள்ள மேதாவிகளாகிய வைத்தியர்கள் கிடைக்கவில்லையோ? அந்த ஸ்ரீமான் உயிர்பெற்றுய்ய வேண்டுமென்பதைக்குறித்துச் செய்யப்பட்ட முயற்சியும் போதுமானதல்ல என்பது உசிதமாகுமா? அவ்வளவிருந்தும் பயன்படாமற்போச்சுதே? ஆதலால் இவர்கள் எவ்வளவு அரியமுயற்சியைச் செய்யினும் இவ்வளவையும் பயனற்றதாகும்படிச் செய்வதும் நம்மால் பிரத்தியக்ஷமாய்க்காணக்கூடாததுமாயுள்ள ஏதோ ஓர் ஆச்சரியமாகிய செயல் உலகில் நடந்துகொண்டிருக்கின்றது என்பதை ஒத்துக்கொள்ளவேண்டியது அவசியமாகின்றது.

இனி, மனிதர்களது முயற்சிவீணாவதுபோல ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் பறவைகளின் முயற்சியும் நீரில் வாழும் ஜந்துக்களின் முயற்சியும் வீணாகின்றதும் பிரத்தியக்ஷமாய்க்காணலாம். இனி இவ்விந்தியாதேசத்திலுள்ளவரது முயற்சிமாத்திரம் வீணாகின்றது மற்றதேசத்திலுள்ளவரது முயற்சியெல்லாம் ஸபலமாகின்றதே எனச்சொல்லமுடியுமா? இம்மட்டுமல்ல. இவ்வாசியாமுதலிய ஐந்துகண்டங்களிலுள்ள எத்தேசத்திலும் இவ்வாறே ஓரோர்ஸமயம் அங்குள்ளவரது அரியமுயற்சிகளும் வீணாய்ப்போகின்றன என்பதை உலகவியவ

காரத்தினுல் நன்கறியலாம். இங்ஙனம் ஜீவர்கள் வசிக்குமிடமெல்லாம் இவ்விஷயம் நடைபெறுகின்றமையால் ஜீவர்களின் முயற்சிகளை வீணுக்குகின்றதெனச்சொல்லிய அவ்வற்புதமாகிய செயல் உலகெங்குமிருக்கின்றது. அன்றியும் லோகாந்தரமெனும் இரண்டாம்பாகத்தில் சூரியசந்திராதிக்ருஹ நக்ஷத்திராதிகளெல்லாம் ஜீவகோடிகள்வஸிக்குமிடமாகிய லோகாந்தரமே என நிர்ணயிக்கப்பட்டதன்ருே. அப்படிப்பட்ட லோகாந்தரங்களிலும் இவ்வரியசெயல் நடைபெருகின்றதாக நாம் இதிகாசபுராணங்களால் நிச்சயிக்கத்தகும். அதாவது

"நேதா யஸ்ய ப்ருஹஸ்பதி: ப்ரஹரணம் வஜ்ரம் ஸுரா: ஸைநிகா: ஸ்வர்க்கோ துர்க்கமநுக்ரஹ: கில ஹரேரைராவணோ வாரண: | இத்யாஸ்சர்யபலாந்விதோபி பலபித் பக்ந: பரை: ஸங்கரே"

எனமுன்னேர்கூறியபடி புத்தியில் நிகரற்றவரும் வருங்கால இயல்பைநன்கறியும் யோக்கியதையுடையவரும் ஸகலகலைகளுமுணர்ந்தவருமான பிருஹஸ்பதிபகவனைமந்திரியாய்ப்பெற்றுளோன். அவனது ஆயுதமோவெனின் எவ்விடத்திலேவிவிடினும் ஸபலமாகவே திரும்பும் இயல்புடைய வஜ்ஜிராயுதம். ஸேனைகளோ ஆகாரம் நித்திரை முதலியவைகளைவேண்டாதவரும் நம்மைப்போல ஜராமரணுதிகளுக்குட்பட்டிராதவருமாகியதேவர்கள். ஆகாசத்தினில் நடுநாயகமாய் ஓர் வகை வாயுஸ்கந்தத்திஞல் நிலைபெற்றுள்ளதாகிய ஸ்வர்க்கமெனும் இடம் வாஸஸ்தானம். ஜகந்நாதனுயுள்ள ஸ்ரீஹரியினது பரமானுக்கிரஹமோ கிடைத்திருக்கிறது. எங்குசென்ருலும் ஜயசீலமாகவே திரும்பும் ஐராவதமென்பது வாஹனம். இவ்வளவு ஆச்சரியமான யோக்கியதையுடையவனுயினும் அவவிந்திரன் அஸுரர்களால் ஸகல இன்பங்களையுமிழந்து இருப்பிடமுமிழந்து நிர்க்கதியாய்த் தவித்துக்கதறும்படியாய் ஏற்பட்டது.

என்பது முதலிய இதிகாஸ புராணசரிதங்களால் அந்த அற்புதமாகிய செயலுக்கு, பிருஹ்மாண்ட கோடிகளிலுள்ள ஸகல ஜீவர்களும் உட்பட்டே இருக்கின்றனர் என்பது நன்ருயறியக்கூடியது.

இனி, ஜீவர் தமக்கியல்பாயுள்ள சக்தியிலும் மிகுதியாகிய சக்தியை யோகாப்பியாஸம்முதலியவைகளால் ஸம்பாதித்துக்கொண்டால் அப்போதாவது அச்செயலை மீறமுடியுமோ எனின் அல்ல. அதாவது எவ்வளவு அரியயோகஸித்திகளைக்கைக்கொண்டாலும் சிறுதுரும்பு ஓர்பெரியமலையை எங்ஙனம் சிறிதும் சலிக்கச்செய்ய முடியாதோ அப்படியே அந்தச்செயலைச்சிறுதும் மீறமுடியாது.

இங்ஙனம் ப்ரும்மாண்டமெங்கும் நடைபெறுகின்றதும் எவராலும் மீறவொணுததுமாயிருக்கும் அந்தச்செயலைச் சற்றுக்கவனித்தால் இதனிலும் அரியதாகிய ஓர் உண்மைவிளங்கும். அதாவது செய்கை, கிரியை என்னப்படும்

பதார்த்தமானது செய்வோன், கர்த்தா, என்னப்படும் ஓர் ஆச்ரயப்பொருளின்றி தனித்திராது. ஆச்ரயமின்றி செய்கைமாத்திரமுள்ளதென்பது உலகினில் ஸம்பவமில்லையாதலால் செய்கையையுடைய பொருளை நேரில்காணமுடியாவிடினும் செய்கையைக்கொண்டு அதற்காச்ரமாயுள்ள பதார்த்தத்தை யுள்ளதென்று நிச்சயித்தறிந்து கொள்ளலாம். உலகெங்கும் நடைபெறுகின்றதாகிய அவ்வரிய செயலைக்கொண்டு அதனையுடையதாகிய ஆச்சரியமான ஓர்பொருள் உலகெங்குமிருக்கின்றதென்று நிச்சயமாய் விளங்குகின்றது.

இனி அந்தப்பொருளின் பெயர்யாது எனின் மீறவொண்ணத செயலையுடையது எனும்பெயரே அதற்குத்தகும். இனி அந்தச்செயலை பிரிதிவியினது என்றுவது ஜலத்தினுடையதென்றுவது அக்கினியினுடையதென்றுவது வாயுவினுடையதென்றுவது ஆகாசத்தினுடையதென்றுவது மனவினுடையதென்றுவது சொல்லஇயலாது. இவைகளுக்கந்நியமானயாதோ ஓர் பொருளினுடையது என்பதே நிர்ணயம் என்றறிக.

சங்கை. "தமக்குத்துன்பம் வரக்கூடாது" என ஸகல ஜீவர்களும் முயற்சித்தல் உண்மையே. ஆனல் அது பயன்படாமல் போவதைக்கொண்டு அதற்கெதிரிடையான செயலையுடைய வேருெரு பொருளிருக்கவேண்டுமெனக் கொள்ளுவது என்? இன்பதுன்பம், முதலியவை மன்ஸைப்பற்றியதென்பதில் ஸந்தேகமில்லையே! மனவினல் இன்பமெனக் கொண்டால் அது ஸுகமாகின்றது. துன்பமெனக் கொண்டால் துக்கமாகின்றது. ஆதலால் ஸுகதுக்கங்கள் அவரவர் மனவினலேயேவருவன எனக்கொள்வது உசிதமாயிருக்க, இதற்கென எதிரிடையான செயலையுடைய வேருெரு பொருள் உலகெங்கும் இருக்கின்றதென்பது அநுசிதமே என்பதாம்.

இனி யிதனுண்மையறிக. மனவினலேயே ஸகல ஜீவர்களும் சுகதுக்கங்களைக் கற்பித்துக்கொள்ளுகின்றனர் என்பது மிகவும் அறியாமையேயாம். ஸகல ஜீவர்களும் விரும்புவது இன்பத்தையேயன்றி ஒருவரும் தமக்குத் துன்பத்தை விரும்பமாட்டார். மனவினலேயே இன்பதுன்பங்களைக் கற்பித்துக் கொள்ளுவது என்பது உண்மையாயிருககின், ஸகல ஜீவர்களும் எப்போதும் தத்தம் மனஸை ஏன் இன்பமாகவே வைத்துக்கொள்ளக்கூடாது? இன்பமாகவே தம்மனஸைக்கற்பித்துக் கொள்ளவேண்டுமென எவ்வளவு முயற்சியைச் செய்யினும் புத்திரபார்யாதிகள் உயிர்நீங்கும்போது அது சிறிதுமியலவில்லை. மஹாமேதாவிகளான மஹருஷிகளும் கூட மஹத்தான துன்பங்களை யனுபவித்ததாக இதிஹாச புராணங்கள் கூறுகின்றனவே. ஸுகதுக்கங்கள் மனக்கற்பனமாத்திரமே யெனின், அது இன்பத்திற்குமாத்திரம் ஒருவாறு பொருந்துகின்றதாய்க்காணப்படுகின்றது. துன்பத்தை நோக்கச் சிறிதும் ஒவ்வவில்லையே. இன்பதுன்பங்கள் மனக்கற்பனமாத்திரமே எனின், உலகிலுள்ள ஸகல ஜீவரும் ஓர் க்ஷணமுமோய்வின்றி எப்போதும் மனஸை ஸுகமாகவே ஏன் கற்பித்துக் கொள்ளக்கூடாது? அப்படியாயின் உலகில் துன்பமனுபவிப்பவரோ இல்லாமற்

போகவேண்டு மென்றல்லவோ ஏற்படும். ஆதலால் மனக்கற்பனையே துன்ப மென்பது தவறேயாம்.

இனி அவரவர்பூர்வ ஜன்மங்களில் செய்திருக்கும் வினையே அதாவது கர்மாவே ஜீவர்களின் முயற்சிகளையெல்லாம் வீணாகச் செய்து பலமான துன்பத்திற்கு உட்படுத்துகின்றதென்பதுகுற்றமாகுமோ? இதற்கென வேறுபொருளை யங்கீகரிக்க வேண்டியதில்லையே! எனின் இதனைச் சற்றுராய்வாம்.

கர்மா என்பது வினை. அது தொழில் மாத்திரமே யாதலால் அது அறிவுப் பொருளல்லாத அசேதநமேயாம். அசேதனமாவது இந்தக் காரியத்திற்கு இது பயன் என்பதை அறிந்துகொள்ளுதற்கு இயலாதது என்பதாம். கர்மாவுக்குத் தக்கபடி இன்பதுன்பமேற்படுகின்றதென்பது நமக்கு ஸம்மதமே. ஆனால் கர்மமாத்திரமே அதற்குப் போதும் என்பது குற்றமே என்றறியவேண்டியது. யுக்தியனுபவங்களைக் கவனித்தால் கர்மாவுக்குத்தக்கபடியுள்ள பயனைஅறிந்து அவ்வாறு அவரவர்க்குத்தரும் செயலையுடையபொருள் வேறொன்று இருக்கவேண்டுமென்பதேநிர்ணயம். உலகில் எங்கேயாவது கூலிக்காரன் செய்யும் வேலைமாத்திரமே அதற்குள்ளகூலியை அவனுக் கொடுப்பதுண்டா? கூலிக்காரன் செய்யும் வேலையை அறிவோனாகிய சேதனனான எஜமானனேயன்றோ அதற்குள்ள கூலியைத் தருகின்றான். படிக்கும் பையன்கள் எழுதியவிடைகளே பரீக்ஷை தேரியதென்றாவது தவறியதென்றாவது சொல்லுகின்றதென்பது உலகிலுண்டா? இல்லையே? அவ்விடைப் பத்திரிகைகளைக்கவனிக்கும் பரீக்ஷகரேயல்லவோ தேறியதென்றாவது தவறியதென்றாவது சொல்லவேண்டும். உலகில் கூலிக்காரன் செய்யும் வேலையே அதற்குள்ள கூலியைத் தருதலையாவது பையன்களது விடையே பரீக்ஷை தேறியதென்று சொல்லுதலையாவது கண்டிருப்போமானால் அதனைத் திருஷ்டாந்தமாகக் காட்டி கர்மாவே இன்பதுன்பத்தைத் தருகின்றது என்பதைச் சாதிக்கப்பார்க்கலாம். அப்படிக்கின்றி எந்தத் திருஷ்டாந்தத்தைக்கவனித்தாலும் சேதனனாகிய ஒருவனாலேயே செய்கைக்குப்பயன் ஏற்படுகின்றதாக ஏற்படுகின்றமையால் கர்மாவே இன்பதுன்பங்களைத்தரப் போதுமானது என்பது மிகவும் அநுசிதமே என்றறியப்படுகின்றது.

இனி, காலத்தினாலாவது அல்லது ஸ்வபாவத்தினாலாவது இன்பதுன்பம் வருகின்றதெனின் அதுவும் குற்றமே. காலம் ஸ்வபாவம் முதலியன எவ்வளவு கூடினாலும் அவை அறிவில்லாத அசேதனங்களேயாதலால் எவ்வளவுகோடி மண்குவியலிருப்பினும் குலாலனின்றி குடமுண்டாகாததுபோல, கர்மாவையும் கர்மபலத்தையும் அறிவோனும், எவராலும் மீறவொணாதசக்தியுடையோனுமாகிய ஓர் பேரறிவாளனிராமல் ஜீவர்களுக்குக் கர்மபலபோகம் நிகழாதென்றறிக.

இனி, கர்மாவென்று ஒன்றை உள்ளதாக வைத்துக்கொள்வதனாலன்றோ கர்மபலத்தைத் தருவோனாகிய ஓர் சேதனன் வேண்டும் என்று சொல்லவேண்டியதாகின்றது.கர்மாவையே ஒத்துக்கொள்ளாவிடில் என்னகுற்றம்? ஏதோ

ஸ்வபாவமாகவே எல்லாம் நடைபெறுகின்றதென்று சொல்லக்கூடாதோ எனின் அல்ல.

உலகில் ஸகல ஜீவர்களுக்கும் ஒன்றிற்கிருப்பதுபோல மற்றொன்றிற்கிராமல் ஸுகதுக்கங்களில் தாரதம்மியங்காணப்படுகின்றதே! அதற்குக் காரணம் யாதெனின் சொல்லவேண்டும். ஸ்வபாவமே அதற்குக் காரணம் எனின், காலத்தின் ஸ்வபாவமா? அல்லது தேசத்தின் ஸ்வபாவமா? அல்லது வஸ்துவின் ஸ்வபாவமா? இதனை நன்குயோஜிக்கவேண்டும். காலத்தின்ஸ்வபாவமே காரணமெனின் வஸந்த காலத்திலோ அல்லது கிரீஷ்ம காலத்திலோ மற்றுமுள்ள காலத்திலோ ஸகல ஜீவர்களுக்கும் ஒரேவிதமாய் இன்பமாவது துன்பமாவதுவரவேண்டும். உலகில் அப்படிக் காணப்படாமையால் அது மிக்கத்தவறேயாம். தேசத்தின் ஸ்வபாவமே காரணமெனின் அமெரிக்கா முதலிய இடங்களில் உள்ளவரெல்லோரும் ஸுகத்தையே அனுபவிக்கின்றார் என்றாவது, ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் உள்ளவரெல்லோரும் துன்பத்தையே அனுபவிக்கின்றார் என்றாவது சொல்லவேண்டியதாகும். அவ்விதம் காணப்படுவதில்லையே. இவ்விடத்தில் உள்ளதுபோலவே அவ்விடத்திலும் எவ்வளவோ தாரதம்மியங்காணப்படுகின்றது. ஆதலால் அதுவும் உசிதமாகாது. இனி வஸ்துவின் ஸ்வபாவத்தினால் இன்பதுன்பமேற்படுகின்றது எனின், ஒரேவஸ்து ஓர் காலத்தில் இன்பத்திற்கும் மற்றோர் காலத்தில் துன்பத்திற்கும் ஹேதுவாகின்றதே! ஆதலால் அப்படியும் நிர்ணயிக்கமுடியவில்லை.

இனி ஸ்வபாவத்தினால் இன்பதுன்பங்களேற்படுதல் என்பதை ஒத்துக்கொள்ளாவிடினும், ஏதோ தற்செயலாய் ஸுகதுக்கங்களேற்படுகின்றன என்று சொல்லலாமே எனின், அதுவும் உசிதமல்ல. தற்செயலாவது தனது செயலா? அல்லது பிறர் செயலா? யாதென்று கொள்ளுவது? இனி, தன் செயலுமல்ல பிறர் செயலுமல்ல ஏதோ அகஸ்மாத்தாய் (காரணமின்றி) நடைபெறுகின்றது என்னலாமே எனின், அல்ல. உலகில் காரணமின்றி நடைபெறுவதாய் ஓர் காரியமும் ஸம்பவிக்கின்றதில்லை. காரியம் காரணத்தினாலேயே ஏற்படவேண்டுமென்பதே நியதமாயிருக்கின்றது. ஆதலால் ஜீவர்களின் இன்பதுன்பங்களாகியகாரியத்திற்கும் யாதானும் ஓர் காரணமுள்ளதென்றேசொல்லவேண்டும். உலகில் யாதானும் ஓர் காரியம் ஏற்பட்டால் அதற்கு ஓர் காரணமிருக்கின்றதேயன்றிக் காரணமில்லாமல் ஏற்படுகின்றதென்பது திருஷ்டாந்தமாய்க் காணப்படுவதில்லை. காரணத்தை நேரில் காணாவிடினும் காரியத்தைக் கண்டதும் அதற்குக் காரணமிருக்கவேண்டும் என்றே தீர்மானிக்க வேண்டும்.

கர்மா என்பதை ஒத்துக்கொள்ளாமலிருப்பதற்குக்காரணமானது பிரத்தியக்ஷமாய்க் காணப்படவில்லை என்பதேயல்லவா! பிரத்தியக்ஷமாய்க் காணப்படாததை ஒத்துக்கொள்ளுவதில்லை யெனின், பிரத்தியக்ஷமொன்றே பிரமாணம் என்பதாகின்றது. பிரத்தியக்ஷமல்லாதது பொய் பிரத்தியக்ஷமே உண்மை எனின், ஆகாயம் ஏற்றுச்சால்போலக் கவிழ்ந்திருப்பதாய்க் காணப்படுகின்றது

பிரத்தியக்ஷமேயன்றோ. ஆதலால் அதுவே உண்மை என்று சொல்லவேண்டியதாகின்றது.

அன்றியும் ஆகாயம் கறு நிலம்போலவும் நக்ஷத்திரங்கள் தீப்பொறிகளாகவுங்காணப்படுகின்றன. இவைகள் உண்மையில்லையே! தோற்றமாத்திரமேயன்றோ. பிரத்தியக்ஷமாய்க்காணப்படுவதே உண்மை யெனின் இவைகளை நிஜமென்றல்லவோ சொல்லவேண்டியதாகின்றது. ஆகாயத்திற்கு உருவமில்லையாதலால் அதனில் கறுநிறம் இருக்கநியாயமில்லை எனும் யுக்தியைக்கொண்டு பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவதையும் பிசகென்றுகண்டுகொள்ளுகின்றோம். விவேசனம் செய்துபார்க்கின் பிரத்தியக்ஷத்திலும் யுக்தி சாஸ்திரங்களே சிரேஷ்டமாகியபிரமாணமென்றே அறியப்படுகின்றது.

𑌤𑌲𑌵𑌦𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮 𑌖𑌦𑍍𑌯𑍋𑌤𑍋 𑌹𑌵𑍍𑌯𑌵𑌾𑌡𑌿𑌵 ।
𑌨 𑌤𑌲𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑍍𑌨𑌿 𑌨 𑌖𑌦𑍍𑌯𑍋𑌤𑍇 𑌹𑍁𑌤𑌾𑌶𑌨𑌃 ॥

ஆகாயம் நிலம்போலும் நக்ஷத்திரம் நெருப்புப்போலும்இருக்கின்றது.
ஆகாயத்தில் நிலமில்லை, நக்ஷத்திரம் நெருப்பல்ல.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌦𑍃𑌷𑍍𑌟𑍋𑌽𑌪𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 ।
𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌪𑌯𑌨𑍍 𑌨𑍍𑌯𑌾𑌯𑌂 𑌨𑍍𑌯𑌾𑌯𑌾𑌤𑍍 𑌨 𑌪𑌰𑌿𑌹𑍀𑌯𑌤𑍇 ॥

ஆதலின் பிரத்தியக்ஷமாய்க்காணப்பட்ட பொருளையும் நியாயவாயிலாய் விசாரித்துப் பரீக்ஷிப்பது யுக்தம். பரிசோதித்து விஷயத்தை நிர்ணயித்தல் தர்மத்தினின்றும் வழுவாது.

என்பது முதலிய நாரதஸ்ம்ருதி வசனத்தாலும் இவ்விஷயமே நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. உலகாநுபவத்தைக் கவனிப்போமாளுல் பிரத்தியக்ஷமொன்றே பிரமாணம் என்று சொல்லுவது பிசகு என்றறியப்படுகின்றது.

ஆதலால் கர்மாவானது பிரத்தியக்ஷமல்லாவிடினும் யுக்திவாயிலாய் விசாரித்துப்பார்க்கும்போது, ஒத்துக்கொள்ளவேண்டியதைத்தவிரவேறுகதி இல்லை. ஆதலால் கர்மா வுள்ளதென்பதும் கர்மாவுக்குத்தக்கபடி இன்பதுன்பங்களை ஓர் பேரறிவாளனே தருகின்ருன் என்பதும் வாஸ்தவமேயாம் என்க.

இந்தப்பேரறிவாளனையே வேதாகம இதிஹாஸபுராணுதிஸகலநூல்களும் போற்றுகின்றன. பூர்வம் கடும்பாபங்களை மிகவும் ஸந்தோஷமாய்ச் செய்துபோட்டு, ஜீவர்கள் இந்தப் பேரறிவாளனது ஆணையால் இப்போது அவைகளுக்குப்பயனுகவரும் விபத்துகளுக்குட்பட்டு மிகவும் துயரத்தையனுபவிக்கின்றனர். அப்படி, அவனுணையால் வரும் விபத்தைமீறிப்போடவேண்டுமெண அரியபெரிய யுக்திகளைக்கொண்டு எவ்வளவோ முயற்சியைச்செய்தும் ஜீவர் முடிவில் அவ்வளவும் வீணுய்ப்போய் அவ்விபத்துகளுக்கே உட்படும்படியாதலைச் சற்று நன்குகவனித்தால் அவனுக்ஞையின்பெருமை நிகரற்றதென்பது நன்ருய் விளங்கும். அவ்விறைவனது ஆக்ஞையின் வல்லமையே ஸூர்யசந்திராதி கிருஹங்களையும் ஸகலபுவனமண்டலங்களையும் காலசக்கரத்தில் இடைவிடாது சுழன்றுகொண்டேயிருக்கும்படிச் செய்திருக்கின்றது. இன்னம் இந்திராக்கினி

முதலிய தேவரும் நாரதவஸிஷ்டாதி மஹருஷிகளும் அவ்வாக்ஞையாலேயே தத்தம் தொழிலை நடாத்திக்கொண்டிருக்கின்றனர்.

" 𑌭𑍀𑌷𑌾𑌽𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾𑌤𑌃 𑌪𑌵𑌤𑍇 𑌭𑍀𑌷𑍋𑌦𑍇𑌤𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 𑌭𑍀𑌷𑌾𑌽𑌸𑍍𑌮𑌾𑌦𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑌾𑌵𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌮 𑌇𑌤𑌿 "

> இவனிடம் பயத்தினல் வாயுசலிக்கின்ருன். இவனிடம் பயத்தினல் சூரியன் உதிக்கின்ருன். அக்நியும் இந்திரனும் தத்தம்வேலையில் ஜாகரூகராயிருத்தலும் இவனிடம் பயத்தினலேயே. காலனும் தனது கிரியையை இடைவிடாது நடத்துவதும் இவனுடைய ஆணையினலேயாம்.

எனும் தைத்திரீயம் முதலிய சுருதிவாக்கியங்களாலும் இவ்விஷயமே உபதேசிக்கப்படுகின்றது.

இங்கு ஓர் சங்கை ; அதாவது, இந்தச்சுருதியானது நிர்க்குணமாகிய ஆத்மவஸ்துவையே போதிக்கின்றதெனப் பெரியோர் சொல்லுகின்றனர். இப்படியிருக்க ஜகதாக்ஞாகரனுகிய ஸகுணனை இந்தச் சுருதி பிரதிபாதிக்கின்றதெனின் அதை எப்படி ஒத்துக்கொள்வது? என்பதாம்.

இனி யிதனுண்மையறிக. இந்தச் சுருதியில் ஸாக்ஷாத்தாக ஸகுணப்ரும்மமாகியஇறைவனே பிரதிபாதிக்கப்படுகின்ருன். இதனை விட்டு நிர்க்குணத்தையே பொருளாகக் கொண்டால் "பீஷா" பயத்தினல் என்பது முதலிய சொற்கள் பிரவர்த்திக்க இடமில்லையன்ருே. ஆதலால் ராஜாவின் ஆக்ஞைக்குப் பயந்து நடக்கும் சேவகர்போல, எவ்விறைவனது ஆணைக்குப் பயந்து வாயு அக்நீந்திராதிகள்நடக்கின்றனரோ அப்படிப்பட்டஸகுணப்ரும்மமாகிய இறைவனே இங்கு பொருள்எனக் கொள்ளவேண்டியது அவசியம். அன்றியும் இந்தச்சுருதியின் பாஷ்யத்தில்

" 𑌵𑌾𑌤𑌾𑌦𑌯𑍋 𑌹𑌿 𑌮𑌹𑌾𑌰𑍍𑌹𑌾𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 𑌪𑌵𑌨𑌾𑌦𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌷𑍁 𑌆𑌯𑌾𑌸𑌬𑌹𑍁𑌲𑍇𑌷𑍁 𑌨𑌿𑌯𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑍍𑌤𑌰𑌿 𑌸𑌤𑌿 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌸𑍍𑌤𑌿 𑌭𑌯𑌕𑌾𑌰𑌣𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑍍𑌤𑍃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 । 𑌯𑌤𑌸𑍍𑌤𑍇 𑌭𑍃𑌤𑍍𑌯𑌾 𑌇𑌵 𑌰𑌾𑌜𑍍𑌞𑍋𑌽𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌭𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 ॥

> மிக்கமஹிமையுடையவர்களாகிய வாயு முதலியவர் தாமே ஈச்வரர்களாயிருந்தும் மிகவும் ஆயாஸத்தை உடையதாகிய சலித்தல் முதலிய தத்தம் காரியத்தில் நியதமாகப் பிரவர்த்தித்துக் கொண்டிருக்கின்றனர். அப்படிப் பிரவர்த்தித்தல் பெரிய ஆக்ஞையுடையவனய் மற்ருெரு அதிபன் இருக்கும்போது யுக்தமேயாம். ஆதலால் அவர்களுக்கும் பயகாரணமான ஆக்ஞையுடையோனுகிய இறைவனிருக்கின்ருன். எனெனின் அரசனிடம் ஸேவகர்போல அவர்கள்ப்ரும்மமாகிய இவ்விறைவனிடம் பயத்தினல் பிரவர்த்திக்கின்றனர்."

எனச்சங்கர பகவத்பாதாசார்யஸ்வாமிகள் இங்குவியக்தமாய் ஸகுணமாகிய இறைவனையே போதித்திருக்கின்றமையால் இதுவே உசிதமென்பது இனிது விளங்குகின்றது.

இம்மட்டுமென்பதல்ல.

“𑌯𑌦𑌿𑌦𑌂𑌕𑌿𑌂𑌚𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌏𑌜𑌤𑌿𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑌂 ।
𑌮𑌹𑌦𑍍𑌭𑌯𑌂𑌵𑌜𑍍𑌰𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌂𑌯𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍁𑌰𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍇𑌭𑌵𑌨𑍍𑌤𑌿”

“இந்த ஸகல ஜகமும், ஸகல ஜகத்திற்கும் பிராணன் போன்றுள்ள இந்தப் பரம்பொருளிருத்தல் பற்றி ஓர் நியமத்திற்கடங்கியதாய்ச் சேஷ்டிக்கின்றது. இந்தப் பரம்பொருளானது ஓங்கப்பெற்ற வஜ்ஜிராயுதம் போல மிகவும் பயத்திற்கு ஏதுவாயுள்ளது. அதனை யாரறிகின்றனரோ அவர் முக்தராகின்றனர்.

எனும் கடவல்லியாதி சுருதிகளிலும் இவ்வுண்மை போதிக்கப்பட்டிருக்கின்றது.

கூலிக்காரனுடைய வேலைக்குத் தக்க கூலியைத் தரும் யஜமானனால் அவனது வேலை நன்கு கவனிக்கப்பட்டிருப்பதுபோல, ஜீவர்களின் பூர்வ கர்மங்களுக்குத் தக்க பயனாகிய இன்பதுன்பங்களைத் தரும் இறைவனால் ஜீவர்களது செய்கைகளெல்லாம் நன்றாய்க் கவனிக்கப்பட்டிருக்குமென்பது நிச்சயமே. ஜீவர்கள் மனவினாலேயேயாவது அல்லது வாக்குகாயம் இவைகளினாலாவது நன்மை தின்மைகளைச் செய்கின்றமையால், அச்செயலுக்குத் தக்கபயன்தரும் ஈசன் மனவின் செயல்களையும் வாக்குக்காயங்களின் செயல்களையும் நன்றாயறிந்துகொண்டிருப்பவன் என்றேற்படுகின்றது. அவ்வாறு உள்ளத்திலும் வெளியிலும் இருந்துகொண்டு ஸகல செய்கைகளையும் அறிந்துகொண்டிருக்கின்றவனாயினும் அவன் நம்மால் காணப்படுகின்றதில்லை. ஆதலால் அவனை ஸகல ஜீவர்களிடமும் உள்ள ரஹஸ்யமான பொருள். அதாவது 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌗𑍁𑌹𑌾𑌶𑌯𑌃 என்பது தகும்.

பிருமாண்டகோடிகளிலுள்ள ஸகல ஜீவராசிகளுக்கும் அவரவர் பூர்வகர்மங்களுக்குத் தக்கபடி பயன் தருவோனாகிய இறைவன், ஸகல பிரும்மாண்டங்களிலும் வியாபகனாயிருப்பவன் என்பது நன்கு விளங்குகின்றது. அங்ஙனம் பிரும்மாண்டம் முழுதும் பரந்துள்ளவனை ஸர்வவியாபகன் 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 என்பது உசிதம்.

ஸகல ஜீவர்களும் தத்தம் வாஸனைக்குத் தக்கபடி சேஷ்டித்துக்கொண்டிருக்கின்றனர் என்பது ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டது. அந்தவாஸனை அசேதனமாகிய ஜடப்பொருளாதலால் சேதனனாகிய ஓர் பிரேரகனை நிமித்தமாய்க்கொண்டே அது ஜீவர்களைச் சேஷ்டிக்கச்செய்யவேண்டுமென்பது நிர்ணயமாதலால், ஸகல ஜீவர்களுக்கும் வாஸனைக்குத் தக்கபடி பிரேரகன் ஒருவன் பொது நிமித்தமாக இருக்கின்றான் என்றேற்படுகின்றது. அப்படிப்பட்ட பிரேரகனை

அந்தராத்மா ஸர்வபூதாந்தராத்மா என்பதுதகும். இவனே ஜீவர்கள் மனஸினலாவது வாக்கினலாவது காயத்தினலாவது யாதானும் சேஷ்டித்துக் கொண்டேயிருக்க அதனை நன்ருய்க் கவனித்துக்கொண்டிருப்பவன். ஆதலால் இவனை கர்மங்களுக்கு எதிரிலுள்ளவன் கர்மாத்யக்ஷ: கர்மாத்தியக்ஷன் என்பதும் கர்மங்களுக்கு அதிபதி என்பதும் பொருந்தும்.

பிரிதிவீ ஜலம் அக்கினி வாயு முதலிய பொருள்களின் உள்ளிலும்புறம்பிலும் வியாபித்துக்கொண்டிருக்கும் ஆகாயம், பிருதிவியாதி பூதங்களுக்குஆதாரமாகவே யிருக்கின்றதுபோல, ஸகல பிரும்மாண்டங்களிலும் வியாபகமாயிருக்கும் இவ்விறைவனை ஸர்வ பூதங்களுக்கும் ஆதாரம் என்பது உசிதம். இவ்வுண்மையே

> யதாகாசஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹாந் ||
> ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய ||

> எங்ஙனம் எங்குஞ் செல்லுவதும் மஹத்துமாயுள்ள வாயு, ஆகாசத்திலிருக்கின்றனதோ அங்ஙனம் ஆகாசாதி ஸகல பூதங்களும் என்னிடம் (பரம்பொருளிடம்) உள்ளவை என்றறிக.

என்பது முதலிய சுலோகங்களினல் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் ஸகல பூதங்களுக்கும் ஆதாரமாயிருக்கும் இவ்விறைவனை ஸர்வபூதாதிவாஸ: ஸர்வபூதங்களுக்கும் இருப்பிடமாயுள்ளவன் என்பது உசிதம்.

ஸகல ஜீவர்களின் கர்மங்களேயும் அறிந்துகொண்டு அவைகளுக்குத்தக்க பயனையும்தருவோனுகிய இவ்விறைவனுக்கு அச்செய்கைகளின் நிமித்தமாய் யாதானும் பற்று ஏற்படக் கூடுமோ எனின், அல்லவென்க. அதாவது, அவன் அச்செயல்களில் ஸங்கம் யாதுமின்றி ஸாக்ஷிமாத்திரமாயுள்ளவன் என்பதாம். ஆதலால் இவனை “ஸாக்ஷீ” என்பதும் உசிதமென்றறிக.

இனி உபநிஷதங்களில், முக்தரால் அனுபவிக்கப்படும் பொருள் நிர்க்குணமே என்றும் அவனுக்கந்நியமான பொருள் யாதுமில்லை என்றும் சொல்லப்படுகின்றதே! அதற்கு விரோதமாக இங்கு ஈச்வரன் ஸகுணன் என்றுசொல்லியது எப்படிப் பொருந்தும்? எனின் இஃதறிக. முக்தி நிலமையில் கேவலமான நிர்க்குணமாய் எந்தப் பொருள் எஞ்சிநிற்கின்றதோ, அதுவே முக்தரொழிந்த ஏனையோர்க்குத்திவ்விய மஹாமாயா சக்தி விலாஸம் பொருந்தியுள்ளதும் உபாஸிக்கும் பக்தகோடிகளுக்குக் கோரிய புருஷார்த்தத்தைத்தந்து அநுக்கிரஹிப்பதுமான ஸகுண பரம்பொருளாயிருக்கின்றது. உண்மைஞானம் பெற்ற முக்தருக்கு அவனேகேவலமும் நிர்க்குணமுமாய் எஞ்சிநிற்கின்றனன். ஆதலால் இவ்விறைவனை கேவலோ நிர்குண: (கேவலன் நிர்க்குணன்) என்பதுதகும். உண்மை யிவ்விதமாதலின்,

"ஏகோ தேவஸ் ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா | கர்மாத்யக்ஷ: ஸர்வபூதாதிவாஸ: ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணஶ்ச"

> *ஒரேதேவன், எல்லாப் பூதங்களிலும் மறைந்துள்ளவன், எங்கும் வியாபகனுயிருப்பவன், எல்லாப் பூதங்களுக்கும் அந்தராத்மா, கர்மங்களுக்கு அத்யக்ஷன், ஸர்வபூதங்களுக்கும் இருப்பிடமாயுள்ளவன், ஸாக்ஷீ, சேதனன்,, கேவலன், நிர்க்குணனுமாம்.*

என சுவேதாச்வதரம் முதலிய சுருதிகள் கோஷிக்கின்றன. இவ்விறைவனது பெருமையைச் சற்றுக் கவனிப்போமாயின் மனம் வாக்கு இவைகளில் ஒன்றிற்கும் அது எட்டாததாயிருக்கின்றது என்பது திண்ணம்.

ஓர் வீட்டிலிருக்கும் ஈ, எறும்பு, கொசுகு, கறையான், பேன், முகடு, முதலிய ஜீவராசிகளை இத்தனையென எண்ணிக் கணக்கிட்டுச் சொல்ல எவராலாவது இயலுமா? தனக்கிணையாயுள்ள மேதாவியுலகில் யாருமில்லை எனத் தீர்மானித்துக் கொண்டிருக்கும் மனிதரெல்லோரும் ஒருங்கே கூடி முயன்றாலும இக்காரியமியலாது என்பது நிச்சயமே. இதற்கே இப்படியாயின் இவ்வுலகிலுள்ள ஸகல ஜீவராசிகளையும் கணக்கிடுவதைப் பற்றிப் பேசுதற்குமிடமில்லை. இம்மட்டுமென்பதல்ல. இனி எண்ணிறந்த பலகோடி உலகங்களோடு கூடிய இந்த பிரும்மாண்ட கோடிகளிலுள்ள ஸகல ஜீவர்களையும் இவ்வளவென்பதைப் பற்றி மனஸாலும் சிந்திக்க இயலுமா? ஸகல ஜீவர்களுக்கும் அவரவர் பூர்வ கர்மங்களுக்குத் தக்க பயனைத்தரும் இறைவனால் பிரும்மாண்ட கோடிகளிலுள்ள ஸகல ஜீவர்களின் கர்மங்களும் அறியப்பட்டிருக்க வேண்டுமெல்லவா! இப்படி ஸகல ஜீவர்களின் கர்மங்களையும் அவைகளுக்குத் தக்கபடியுள்ள ஸுகதுக்கப் பயன்களையும் அறியாமல் கர்மபலதாதாவாக இருத்தல் இயலாது. அன்றியும் ஓர் ஜீவன் செய்த கர்மத்தை மற்றோர் ஜீவனுடையதாக எண்ணி மாறுபாடாகப் பயன் தருவோனென்பதின்றி, அவரவர் கர்மத்திற்குத் தக்கபயனை அவரவர்க்குச் சிறிதும் மாறுபாடின்றிக் கொடுப்பவனுயுமிருந்தாலொழிய கர்மபலதாதாவாயிருத்தல் பொருந்தாது.

தவிரவும், எந்தெந்த ஜீவனது எந்தெந்த கர்மா எந்தெந்தகாலதேசங்களில் எப்படி எப்படிப் பயன்படவேண்டுமென்பதும் சிறிதும் மாறுபாடின்றி அவ்விறைவனால் அறியப்பட்டிருக்கவேண்டும். இவ்விதம் பிரபஞ்சத்திலுள்ள ஸகல ஜீவர்களையும் அவரவர் கருமங்களையும் அவைகள் பயன்படுதற்குத்தக்க காலதேசங்களையும் அப்பயன்களையும் சிறிதும் பிசகாமல் அறிந்துகொண்டிருப்பவனது அறிவின் வல்லமையை என்ன என்று சொல்லத்தரும் எனின், அவனால் அறியப்படாத விஷயம் பிரபஞ்சத்தில் யாதுமில்லை என்றே சொல்லவேண்டுமன்றி அவனுடைய அறிவு இப்படிப்பட்டதெனச்சொல்ல எவராலுமியலாது. எவனால் அறியப்படாத விஷயம் யாதுமில்லையோ அவனே ஸர்வஞ்ஞன்

ஸவஜ்ஞ: என்றே சொல்லுவதாம். ஆதலால் கர்மபலதாதா ஸர்வஞ்ஞன் என்பது யுக்திவாயிலாகவே அறியப்படுகின்றது.

இங்ஙனம் பிரபஞ்சத்திலுள்ள ஸகலஜீவர்களுக்கும் அவரவர்பூர்வவினைக்குத் தக்கபயனை அளித்துக்கொண்டிருத்தல் என்பது எவ்வளவு காலத்திற்கு முன்னர் ஏற்பட்டது? அது இன்னம் எவ்வளவு காலம் நடைபெறும்? எனின், இதற்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை யென்றறிக. ஆதியந்தமில்லாமல் இடையிலும் ஓர்க்ஷணப்போதும் ஓய்வொழிவின்றி இப்படிப்பட்ட செயலைச் செய்துகொண் டிருக்கும் இவ்விறைவனை எப்படிப்பட்டவனாயிருக்க வேண்டுமெனின், துக்க ரோகாதிகள் சிறிதுமின்றி எப்போதும் ஓர்பெரிய திருப்தியையுடையவனாகவே யிருக்கவேண்டும் என்றறியப்படுகின்றது. ஏனெனின் உலகில் அரியதான ஓர் வேலையைச்செய்துகொண்டிருக்கும் மனிதனுக்கு மனவினில் யாதானும் ஓர் வியாகூலசிந்தை ஏற்படுமாயின் அவனால் செய்யப்படும்வேலை ஸரிவர நடைபெ றாமல் தாறுமாறாகக்கெட்டுக்குற்றமுற்றதாகின்றதென்பது பிரத்தியக்ஷமாய் நம் மால் காணப்படுகின்றது. இதற்கே இப்படியானால் மனவினாலும் எண்ணுதற் கியலாததாகிய ஸகல ஜீவர்களுக்கும் கர்மபலதாதாவாயிருத்தல் எனும் செய்கை யைச் சிறிதும் ஓய்வொழிவின்றி நிர்வஹித்துக்கொண்டிருப்பவனாகிய இறைவ னுக்கு உள்ளத்தில் ஒப்பில்லாத அரும்பெருந்திருப்தி யிருக்கவேண்டுமென்பதில் சிறிதும் ஸந்தேஹிக்க இடமில்லை. ஆதலால் கர்மபலதாதாவாகிய இவ்விறை வன் நித்திய திருப்தியுடையோன் நித்ருப்த: என்பதும் யுக்திவாயிலாகவே நிர்ணயிக்கப்படுகின்றது.

அன்றியும் க்ஷணிகமாகியபொருளையனுபவிப்பவனுக்கு க்ஷணிகமான திருப் தியும் நித்தியமான பொருளையனுபவிப்பவனுக்கு நித்தியமான திருப்தியும் ஏற் படும் என்பதே உசிதம். இதுமாத்திரமென்பதல்ல. ஸுகத்திற்கு ஸாதனமா யுள்ள பொருளையனுபவித்தலால் திருப்தியும் துக்கத்திற்கு ஸாதனமான பொருளையனுபவித்தலால் துக்கமுமே ஏற்படும் என்பதும் நிர்ணயம். ஆதலால் நித்தியமான திருப்தியோடிருப்பவனேல் நித்தியமான இன்பப்பொருளே அனுப விக்கப்பட்டுக்கொண்டிருக்கவேண்டுமென்பதுநிச்சயம். தன்னாலறியப்பட்டிராத பொருளைத்தான் அனுபவிக்க இயலாததலால் அப்படிப்பட்ட நித்திய ஸுகப் பொருளையனுபவிக்கும் அவ்விறைவனால் அப்பொருள் அறியப்பட்டிருக்கவேண் டுமென்றே ஏற்படுகின்றது. அப்படிப்பட்ட நித்திய ஸுகவஸ்து அவ்விறைவ னால் எந்தஸமயம் முதல் அறியப்பட்டது எனின், அது கர்மபலதாதிருத் துவம்போலவே அனாதியாகவேஉள்ளது. ஆதலால் அவன் அனாதிபோதன் என் பதேதகும். இவ்விதம் கர்பலதாதாவைப்பற்றி விசாரித்துப்பார்க்கின் யுக்திவாயி லாகவே அவன் அநாதிபோத: அனாதிபோதன் என்பதும் சித்திக்கின்றது.

ஸகலஜீவர்களுக்கும் கர்மபலதாதாவாயிருப்பவனை எவனுக்காவது பரதந்திரப் பட்டிருக்கின்றானென்பது பொருந்தாது. அன்றியும் எவனுக்காவது பரதந்திரப் பட்டு அடிமையாயுள்ளவனுக்கு நித்தியமான திருப்திக்கு இடமில்லை. ஆதலால்

அவன் ஸ்வதந்திரனாகவே இருக்கவேண்டுமென்பதும் ஊஹிக்கப்படுகின்றது. இந்த நியாயத்தினால், ஸர்வஞ்ஞனும் நித்தியதிருப்தனும் அநாதிபோதனுமாயுள்ளவனை ஸ்வதந்திரனென்றும் நிர்ணயிக்கத்தகும். ஸ்வதந்த்ர: தன்னிச்சைப்படி நடப்பவன்'' பிறனுக்கு அடங்கியவனல்லன் என்பது பொருள்.

ஒருவன் ஓர் வேலையைச் சிலகாலம் இடைவிடாது செய்வானாயின் அவனது சக்திகுன்றுகின்றதென்பது உலகில் பிரத்தியக்ஷம். அநாதியாகவே சிறிதும் ஓய்வொழிவின்றி ஸகலஜீவர்களின் செயல்களையும் அறிந்துகொண்டு அவைகளுக்குத் தக்கபயனையும் தந்துகொண்டிருப்பவனது சக்தியானது ஓர்காலத்தும் சிறிதும் குன்றாததாகவே யிருக்கவேண்டுமென்பது நிர்ணயம். குன்றாதசக்தியுடையோனை அலுப்தசக்தி: அலுப்த சக்தியுடையோன் என்று சொல்லுவதாம்.

உலகில் ஓரோர் மனிதனுக்கு ஓரோர் செய்கையிலேயே மிகவும் திறமையிருக்கக்கூடுமன்றி பல செயல்களில் ஸமானமான திறமையுள்ளதென்பது பொருந்தாது. சிலர் பலவகையான செயல்களில் ஸமானமான சக்தியுள்ளவராக ஸாமான்னியமாய் நம்மால் எண்ணப்படுவோராயினும் நன்றாய்க் கவனிப்போமாயின் அவர்களிடம் உள்ள பலவகைச்சக்திகளில் மிகவும் தாரதம்மியம்காணப்படும் என்பது நிச்சயம். மனஸாலும் சிந்திக்கவொண்ணாத அற்புதமான பற்பல செயல்களைத்தாரதம்மியமின்றிச் செய்யும் ஆற்றலுடையவனை அநந்தங்களான சக்திகளையுடையோன் என்பதேதகும்.

ஆதலால் ஸகலப் பிரபஞ்சங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், ஸம்ஹாரம், திரோதானம், அனுக்கிரஹம் எனும் பஞ்சகிருத்தியங்களையும் நடாத்துவோனும், ஸர்வக்ஞனும், நித்திய திருப்தனும், அநாதிபோதனும், ஸ்வதந்திரனும், அலுப்த சக்தனுமாயுள்ள இவ்விறைவனை அநந்தசக்தன் அநந்தசக்தி: என்றும் சொல்லப்படுகின்றது. இவ்வுண்மை

"பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே"

"இவனது ஸர்வோத்கிருஷ்டையாயுள்ள சக்தியானது பலவாறாயுள்ளது"

என்பது முதலிய சுவேதாச்வதராதி ச்ருதிகளாலும்

"ஸர்வஜ்ஞதா த்ருப்திரநாதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தஶக்தி: ! அநந்தஶக்திஶ்ச விபோர்விதிஜ்ஞா: ஷடாஹுரங்காநி மஹேஶ்வரஸ்ய"

> ஸர்வஞ்ஞத்துவம், திருப்தி, அநாதிபோதம், ஸ்வதந்திரத்துவம், அலுப்தசக்தி, அநந்தசக்தி எனும் இவ்வாறும் வியாபகனாகிய இறைவனுக்கு அங்கங்களாம்"

“ஜ்ஞாநம் வைராக்யமைச்வர்யம் தபஸ்ஸத்யம் க்ஷமா த்ருதி: |
ஸ்ரஷ்ட்ருத்வமாத்மஸம்போதோ ஹ்யதிஷ்டாத்ருத்வமேவ ச ||
அவ்யயாநி தசைதாநி நித்யம் திஷ்டந்தி சங்கரே ||

“ஞானம், வைராக்யம், ஈச்வரத்துவம், தபஸ், ஸத்தியம், க்ஷமை, தரித்தல், ஸ்ருஷ்டித்தல், அந்தர்யாமியாயிருத்தல், அதிஷ்டாதாவாயிருத்தல், இவைபத்தும் இறைவனிடம் நித்தியமாயிருக்கின்றன.”

இப்படிப்பட்ட அபாரமஹிமையுடைய இறைவன் ஜீவர்களின் உள்ளத்திலும் வெளியிலுமிருந்துகொண்டு அவர்கள் செய்யும் ஸகல காரியங்களையும் நன்குகவனித்துக்கொண்டிருக்க, மனிதர் அதனையறியாதவராய் யாருமறியாமல் செய்கின்றோமென்றெண்ணிக்கொண்டு கெட்டகாரியங்களைச் செய்துபோடுகின்றனர். ஏகாந்தமாக யாருமறியாமல் இக்காரியத்தைச் செய்கின்றோமென்று எண்ணிக்கொண்டு இவர்கள் அவ்வாறு செய்யினும், இவர்களுடைய மனவின் செயல்களெல்லாவற்றையும் அறிந்துகொண்டு அதற்கு ஸாக்ஷியாயுள்ள இவ்விறைவன் அச்செய்கைகளை யறியாமலிருப்பானா? மூன்று நான்கு வயதுப்பருவமுள்ள குழந்தை யெதிரிலிருக்கும்போது கெட்டகாரியங்களைச் செய்வதற்கு அஞ்சுகின்றவராய் ஆஸ்திகரெனத்தம்மைச் சொல்லிக்கொள்ளும் மனிதர் அக்குழந்தை எதிரிலிராதபோது அக்காரியங்களைச்செய்துபோடுகின்றனரன்றோ. அந்தோ! அச்சிறுகுழந்தைக்குக் கொடுக்கும் கௌரவத்தையும் ஸர்வவல்லமைபொருந்திய இறைவனிடம் பாராட்டாமலிருக்கும் மனிதரை உண்மையில் ஆஸ்திகரென்று சொல்லுவது உசிதமாகுமா?

எவ்வளவோ அரிய பரிசோதனைகளைச் செய்து பார்க்கினும் காணப்படாமல் தேகத்திற்குள் பற்பலசிந்தனைகளைச்செய்துகொண்டு மனம் இருக்கின்றதுபோல, எப்படிப்பட்ட பரிசோதனைகளைச் செய்து முயன்றாலும் காணப்படாதவனாய் உள்ளும் புறம்பும் வியாபகனாய் ஸர்வக்ஞனாய் ஸர்வவல்லமைபொருந்தியவனாய் ஈச்வரன் இருக்கின்றான் என்பதில் நிச்சயஞானம் உள்ளவராயின், ஏகாந்தத்திலாவது வெளிப்படையாயாவது எவ்வாற்றாலும் கெட்டகாரியத்தைச்செய்யமாட்டார்களன்றோ. புலி மனிதரைக்கொன்றுபோடும் என்பதையறிந்த மனிதன் தெருவினில் வேங்கைப்புலி நிற்கின்றதை ஜன்னல் வழியாகப்பார்த்துவிட்டானாயின் பிறகு கதவைத்திறந்துகொண்டு வீட்டிற்கு வெளியில் வருவானா? அதுபோல ஸர்வக்ஞனும் ஸகல கர்மங்களுக்கும்பயனையளிப்பவனுமாகிய இறைவன் இருக்கின்றானென்பதில் திடமான நிச்சயமுடையோராயின் என்ன விபத்து நேரிடினும் கெட்டகாரியங்களைச்செய்யமாட்டாரென்பது நிச்சயமல்லவா.

அந்தோ! அற்பச்சம்பளம் பெறுவோராகிய ராஜாங்கச்சேவகரிடம்போலாவது ஈசனிடம் அஞ்சுவார்களில்லையே. இப்படிப்பட்டவர்களைப்பண்டிதரென்றும் பெரியோரென்றும் ஆஸ்திகரென்றும் சொல்லுவது சிறிதேனும் பொருத்தமுடையதாகுமா ? யாருமறியாமல் செய்கின்றோமென்றெண்ணிக்

கொண்டு இவர்கள் அறியாமையால் மோசம்போயினும் ஸர்வஸாக்ஷியாகிய இறைவனும் அவ்வாறு மோசம் போவனோ? நாம் கண்ணை மூடிக்கொண்டால் ஸூரியனுக்குப்பிரகாசமிராமற்போகுமா? இவர்கள் என்னதந்திரம் செய்து கொண்டுசெய்யினும் அச்செயல்களை இறைவனறிந்துகொண்டிருக்கின்றானென்பது நிச்சயமே. எவ்வளவு தந்திரம் செய்துபார்க்கினும் இவ்விறைவனது ஆணையினால் வரும்பயனை நீங்கிப்போக ஜீவர்களாலியலவே இயலாது. இவ்விறைவனது சக்திக்கு இயலாத காரியம் யாதுமில்லை. பிரபஞ்சங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதானம், அநுக்கிரஹம் எனும் ஐந்தொழில்களும் இவனது சக்திவல்லமையினாலேயே நடைபெறுகின்றன. உண்மையில் ஸச்சிதானந்தவடிவமாய் நிர்க்குணமாய் நிஷ்கிரியமாய் முத்தர்களால் அடையப்படுவதாகிய பரவஸ்துவானது சக்தியெனப்படும் இத்திவ்யமாயையினாலேயே பிரபஞ்சத்தை நோக்கி ஈச்வரத்தன்மையைப்பெற்றுள்ளது. இப்படிப்பட்ட இவ்விறைவனது சக்தியை மீறியவன் இதற்குமுன்னராவது தற்காலமாவது இல்லை. இனி வருங்காலத்திலும் அவ்வாறேயென்பது நிச்சயம்.

சங்கை, இவனது சக்தியாகிய மஹாமாயைக்கு இப்படிப்பட்ட அபாரமான யோக்கியதை யிருக்கின்றதென்பதை எப்படி நம்புவது? யுக்தி திருஷ்டாந்தங்களின்றிச்சொல்மாத்திரத்தினால் இதனை நம்புவதற்கு மனங்கொள்ளவில்லையே எனின், கூறுவாம்.

ஸ்வப்பனத்தில் விசித்திரமாகிய உலகை ஸ்ருஷ்டித்துப்போடுவதான அற்ப யோக்கியதையுடைய மனமேயன்றோ. கல், மண், சாந்து முதலிய எந்த ஸாதனமுமின்றி மனம் விசித்திரமாகிய நகரங்களை ஸ்ருஷ்டித்துப்போடுகின்றதென்பது, கனவுகாண்போர் எல்லோருக்கும் அனுபவஸித்தமே. அற்பமாகிய மனஸுக்கே இப்படிப்பட்ட விசித்திரமாகிய ஆற்றலிருக்குமாயின், அபாரமஹிமையையுடைய இறைவனது மஹாமாயா எனும் பராசக்திக்கு எப்படிப்பட்ட ஆற்றலிருக்கக்கூடும் என்பதை ஊஹிக்கவேண்டும். ஜீவனுக்கு மனம்போல ஈச்வரனுக்கு மாயை என்பதறிக. தேஹஸம்பந்தமாயுள்ள காரியங்கள் ஜீவனுக்கு மனதைக்கொண்டே நடைபெறுவதுபோல ஜகத்ஸம்பந்தமாயுள்ள கிருத்தியங்கள் இறைவனுக்கு மாயையைக்கொண்டே நடைபெறுகின்றன.

சங்கை, ஜீவர்களுக்கு ஸ்வப்பனத்தில் எந்த ஸாதனமுமின்றி மனோமாத்திரத்தினால் விசித்திர உலகம் ஸ்ருஷ்டிக்கப்படுவதுபோல மாயையாலேயே ஈச்வரனுக்கு ஜகத்தின் ஸம்பந்தமான காரியம் நடைபெறுகின்றது என்றதனால், அந்தத் திருஷ்டாந்தப்படி கவனிப்போமாயின் ஸ்தூலதேஹமின்றி மனம் ஸ்வப்பனஸ்ருஷ்டியைச் செய்யாதென்பதுபோல, கைகால் முதலிய அவயவங்களோடு கூடிய ஸ்தூலதேஹமின்றி ஈச்வரனுடையமாயை செய்யாதென்றல்லவோ ஏற்படுகின்றது. ஆதலால் ஈச்வரனுக்கும் ஸ்தூலதேஹமுள்ளதென்று கொள்ளவேண்டியதாகின்றது. அங்ஙனமாயின்,

“ நஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய நசக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்”

"இவனுருவம் கண்ணுக்கெதிர்ப்படும் விஷயமாயிருக்கின்றதில்லை, ஆகையால் இவனையாரும் கண்ணால் பார்க்கின்றதில்லை"

"யஜுர்வேதம்"

"அபாணிபாதொஜவநொ ग्रஹீதா"

"கைகால்களில்லாதவன் வேகமாய்ச்செல்லுவோன் கிரஹிப்பவன்".

என்பது முதலிய சுருதிகளில் சொல்லியவண்ணம் ஈச்வரனுக்கு ஸ்தூல தேஹமில்லை யெனும் ஸித்தாந்தத்திற்கு முறணாகமுடியுமே எனின், இச்சங்கை யுசிதமன்று. இவ்வுண்மையைச்சற்றுக் கூறுவாம்.

ஜீவர்களின் மனம் சேஷ்டிக்கவேண்டுமாயின் அதற்கு ஸ்தூலதேஹம் வேண்டியதவசியமேயாயினும், ஈச்வரனுக்கு மனஸ்தாநிகமாயுள்ளமாயை சேஷ்டிக்க அங்கும் ஸ்தூலதேஹம் வேண்டுமென்பது உசிதமல்ல. ஜீவர்களின் மனம் மிகவும் நுட்பமாயுள்ளதாதலால் அதுநின்று வேலைசெய்வதற்கு மூளை, சிறுமூளை முதலிய இடங்கள் வேண்டப்படுகின்றன. இச்சீவர்களுடைய மனமே யோகஸித்திபலத்தால் மிகவும் வியாபகமாகும் தன்மையையுடையதாகுமாயின் ஸ்தூலசரீரமிராமலேயே அபாரக்கிரியைகளைச் செய்வதாகும். இவ்வற்பமனத்திற்கே இங்ஙனம் யோகஸித்தியெனும் ஓர்வகை நிலமையைப்பெற்றபின்னர் ஸ்தூலசரீரமிராமலேசேஷ்டிக்கும் ஆற்றல் ஏற்படுமாயின், ஸகல பிரும்மாண்டகோடிகளும் தனது ஏகதேசத்திலடங்கியிருக்கும் வண்ணம் ஸர்வவியாபகமாயுள்ளமாயைசேஷ்டிக்கவேண்டுமாயின் ஸ்தூலசரீரம் வேண்டுமென்பது அவசியமல்ல என்றறிக. ஆதலால் ஈச்வரனுக்கு மனஸ்தாநிகமாயுள்ள மாயைக்கு ப்ரும்மாண்டகோடிகளையேயாவது ப்ரும்மாண்டகோடிகளிலெங்கும் வியாபித்துக்கொண்டிருக்கும் ஆகாசத்தையேயாவது ஸ்தூலதேஹம் என உபசாரமாகச் சொல்லலாம். இவ்வுண்மை பற்றியே,

"ஆகாஶஶரீரம்ப்ரஹ்ம"

"ஆகாசத்தைத் தேஹமாய்க்கொண்டது ப்ரும்மம்"

"விஶ்வம் ஹிதெவதெவஸ்ய ஜகதெதச்சராசரம்"

"தேவதேவனாகிய இறைவனுக்குச்சராசரமாகிய இச்சகமே தேஹம்",

என்பது முதலியச்ருதிஸ்ம்ருதிகள் முழங்குகின்றன. ஆதலின் இறைவனுக்கு ஸ்தூலதேஹமில்லை எனச்சொல்லும் முற்கூறிய சுருதிகள் சிறிதும் முறணாகாவென்றறிக.

சங்கை, ஈச்வரனுக்கு ஸ்தூலதேஹமில்லையென்று சொல்லப்பட்டதே, அப்படியாயின் சிவவிஷ்ணுவாதி திவ்யமூர்த்தியையுடையோனாய் ஸாதுக்களை அநுக்கிரஹிக்கின்றதாக இதிஹாஸ புராணங்களில் சொல்லப்பட்டிருத்தலும், அவ்வாறு சொல்லும் சுருதிவாக்கியங்களும் அவலமாக முடியுமே எனின் அல்லவென்க. உண்மையில் ஸ்தூலதேஹமின்றிமாயாமாத்திரத்தால் ஸகல கிருத்தியங்களையும் நடாத்துவோனாயினும் இறைவன் ஸ்தூலப் பொருள்களிலேயே பழகியுழன்று அவ்வாஸனையே பதிந்து கிடக்கும் அற்பயோக்கியதையுடைய மனஸை

உடையவர்களாகிய நம்போன்ற அற்பபரிபாகிகளையும் அநுக்கிரஹிப்பதன் பொருட்டே சங்காசந்திரகலாதராதி திவ்விய உருவத்தோடு விளங்குகின்றானென்பதே உண்மை. அத்தகையமூர்த்தியானது நம்போன்றவர்களுக்குப்போலப் பஞ்சபூதவிகாரமாயுள்ளதல்ல. அவனது திவ்வியமாயாவிலாஸத்தாலெடுக்கப்படும் மூர்த்தியே என்றறிக. உண்மையிதுவேயாதலின்

"ஆகாரவாம்ஸ்த்வம் நியமாத் உபாஸ்யோ ந வஸ்து நிராகாரமுபைதி
சித்தம்"

"ஓ இறைவனே தேவரீர் உருவமுடைய தேஹத்தையுடையவராயிருந்துகொண்டு அங்ஙனம் உபாஸிக்கப்படுகின்றீர். சித்தமானது உருவமில்லாத பொருளை அடையாதன்றோ.

என்பது முதலிய ஸ்ம்ருதீதிஹாஸ புராணவாக்கியங்கள் முழங்குகின்றன. இவ்வுண்மைபற்றியே

"ஸ்யாத் பரமேஸ்வரஸ்யாபி இச்சாவசாத் மாயாமயம் ரூபம் ஸாதகாநுக்ரஹார்த்தம்"

"பரமேச்வரனுக்கும் ஸாதகரை அநுக்கிரஹிப்பதன்பொருட்டு இச்சாவசமாய் மாயாமயமாகிய சரீரமெடுக்கப்படும்.

என ப்ரும்மஸூத்திரம் அந்தரதிகரணபாஷ்யத்தில் சங்கராசார்ய ஸ்வாமிகள் முதலிய பெரியோர்களால் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இப்படிப்பட்ட திவ்வியதேஹத்தை யெடுக்கும் ஆற்றலுடையதும் எங்கும் வியாபகமுடையதுமாயுள்ள மாயாசக்தியோடு கூடிய சைதன்யமாகிய பரிபூர்ணப் பொருளே ஸகுண வஸ்துவென்றும், தடஸ்தம் என்றும் சொல்லப்படும். இவ்வுண்மையையறியாதவர்களாய்த் தற்காலம் ஸகுணமென்பது ஆலயாதிகளில் காணப்படும் பிம்பாதிகளும் அவதார மூர்த்திகளும் மாத்திரமே என்பதாக எண்ணுவார் பலரிருக்கின்றனர். உண்மையில் ஸகுணமென்பது ஸகல ஜீவர்களின் செய்கைகளை அறிந்துகொண்டுள்ளதும், ஸகலருக்கும் கர்மாவுக்குத் தக்கபயனைத் தருவதும் மீறவொண்ணாத ஆணையையுடையதுமாயுள்ள வியாபகப்பொருளையாம் என்றறிக.

வேதாந்தங்களில் தடஸ்தன், மாயீ, மஹேசன், ஜகத்காரணன், பரமாத்மா, அந்தர்யாமீ, கர்மாத்தியக்ஷன், ஸர்வக்ஞன், அநுநிமுக்தன், பரமேச்வரன், ஸர்வசக்தன் என்பது முதலிய சொற்களால் இந்த ஸகுணவஸ்துவாகிய இறைவனே சொல்லப்படுகின்றான் என்பதும் அறியத்தக்கது.

சங்கை, வேதாந்த நூல்களில் வியஷ்டி ஸமஷ்டித் தன்மையெனச் சொல்லப்படுகின்றது. அதாவது, ஜீவ ஸமஷ்டியே ஈசன் என்று சொல்லப்படுவதாம். தனித்தனியாய் நோக்க வியஷ்டியென்றும் எல்லாவற்றையும் சேர்த்துப் பொதுவில் நோக்க ஸமஷ்டியென்றும் சொல்லுவதாம். உதாரணமாக வீடு வியஷ்டி என்பதாம். நகரம் ஸமஷ்டி யென்பதாம். விருக்ஷம் வியஷ்டி வனம் ஸமஷ்டி என்பதும் தகும். வீடுகளின் கூட்டத்தைத் தவிர நகரம் என்பது எப்படி வே

ருக இல்லையோ விருக்ஷங்களின் கூட்டத்திற்கந்நியமாய் வனம் என்பது எப்படித் தனியேயில்லையோ, அப்படியே ஜீவர்களின் ஸமஷ்டியே ஈசனென்றும் அவித்தியாஸமஷ்டியே மாயையென்றும் சொல்லப்படுகின்றதே. இதனால் ஜீவர்களின் கூட்டமாகிய பொதுத் தொகுதியையே ஈச்வரனென்றும், ஜீவர்களின் உபாதியாகிய அவித்தைகளின் பொதுக் கூட்டத்தையே மாயையென்றும் சாஸ்திரம் ஔபசாரிகமாகவே சொல்லியது என்றேற்படுகின்றதே. இப்படியிருக்க ஈச்வரனுடைய ஆணையினால் ஜீவர், கர்மபலத்தைப் புசிக்கின்றனர் என்பதும், ஸர்வக்ஞத்துவம் முதலிய தன்மைகளையுடையோன் ஈச்வரன் என்றும், ஜீவர் அவனை உபாஸிக்கவேண்டுமென்றும் சொல்லியதை எப்படி ஒவ்வுவது? எனும் சங்கையாம்.

இப்படி சங்கிப்பவரைத் தற்காலம் விசேஷமாய்க் காணலாம். இதற்குக் காரணம், ஸரியான குருவையடைந்து சிரவணம் செய்யாத குற்றமே. வியஷ்டி ஸமஷ்டித்தன்மையைக் கொண்டு ஜீவஸமஷ்டியே ஈச்வரனென்றும் ஜீவோபாதியாகிய அவித்தைகளின் ஸமஷ்டியே ஈச்வர சக்தியாகிய மாயை என்றும் கொண்டால்

“ கார்யோபாதிரயம் ஜீவ꞉ காரணோபாதிரீச்வர꞉ ”

“ காரியத்தை உபாதியாய்க் கொண்டவன் ஜீவன். காரணத்தை (உபாதியாய்) விசேஷணமாய்க் கொண்டவன் ஈச்வரன் ”

என்பது முதலிய பிராசீனப் பிரமாணமொழிகள் எப்படிப் பொருந்தும்? இத்தகைய வாக்கியங்களில் ஜீவோபாதிக்கும் ஈச்வரோபாதிக்கும் காரிய காரண பாவஸம்பந்தம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றதே. விருக்ஷத்திற்கும் வனத்திற்கும் வீட்டுக்கும் நகரத்திற்கும் காரியகாரண பாவஸம்பந்தம் சொல்லுவது பொருந்துமா? விருக்ஷத்திற்கு வனமும் வீட்டிற்கு நகரமும் காரணமாகுமா? ஆகாதன்றோ. விருக்ஷத்திற்கு விதைமுதலியதும் வீட்டுக்குக் கல் மண் சுண்ணும்புமுதலியதுமே காரணம் என்பதல்லவோ பொருத்தமுடையதாகும். பெருந்திரளடங்கிய ஓர் சந்தைக் கூட்டத்தை உதாரணமாகக் கொள்வோம். அக்கூட்டத்திலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் காரணம் அந்தக்கூட்டமே என்பது பொருந்துமா? ஒவ்வொருவனுக்கும் அவனவனுடைய பூர்வகர்மாவும் ஜனிப்பதற்கு நிமித்தமாயுள்ள தந்தைதாய்களுமே காரணமென்பதல்லவோ உசிதம். அதனை விடுத்து அந்தக் கூட்டமே அதனில் அடங்கிய ஒவ்வொருமனிதனுக்கும் காரணமெனின், அதனை யாராவது ஒத்துக்கொள்வாரா? வியஷ்டிஸமஷ்டி பாவத்தையும் விருக்ஷவனங்களும் வீடு நகரங்களுமாகிய திருஷ்டாந்தத்தையும் கொண்டு ஜீவகோடிகளுக்கு அந்நியனாய் ஈசனெனும் பொருளில்லவேயில்லை எனச்சாதிக்க முயன்றால் மாயாவித்தைகளுக்குக் காரணகாரிய பாவஸம்பந்தத்தைப் போதிப்பவைகளாகிய பிராபல்யப்பிரமாணமொழிகளுக்கு விரோதமாவதும் தவிர, முற்கூறியபடி மிக்க அஸங்கதமாகவே முடியும். ஆதலால் ஸமஷ்டி வியஷ்டிபாவத்தைக் கொண்டு ஜீவஸமஷ்டியைத்தவிர ஈச்வரன் தனியேயில்லை எனச்சாதிக்க இயலாது என்க.

இனி வியஷ்டி ஸமஷ்டி வாக்கியத்தைக்கொண்டும் ஜீவக்கூட்டத்திற்கு அந்நிய மாகவே ஈச்வரன் எனும் ஸர்வவல்லமைபொருந்திய இறைவன் ஒருவனிருக்கின்றான் என்பதை நன்கறியலாம்.

பல ஆட்களைக்கொண்டு பற்பல வேலைகளை நடத்திக்கொண்டிருக்கும் பிரபுவைத் திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்வோம். அங்குள்ள ஒவ்வொரு ஆளும் தன்தன் வேலையைத் தனது தனதென அபிமானிக்கின்றானன்றோ. அப்படி அபிமானிப்பதைக்கொண்டு, அவ்வேலைகளெல்லாவற்றையும் பொதுவில் அபிமானித்துக்கொண்டிருக்கும் பிரபுவை அபிமானியல்ல என்றாவது அக்கூலியாட்களைத்தவிர, பிரபுவென ஒருவன் தனியேயில்லை என்றாவதுசொல்லுவது ஒவ்வுமா? ஒவ்வொரு வீட்டையும் அந்தந்த வீட்டுக்காரன் அபிமானிக்கின்றானென்பதைக்கொண்டு நகரத்தைப்பொதுவில் அபிமானித்துக்கொண்டிருக்கும் அரசனையில்லையெனச்சொல்லமுடியுமா? ஓர் பெரிய வித்தியாசாலையிலுள்ள ஒவ்வொருவகுப்பையும் தனதெனஅவ்வவ்வகுப்பின் உபாத்தியாயர் அபிமானித்துக்கொண்டிருக்கினும், அவ்வெல்லாவகுப்புகளையும் பொதுவில் பிரதான உபாத்தியாயர் அபிமானிக்கக்கண்டதில்லையா? யோஜித்துப் பாராமல், "வேதாந்தநூற்களில் சொல்லப்பட்டிருக்கும் "வியஷ்டிஸமஷ்டி" எனும் சொல்மாத்திரத்தைக்கொண்டு ஜீவஸமூஹத்திற்கு அந்நியமாய் ஈசனில்லையெனின், ஜீவப்ரும்மைக்கியத்தை உபதேசிக்கும் "தத்துவமஸி" என்பது முதலிய மஹாவாக்கியங்களின்பொருளை விளக்குமிடத்தில்

" ஞகூ₂ஂதயொ₃ர்ஊுதபொ₃நுஊவாவு₂பொ₃நி₃ரஜ₂பெதஃ
நெ₂நு₂வி₃பூ₃தயஸி₃ணொஃ | ஸஜெ₂நு₂தஸா₃நாவிஸுநாஜஷு
தபொஃ கஉவநாஂஸ₂ஸ₂ஸுயாஃவநிணா ஸெ₂ஸெவர்நாஃ"

> " ஒருவருக்கொருவர் மின்மினிப்பூச்சிக்கும் ஸூர்யனுக்குப்போலவும், அரசனுக்கும் சேவகனுக்குப்போலவும், கிணற்றிற்கும் ஸமுத்திரத்திற்கும்போலவும் பரமாணுவுக்கும் மாமேருவுக்கும்போலவும் மிக்க விபரீதத்தன்மைகளையுடையவர்களாகிய ஜீவேச்வரர்களுக்கு ஐக்கியம் ஒவ்வாததலால் பாகலக்ஷணையைக்கொண்டு குணங்களை விடுத்துப் பொருள் கொள்ளவேண்டும் "

எனச்சங்கரபகவத்பாதர் முதலிய பெரியோர்களால் மின்மினிப்பூச்சி ஸூர்யாதிதிருஷ்டாந்தங்களைக்காட்டி ஜீவேச்வரர்களின் தன்மைகள் பரஸ்பர விபரீதங்களாயுள்ளன என்று சொல்லப்பட்டிருத்தலைப் பிசகென்றல்லவோ தள்ள வேண்டிவரும். லோகாநுக்கிரஹாவதாரமூர்த்தியாய்வந்த ஞானகுருவான சங்கர பகவத்பாதர் சொல்லியதைப் பிசகெனக்கூறும் அத்வைதிகளின் மொழியை உசிதமெனக்கொள்ளும் விவேகிகளுண்டா? இல்லையன்றோ. இனிஆசாரியஸ்வாமிகள் சொல்லிய திருஷ்டாந்தத்தில் ஸமஷ்டிவியஷ்டி பாவத்தைக்கொண்டு மின்மினிப்பூச்சி சேவகர் முதலிய பொருள்களின் கூட்டத்திற்கந்நியமாய் சூரியன் அரசன் முதலிய பொருள்களில்லவேயில்லை என்று சொல்லுவதுசிறிதும்

ஒவ்வாதல்லவா? யோஜித்துப்பாராமல் "வியஷ்டிஸமஷ்டி" எனும் சொல்மாத்திரத்தால் ஜீவஸமூஹத்திற்கந்நியமாய் ஈசன் இல்லேவேயில்லே என்பது மிகவும் அஸங்கதமேயாகும் என்க.

சங்கை, வியஷ்டிஸமஷ்டி திருஷ்டாந்தத்தினுல் ஸகுணனுகிய ஈசனில்லே என்று சொல்ல இயலாவிடினும், மற்றுமுள்ள

"வடிஸாவு_தலாகாஸா_நீயலாெநவடிஸதி|
வடொ_நீயெத_நாகாஸம் தத்வஜீவா_தாநஹொவஸ:"

"குடத்தினில் வரையப்பட்டுள்ள ஆகாசமானது குடம் வேறிடத்தில் கொண்டுபோகப்படும்போது அதுவும் செல்லுதலென்பது எப்படியில்லேயோ அப்படியே ஆத்மாவும் ஆகாசத்திற்கு நிகராம்"

என்பது முதலிய சுருதி வாக்கியங்களால், எதனுலும் வரையப்படாத வெளி ஆ (மஹா) காசம் போல நிர்க்குணப்ரும்மமும் குடத்தினுல் வரையப்பட்டுள்ளதாகிய குடாகாசம்போல ஜீவனும் என்றேற்படுகின்றது. குடமுடைந்தால் அதன் ஆகாசம் மஹாகாசமேயாகின்றது. இந்தந்திருஷ்டாந்தப்படி கவனித்தால் நிர்க்குணமாகிய ப்ரும்மமே அவித்தையினுல் ஜீவத்தன்மையைப் பெற்றிருக்கின்றது. அவித்தை நீக்கினுல் நிர்க்குண ப்ரும்மமேயாகின்றது என்றேற்படுகின்றது. வேதாந்தநூல்களில் வியக்தமாய் இங்ஙனமே சொல்லப்படுகின்றது. குடமுடைந்தால் அதனிலுள்ள ஆகாசம் மஹாகாசம் ஆவதற்கு, இனி மூன்ருவதாகிய வேறு ஆகாசம் வேண்டப்படுமாஞல், ஜீவன் நிர்க்குண ப்ரும்மமாவதற்கு மூன்ருவதாகிய ஸகுண ஈச்வரன் எனும் பொருள் உள்ளதெனக்கொள்ளலாம். திருஷ்டாந்தத்தினில் மஹாகாசத்தில் குடாகாசம் கற்பிதம். குடமுடைந்தால் நேரில் மஹாகாசமாகின்றது. மூன்ருவது பொருள் வேண்டப்படுவதில்லே. அவ்வாறே பிரகிருதத்திலும் ஜீவன் அவித்தைநீங்கினுல் நேரில் நிர்க்குணப்ரும்மமேயாகின்ருன். ஸகுணன் எனும் ஈச்வரனுகிய மூன்ருவது பொருளே என் வீணில்கொள்ளவேண்டும்?

உண்மையை நோக்கும்போது இங்ஙனம் ஜீவனும் நிர்க்குண ப்ரும்மமும் எனும் இம்மட்டோடே நிற்பது உசிதமாகின்றமையால், சுருதிகளில் ஸகுணோபாஸனே சொல்லப்பட்டிருத்தல், இப்படிப்பட்ட நிர்க்குணத்தில் மனம் நிலேபெறுவதன் பொருட்டு முன்னரே சித்தம் ஒருவழிப்பட்டிருத்தலே (ஏகாக்கிரத்தன்மையை) அப்பியாஸம் செய்வதன் நிமித்தம் கற்பனுமாத்திரமாகவே சொல்லப்பட்டது. ஆதலால் ஸர்வக்ஞன், ஸர்வேச்வரன், கர்மாத்தியக்ஷன், அந்தர்யாமீ, கர்மபலதாதா முதலிய சொற்களுக்கு நிர்க்குணபரமாக ஔபசாரிகமாகவே பொருள் கொள்ளவேண்டுமென்பதே உண்மை. ஆதலால் ஸகுணனுகிய இறைவன் ஒருவனிருக்கின்ருனென்பது சுத்தப்பிசகேஎன்று உபதேசிப்பவர் பலரிருக்கின்றனர். ஆதலால் இப்படிச்சொல்லுவது தவறுஎன்பதைச்சற்று நிரூபிப்பாம்.

குடாகாச திருஷ்டாந்தத்தால் ஸகுணனுகிய ஈசனில்லேஎன்று சொல்லுவதுவிசாரணேயின்மையேயாம். குடாகாசம்போல ஜீவனும் மஹாகாசம்போல

நிர்க்குண ப்ரும்மமும் என்றதனால் அறிந்துகொள்ளவேண்டியதாவது, ஆத்ம வஸ்து நிர்விகாரமாயும் அஸங்கமாயும் உள்ளதென்பதுமட்டுமேயன்றி வேறல்ல. திருஷ்டாந்தத்தில் குடம் சலிக்கும்போது ஆகாசத்திற்குச் சலனமிராததுபோலவும், குடமுடைந்தால் ஆகாசத்திற்கு நாசமேற்படாததுபோலவும் அவித்தை முதல் தேஹமீறாயுள்ளபொருள்களின் மாறுபாட்டால் ஆத்மாவுக்கு எவ்விதமாறுபாடும் நிகழாதென்பதும் அவித்தியாதிகளின் நாசத்தினால் ஆத்மாவுக்கு எக்கேடுமில்லை என்பதுமே அறியவேண்டியதாகின்றமையால், ஆத்மா நிர்விகார அஸங்க பரிபூர்ண ஸ்வரூபன் என்பது ஸித்திக்கின்றது. அம்மட்டோடுவிடாமல் அதனில் உள்ள எல்லாஅம்சங்களையும் எடுத்துக்கொள்வோமானால் குடமும் ஸத்தியம் ஆகாசமும் ஸத்தியம் என்பதுபோல, அவித்தையும் ஸத்தியம் பிரும்மமும் ஸத்தியம் எனக்கொள்ளவேண்டியதாகின்றமையால் ப்ரும்மமொன்றே ஸத்தியம் எனும் அத்துவைதம்போக, அவித்தையும் ஸத்தியமெனும் துவைதமே உண்மை எனக்கொண்டதாகின்றது. ஆதலால் திருஷ்டாந்தத்தால் எந்தஅம்சத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமோ அம்மட்டோடு நிற்கவேண்டும். உண்மை யிவ்வித மாதலால் குடாகாச திருஷ்டாந்தத்தினில் உள்ள ஸகல அம்சங்களையும் எடுத்துக் கொண்டு அதனால் ஸகுணனாகிய இறைவனை இல்லவேயில்லை எனச்சாதிக்க முயலுதல் மிகவும் பேதமையே.

உண்மையில் காலத்திரயத்திலும் அகண்டபரிபூர்ணமாய் மனோவாக்குகளுக்கு அதீதமாய் நிர்க்குணஸ்வரூபமேஉள்ளதாயினும், அப்பொருள் பிரபஞ்ச ஞானமாகிய வியாவஹாரிகத்தோற்ற நிலமையில் ஸகுணேச்வரனாயிருந்து ஸகலப்பிரபஞ்சங்களின் ஸ்ருஷ்டிஸ்திதிலயங்களுக்கு ஏதுவாகின்றது. இங்ஙனம் வஸ்துவொன்றே முக்திபெற்றவர்களின் நிலமையாகிய பரமார்த்தானுபவத்தில் நிர்க்குணமாயும் வியவஹாரநிலமையாகிய அமுக்தரனுபவத்தில் ஸகுணமாயுமிருக்கின்றது. ஸகுணமெனின் குணத்தோடுகூடியது என்பது பொருள். குணமாவது எடுத்தோதமுடியாததாய் (அநிர்வசநீயமாய்) உள்ள மாயாசக்தியே. அது வியாவஹாரிக நிலமையில் பிரும்மத்தின் ஏகதேசத்தில் அடங்கியுள்ளது. அதுசைதன்யமான ப்ரும்மமின்றி சேஷ்டியாது. பிரும்மமும் அந்தமாயையின்றி ஈச்வரத்தன்மையைப்பெறாது. திரியின்றி ஜ்வாலைமாத்திரம் தீபத்தன்மையைப் பெறாததுபோலவும் ஜ்வாலையின்றித்திரிமாத்திரமும்தீபத்தன்மையைப்பெறாதது போலவும் மாயாசைதந்யங்களில் ஒவ்வொன்றும் தனித்தனியே ஈச்வரத்தன்மையைப் பெறாதென்றறிக. கட்டை முதலியவைகளுடன் கூடியஅக்நிக்கே நெருப்பெனும் பெயர் வழங்குவதுபோல மாயாசக்தியுடன்கூடிய சைதன்னியத்திற்கே ஈச்வரனென்னும் பெயர் வழங்குவதாம். மாயாசக்தியுடன் கூடியசைதன்யமான ஈச்வரனே பரமாத்மா, ஸர்வேச்வரன், ஸவிசேஷன், ஜகத்காரணன், ஸர்வக்ஞன், கர்மபலதாதாமுதலிய சொற்களால் வழங்கப்படுகின்றமையால் அச் சொற்களுக்கு ஔபசாரிகமாய் நிர்குணத்தையே பொருளாய்ச் சொல்லவேண்டுமென்பது மிக்க அறியாமையேயாம்.

முக்தியில் நிர்க்குணமாத்திரமாய் எஞ்சுகின்றமையால் அந்த ஸ்வரூபத்தைப் போதிப்பதிலேயே சாஸ்திரங்களுக்குக் கருத்தாயிருக்கினும், எத்தன்மையுமிராத

நிலைமையை நேரில் சொல்லஇயலாததுபற்றி, ஸகுணத்தைக்காட்டியே நிர்க்குணத்தைப்போதிக்கவேண்டும். இவ்வுண்மைபற்றியே, ஸகுணஸ்வரூபத்தைநேரில் சொல்லுதலாகிய தடஸ்தலக்ஷணத்தையே விசேஷமாய்ச்சொல்லி வேதாந்த சாஸ்திரங்களில் ஸ்வரூபம் போதிக்கப்பட்டிருக்கின்றது. சந்திரனைத்தெரிந்து கொள்ள விரும்பும்பாலனுக்கு அன்னை, மரத்தின்கிளையின் நேர்ப்பிரதேசத்தைக் காட்டிச் சந்திரனைப்போதிப்பதுபோல, திவ்வியமாயாதர்மங்களாகிய ஸர்வக்ஞத்துவம் கர்மபலதாதிருத்துவம் ஜகத்கர்த்திருத்துவம் முதலியவைகளைக்காட்டியே நிர்க்குணபரசிவஸ்வரூபம் போதிக்கப்பட்டிருக்கின்றது.

மரத்தின்கிளைக்கு நேராக இருத்தலைத்தெரிந்துகொள்ளாமல் பாலன் சந்திர பிம்பத்தைமாத்திரம் தெரிந்துகொள்ளுவதென்பது எப்படி அஸம்பவமோ அப்படியே திவ்வியசக்தியுடன் கூடியிருத்தலாகிய ஸகுணேச்வரத்துவத்தைத் தெரிந்துகொள்ளாமல் நிர்க்குணஸ்வரூபஸாக்ஷாத்காரம் ஸம்பவியாதென்றறிக. மரத்தின்கிளையாமென்பதை யறியாதபாலனுக்கு மரத்தின் கிளையில் சந்திரன் எனும் வாக்கியம் எப்படிப்பயனற்றதேயாகுமோ, அப்படியே ஸகுணேச்வரனது தன்மையை அறியாத முமுக்ஷுவுக்கு வேதாந்த சிரவணம் பயனற்றதேயாம். மரத்தின்கிளையை அறிந்துகொண்டதும் அம்மட்டோடுவிடாமல் அதன் நேராயுள்ள மேற்பக்கத்தையும் கவனிக்கவேண்டியது பாலனுக்கு அமசியமாகின்றது போல, இறைவனது திவ்வியமாயாதர்மங்களை யறிந்துகொண்டதும் அம்மட்டோடு நிற்காமல் ஜிஞ்ஞாஸுவுக்கு மஹாவாக்கியார்த்த உபதேசமும் அவசியமாகின்றது.

மரத்தின்கிளையையறிந்த பாலனுக்கு அதற்கு நேராயுள்ள மேற்பிரதேசத்தைநோக்கும்போதுண்டாகின்றதாகிய ஞானத்தினில் மரத்தின் கிளை சிறிதும் விஷயமாகாமல் அறிவினின்றும்நழுவிப்போக, சந்திர ஸ்வரூபமாத்திரஞானமாக எஞ்சிநிற்பதுபோல, ஸகுணனாகிய இறைவனை நன்றாயறிந்துகொண்ட ஜிஞ்ஞாஸுவுக்கு மாயாதர்மங்களுக்கு அதிஷ்டானமாயுள்ள சின்மாத்திரத்தைப் போதிப்பதாகிய மஹாவாக்கியார்த்தத்தைச்சிரவணஞ்செய்யும்போது, அந்தமுமுக்ஷுவின் சித்தத்தினின்றும் முன்னர் அறியப்பட்டிருந்த மாயாதர்மங்கள் ஸகலமும் நழுவிப்போக, நிர்க்குண ப்ரும்மாத்மைக்கியாகண்டானந்தபோதமாத்திரமாய் எஞ்சிநிற்கும். அப்படிஸகலமும் நழுவி அகண்டசிதானந்தமாத்திரமாய் நிகழும் விருத்தியே அபரோக்ஷஸாக்ஷாத்காரஞானம் என்பதாம். இப்படிப்பட்ட ஞானத்தின் பொருட்டு முதலில்வேண்டியது ஸகுணேச்வரஞானமேயாதலால், மோக்ஷத்தில் விருப்பமுடையவர் முதலில் ஸகுணேச்வரனையே நன்றாய்த்தெரிந்துகொள்ள வேண்டியதென்பது நிர்ணயம். உண்மை யிவ்விதமிருப்பதுபற்றியே உபநிஷதம் ப்ரும்மஸூத்ரம் முதலிய வேதாந்தநூல்களில் மஹாவாக்கிய உபதேசஸந்தர்ப்பம் நீங்கலாயுள்ள மற்றஇடங்களிலெல்லாம் பரமாத்மா, ஜகத்கர்த்தா, பரமேச்வரன், ஸர்வக்ஞன், ஸர்வசக்தன் கர்மபலதாதா, நித்தியமுக்தன், ஸத்தியகாமன், ஸத்திய ஸங்கற்பன் முதலிய சொற்களை உதஹரித்து ஸகுணனது பெருமையே உபதேசிக்கப்பட்டிருக்கின்றது.

உபநிஷதங்களில் நேரில் ஸகுணனையே போதிக்கும் வாக்கியங்கள் ஏராளமாயிருக்கின்றன என்று சொல்லப்பட்டதன்றோ. அங்ஙனமுள்ள வாக்கியங்களில் உதாஹரணமாகச்சிறிதுகாட்டுவோம். அதாவது

" 𑌸 𑌵𑌾 𑌏𑌷 𑌮𑌹𑌾𑌨𑌜 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌦𑍋 𑌵𑌸𑍁𑌦𑌾𑌨𑌃 " (ப்ருஹ) (4—4—24)

அவ்விம்மஹானும் பிறவாதவனுமாகிய ஆன்மா அந்நாத்னும்கர்மபலதாதாவுமாம்.

" 𑌏𑌷 𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌃 𑌏𑌷 𑌲𑍋𑌕𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃 𑌏𑌷 𑌲𑍋𑌕𑍇𑌶𑌃"|

(கௌஷீதகீ 3—8)

இவன்லோகபாலன் இவன்லோகாதிபதி இவன்லோகேசன்.

" 𑌏𑌕𑍋 𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌯𑍋 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍" (கடவல்லியுபநிஷத்)

ஏகனுகிய எவன் பலஜீவர்களுக்கு விரும்பியதைக்கொடுக்கின்றானே.

" 𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌂 𑌤𑌪𑌃 "

" 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌮𑌨𑍍𑌨𑌂 𑌚 𑌜𑌾𑌯𑌤𑍇 " (முண்டகோ)

எவன் ஸர்வக்ஞனே அவன் எல்லாமுணர்பவன். எவனது ஆலோசனை ஞானமயமோ அவனையே எதுவாய்க்கொண்டு இந்த நாமரூப போக்கியங்களுண்டாகின்றன.

" 𑌅𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌾𑌯𑍀 𑌸𑍃𑌜𑌤𑍇 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍇𑌤𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌂𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑍋 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌸𑌨𑍍𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 | 𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌯𑌿𑌨𑌂 𑌤𑍁 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍||"

(ச்வேதாச்வதரோபநிஷத் 4 அத்தியாயம்)

ஆதலின் மாயையோடுகூடியவனுய்க்கொண்டு பிரபஞ்சமெல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கின்றான். அங்கு அந்நியனே மாயையால் தகையப்பட்டுளன். மாயையைப் பிரகிருதி என்றும் மாயையோடுகூடியவனை மஹேச்வரனென்றும் அறிக.

என்பது முதலிய உபநிஷதவாக்கியங்களால் ஸகுணவஸ்துவே நேரில் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இங்கு இந்த மர்மம் அறியத்தக்கது. அதாவது உபநிஷதம் ப்ரும்மஸூத்ரம் முதலிய நூல்களில் மஹாவாக்கியம் நீங்கலாயுள்ள மற்ற ஸந்தர்ப்பங்களில் நேரில் உபதேசிக்கப்படும் பொருள் ஸகுணனுகிய இறைவனேயாம். ஆயினும், அரசனுடைய பெருமையை உள்ளபடி அறிந்துகொள்ள விரும்புவோன், அவனுல் ஆளப்பட்டுவரும் பிரஜைகளின் செய்கைகளையும் தெரிந்துகொளளவேண்டியதவசியமாகின்றதுபோல ஈசனுடைய மஹிமைகளை உள்ளபடி அறிந்துகொள்ள விரும்புவோர் அவனுல் ஆளப்பட்டுவரும் ஜீவர்களின் தன்மையையும் அவர்கள் கிடந்து அல்லற்படும் ஜகத்தினுடைய தன்மையையும் நன்கு விசாரித்துத் தெரிந்துகொள்ளவேண்டிய தவசியமாகின்

றமையால் உபநிஷத ப்ரும்மஸூத்ராதிகளில் ஜீவஜகத்ஸ்வரூபமும் விசாரிக்கப் பட்டிருக்கின்றது.

இனி ப்ரும்மஸூத்ரம் எனும் கிரந்தத்தின் பாஷ்யத்தில் சங்கரபகவத் பாதாசார்ய ஸ்வாமிகள் ஸகல அதிகரணங்களிலும் நிர்க்குண ஸ்வரூபபரமாகவே பொருள்கொண்டிருக்க அதற்கு விரோதமாக இங்கு, விசேஷமாய்ப் பல அதி கரணங்களில் ஸகுணமே சொல்லப்பட்டிருக்கின்றதென்றதை எப்படியொத் துக்கொள்ளுவதெனும் சங்கை நிகழும். ஆதலால் அவ்வுண்மையைச் சற்று நிரூபிப்பாம்.

ப்ரும்மஸூத்ரமாவது உத்தரமீமாம்ஸை எனப்படுவதாம். அதுவே வே தாந்த ஸூத்ரம் வியாஸ ஸூத்ரம் என்றும் சொல்லப்படும். அது உபநிஷ தர்த்தத்தையே ஹேதுவாயிலாய் நிர்ணயித்துப் போதிக்கவந்த நூலாம். அது நான்கு அத்தியாயங்களாய்ப் பகுக்கப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு அத்தியாய மும் நான்கு பாதங்களாய்ப் பிரிக்கப்பட்டுள்ளது. இங்ஙனமுள்ள இந்த ப்ரும்ம ஸூத்ரக்கிரந்தத்தில் அடங்கியிருக்கும் ஸூத்ரங்கள் ஐநூற்றைம்பத்தைந்து. இவ்வைந்நூற்றைம்பத்தைந்துஸூத்ரங்களும் நூற்றுத்தொண்ணூற்றைந்துஅதி கரணங்களில் அடக்கப்பட்டிருக்கின்றன. அதிகரணமெனின் பிரகரணமென் றறிக.

இந்தக் கிரந்தத்தின் முதலத்தியாயத்தின் முதற்பாதத்தில் விவேக வைரா க்கியாதிஸாதநங்களையுடைய உத்தமபரிபாகிகள் பிரும்மஸ்வரூபத்தை விசாரித் துக்கொள்ளவேண்டுமெனத் தொடங்கிப் பிறகு அந்த நிர்க்குண ஸ்வரூபமானது ஸகுணேச்வரஞானமின்றி அறிந்துகொள்ள இயலாதாகையால் ஸகுணேச் வரனையே நேரில் போதித்து, அதன் மூலமாய் நிர்க்குண ஸ்வரூபஸாக்ஷாத்கா ரத்திற்கு ஸாதனமாவதாகிய தடஸ்தலக்ஷணத்தைச்சொல்லி, ஜகத்கர்த்ருத்துவம் முதலிய ஈச்வர தர்மங்கள் உபதேசிக்கப்பட்டன. பிறகு ஸர்வக்ஞத்துவ ஸர்வ சக்தித்துவாதி தர்மங்களைக் காட்டி அவனது ஸ்வரூபமே போதிக்கப்பட்டது. பிறகு ஸகல ச்ருதிகளின் தாற்பரியநிலை ஈச்வர ஸ்வரூபத்திலேயே என்பதைப் போதித்ததும் தவிர, பிரகிருதி ஜீவன் பஞ்சபூதபதார்த்தம் ஸூர்யன் முதலி யவைகளையே அர்த்தமாய்க் கொண்டவைபோலக்காணப்படும் சொற்களையுடைய ச்ருதிவாக்கியங்களுக்கு வாஸ்தவார்த்தத்தை நிரூபிக்கும் மூலமாயும் ஸர்வவியா பகத்துவம் ஸர்வேச்வரத்துவம் முதலிய ஈச்வர தர்மங்கள் உபதேசிக்கப்பட் டிருக்கின்றன. இரண்டாம் பாதத்தில் வேறு பொருள்களே அர்த்தமென்று தோன்றக்கூடியதும் ஈச்வரனே அர்த்தமென்பதை வெளிப்படையாய்க்காட் டாத அர்த்த ஸந்தர்ப்பங்களை யுடையனவுமாகிய மற்றும் சில சுருதி வாக்கியங் களுக்கும் பரம்பொருளே அர்த்தமென்பதை நிரூபிக்கும் வாயிலாயும் ஈச்வர தர் மங்களே சொல்லப்பட்டிருக்கின்றன. மூன்றும் பாதத்தினிலும் முற்கூறியது போன்ற விஷயங்களும், வேதத்தின் பெருமை வேதமோதத்தக்க அதிகாரி, ப்ரும்மவித்தையின் அதிகாரிபேதம், முதலிய விஷயங்களும் போதிக்கப்பட்

டிருக்கின்றன. நான்காம் பாதத்தினில் ஜகங்களுக்கு ஈச்வரன் நிமித்தோபாதான காரணன் என்பது, முதலிய விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இரண்டாமத்தியாயத்தின் முதற் பாதத்தில், ஈசனில்லை பிரகிருதியே ஜகத் காரணம் எனும் ஸாங்கியமதத்திலும், பிரகிருதிஸத்தியமெனும் யோகமதத்திலும் சுருதிக்கு விரோதமாய்ச் சொல்லப்படுவனவாகிய சிற்சிலஅம் சங்களையும் நிராகரணம் செய்து ஈசனே ஜகத்காரணன் எனும் நிர்ணயம், ஈசன் ஜீவர்களிடம் பாரபக்ஷமில்லாதவன், அற்புத மஹிமையுடையோன், என்பது முதலிய விஷயங்கள் போதிக்கப்பட்டுள்ளன. ஷை இரண்டாம் பாதத்தில் தார்க்கிகர் மதம், பௌத்தமதம் ஜைனர்மதம், தாந்திரிகசைவம், தாந்திரிக வைஷ்ணவம், இவைகளில் சுருதி யுக்திகளுக் கொவ்வாத விஷயங்களை எடுத்துக் காட்டி அந்த பாகங்களைப்பற்றிய நிராகரணம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. மூன்றும் பாதத்தில் பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கிரமம், ஜீவனது தன்மை முதலியவை நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. நான்காம் பாதத்தினில் ஸூக்ஷ்ம சரீரம் ஸ்தூல சரீரம் இவைகளின் ஸ்வரூபம் சொல்லப்பட்டிருக்கின்றன.

மூன்றுமத்தியாயத்தின் முதற்பாதத்தில், மரித்தபிறகு ஜீவர் ஸ்வர்க்க நாகாதி லோகாந்தரம் செல்லுதல், அங்கு இன்பதுன்பங்களைப் புசித்தல், மீண்டும் அங்கிருந்து இங்குவருதல், இவைகளின் கிரமம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இரண்டாம் பாதத்தில் ஜீவனது ஜாக்கிரம் ஸ்வப்பனம் ஸுஷுப்தி மூர்ச்சை எனும் அவஸ்தாபேதங்களைப் பற்றிய மர்மங்களும், ஸகுணநிர்க்குண தாரதம்மியம், ஜீவப்ருஹ்மைக்கியம், ப்ருஹ்மஞான பரியந்த ஜீவேசபதம், எனும் இவ்விஷயங்களும் நன்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. மூன்றும் பாதத்தில் ஸகுணேச்வரனுடைய தன்மைகள், ஈச்வரஉபாஸனை, ஸகுணோபாஸநாங்க ஸ்வரூபம், ஸகுணோபாஸநாக்கிரமம், ஸகுணோபாஸநாபேதம், ஸகுணோபாஸநாபலம், ஆதிகாரிகமுக்தர்களின் நிலைமை, ஸகுணத்யானம், பிரதீகோபாஸனை, அங்காவபத்தோபாஸனை, முதலிய விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. நான்காம் பாதத்தில்கர்மத்திற்கு ஞானம் அங்கமல்ல என்பது, ஸந்நியாஸவிதி, ஞானத்திற்குக் கர்மம் பரம்பராஸாதனம் என்பது, ஸந்நியாஸிகளின் அப்பியாஸாநுஷ்டான முறை, ஆச்ரமத்தினின்றும் வழுவினால் வரும் நிலைமை, சிரவண மனன நிதித்தியாஸநங்களுள் ஒன்றிற்கொன்றுள்ள ஸம்பந்தம் ஆகிய இவ்விஷயங்கள் போதிக்கப்பட்டிருக்கின்றன.

நான்காமத்தியாயத்தின் முதற்பாதத்தில் சிரவணத்தின்காலவரை, தியான ஸ்வரூபம், ஆஸன நியமம், இடத்தின் நியமம், தியானம், உபாஸனை எவ்வளவு காலம் வேண்டுமென்பது, ப்ருஹ்மாத்மைக்கிய அபரோக்ஷஞானத்தினால் இருவகையாகிய கர்மங்களும் நீங்குதல், பிராரப்த கர்மத்திற்குப் போகத்தினாலேயே நாசம் என்பது முதலிய விஷயங்களும், இரண்டாம் பாதத்தில் மரணாவஸ்தை உத்கிராந்தியவஸ்தை எனும் பகுபாடு, ஜீவர்களின் உத்கிராந்திபேதம், ஸகுணோபாஸகர்களுக்கு மரித்தபின் அடையப்படும்கதி, மரணகாலத்தைப் பற்றிய விசேஷம் முதலிய விஷயங்களும், ஸகுணோபாஸகர் மரித்த பின்னர் ப்ருஹ்மலோகம்

செல்லும் முறை, உபாஸகரை ப்ரும்மலோகம் செல்லுவிக்கும் ஆதிவாஹிக தேவதையின் கிரியை முதலிய விஷயங்களும்; நான்காம் பாதத்தினில் ப்ரும்ம ஞானிகளுக்கு மரணத்தின் பிறகு ஏற்படும் நிலைமை, ஸகுணோபாஸனை செய்தவர் ப்ரும்மலோகத்தினில் அடையும் நிலைமை, முதலிய விஷயங்களும் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன.

இவ்விதம் அரிய பல விஷயங்களடங்கிய இந்நூலில் பரமதாத்பரியமாயுள்ளது நிர்க்குண ஸ்வரூபமேயாயினும், அதனை ஸகுணஸ்வரூபஞானமின்றி சிறிதும் தெரிந்துகொள்ள இயலாததுபற்றியே பல அதிகரணங்களில் ஸகுணனாகிய இறைவனது தன்மைகளே நேரில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. சங்கரபகவத்பாதாசாரியஸ்வாமிகளாலும் அவ்வதிகரணங்களின் பாஷ்யத்தில்ஸகுணத்தையே வியக்தமாய்க் குறிப்பவையாகிய ஸர்வக்ஞன், ஸர்வசக்தன், மஹாமாயன், அநந்தசக்தன், பரமேச்வரன், ஸத்தியகாமன், ஸத்தியஸங்கற்பன், கர்மபலதாதா, என்பது முதலிய சொற்களை உதகரித்து இறைவனது தன்மை யுபதேசிக்கப் பட்டிருக்கின்றது. எழுதினால் விரியுமாதலால் சுருக்கமாய்ச் சொல்லுவாம். அதாவது,

“ 𑌅𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍋 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌸𑍍𑌯 𑌅𑌨𑍇𑌕𑌕𑌰𑍍𑌤𑍃𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌨𑌿𑌯𑌤𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌫𑌲𑌾𑌶𑍍𑌰𑌯𑌸𑍍𑌯 𑌮𑌨𑌸𑌾𑌪𑍍𑌯𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑌚𑌨𑌾𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌮𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌭𑌙𑍍𑌗𑌂 𑌯𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑍇𑌃 𑌕𑌾𑌰𑌣𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 ”

> “ நாமரூபங்களால் வியாகிருதமாயும், அநேககர்த்தாக்களோடும் போக்தாக்களோடும் கூடியதும், நியதமாயுள்ள தேசகால நிமித்தங்களோடு கூடிய கிரியாபயன்களையுடையதும், மனஸினாலும் சிந்திக்க இயலாத அமைப்பை உடையனவாகிய இச்சகங்களுக்கு உற்பத்தி ஸ்திதி நாசம், எந்த ஸர்வக்ஞனும் ஸர்வசக்தனும் எல்லாமறிவோனும் எல்லா வல்லமை யுடையோனுமாகிய காரணவஸ்துவினால் ஏற்படுகிறதோ ”

என ஜகத்கர்த்ருத்துவத்தை ஸாதிக்கும் ஜந்மாதியதிகரணத்தில் சொல்லியிருக்கும் வாக்கியத்தையும்,

“ 𑌨 𑌹𑍀𑌦𑍃𑌶𑌸𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌋𑌗𑍍𑌵𑍇𑌦𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌗𑍁𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌦𑌨𑍍𑌯𑌤𑌃 𑌸𑌂𑌭𑌵𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 ”

> இப்படிப்பட்ட ருக்வேதாதி சாஸ்திரத்திற்கு எல்லாவற்றையும் அறியும் தன்மையோடு கூடியவனாகிய ஸர்வக்ஞனுக்கந்நியனாய் மற்றெவனிடத்தினின்றும் உற்பத்தி ஸம்பவியாது ”

என்ற சாஸ்திரயோநித்வாதிகரணத்திலுள்ள வாக்கியத்தையும்,

“ 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌮𑌾𑌯𑌾𑌸𑌹𑌾𑌯𑌂 ”

பரமேச்வரனுக்கும் இச்சாவசத்தினால் ஸாதகரை அனுக்கிரஹிப்பதன் பொருட்டு மாயாமயமாகிய சரீரம் எடுக்கப்படும்.

என்ற அந்தராதிகரணத்திலுள்ள வாக்கியத்தையும்,

“ 𑌅𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌹𑍍𑌯𑌮𑌨𑌾𑌃 𑌶𑍁𑌭𑍍𑌰 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌿𑌷𑌯𑌾 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑌰𑍀𑌰 𑌇𑌤𑌿 𑌸𑌗𑍁𑌣𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌿𑌷𑌯𑌾 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃

பிராணனில்லாதவனும் சுத்தனும் எனும் சுருதியானது நிர்க்குணப் பிரும்ம விஷயமாகியது. மனோமய ப்ராணசரீர என்பது முதலிய சுருதியானது ஸகுணத்தை விஷயமாய்க்கொண்டுள்ளது” என்றஸர்வத்ரப்ரஸித்தாதி கரணத்திலுள்ள

“ 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌗𑍁𑌣𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 ”

எனும் ஸூத்ரத்தின் பாஷ்யத்திலுள்ள வாக்கியத்தையும்,

“ 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌵𑍇𑌹 𑌅𑌤𑍍𑌤𑌾 𑌭𑌵𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 ”

ஆதலின் பரமாத்மாவே இங்கு அத்தா என்பது உசிதம்”

எனும் அத்ராதி கரணத்திலுள்ள வாக்கியத்தையும்,

“ 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 𑌗𑍁𑌣𑌜𑌾𑌤𑌮𑌿𑌹𑍋𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑌮𑍍 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌮𑌪𑌿 𑌸𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌗𑌤𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 𑌸𑌗𑍁𑌣𑌮𑍁𑌪𑌾𑌸𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰𑍋𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 ”

“இங்கு உபதேசிக்கப்படும் குணங்களெல்லாம் பரமேச்வரனிடமே ஒவ்வும் நிர்க்குணமாயினும் ப்ரும்மம் நாமரூபகுணங்களோடு கூடிய ஸகுணமானது உபாஸனையின் பொருட்டு உபதேசிக்கப்படுகின்றது”

என்ற அந்தராதிகரணத்திலுள்ளவாக்கியத்தையும்,

“ 𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌕𑌮𑌿𑌯𑌂 𑌜𑌗𑌦𑍍𑌬𑌿𑌮𑍍𑌬𑌵𑌿𑌰𑌚𑌨𑌾 𑌗𑍁𑌰𑍁𑌤𑌰𑌸𑌂𑌰𑌂𑌭𑍇𑌵𑌾𑌭𑌾𑌤𑌿 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌲𑍀𑌲𑍈𑌵 𑌕𑍇𑌵𑌲𑍇𑌯𑌂 𑌅𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ”

“நம்மவர்க்கு இந்த ஜகத்பிம்பஸ்ருஷ்டியானது மிக்க அரிதாய்த் தோன்றுவதாயினும் பரமேச்வரனுக்கு இது கேவலம் லீலையேயாம். அபாரசக்தியுடையோனாதலின்”

எனும் பிரயோஜனவத்வாதிகரண வாக்கியத்தையும்,

“ 𑌯𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌕𑌾𑌰𑌣𑍇 𑌪𑌰𑌿𑌗𑍃𑌹𑍍𑌯𑌮𑌾𑌣𑍇 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌕𑌾𑌰𑌣𑌧𑌰𑍍𑌮𑌾 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿 𑌮𑌹𑌾𑌮𑌾𑌯𑌂 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮

“யாதொருகாரணத்தால் இப்ரும்மத்தைக் காரணமாய்க்கொள்வதில் இங்குவிளக்கிய பிரகாரமாய்க் காரணதர்மங்கள் ஸகலமும் அதனிடம்

ஒவ்வுகின்றனவோ ப்ரும்மம் ஸர்வக்ஞனும் ஸர்வசக்தியுடையதும் மஹாமாயையோடு கூடியதுமாயுள்ளதன்றோ.

எனும் ஸர்வதர்மோபபத்தியதிகரணத்திலுள்ள வாக்கியத்தையும்,

ஸ ஹி ஸவஜ்ஞ: ஸவேஶ்வர: ஸர்வஜ்ஞஶ்ச ... விசித்ரா(ந) விஷய ... கர்மானுரூபம் ... ஸம்பாதயதி"

ஸர்வஸாக்ஷியாகிய அவனே விசித்திரங்களாகிய ஸ்ருஷ்டிஸ்திதி ஸங்காரங்களைச் செய்கின்றவன். தேசகால விசேஷங்களை நன்கறிவோனாதலின் கர்மிகளின் கர்மங்களுக்குத்தக்க பயனைத்தருகின்றான்.

எனும் பலாதிகரணவாக்கியத்தையும் இவை போன்ற மற்றுமுள்ள அதிகரணங்களில் உதஹரிக்கப்பட்டிருக்கும் வாக்கியங்களையும் கவனித்தால் சங்கரபகவத்பாதஸ்வாமிகள் பாஷ்யத்தினில் ஸகுணஸ்வரூபத்தையே விசேஷமாய்ப் போதித்திருக்கின்றனர் என்பது நன்றாயறியலாம்.

அன்றியும் சங்கரபகவத்பாதஸ்வாமிகளது குருவுக்கும் குருவாயுள்ள கௌடபாதஸ்வாமிகள் முதலிய அபியுக்தர்களால், ஸர்வேச்வரனையுபாஸித்து அவனது திருவருளை ஸம்பாதித்துக் கொள்ளாமல் துக்கநிவிருத்தி எற்படாது என

நிவ்ருத்தே: ஸர்வது:க்கானாம் ஈசான: ப்ரபுரவ்யய:"

"ஸகலதுக்கங்களையும் நிவிருத்தி செய்விப்பதற்கு ஈச்வரனாகிய அவ்யயனே பிரபு"

இங்ஙனம் வியக்தமாகப் போதிக்கப்பட்டிருக்கின்றதைக் கவனித்தாலும், ஸகுணமானது மூடர்களுக்காகவே கட்டுப்பாடாகச் சொல்லப்பட்டதாதலால் முமுக்ஷுக்களுக்கு ஸகுண ஈசுவரனிடம் பக்தியும் அவனது ஆஞ்ஞையெனச் சொல்லப்படும் கர்மாநுஷ்டான விதிக்கு உட்பட்டு நடப்பதும், ஸகுணஸ்வரூபத்தை விசாரித்தலும், அவனை யுபாஸித்தலும் அவசியமல்ல என்று எண்ணுகின்றவரும் அங்ஙனமே பிறருக்கும் போதிக்கமுயலுவோருமாகிய தற்கால மேதாவிகளது கொள்கை மிகத்தவறே என்பது நன்குவிளங்கும். இங்ஙனம் வேதாந்த விசாரணை தலைகீழாய்ப்புரண்டிருத்தலுக்குக் காரணம் யாதெனின், சங்கரபகவத்பாதஸ்வாமிகள் எவ்வெவ்வதிகரணங்களில் ஸகுணனைப் போதித்திருக்கின்றனர் என்பதை நிர்ணயித்துப்போதிக்கும் உண்மையாராய்ச்சியுள்ளவர்களாகிய பெரியோர்களிடம் ஷ்சாஸ்திரத்தை சிரவணஞ்செய்யாத குறையேயாம் என்றறிக. பாஷ்யத்திலோ எனின்.

"அப்ராணோ ஹ்யமனா: ஶுப்ர இதி ஶுத்தப்ரஹ்மவிஷயா | மனோமய: ப்ராணஶரீர இதி ஸகுணப்ரஹ்மவிஷயா

"அப்ராணன் அமனன் சுப்ரன் எனும் சுருதி சுத்தப்ரும்மத்தைச் சொல்லுவது. மனோமயன் பிராணசரீர" என்பது முதலிய சுருதி

ஸகுண ப்ரும்மத்தையே விஷயமாய்க்கொண்டது"

என்பது முதலிய வாக்கியங்களால் ஸர்வத்ரப்ஸித்தாதிகரணத்தில்

"𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌗𑍁𑌣𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚"

எனும் ஸூத்ரத்தின் பொருளைப் போதிக்கும் ஸந்தர்ப்பத்தில் சங்கர பகவத்பாதஸ்வாமிகளால் ஸகுண நிர்குணவிஷயவாக்கியவியவஸ்தை செய்யப் பட்டிருந்தும் அங்ஙனம் ஸகுணம் பாஷ்யத்தில் சொல்லப்படவில்லை எனத் தற்காலத்தவர் எண்ணுதல் மிகவும் பரிதவிக்கக்கூடியதேயாம்.

ஸகுணனிடம் முமுக்ஷுக்களாகிய உத்தமபரிபாகிகளுக்குப்பக்தி அவசிய மில்லை அது மூடருக்காகக்கற்பனுமாத்திரமாகவே சொல்லப்பட்டது எனும் மாறுபாடாகிய எண்ணமே, கொடுங்காரியங்களைச் செய்துகொண்டே வேதாந்த சிரவணத்தில் செல்லுதலாகிய தற்காலவழக்கத்திற்கு மூலமாயிருக்கின்றது. சௌசம் முதலியவைகளும், நித்திய நைமித்திககர்மங்களைஅனுஷ்டித்தலாகிய வர்ணாச்ரமதர்மங்களும் சிறிதும்இராதவர்களாய், திவ்வியமாயாசக்தியுடன் கூடியவ னென்று சொல்லப்படும் இறைவன் ஒருவனிருக்கிறனென்பது சுத்தப்பிசகு என்றும் சொல்லிக்கொண்டு வேதாந்த விசாரணைசெய்தலே ஆஸுரமென்பதாம். விதிநிஷேத வரம்புகடந்தவர்களாயிருந்துகொண்டு தம்மைக்ருதார்த்தர்களாய் எண்ணும் ஆஸுரர்களின் ஆராய்ச்சியானது க்ஷேமத்திற்கு ஏதுவாகாது.

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌜𑌨𑌾 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌰𑌾𑌸𑍁𑌰𑌾𑌃 ।
𑌨 𑌶𑍌𑌚𑌂 𑌨𑌾𑌪𑌿 𑌚𑌾𑌚𑌾𑌰𑍋 𑌨 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥
𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌤𑍇 𑌜𑌗𑌦𑌾𑌹𑍁𑌰𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 ।

விதிக்கப்பட்டகாரியங்களில் பிரவிர்த்தியையும் விலக்கப்பட்டகாரியங் களில் நிவிர்த்தியையும் ஆஸுரர்கள் கைப்பற்றுகின்றதில்லை. சௌ சம் ஆசாரம் ஸத்தியம்.இவை அவர்களிடம் இருக்கின்றதில்லை. ஜக மானது அஸத்தியம் மித்தையே என்றும் பாபபுண்ணியங்களில்லை யென்றும் நிர்க்குண ப்ரும்மமேதவிர ஸகுணனுகிய ஈச்வரனே இல்லை யென்றும் சொல்லுகின்றனர்.

𑌤𑌾𑌨𑌹𑌂 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑌃 𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌨𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑍇𑌷𑍁 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌨𑍍 ।
𑌕𑍍𑌷𑌿𑌪𑌾𑌮𑍍𑌯𑌜𑌸𑍍𑌰𑌮𑌶𑍁𑌭𑌾𑌨𑌾𑌸𑍁𑌰𑍀𑌷𑍍𑌵𑍇𑌵 𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 ॥
𑌆𑌸𑍁𑌰𑍀𑌂 𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌾 𑌮𑍂𑌢𑌾 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 ।
𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌧𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 ॥

க்ரூரர்களாயும் துவேஷிக்கின்றவர்களாயும் அசுபர்களாயுமுள்ள அந்த நராதமர்களை நான் எப்போதும் ஆஸுரயோநிகளிலேயேதள்ளுகின் றேன். அம்மூடர்கள் ஆஸுரயோநியை ஜந்மஜந்மங்களாயடைகின் றவர்களாய் என்னையடையாமலே அதோகதி எய்துகின்றனர்.

எனப், பகவத்கீதை பதினாறும் அத்தியாயத்தில் பகவானால் சொல்லப் பட்டபடி அதோகதிக்கே ஏதுவாகும் என்பது நிச்சயம். ஆதலால் ஸகுணபக்தி கர்மானுஷ்டானம் ஸகுணேச்வர உபாஸ்தி இவைகளுக்கு மூலஹேதுவாகின்ற தாகிய ஈச்வர ஸ்வரூபஞானம் அவசியமே என்றறிக.

இனி நிர்குணசைதந்யம் எப்பொருளோடும் ஸம்பந்தியாத அஸங்கவஸ்து என்றல்லவோ சொல்லப்படுகின்றது. அது திவ்விய பராசக்தியோடுகூடிய ஸகுணனாய் ஈச்வரனாயிருக்கின்றதென்பது எப்படிப்பொருந்தும்? பொருந்தா தாதலால் நிர்க்குணம் ஜீவன் எனும் இரண்டோடு நிற்பது உசிதமே! ஸகுண னெனும் மூன்றாவதாயொன்றைக் கற்பித்துக்கொள்வதனால் பயனில்லையே?" எனும் சங்கை நிகழும். அங்ஙனமாயின், அஸங்கமான நிர்க்குணவஸ்து அந்தக் கரணத்தோடுகூடி ஜீவத்தன்மையைப் பெற்றிருக்கின்றதென்பதற்கு மாத்திரம் இச்சங்கையேற்படாமற்போகுமா? அஸங்கப்பொருள் அவித்தையோடுகூடிஜீ வத்தன்மையைப்பெற்றிருக்கின்றதென்பதை ஒத்துக்கொள்ளும்போது திவ்விய பராசக்தியோடுகூடி ஈச்வரத்தன்மையைப்பெற்றிருக்கின்றதென்பதைமாத்தி ரம் ஏன் ஒத்துக்கொள்ளக்கூடாது? ஜீவத்தன்மையைப்பெற்றிருக்கும் அற்பர்க ளாகிய நாம் இந்தப்பவக்கடலில் மூழ்கித்தத்தளிப்பதென்பது எப்படி ஸத் தியமாகின்றதோ ஸகுணனான இறைவனிருக்கின்றானென்பது மாத்திரம் அப்ப டிப்பட்ட ஸத்தியமாய் இராமற்போகுமா? ஜீவனுக்கு மனம்போல ஈச்வரனு க்குப் பராசக்தியென்பதை நிச்சயித்துக்கொள்வதே விவேகம். இப்படிப்பட்ட திவ்வியமாயாசக்தியோடு கூடிய சைதந்யப்பரம்பொருளாகிய ஸர்வேச்வரன் நம்முடைய செய்கைகளெல்லாவற்றையும் நன்கு அறிந்துகொண்டிருக்கின்றா னாதலால் அவைகளுக்குத்தக்க பயனை அவனது ஆக்ஞையால் நாம் அனுபவிக்க வேண்டியது நிச்சயம் என்பதையறிந்து மாந்தர் அவனது அநுக்ரஹத்தைப் பெறும் வழியையே தேடவேண்டும்..

இனி இறைவனது அநுக்ரஹத்தைப்பெறும் வழியானதுயாது எனின்,அவ னது ஆணையாகிய சாஸ்திரங்களில் சொல்லியபடி நடப்பதும் அவனை உபாஸித் தலுமேயாம். உதாரணமாக, எஜமானது ஆணையின்படி நடக்கும் வேலைக்காரனி டம் அவனுக்கு ப்ரீதி ஏற்படுதல்போலவே ஈசாக்ஞையாகிய சாஸ்திர விதிக்குட் பட்டு நடக்கின்றவர்களிடம் ஈசனுக்கும் ப்ரீதியே ஏற்படும். இந்தப்ரீதியே ஈச்வ ரானுக்கிரஹம் என்னப்படுவதாம். ஆதலால் ஈச்வரானுக்ரகத்தைப் பெறவிரும் புவோர் விதிநிஷேதங்களாய்ப் பிரவர்த்தித்திருக்கும் சாஸ்திரமாகிய ஈசாக்ஞைக் குட்பட்டேநடக்கவேண்டும்.

விதிக்கப்பட்டகாரியங்களைச் செய்யாமலும் விலக்கப்பட்டகாரியங்களையே செய்துகொண்டுமிருக்கின்றவர்களிடம் ஈச்வரன் எப்படியாவான்? எனின், எஜ மானன் செய்யச்சொல்லிய காரியங்களைச் செய்யாமலும் செய்யக்கூடாதென்ற காரியங்களையே செய்துகொண்டுமிருக்கும் வேலைக்காரரிடம் அவ்வெஜமானன் எப்படி நடந்து கொள்வானோ, அப்படியே ஈசாக்ஞையாகிய சாஸ்திரத்தின்படி நடவாதவர்களிடம் ஈசன் நடந்துகொள்வான்.

இனி, அற்பஅறிவும் அஹங்காரமும் உள்ளவர்களாதலின், எஜமானர்கள் தமது ஆணையின்படி நடவாதவேலைக்காரரிடம் கோபிக்கின்றனர். இவ்வாறு கவனிக்கின் தமது ஆணையின்படி நடவாதவர்களிடம் கோபிக்கும் ஈசனுக்கும் மனிதர்களுக்குப்போல அற்பஅறிவும் அஹங்காரமும் உள்ளதென்றல்லவோ சொல்லவேண்டியதாகின்றது. அது ஈச்வரத்தன்மைக்கு அர்ஹமாகாதே எனின், இது அறியாமல் சொல்லுவதே. அற்பஅறிவு அஹங்காரம் பாரபக்ஷத்தன்மை முதலிய இழியகுணம் யாதுமில்லாத நியாயாதிபராகிய ராஜாங்கத்தார், குற்றம் செய்தவரைத்தண்டிப்பதுபோலவே ஈச்வரனும் சாஸ்திரவிதிப்படி நடவாமல் நிஷித்தகாரியங்களைச் செய்வோரை நரகவாஸாதி தண்டனைக்குள்ளாக்குவார் என்பது உசிதம்.

ஈசனுக்கு உண்மையில் ராகத்துவேஷாதி கெட்டகுணங்களிராவிடினும் பாபஞ்செய்வோர்களிடம் கோபமுள்ளவன்போல நடந்துகொள்ளலாகும். அதனால் ஈசனுக்குக் கெட்டகுணங்களுள்ளன என்பது உசிதமாகாது. நன்றாய்ப் படிப்பவர்களுக்கு வெகுமதியும் ஸரியாய்ப் பாடம்படிக்காத மாணாக்கர்களுக்குத் தண்டனையையும் விதிக்கும் பாரபக்ஷமிராதவராகிய உபாத்தியாயரைப் பாரபக்ஷத்தன்மை அஹங்காரம் முதலிய கெட்டகுணங்களையுடையவரென்பது எட்படி அநுசிதமோ, புண்ணியபாவங்களுக்குத்தக்க பயனையளிக்கும் ஈசனைக்கெட்ட குணங்களுள்ளவர் என்பதும் அப்படியே என்றறிக.

ஆதலால் ஈசனால் விதிக்கப்பட்ட சாஸ்திரங்களுக்குட்பட்டு நடப்பது ஈச்வரானுக்ரஹத்திற்கே ஏதுவாகும் என்பது நிச்சயம்.

தற்காலம் சாஸ்திரவிதிப்படி வர்ணாச்ரமதர்மங்களை யனுஷ்டிப்பது அஸாத்தியமாய்க் காணப்படுகின்றதேயெனின், இங்ஙனம் பலருக்குத்தோன்றக்கூடியதே. ஆனால் தற்காலத்திலும் சாஸ்திரங்களில் சிரத்தையுடையோர்களாய் மிகவும் உறுதியோடு சாஸ்திரவிதிப்படி நடந்துகொண்டிருக்கும் பெரியோர்களிருக்கக்கூடும். அவர்களை மஹருஷிகளென்றே சொல்லலாம். அப்படியே ஸாமான்னியமாய் எல்லோரும் நடப்பது அஸாத்தியமேயாயினும், காலதேச நிலமைக்குத்தக்கபடி பராசராதிஸ்ம்ருதிகளில் சொல்லியபடி தற்காலமும் அநுஷ்டிக்கக்கூடியனவாயுள்ள வருணாச்ரமதர்மங்களை அநுஷ்டிப்பது ஸாத்தியமே. அவ்வாறு நடந்துகொண்டால் இழிய பிறவி நரகயாதனை முதலியவைகளுக்கு ஏதுவின்றி உத்தமகதியைப்பெறலாம்.

இதுவரையிலும் நாம் கெட்டகாரியங்களையே செய்துகொண்டிருந்தோமாயினும் இனியாவது விதிவிலக்காயுள்ள சாஸ்திரவரம்பிற்கு உட்பட்டு நடக்க முயலவேண்டும். அன்றியும் விதிக்கப்பட்டவரம்பின்வழி நடந்துகொண்டிருப்பதும் தவிர அவ்விறைவனை யுபாஸனைசெய்து வழிபடுதலும் அவசியமே. அவனது உபாஸனையால் அடையக்கூடாத பயன் பிரபஞ்சத்தில் யாதுமில்லை. ஜனனமரணச்சுழல்களையுடையஸம்ஸாரமெனும் அபாரஸமுத்திரத்தினின்றும் கரையேறுவதே சுலுவாகுமாயின் லோகபாலத்துவம், லோகேச்வரத்துவம் ஸத்தியகாமத்துவம் ஸத்திய ஸங்கற்பத்துவம் முதலிய பிராபஞ்சிகமாகிய ஸித்தி

களைப்பெறுதற்கு அவனது உபாஸனை ஸாதனமாகும் என்பது சொல்லாமலே விளங்கும்.

உபாஸனை என்பது எங்ஙனமெனின், அது மானஸிகம் வாசிகம் காயிகம் என மூவகையாகும். மனஸின் ஸம்பந்தமில்லாமல் வாக்கு காயங்கள் வேலைசெய் யாவாயினும் தியானத்தையே முக்கியமாய்ச்செய்தல் மானஸிகமென்றும், ஜபம் முதலியவைகளையே முக்கியமாய்ச்செய்தல் வாசிகம் எனவும், தேகசேஷ்டையே முக்கியமாய்க்கொண்டு உபாஸித்தல் காயிகம் என்றும் சொல்லப்படுகின்றது. பாண லிங்கம் முதலியவைகளில் ஈச்வரனைப்பாவித்துப் பூஜித்து வழிபடுதல் முதலி யது காயமெனப்படும் தேகத்தின் கை முதலிய அங்கங்களையே முக்கியமாய்க் கொண்டு நடக்கவேண்டுமாதலின் காயிகமென்று சொல்லப்படும். மந்திரஜபம் வேதாத்தியயனம் முதலியது வாக்கைக்கொண்டே நடப்பதாதலின் வாசிக மென்றும், ஸர்வவியாபகனாய் இருந்து ஸகல ஜீவர்களின் சேஷ்டைகளையும் கவனித்துக்கொண்டு கர்மங்களுக்குத்தக்கபடி பயனைத்தருவோனும், தன்னிட முள்ள திவ்வியமாயாசக்தி மஹிமையால் எக்காரியத்தையும் செய்து முடிக்கும் வல்லமை பொருந்தியவனும், ஆகாசத்திலும் நுட்பமாய் எங்குமுள்ளதாகிய திவ் வியமாயாசக்தியையுடையோனுமாய் இருத்தலே இவனது உருவம் என்றறிந்து அவ்வாறு மனஸினால் ஏகாக்கிரமாய்த் தியானித்தலே மானஸிக உபாஸனை என் றும் சொல்லப்படுவதாம். உபநிஷதம் ப்ரும்மஸூத்ரம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கும்உபாஸனையானது இங்ஙனம் ஸத்தியஸங்கற்பத்துவம் ஸர்வக்ஞத்துவம் ஸர்வேச்வரத்துவம் முதலிய திவ்வியமாயா குணங்களோடு கூடியுள்ளதாகிய ஈச்வரஸ்வரூபத்தைத் தியானித்தலாகிய ஸகுணோபாஸனையே யாம்.

இனி, பக்தியே ஈச்வரானுக்ரஹஹேது எனும் வாக்கியத்திற்கு விரோ தமாய் உபாஸ்தியே அநுக்ரஹஹேது என்பது எப்படிப்பொருந்தும்? எனின் சொல்லுவாம்.

பக்தியாவது ஈச்வரனிடம் நிகழும் பிரீதியே. பிரீதியென்பது பொதுவகை யில் ஒன்றாகவேயிருக்கினும், புத்திரபார்யாதிகளில் நிகழும் பிரீதியே ராகமென் றும், தனக்குக் கிடைத்திராதவைகளாகிய வஸ்திராபரணாதி பொருள்களில் நிகழும் பிரீதியே இச்சையெனவும், கர்மாநுஷ்டான தானதருமங்களில் நிகழும் பிரீதியே சிரத்தை எனவும், ஈச்வரன் குரு முதலியவர்களிடம் ஏற்படும் பிரீதி யேபக்தி என்றும் வழங்கப்படும். எந்தவஸ்துவில் பிரீதியிருக்கின்றதோ அதனி லேயே மனம் செல்லும். உபாஸ்தியாவது ஈச்வரனிடம் மனஸைச்செலுத்துவ தே. ஆதலால் ஈச்வரனிடம் பிரீதியாகிய பக்தியிருக்குமானால் அவனிடம் மனம் செலுத்துதலாகிய உபாஸ்தி கைகூடும். பக்திஸாதனம். உபாஸ்திஸாத்தியம் உண்மையிதுவாதலால் உபாஸ்தியின்பயனைப் பக்தியின்பயனென்றே ஔபசா ரிகமாய்ச் சொல்லலாம். ஆதலால் பக்திவாக்கியத்திற்கும் உபாஸ்திவாக்கியத் திற்கும் விரோதமில்லை என்க.

எந்தவஸ்து சிறந்ததென்று கருதப்படுகின்றதோ, அந்தப்பொருளிலேயே பிரீதி எற்படும். ஆதலால் ஈச்வரபக்தியாகிய பிரீதிக்குஹேது ஈச்வரன் ஸர்வோத்க்ருஷ்டமான வஸ்து எனும் விவேகமே. ஈச்வரன் ஒப்புயர்வில்லாத அரும்பெரும்பொருள் எனும் விவேகம் திடமாய் நிகழவேண்டுமாயின் அவ்விஷயத்தை உள்ளபடி போதிக்கும் சாஸ்திரவாக்கியங்களை உண்மையறிந்த பெரியோர்களிடம் விசாரித்துத்தெரிந்துகொள்ளுதலவசியம். இதுவேயன்றி, பக்திக்கு எதுவாகிய ஈச்வரஸ்வரூபஞானத்திற்கு வேறு உபாயமில்லை. ஆதலால் ஈச்வரஸ்வரூபவிவேகத்திற்கு எதுவாகிய சாஸ்திரார்த்தசிரவணமின்றி, பாடுதல் கூத்தாடுதல் வாத்தியம் வாசித்தல் நடித்தல் தோன்றியவாறு புசித்தல் முதலியவைகளைச்செய்தல் பக்திக்குச்சிறிதும் ஸாதகமாகாதென்றறிக.

சங்கை; ஈச்வரஸ்வரூபத்தைப் போதிக்கும் உபநிஷதாதி சாஸ்திரார்த்த சிரவணமே பக்திஹேது எனின், கண்ணப்பன் முதலியவர்கள் சாஸ்திரார்த்தசிரவணம் சிறிதும் செய்யாமலே ஈச்வரானுக்ரஹத்தைப் பெற்றதாகச் சொல்லப்படும் விஷயம் எப்படிப் பொருந்தும்? எனின் இவ்வுண்மையறிக.

ஈச்வரஸ்வரூபஞானமே பக்தி எதுவாகும் என்பதில் சிறிதும் பிசகில்லை. ஆனால் அங்ஙனம் எற்படும் ஞானம் ஸாமான்னியம் விசேஷம் என இரண்டு வகைப்படும். ஈச்வரன் திவ்விய மாயாமஹிமைகளையுடையவனாய், ஸர்வபரிபூர்ணனாய் உருவம் யாதுமிராதவனாயிருக்கினும் தனது சக்திமஹிமையால் எவ்வுருவமும் எடுக்கும் ஆற்றலுடையோனாய் திவ்வியமாயாசக்தியால் பிரபஞ்சகாரியங்களை நிர்வஹிப்பவனாய் உபாஸகர்களை அநுக்ரஹிப்பவனாய்இருக்கின்றானெனசாஸ்திர சிரவண ஸத்குருபதேசங்களால் நிச்சயித்துக் கொள்ளுதலே விசேஷஞானம் எனப்படும். ஸாமான்னிய ஞானமாவது, ஈச்வரனுடைய ஸ்வரூபத்தையும் மாயாசக்திகளையும் பற்றிச்சிறிதும் விவேகமிராவிடினும், சக்தி விசேஷத்தால் எடுக்கப்படுவதாகிய, கங்காசந்திரகலாதிகளைத்தரிக்கும் சிவமூர்த்தியையாவது சங்கசக்ரகதாதிகளைத்தரிக்கும் ஹரிமூர்த்தியையாவது இவனே ஈச்வரன் இவன் உலகில் மிக்கச்சிறந்தபொருள் என்பதாகக்கொள்ளுதலே ஸாமான்னிய ஞானமென்பதாம்.

ஸாமான்னிய ஞானத்தாலுதிக்கும் பக்தியே மூடபக்திஎன்பதாம், அந்த பக்தியோடுமாத்திரம் உபாஸித்துப் பெருமைபெற்றவர் கண்ணப்பநாயனார் முதலிய பக்தசிரேஷ்டர்களாம்.

விசேஷஞானத்தினால் உண்டாகிய விவேகபக்தியால் ஈச்வரனை உபாஸித்துப்பெருமைபெற்றவர் ஸநகாதியர், வஸிஷ்டர், மார்க்கண்டேயர், பராசரர், வியாஸர், சுகர், பிரஹ்லாதர், நாரதர் முதலியவர்களாம். இவர்களது பக்தியே பரமமாகிய பக்தியாதலின் இவர்களைப் பரமபக்தர்களென்றும் ஞாதபக்தர்களென்றும் பரமசாம்பவர்கள் என்றும் பாரமேச்வரர்களென்றும் பரமபாகவதர்களென்றும் சொல்லத்தகும்.

ஈசன் எல்லாம் அறிவோனும் எல்லாவல்லமையையும் உடையவனும் எங்கும் வியாபகனுமாயிருப்பவன் எனும் பரிபூர்ண பாவனையைவிடாமலே, இவ்

விறைவன் பக்தகோடிகளின் அநுக்கிரஹார்த்தமாகவே சிவாதிமூர்த்திகளை எடுப்பவன் என்றெண்ணுதலாகிய ஏகதேசபாவனை எனும் இவ்விருபாவனைகளையும் செய்தல் விவேகபக்தியின் செய்கையாகும். பரிபூர்ணபாவனையைச் சிறிதுமறியாதவனாய், இதுவே ஈச்வரஸ்வரூபமென்றெண்ணி சிவாதிமூர்த்திகளைத் தியானித்து வழிபடுதல் முதலியது மூடபக்தியின் செய்கையாகும்.

விவேகபக்தர்களை ஞானிகளென்றே கூசாமல் சொல்லலாம்.

விவேக பக்தியினால் அடையப்படுவதாகிய ஈச்வராநுக்கிரஹத்தைத் திடமாகிய மூடபக்தியினாலும் பெற்று நற்கதியடையலாம் என்பதே சாஸ்திரங்களின் மர்மம்.

‘தமேவ விதித்வாதி ம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதே(அ)யநாய’

அவ்விவ்வாத்ம ஸ்வரூபத்தையறிந்தே ம்ருத்யுவைத் தாண்டிச்செல்லுகின்றான். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை”

என்பதாதி சுருதிகளும் இதனையேவிளக்கும் ஸ்ம்ருதீதிஹாஸபுராணவாக்கியங்களும் ஞானத்தினாலேயே மோக்ஷம்என்று கோஷிக்கின்றன. அப்படியிருக்க அதற்குமுற்றும்விரோதமாய், பக்தியினாலேயேமோக்ஷமடையலாம் என்பது உசிதமோ எனின், உசிதமே. அதாவது, பக்தியின்காரியமாகிய உபாஸனையால் ஈச்வரனுடையஅநுக்கிரஹத்தைப் பெறலாமென்பது நிச்சயமே. உண்மைஞானாநுபவமுடைய மனுஷ்யராகிய குருவின் அநுக்கிரஹத்தாலேயே மோக்ஷஹேதுவாகிய ஞானத்தைப் பெறக்கூடுமெனின், முழுமுதற்கடவுளும் அபாரஞான சக்தியுடையோனும் அநாதிமுக்தனுமாகிய ஈச்வரனுடைய அநுக்கிரஹத்தால் ஞானத்தைப் பெறலாம் என்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லையன்றோ. ஆதலால் பக்தர்களும் ஈச்வராநுக்ரஹ மூலமாய் ஞானத்தைப் பெற்றே முக்தியடைகின்றனர் என்பது சாஸ்திரமர்மம். ஆதலால் பக்தியால் முக்தராகலாம் என்பது ஞானத்தினாலேயே முக்திபெறவேண்டும் எனும் சாஸ்திர வாக்கியங்களுக்குச் சிறிதும் விரோதமாகாதென்றறிக.

இனி, விவேகபக்தியால் மாத்திரம் ஈச்வராநுக்கிரஹத்தைப்பெறலாம் என்பது ஒருவாறு ஒவ்வும். மூடபக்தியாலும் ஈச்வராநுக்கிரஹத்தைப் பெறுதல் என்பது உசிதமாகத் தோன்றவில்லையே எனின், இவ்விஷயத்தைச் சற்று விசாரிப்பாம்.

அதாவது, மூடபக்தியினாலும் ஈசாநுக்கிரஹம் பெறக்கூடுமென்பது பாவனையின் உறுதியினாலேயே என்றறிக. பாவனையின் உறுதியாவது பாணலிங்கஸாளக்கிராமாதிகளில் சிலைவடிவம் சிறிதும் தோன்றாமல் கங்காசந்திரகலாதராதி சிவவடிவமோ அல்லது சங்கசக்ரகதாதராதி விஷ்ணுவடிவமோ தோன்றுதலே என்றறியத்தக்கது. பாவனையே உபாஸனை யென்றும் சொல்லப்படுவது.

சிவவடிவத்தைச்சிந்தித்துக் கிரமமாய், லிங்கமாகிய சிலாபுத்தி சிறிதுமின்றி, சிவவடிவம் மாத்திரம் தோன்றப் பெறுதலின் பொருட்டாகவே பாணலிங்காதிகளில் சிவபூஜை விதிக்கப்பட்டுள்ளது.

சிலர் எவ்வளவுகாலம் பாணலிங்கத்தைப் பூஜித்து வழிபடினும் சிலாபுத்தி முற்றும் நீங்கப்பெறுகின்றதில்லை. சிவபாவனை எவ்வளவுக்கெவ்வளவு முதிர்ச்சியடைகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு சிலாபுத்தி குறையும். பார்க்கப்படுவது பாணலிங்கமாகிய சிலையையேயாயினும் சிலாவடிவம் சிறிதும் தோன்றாமல் புத்தி சிவாகாரமாகவே எப்போது ஏற்படுகின்றதோ அப்போது உபாஸனை முதிர்ந்ததென்பதாம். அப்படிச் சிலாவடிவம் சிறிதும் புத்தியிலுதியாமல் சிவவடிவமே புத்தியில் தோற்றமுற்றுத் தன்னையும் மறந்து அந்தச் சிவமாத்திரமாகவே புத்தி நின்றுவிடின் அந்தக்ஷணத்திலேயே அச்சிலையினின்றும் கங்காசந்திரகலாதிதிருவுருவத்தோடுகூட சிவபெருமான் பிரத்தியக்ஷமாய் ஆவிர்ப்பவிப்பார் என்பது நிச்சயம். இதுவே உபாஸனையின் ரஹஸ்யம்.

கண்ணப்பன் எனும் பக்தன் வேடகுலத்தவன். அவன் ஜாதியிலும்குணத்திலும் தொழிலிலும் விவேகத்திலும் மிக்கத் தாழ்ந்தவனே. அவன் வனத்திற்கு வேட்டையாட இருவர்களோடு கூடச்சென்றான். காட்டில் திரியும் காலத்தில் ஸ்ரீகாஹஸ்தீச்வராலாளயத்தின் மணியோசை கேழ்க்கப்பட்டது.

அப்போது அவன் தன்னோடுகூட வந்தவர்களை அவ்வோசைக்குக் காரணம் யாதென வினவினான். அதற்கு அவர்கள் ஓபிள்ளாய்! இங்கு ஓர் ஆலயமிருக்கின்றது. அங்கு அடிக்கும் மணியோசையே இது என்றனர். அதற்குக் கண்ணப்பன் ஆலயமாவதுயாது? அங்கு ஏன்மணியடிக்கப்படுகின்றது? என்று வினவினான். அதற்கு அவர்கள், அப்பா பிள்ளாய்! அவ்வாலயத்தில் ஈச்வரன்இருக்கின்றார் அவருடைய ஆராதனத்தின் பொருட்டு மணியடிக்கப்படுகின்றதென்றனர். அதனைக் கேட்டதும் கண்ணப்பனுக்கு ஆலயத்திலுள்ளவன் ஈச்வரன் என்றே புத்தியுதித்ததன்றிச் சிலாபுத்தி சிறிதும் உண்டாகவில்லை. பிறகு அவன் ஈச்வரனாவது யாவன் என்று வினவ அவர்கள், உலகமெல்லாவற்றிற்குமிறைவன், அவன் வேண்டியதை எல்லாம் தருவோன், அவன் அழகினில் சிறந்த வடிவன் என்று சொன்னார்கள். அதனைக் கேட்டதும் அவ்வாறுள்ள ஓர் புருஷன் ஆலயத்திலிருக்கின்றதாக எண்ணினனேயன்றிச்சிலையைச் சிறிதும் கருதினனில்லை. பிறகு அவன் ஓஹோ! உலகெல்லாவற்றிற்கும் சக்கிரவர்த்தியாயுள்ளவனும் மிகவும் பெருமைபெற்றவனுமாயுள்ளவன் இக்கானகத்தினடுவில் என் அகப்பட்டுக்கொள்ளவேண்டும்! அந்த ஸ்திதியிலிருக்கின்றவனை நாம் பார்க்காமலிருக்கக்கூடாதுஎன்று இங்ஙனம் கருதியவனாய் அவ்வாலயமிருக்கும் திசையைநோக்கிச் சென்றான். அப்படிச் செல்லுங்காலத்திலும் அவனுக்கு ஆலயத்திலிருக்கின்றவன் திவ்விய புருஷன் எனும்பாவனையிருந்ததேயன்றி சிவலிங்கம் உள்ளதெனும் சிலாபுத்தி ஏற்படவில்லை.

பிறகு மிகவும் ஆவலோடுகூட ஆலயம் சென்று அதனுள் பிரவேசிக்கும் போதும் சிவலிங்கத்திற்கு ஸமீபத்தில் சென்றபோதும் திவ்வியபுருஷ வடிவமே புத்தியில் தோன்றியது. அங்ஙனம் சிவபாவனை மேன்மேலும் உறுதியாய்க் கொண்டுவந்தமையால் சிவலிங்கத்தை நேரில் கண்டகாலத்திலும் சிலை சிறி

தும் தோன்ருமல் சிவஸ்வரூபமே தோன்றியது. ஆயினும் தன்னையும் மறத்த லெனும் நிலைமை உண்டாகவில்லை. தன்னையும் மற்றெதனையும் மறந்து சிவபாவனைமாத்திரமாய் மனம் நின்றடங்கும் க்ஷணமே பகவான் பிரத்தியக்ஷமாகும் ஸமயமாதலால் அப்படிப்பட்ட நிலைமை ஏற்படும் வரையில் அவன் சிவாநுக்கிரஹம் பெறுதற்கியலவில்லை.

கடித்த மாம்ஸம் வாயில் கொண்டுவரும் தண்ணீர் இவைகளை லிங்கத்திற்கு உதவி வழிபட்டதைக் கவனித்தாலும் அவனுக்குச் சிலாபுத்தியே இல்லை என்பது நன்ருயறியக்கூடும். சிலை எனும் பாவனையிருந்தால் மாம்ஸத்தையும் தண்ணீரையும் உதவ நியாயமில்லையன்ருே. தான் கொடுப்பதை இவ்விறைவன் சாப்பிடுவோன் எனும் எண்ணத்தினுலன்ருே அங்ஙனம் கொடுக்க நேர்ந்தது. அவ்விதமே இறைவனும் அதனைப் புசிப்பதாய் அவனுல் காணப்பட்டது. இவ்விதம் பாவனைமுதிர்ச்சியடைந்து வரவே மற்ருேர்தினத்தில் இறைவனது கண்ணில்குற்றத்தைக் கண்டான். உடனே அந்த கண்ணின் ஸ்தானத்தில் தன்கண்ணை எடுத்து வைத்தான். மற்ருேர் கண்ணிலும் கேடுகாணவே தனது மற்ருேர் கண்ணையும் பிடுங்கி பகவானுக்கு வைத்து விடுவோம் என்று எண்ணி அங்ஙனம் தனதம்பினுல் கண்ணைப் பெயர்த்தெடுக்க ஆரம்பிக்கவே தன்னையும் மற்றதையும் மறந்து புத்தி சிவாகார மாத்திரமாய் அடங்கி நின்றுவிட்டது. அவ்விதம் சிவபாவனு மாத்திரத்தினில் நிச்சலப்பட்டு மனம் நிற்கவே பகவான் அங்கு திருவுருவத்தோடு ஆவிர்ப்பவித்து அவனது பாவனு விசேஷத்தினுல் கருணைகூர்ந்துவியாஸாதிகளும் பெறற்கரிய பெருமையை அருளி அநுக்கிரஹித்ததாக சிவரஹஸ்யமெனும் மஹேதிகாஸம் ஒன்பதாம் அம்சத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இவ்விதம் கண்ணப்பன் முதலிய பக்தர்களது சரித்திரத்தைக்கொண்டு உபாஸனையின் மர்மத்தை அறிந்து உண்மை ஆராய்ச்சியோடு கவனித்தால் மூடபக்தியிலும் பாவனையின் ஏகாக்கிரதன்மை எனும் ஓர் பெருமை அடங்கியிருக்கிறதென்பது விளங்கும். இங்ஙனமே ஸாளக்கிராமாதிகளில் விஷ்ணு பாவனையும் என்பதறிக.

இங்ஙனம் பூஜிக்கப்படுவது சிலாவடிவமேயாயினும் அதனில் சிவவிஷ்ணுவாதி ஈச்வரபாவனையையே கொண்டு உபாஸித்துவந்தால் தற்காலத்திலும் இறைவனை பிரத்தியக்ஷமாய்க்கண்டு அநுக்கிரஹிக்கப் பெறலாம் என்பது நிச்சயம். இவ்வுண்மையறியாமல் ஈச்வரபாவனையாவது சிவாலிங்க பாவனையாவது யாதுமின்றித் தனது பெண்டீர் புதல்வர் செல்வம் ஆடையாபரணம் தொழில் முதலியவைகளையே சிந்தித்துக்கொண்டு பாணலிங்க ஸாளக்கிராமாதிகளை யர்ச்சித்தால் எவ்வளவுகோடி காலமாயினும் அவனுடைய அநுக்கிரஹத்திற்கு ஆளாக முடியாது என்பது நிச்சயமே என்க.

இனி, மூடபக்தியினுல் மாத்திரம் பாணலிங்க ஸாளக்கிராவாதிகளில் ஈச்வரனை ஆராதித்தல் உசிதமாகும். விவேகிகளும் சிவாலிங்காதிகளில் ஈசபாவனையைச் செய்து பூஜித்து அவனது அருளைப்பெறலாம் என்பது ஸரியல்ல. விவேகி

கள் ஈச்வரனை எங்குமுள்ளவனாகிய அரூபன் என்றல்லவோ அறிவார். எங்குமுள்ளவரென்பதை அறிந்தவருக்கு ஓர் சிறுவஸ்துவாகியசிலையை ஈச்வரனென்றெண்ணிப் பூஜிக்க எப்படி மனம் வரும் எனும் சங்கை நிகழலாம். இனி இதனுண்மையறிக.

"ஈச்வரன் எங்குமுள்ள திவ்விய மாயாசக்தியோடுகூடிய பரிபூர்ண ஸச்சிதாநந்தவடிவன்" எனும் நிச்சயஞானம் விவேகிகளுக்கிருத்தல் வாஸ்தவமே. அப்படியிருத்தலால், லிங்காதிகளில் ஈச்வரனைப் பூஜித்து வழிபட மனம்வராதென்பது மிகவும் அறியாமையேயாம். உண்மையில் அவர்களுக்கே லிங்கபூஜையினில் மனம் நன்றாய்ச்செல்லும். எனெனின், அவ்விஷயத்தைச்சற்று நிரூபிப்பாம்.

எத்தகைய யுக்திகளைக்கொண்டு விசாரித்துப்பார்க்கினும், சிறிதும் சலிக்கச் செய்ய இயலாததாகிய ஓர் நியமம் உலகில் நடைபெற்றுவருகின்றது. அதாவது, அங்கியின் பிரசாதத்தின்பொருட்டு அங்கத்தையே உபசரிக்கவேண்டுமென்பதாம். திருஷ்டாந்தமாக ஜீவாத்மா அங்கி என்றும், அவனால் வியாபிக்கப்பட்டிருக்கின்றதாகிய இந்த ஸ்தூலதேஹம் அங்கமென்றும் சொல்லப்படுவதாம். அங்கியாகிய ஜீவாத்மா, காணக்கூடாமலிருக்கும் அரூபவஸ்துவே. அங்கமோவெனின், அவனால் வியாபிக்கப்பட்டிருக்கும் கை, கால், தலை, மார்பு முதலிய அவயவங்களையுடையதாய்ப் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றதான ஸ்தூலதேஹமே. தேஹியாகிய ஆத்மாவின் பிரஸாதத்தின்பொருட்டு, தேஹமாகிய கை, கால் முதலிய அங்கத்தையே உபசரிக்கவேண்டியதாயிருக்கின்றது.

உதாரணமாக, ஸ்நேஹிதரை நமதுவீட்டுக்கு அழைத்துவந்து, அவரை ஓர் ஆஸனத்தில் வீற்றிருக்கச்செய்து அவர்கையில் மதுரமாகிய ஓர்கனியைக்கொடுத்தால் அவரது ஆத்மாவாகிய அங்கி திருப்தியடைகின்றது? உபசரித்தது எதனை? திருப்தியடைந்ததுயாது? என்பதைச் சற்றுக்கவனிக்கவேண்டும். தேஹத்தின் ஓர் அவயவமாகிய கையிலேயே பழத்தைக்கொடுத்தோமாதலின் உபசரித்தது கையெனும் அவயவத்தையேயன்றி அரூபனாகிய ஜீவாத்மாவையல்ல. திருப்தியடைந்ததோவெனின், அக்கையையும், மற்றுமுள்ள அவயவங்களையும் தனதென அபிமானித்துக்கொண்டிருக்கும் ஜீவாத்மாவேயாம்.

உபசரிக்கப்படும் அங்கமே திருப்தியடைகின்றதென்பது சிறிதும் ஒவ்வாது. உபசரிக்கப்படுவதாகிய கைகால் முதலிய அங்கம் அறிவில்லாததாகிய ஜடப்பொருளாதலால், அதற்குச் செய்யும் உபசாரத்தினால் அவ்வங்கங்களெல்லாவற்றிலும் ஸகல ஸங்கதிகளையும் அறிந்துகொண்டிருக்கும் சேதனவஸ்துவாகிய அரூபனான ஆத்மாவே திருப்தியடைகின்றானென்பதே உண்மை.

திருப்தியடைகின்றவன் அரூபனான தேஹியேயாயினும் உபசரிக்கப்படுவது அவனிலும் வேறாயுள்ள கைகால் முதலிய அங்கமே; இதுவேயன்றி கைகால் முதலிய அங்கங்களைவிடுத்து அரூபனான ஆத்மாவையே நேரில் உபசரித்தல் என்பது ஓர் காலத்திலுமில்லை. எனெனின் உபசரித்தலென்பது உருவப்

பொருளாகிய அங்கத்தில்மட்டு மியலுமேயன்றி அரூபவஸ்துவாகிய ஆத்மா வினிடம் இயலாதாதலால் என்றறிக.

இங்ஙனம் அங்கங்களின் மூலமாகவே அங்கியினிடம் பழகிப்ரஸாதமடைய வேண்டும் என்பதாக யுக்தி திருஷ்டாந்த வாயிலாய் நிர்ணயிக்கப்படும் நியமத்தைப் பிசகெனச்சொல்ல எவராலுமியலாது. இந்த நியமத்தின்படி கவனிப்போமாயின், அரூபனும் ஸர்வவியாபகனுமான ஸர்வேச்வரனிடம் பழகி அவனுடைய அனுக்கிரஹத்தைச் சம்பாதிக்கவேண்டுமாயின் அவ்விறைவனால் வியாபிக்கப்பட்டுள்ளதாகிய யாதானும் ஓர் அங்கத்தை உபசரித்தே வழிபடவேண்டும்.

இந்த ஸ்தூலதேகத்தினில் நடக்கும் செய்கைகளெல்லாவற்றையும் ஜீவாத்மா அறிந்துகொண்டிருக்கின்றதுபோல சரம் அசரம் எனும் இருவகைப்பொருள், களடங்கிய ப்ரும்மாண்டம் முழுதும் நடக்கும் ஸகல செய்கைகளையும் அறிந்துகொண்டு பரமாத்மாவாகிய ஈச்வரனிருக்கின்றமையால் அவ்விறைவனுக்குப்ரும்மாண்டங்களில் அடங்கியிருக்கும் சராசரங்களாகிய பொருள்களே அங்கங்களாயிருக்கின்றன. ஆதலால் ப்ரும்மாண்டமாகிய தேஹத்தினில் தேஹியாயிருக்கும் அரூபனான இறைவனிடம் பழகி அவனுடைய அநுக்கிரகத்தைப்பெற வேண்டுமாயின் ப்ரும்மாண்டத்தினிலடங்கியுள்ள யாதானும் ஓர் ஸ்தூலப் பொருளையுபசரித்தே வழிபடவேண்டும். இதைவிடுத்து அரூபனான இறைவனையே நேரில் உபசரித்து வழிபடுதலென்பது ஓர்காலத்திலுமில்லை.

ப்ரும்மாண்டத்தில் அடங்கியிருக்கும் பொருள்கள் பற்பலவாறாயிருக்கினும் அவை பிரிதிவீ அப்பு தேயு வாயு ஆகாசம் எனும் ஐந்துவகைப்பொருளிலேயேயடங்கும். ஆதலால் பஞ்சபூதங்களும் இறைவனுக்கு அங்கங்களேயாம். அங்கங்களின் உபசாரத்தினால் அங்கியே திருப்தியடைதல் எனும் நியமத்தினால் பிருதிவியாதி பஞ்சபூதங்களைப் பூஜித்துவழிபடுதலால் ஸர்வவியாபகனான பரமாத்மாவே அப்பூஜைகளைப்பெற்று அநுக்கிரஹிப்பவன் என்று நிர்ணயித்தல் உசிதம். இவ்வுண்மை யறிந்தவர்களுக்கு பிரிதிவியாதி பஞ்சபூதங்களுள் யாதானும் ஒன்றைப்பூஜித்து வழிபடுதல் இறைவனுடைய அநுக்கிரஹத்தின் பொருட்டு அவசியமேயாம் என்பது நன்றாய் விளங்கும்.

அரூபனான அங்கியின் திருப்தியின் பொருட்டு உருவப்பொருளாகிய அங்கத்தையே பூஜித்து வழிபடவேண்டுமென்பதை நன்கறிந்தவர்களே விவேகிகளாதலால் ஈச்வரானுக்கிரஹத்தின் பொருட்டுப் பிரதிமாதிகளைப் பூஜித்து வழிபடுதலில் அவர்களுக்கே மிகவும் சிரத்தையிருக்கும். ஆதலால் அப்படிப்பட்ட விவேகிகளுக்குப் பிரதிமாதிகளில் ஈச்வராராதனைசெய்ய மனம் வராது என்றது ஆராய்ச்சிக் குறைவே என்றறிக.

மற்றக்கற்கள் போலவே காணப்படினும் காந்தத்திற்கு மாத்திரம் இரும்பை ஆகர்ஷிக்கும் சக்தியமைந்திருத்தல்போல் பிரிதிவியின் இனத்திலுள்ள பற்பலவகைப்பொருள்களில் ஒன்றாகக்காணப்படினும் நர்மதாநதியில் கிடைக்கும் பாணலிங்கம் கண்டகீ நதியிலுள்ள ஸாளக்கிராமம் முதலிய சிலைகளுக்கு மாத்

திரம் மனஸைக் கவியச்செய்யும் சக்தியமைந்திருக்கின்றமையால் அவைகளின் மூலமாய் இறைவனைப் பூஜித்து வழிபடுதல் மிகவும் சிலாக்கியம். பஞ்சபூதப் பொருள்களில் யாதானுமொன்றின் மூலமாகவே ஈச்வரனை யுபாஸித்து வழிபட வேண்டுமெனும் உண்மைகொண்டே, பிரிதிவியின் இனத்தைச் சேர்ந்ததாகிய உத்தமகுணம் பொருந்திய துளஸி பில்வம் அரசு முதலிய செடி மரம் முதலிய வைகளைப் பூஜித்தலும் ஈச்வராநுக்ரஹஹேதுவாகும் என நமது சாஸ்திரங் களில் சொல்லப்படுகின்றது. இங்கிதனையறிக. ஆகாசவாயுக்களுக்கு உருவ மில்லையாதலால் அவைகளைப்பூஜை முதலியவைகளைச்செய்து உபசரித்துவழிபட இயலாது. ஆகையால் ஈச்வரானுக்ரஹத்தின் பொருட்டு, பூஜித்து வழிபடத்த கும் உருவப்பொருள் பிரிதிவீ அப்பு தேயு எனும் மூவகையிலேயே அடங்கும். இம்மூவகைப்பொருள்களுள் எப்பொருளை ஆராதித்து உபசரித்தாலும் ஈச்வரா னுக்ரஹத்தைப் பெறலாம் என்பது நிச்சயம். இவ்விஷயம் இந்நூலின் நான்காம்பாகத்தில் விரிவாகச்சொல்லப்படும்.

லிங்காதிகளில் விவேகிகள் செய்யும் ஈச்வரபாவனை இருவகைப்படும். அரூபனான ஜீவாத்மாவின் பிரஸாதத்தைப் பெறவேண்டுமானல், கை கால் முதலிய அங்கமாகிய ஸ்தூலப்பொருளையே உபசரிக்கவேண்டியதவசிய மாகின்றது போல, வியாபகனும் அரூபனுமான பரமாத்மாவாகிய இறைவனு டைய அநுக்ரஹத்திற்கு ஆளாகவேண்டுமாயின் ப்ரும்மாண்டத்தினிலடங்கி யதான யாதானும் ஓர் ஸ்தூலப்பொருளையே பூஜித்து உபசரிக்கவேண்டியது அவசியம் எனும் நிச்சயத்தைகொண்டு அரூபனான வியாபகப்பொருளையே சிந் தித்துவழிபடுதல் ஓர் வகையாம். அரூபனுயினும் பரமாத்மா நம்போன்ற அற்பபரி பாகிகளின் அறிவுக்கு விஷயமாவதன் பொருட்டே கங்காசந்திரகலாதிகளைத் தரித்தல் அல்லது சங்கசக்ரகதாதிகளைத்தரித்தல் முதலிய திருவுருவத்தை எடுக்கின்முனதலால் அவ்வுருவத்தை எந்தப் பொருளில் தியானித்தா லும் அந்தப்பொருளினின்றும் அதே உருவத்தோடு தோன்றி யநுக்கிரஹிப்ப வன் எனும் பாவனையாகிய ஸரூபசிந்தனையோடு உபாஸித்தல் மற்றோர் வகை யாம். அதாவது பாணலிங்க ஸாளக்கிராவாதிகளில் இறைவனை யரூபனுய் எண்ணி ஒன்றும் ஸரூபனுய் எண்ணி உபாஸித்தல் மற்றென்றுமாம் எனச்சு ருக்கமாய் அறியத்தக்கது.

இறைவன் உண்மையில் உருவமிராதவனேயாயினும் எவ்வுருவத்தையும் எடுக்கக்கூடியதும் எக்காரியத்தையும் செய்துமுடிக்கும் வல்லமையுடையது மாகிய திவ்வியமாயாசக்தியையுடையவனுய் உலகெங்கும் வியாபகனுயிருக்கின் முன். அவனின்றி ஓர் அணுவுமில்லை எனும் திடநிச்சயமுடையவர்களாகிய விவேகிகளுக்கே ஈச்வரபக்தி மிகவும் திடமாயிருக்கும். அப்படிப்பட்டபக்தி யுடையவர்கள் நெருப்பினில் தள்ளப்படினும், ஸமுத்திரத்தினில் மூழ்கச்செய்யி னும், மஹாஸர்ப்பங்களால் கடிக்கப்படினும், மலையினின்றும் உருட்டித்தள்ளப் படினும், சிறிதும் கலங்கமாட்டார் என்பது நிச்சயம்.

திருஷ்டாந்தமாக, ப்ரஹ்லாதரை எடுத்துக்கொள்ளலாம். அவர் அப்படிப் பட்ட திடநிச்சயத்தையுடையபக்தராதலால் ஹிரண்யகசிபுவினல் முற்கூறிய வாறு மிகவும்கோரமாய் ஹிம்ஸிக்கப்பட்டவரேயாயினும் அவைகளால் சிறிதும் கெதியையடைவில்லை. மலையினின்றும் உருட்டித்தள்ளும் போதும், ஸமுத்தி ரத்தில் கட்டிப்போடும்போதும் ப்ரஹ்லாதருக்கு மலையும் ஸமுத்திரமும் அறி யப்பட்டதேயாயினும் எவனையின்றி ஓர் அணுவுமில்லையோ அப்படிப்பட்ட ஸர்வவியாபகனும் ஸர்வவல்லமை பொருந்தியவனுமாகிய இறைவன் இம்மலை யிலும் ஸமுத்திரத்திலும் இருக்கின்றனென்பதில் ஸந்தேகமில்லையாதலால் அவனுக்கு இவை தேஹம் போன்றவையே. அகிலஜகங்களுக்கும் உண்மைத் தாய்த்தந்தையாய் விளங்குவோனுகிய அவ்விறைவனல் வியாபிக்கப்பட்ட மலை முதலிய பொருள்களினின்றும் உருட்டிவிடுதல் முதலிய காரியங்கள் தாய்தந்தை யரிடம் குழந்தையைச் சேர்ப்பிப்பது போன்றதே தாய்தந்தைகளின் மடியில்சேர் ப்பிக்கப்படும் விஷயத்தில் குழந்தைக்குப்பயமேது? எம்மிறைவனல் வியாபிக்கப் பட்டிருக்கும் உலகப்பொருள்களினுல் என்னை ஹிம்ஸிப்பதும் அவ்வாறேயன் றே. எம்மிறைவனது மடிமீது உருட்டிவிடுஞ் செயலேயாதலின் இதனல் எமக் குப்பயமில்லை. எனும் திடமாகிய விவேகத்தையுடையோராதலின் அப்படிப் பட்ட ஹிம்ஸைகளைச்செய்த போதும் அவர் முகம் அப்போதுமலர்ந்தசெந்தா மரைமலருக்குநிகராயிருந்ததென மஹருஷிகளால் சொல்லப்பட்டிருக்கின்றது.

பிரஹ்லாதர் ஹிரண்யகசிபுவினல் அவ்வாறே பின்னும் எவ்வளவோ கோரமாய் ஹிம்ஸிக்கப்பட்டபோதும், ஸர்வவியாபகனும் ஸர்வவல்லமைபொ ருந்தியவனுமான ஸகுணேச்வரனது ஸ்வரூபத்தையே நினைந்து ஆனந்தபரவச மாய் நிற்பதைக்கண்டு, அவ்வஸுராதமன் ஓ பிரஹ்லாதா! இவ்வளவு ஹிம்ஸை யைப்பெற்றும் உனக்குப் புத்திவரவில்லையே. அந்தோ ஹரியெனும் பெயரை யுடைய இறைவன் இருத்தல் உண்மையானல் அவன் உன்னலாவது என்னலா வது காணப்படவேண்டுமன்றே. அங்ஙனம் ஓரிடத்திலும் காணப்படாமலிருக் கும் போது, வீணில் பிதற்றிக்கொண்டு ஏன் உபத்திரவத்தையடைகின்றனை? என்றான். அதற்கு ப்ரஹ்லாதர் அந்தோ! உனக்கேனிங்ஙனம் மஹாமோஹம்? ஸர்வவல்லமை பொருந்திய இறைவனுகிய ஹரியில்லாத இடமுண்டோ?

மஹாமாயாயாம்வா நபஸி மருதி ஜ்யோதிஷி ஜலே ப்ருத்வ்யாம் ஸ்தம்பாதௌ தவ ஹரிரதைர் வ்யாப்ய ஸகலம் | ஸ்வாஸ்தே
[illegible] ||

மஹாமாயையிலும் ஆகாசத்திலும் வாயுவிலும் தேஜஸிலும் ஜலத்தி லும் பிருதிவியிலும் அதன் விகாரப் பொருளாகிய ஸ்தம்பம் முதலிய வைகளிலும் வியாபகனய் அங்கங்கு நடக்கும் ஸகல காரியங்களையும் கவனித்துக்கொண்டு ஹரி இருக்கின்றன். அந்தோ "ஹரி எங்கிருக் கின்றன் இருந்தால் காணப்படவேண்டுமே" எனச் சொல்லிய

உனது சொல்லிலும் இருகின்றான். அங்ஙனமே சிறுதுரும்பிலும்இரு
ந்து கொண்டுஅவ்விறைவன் எல்லாவற்றையும் கவனிக்கின்றானன்
றோ ! வேண்டுமாயின் நீயே பிரத்தியக்ஷமாய்க் காணலாமே

எனக்கூறினார். அதனைக் கேட்டதும் அவ்வஸுரன் அடங்காத கோ
பத்தோடு அடா மூர்க்கா ; எங்குமிருக்கின்றானெனக் கூறியது வாஸ்தவமா
யின் இதோ என்னெதிரில் இருக்கும் கம்பத்தில் அவ்விறைவனைக் காட்டுவா
யாக. அங்ஙனம் நீ அவனைக் காட்டாவிடில் சினங்கொண்ட ஆண்சிங்கம் யானை
யின் கும்பத்தைப் பிளந்து போடுவதுபோல உன் சிரஸைப் பிளந்து சிதர அடிப்
பேன் எனச் சொல்லவே பிரஹ்லாதர் அப்போதும் கலங்காதவராய்

𑌨 𑌵𑌾𑌹𑌂 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌸𑍍𑌯𑍇 𑌵 𑌵𑌿𑌦𑌿𑌤𑌾 𑌨𑍋 𑌯𑌦𑌿 𑌹𑌰𑍇𑌵𑌶𑌃
𑌹𑌰𑌿𑌸𑍍𑌵𑌾𑌵𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌵𑌭𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌵𑌿 𑌵𑌾𑌨𑌃
𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌧𑌾𑌨𑌂 𑌹𑌨𑍍𑌯𑌾 𑌸𑍍𑌵𑌪𑌿𑌹 𑌰𑌦𑍇𑌶𑌂 𑌵𑌿𑌕𑌲𑌾
𑌶𑍍𑌰𑍁𑌪𑌾𑌵𑌾𑌤𑍍𑌯𑍍𑌸𑍍𑌤𑌾𑌸𑍍𑌯𑌾 𑌲𑌿𑌦𑌿𑌕𑌿𑌲𑌸𑌾𑌰𑌾 𑌦𑍇𑌵 𑌲𑌲𑌲𑌦𑌃॥

அஹோ, உன்னால் என்னைக் கொல்லுதற்கியலாது. இது காறும்
எவ்வளவோகோரமான ஹிம்ஸைகளைச் செய்தும் அவைகளால் என
க்கு எக்கேடும் நிகழாதிருத்தலைக் கவனித்தால், உன் சக்தியில் அடங்
காத பெரிய வல்லமையுள்ள இறைவன் வேறொருவனிருக்கின்றான்
என்பதையும், ஆனது பற்றியே உன் எண்ணம் நிறைவேறாதென்
பதையும் நீயறியலாமே. நீ சொல்லும் பொருளில் அந்த ஹரி கா
ணப்படாமற்போவனாயின் யானே என்னை மாய்த்துக் கொள்வேன்.
அங்ஙனமிராவிடில் அவ்விறைவனுக்கு யான் பக்தனாயிருத்தலை விட்
டுப்போடுவேன்

எனச் சொல்லியதைக் கவனித்தால் பிரஹ்லாதர் முதலிய பக்தர், இறை
வன் அருட்ஞான வியாபகவஸ்துவேயாயினும் திவ்வியசக்தி மஹிமையால் எவ்
விதப்பொருளினின்றும் ஆவிர்ப்பவிப்பவனாதலின் எங்கும் அவனது திருவுரு
வத்தைக் காணலாம் எனும் திடவிவேகமுடையோர் என்பது நன்கறிய
லாம்.

அங்ஙனம் திடநிச்சயத்தோடுகூடிய பக்தியால் முழுமதிபோலப் பிரகாசிக்
கும் முகமண்டலத்தையுடையவராகிய அந்தப் பக்த சிரோமணி கூறிய மொழி
யைக் கேட்டதும் ஹிரண்யகசிபு உள்ளத்திலடங்காத கோபாவேசத்தினால் இத
னில் இருந்தால் இதோ அறைகின்றேன் அந்த ஹரி வெளிவரட்டும் எனச்
சொல்லிக் கொண்டு இடிமுழக்கம்போலக் கையினால் அக்கம்பத்தை ஓர் அறை
அறைந்தான். அப்படியறையவே

𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌸 𑌕𑍋𑌪𑌾𑌤𑍍𑌕𑌶𑌿𑌪𑍁𑌃 𑌸 𑌤𑌾𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌂 𑌕𑌰𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌤𑌤𑌾𑌡 𑌸𑍍𑌤𑌂𑌭𑌂
𑌸𑌵𑌰𑌂𑌜𑌵𑌾𑌨 । 𑌸𑍍𑌤𑌾𑌹𑌾𑌨𑍍𑌨𑍃𑌸𑌿𑌂𑌹 𑌸𑍍𑌸𑌹𑌾𑌸𑌰𑌵𑍋𑌹𑌸𑌨𑍍𑌸𑌂𑌵
𑌤𑍍𑌵𑌨𑍍𑌨𑍍𑌵𑌹 𑌶𑍍𑌰𑍁𑌵𑌿𑌰𑌾𑌵𑌿𑌸𑌃 ॥

அதனைக் கேட்டுக் கோபமீறியவனான அவ்வஸுரன் கையினால், இடி விழுதல் போல் அந்தஸ்தம்பத்தை யறைந்தான். அங்ஙனமறையவே ஸகல ப்ரும்மாண்ட கோடிகளும் நடுநடுங்கித்திகைப்புறும் வண்ணம் மிகவும் கோலாஹலமான சப்தத்தோடு அந்த ஸ்தம்பத்தை இரண்டு பாகமாய்ப் பிளந்துகொண்டு அண்டகடாஹம்வெடித்திடச் சிரித்து அட்டஹாஸம் செய்துகொண்டு அற்புத நரசிங்க வடிவத்தோடு இறைவன் தோன்றினான்

எனக் கூறியபடி இறைவன் தோன்றி அவ்வஸுரனுடைய மார்பைப் பிளந்துபோட்டு, பக்த சிரேஷ்டனாகிய பிரஹ்லாதனை அநுக்கிரஹித்ததாகச் சொல்லப்படும் சரிதத்தால் விவேக பக்தியின் ஸ்வரூபத்தை நன்கறியலாம்.

ஆதலால் எவ்வகையான பக்தியைக் கொண்டாவது பாணலிங்க ஸாளக்ராவாதிகளோ அல்லது லோஹம் தாரு முதலியவைகளினால் சாஸ்திரவிதிப்படி இயற்றப்பட்ட பிரதிமைகளோ அல்லது பில்வம், அரசு துளஸி முதலிய சுத்தமான விருக்ஷம் செடி முதலியவைகளிலோ இவைகளுள் யாதானும் ஓர்பொருளை இறைவனுக்கு அங்கமாய்க் கொண்டு அதனைப் பூஜித்தல் ஸர்வவியாபகனான இறைவனது பூஜையே என்பதும், அதனால் அவனது அநுக்கிரஹத்தைப் பெறலாம் என்பதும் உண்மையே யாதலால் அங்ஙனம் உபாஸித்து வழிபடுதல் லோகோத்தரமாகிய க்ஷேமத்திற்கே ஏதுவாகுமென்றறிக. ஆயினும்பூஜித்துவழிபடும் உபாஸ்தியானது சாஸ்திரவிதியை அநுஸரித்ததாகவே இருக்கவேண்டும். சாஸ்திர விதியை மீறிப் பூஜித்தால் இறைவனது அநுக்ரஹத்திற்கு ஆளாக முடியாது. அதாவது பாணலிங்க ஸாளக்ராவாதிகளின் மூலமாய் எல்லோரும் உபாஸிப்பதற்கு விதியில்லை. எவ்வெவர் எந்தெந்த முறையின்படி பூஜிக்க வேண்டுமெனும் சாஸ்திரவிதியை நன்கறிந்த ஸாதுக்களிடம் அவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டு அவ்வாறு உபாஸித்துவழிபடின் சாச்வதமான க்ஷேமத்தைப் பெறலாமென்மது நிச்சயம்.

ஶாந்தி ஶாந்தி ஶாந்தி

---

# வேதசாஸ்திரதத்துவம்

## நான்காம் பாகம்

# "வேதவேதாங்க ப்ரகாசம்"

இத்தேசவாஸிகளாகிய ஆர்யர்களால் பலகோடி காலமாய்க் கொண்டாடப்பட்டுவரும் பிரமாண நூல்வேதமே. அதனில், கத்திமுதலியவைகளால் அறுத்துப் பார்த்தல், கண்ணாடி முதலியவைகளால் காணுதல் முதலிய தற்காலபரிசோதனைகளை எவ்வளவு காலம் செய்யினும் கண்டுபிடிக்க இயலாததாயிருக்கும் மனம், ஜீவன், ஈச்வரன் முதலிய பொருள்களைக் கண்டுகொள்ளும் வழி போதிக்கப்பட்டிருக்கின்றது. மக்களுக்கு ஹிதத்தைச் சொல்லும் மாதாபோல மாந்தர்களுக்கு இம்மைமறுமை இன்பம் நிகழும் வழியைச் சொல்லும் நூல் வேதமே.

உலகில் நடைபெறும் ஒவ்வொரு மதத்திற்கும் ரக்ஷகமாயுள்ளது அதனதன் பிரமாண நூலேயாதலால் ஆர்யமதம் கெட்டழியாமலிருக்கவேண்டுமாயின் அதன் பிரமாண நூலாகிய வேதம் லோபமடையாதிருக்கவேண்டியது அவசியமாகும். பிரமாணநூலாகிய நமது வேதத்தைப்பற்றி மாறுபாடாய் அபிப்பிராயம் நிகழின், அது நமது மதத்திற்குக் குறைவையே உண்டுபண்ணும். ஆதலால் அப்படிப்பட்ட தாறுமாறாகிய அபிப்பிராயம் நிலைபெறாமலிருத்தலின் நிமித்தம் அதன் உண்மையாகிய பெருமையைச்சற்று விளக்குவாம்.

ஸ்ம்ருதி ஸூத்ரம் இதிஹாஸம் புராணம் முதலிய ஸகல கிரந்தங்களுக்கும் முதநூல் வேதமே. இவ்வரிய பிரமாணத்தைப்பற்றித் தற்காலம் ஆர்யராலும் ஆங்கிலப்படிப்பினராலும் பற்பலவாறாய்ச் சங்கிக்கப்படுகின்றது. அச்சங்கைகளெல்லாம் தவறு எனக்கண்டாலொழிய வேதத்தின் உண்மை விளங்காது

அதாவது, ருக்வேதம் முதலில் "அக்நிமீளே" என்று தொடங்கிய மந்திரத்திற்கு ரிஷி மதுச்சந்தஸ்ஸு என்பவரென்றும், சந்தஸ்காயத்திரீ என்றும், தேவதை அக்கினி என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாறே இஷேத்வோர்ஜேத்வா என்று தொடங்கிய யஜுர் மந்திரத்திற்கு சுநச்சேபர் ரிஷி என்றும் அறியப்படுகின்றது. இதனால் பூர்வம் மதுச்சந்தஸ் என்பவர் தனது மேதாபலத்தினால் பிராமணராய், மூடர்களாகிய மற்ற சிலருக்காசிரியனாயிருந்து இந்த ருக்கை இயற்றினர். அவ்வாறே சுநச்சேபர் என்றொருவர் இஷேத்வோர்ஜேத்வா எனும் மந்திரத்தை இயற்றியவர் என்றே அறியக்கூடியது. இவ்வாறு வேதத்திலுள்ள மந்திரங்களில் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் ரிஷியின் பெயர் சொல்லப்பட்டுவருகின்றமையால், மதுச்சந்தர் சுநச்சேபர் முதலிய பல பிராமணர்களாலேயே வேதம் இயற்றப்பட்டதென்பது வியக்தமாய் விளங்குகின்றது. இதனை யறியா

மல், வேதம் அனுதி எனவும் அது ஈச்வரன் சொன்ன வாக்கியம் எனவும்சொலுவது மடமையே. மூடர்களாகிய முன்னேர் இவ்வுண்மையை யறியாமல் வேதம் அனுதி என்பதை நம்பி வீணில் நெருப்பினில் நெய்யை ஊற்றிக்கொண்டு தமது பொருள்களைத் தம்மினத்தாருக்கு அளிக்கும் பேதைகளாயிருந்தனர். இவ்வாறு வேதங்களைச் செய்தவர் ரிஷிகள் என்னப்படும் பூர்வகாலப் புத்திசாலிகளேயாம். என்று இவ்வாறு சங்கித்துக்கொண்டு பாஷாந்தரங்களிலும் இவ்வாறே புஸ்தகத்தை எழுதி அச்சிட்டுவிடுகின்றனர்.

இங்ஙனம் சங்கைக்குக் காரணம் அறியாமையே. அதாவது, ஒவ்வொரு மந்திரத்திற்கும் அநுஷ்டானகாலத்தில் ரிஷியின் பெயர் சொல்லப்பட்டுவருவதற்குக்காரணம் அந்தந்த மந்திரத்தை அந்தந்த ரிஷி இயற்றியவர் என்பதல்ல. எவ்வொரு மந்திரத்தையும் விதிமாறுமல் பயின்று மனிதர் பயனடையவேண்டுமென்பதைக் கருதியே, அதனுல் விசேஷப் பெருமையைப்பெற்ற ஒருவனைத் திருஷ்டாந்தமாக வைத்து மந்திராநுஷ்டான காலத்தில் முதலில்சொல்லப்பட்டு வருகின்றதென்பதே உண்மை. மதுச்சந்தஸ் என்பவர் "[illegible]" என்ற மந்திரத்திற்கு ரிஷி என்றதனுல், அந்த ரிஷி அந்த மந்திரத்தால் பூர்வம் அக்கினி மூலமாய் ஈச்வரனை வழிபட்டு அவனருளால் பெறற்கரிய பெருமையைப் பெற்றவர் என்பதே உண்மை. பூர்வம் ஓர் அரசன் செய்தயாகத்தில் நரபசுவாக அகப்பட்டுக்கொண்ட சுநச்சேபர் என்பவர், விசுவாமித்திரர் உபதேசித்த "[illegible]" எனும் மந்திரத்தினுல் வருணனைவழிபட்டு அந்தநரபசுத்துவம் நீங்கியதோடு பலபெருமை பெற்றுர் என்பது ராமாயணபாகவதாதிபுராணங்களிலும் காணப்படுகின்றது. இவ்வாறு "[illegible]" என் மந்திரத்தினுல்பெருமை பெற்றவர் சுநச்சேபர் ஆதலால் அவரது பெயர் அம்மந்திராநுஷ்டான காலத்தில் சொல்லப்படுகின்றது. மந்திரங்களைப் பயின்று பெருமைபெற்ற முன்னேர்களின் நிலைமையைக் கண்டால் நம்மவரும், அம்மந்திரானுஷ்டானத்தினுல் பெருமைகிடைக்கும் எனும் நம்பிக்கையோடு அதனில்ஊக்கமுடையவராவார் என்பது கொண்டே பூர்வாசிரியர், ரிஷியின் பெயரைக்கண்டே மந்திரத்தைப் பயில வேண்டுமென விதித்திருக்கின்றனர். இவ்வுண்மையே

"[illegible] ||

"எவரது பெயரோ அவர்ருஷி. யாது அதனுல் சொல்லப்படுவதோ அது தேவதை. எது அக்ஷரங்களின் பரிமாணமோ அதுச்சந்தஸ். பயனை விரும்பும் வைதிகர் ரிஷி தேவதாச்சந்தங்களால் சிரத்தையுடன் பயிலுவார்"

என்று பிராதிசாக்கியம் எனும் நூலில் சௌநகரால் போதிக்கப்பட்டுள்ளது. ஆதலால் மந்திரானுஷடான காலத்தில் சொல்லப்படுவதாகிய பெயரை

யுடைய ரிஷிகள் மந்திரத்தினுல் பயன் பெற்றவரென்பதே உண்மை. என்றறிக.

இனி மற்றுமோர் சங்கை? அதாவது, வேதம் ரிஷிகளாலியற்றப்பட்டதென்பதேஉண்மை. ஏனெனின், வடமொழிவியாகரணமியற்றிய பாணினிமுனிவர் "தித்திரிவரதந்துகண்டிகோகாச்சின்" எனும் சூத்திரத்தினுல்தித்திரி வரதந்து கண்டிகர் உகர் முதலியவர்களால் வேதம் சொல்லப்பட்டுளதென்று சொல்லியிருக்கின்றனரே! தித்திரியினுல் சொல்லப்பட்டதை அத்தியயனம் செய்பவர் தைத்திரீயர் எனப் பெயர்பெற்றதற்கன்றே விதியாக அந்த ஸூத்திரம் விதிக்கப்பட்டிருக்கின்றது. "தித்திரிணா ப்ரோக்தமதீயதே விதந்தி வா தைத்திரீயா:"

"தித்திரியினுல் சொல்லப்பட்டதை அத்தியயனம் செய்பவரோ அல்லது அறிகின்றவரோ தைத்திரியர் என்று சொல்லப்படுவார்"

என்றுசொல்லியிருத்தலைக் கவனித்தால் தைத்திரீய சாகையாகிய யஜுர் வேதமானது தித்திரி எனும் ரிஷியால் சொல்லப்பட்டதென்பது பாணினியின் அபிப்பிராயம் எனவியக்தமாய்க் காணப்படுகின்றமையால், அம்மஹானின் அபிப்பிராயத்தை அநுஸரித்து வேதமானதுதித்திரி முதலிய ரிஷிகளால் சொல்லப்பட்டதென்பதே உண்மை என்று கொள்ளுவதை விட்டு, வேதத்தை அனுதியென்றும் ஈச்வரவாக்கியமென்றும் சொல்லுவது உசிதமாகுமோ? எனும் சங்கையாம்.

இதுவும் பாணினிவியாகரணத்தை நன்ருய்ப் படியாததினுல் நிகழும் சங்கையே என்க. ஏனெனின், அங்குள்ள "தேந ப்ரோக்தம்" என்பதிலுள்ள ப்ரோக்த எனும் சொல்லுக்கு இயற்றப்பட்டது என்பது பொருளல்ல. ப்ரஉக்த சிரத்தையோடுகூட பரவச்செய்யப்பட்டது. "சிரத்தாபுத்தியுதிக்கும்படி பலருக்கு உபதேசிக்கப்பட்டது" என்பதே அர்த்தம். இப்படிச்சொல்லுதலை விடுத்து "ப்ரோக்த" எனும் சொல்லுக்கு இயற்றப்பட்டது என்பதையே பொருளாய்க் கொண்டால் "க்ருதே க்ரந்தே" என்று சொல்லிய மற்றோர் ஸூத்திரத்தினுலேயே இவ்விஷயம் விதிக்கப்பட்டதாகின்றமையால் தித்திரிவரதந்து என்றும் தேநப்ரோக்தம் என்றும் சொல்லிய இந்த ஸூத்ரங்கள் வீணேயாகும். ஆதலால் வேதம் ரிஷிகளால் இயற்றப்பட்டதென்பது பாணினி முனிவரின் கருத்தல்ல என்று நன்ருயறியப்படுகின்றது. இவ்வுண்மையே பாணினிஸூத்திரத்திற்குப் பாஷ்யமியற்றியவராகிய பதஞ்ஜலிமா முனிவரால் வியக்தமாய் சொல்லப்பட்டிருத்தலைக் கண்டுதெளிக. ஆதலால் வேதம் ரிஷிகளின் வாக்கிய மல்ல என்பதே உண்மை.

இனி மற்றுமோர் சங்கை. அதாவது, வேதத்தில் பூர்வம் நடந்ததென்பதாக இறந்தகாலச் சொல்லைக்கொண்டு பற்பல கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றனவே. அனுதியாகிய வேதத்தில் பூர்வம் நடந்ததெனக் கதையைச்சொல்லியிருத்தல் எப்படிப் பொருந்தும்? திருஷ்டாந்தமாக யஜுர் வேதத்தில்,

[illegible]”

“தேவர்களும் அஸுரர்களும் யுத்தத்திற்குச்சந்நத்தராயிருந்தனர். அப்போது தேவர்கள்தங்களது சிறந்த ரத்நம் ஆடை முதலிய பொருள்களைப்பிறகு தங்களுக்கு உதவட்டுமென அக்கினி தேவனிடம் ஒப்புவித்துப் பாதுகாத்திருக்கச்சொல்லிச் சென்றனர். அக்கினி அவைகளைப் புசித்துவிட்டான். பின்னர் அஸுரரை வென்று திரும்பிவந்து தேவர் தமது பொருள்களைக் கொடுவென்று அக்கினியைக் கேட்டனர். அக்கினி அப்போது பயந்து ஓட்டம் பிடித்தான். அவனைத்தொடர்ந்து சென்ற தேவர் அவனைப்பிடித்துக்கட்டிவிட்டனர். அப்போது அக்கினி அழுதான். அவனதுகண்ணீர் வெள்ளியாய்விழுந்தது. அக்கினி அவ்வாறு ரோதனம் செய்தவனாதலால் ருத்திரனென்றும் பெயர் பெற்றான். அக்கினியின் கண்ணீராதலால் வெள்ளியை யாகத்தினில் தக்ஷிணையாய்க் கொடுக்கக்கூடாது. கண்ணீராகிய வெள்ளியை யாகத்தினில் கொடுப்பவனது வீட்டில் ஓர்வருஷத்திற்குள் அழுகை நிகழும். ஆதலால் அதனை யாகத்தில் கொடுக்கக்கூடாது”

எனும் இதுபோன்ற கதைகள் காணப்படுகின்றனவே. இது வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றமையால் வேதமானது இக்கதாகாலத்திற்குப் பிறகே ஏற்பட்டது எனச்சொல்லுவது உசிதமன்றோ. அன்றியும் அக்கினியைத் தேவர் கட்டிப் போட்டுஹிம்ஸித்தல் என்பதாவது அவன் கண்ணீர் வெள்ளியாயிற்று என்பதாவது சிறிதேனும் பொருத்தமுடையதாகுமா ? இதனால், ஸம்பந்தமின்றி பித்தர்போல் பிதற்றுந்தன்மையும் வேதத்திற்குளது என்பதாக அறியப்படுகின்றதே. இவ்விதப் பித்தர் புலம்பல்போலுள்ள வேதத்தை அனாதியென்பதும் ஈசன் வாக்கியம் என்பதும் சிறிதும்பொருந்தாது. ஆதலால்வேதத்திலுள்ள சிற்சில பாகங்கள் பித்தர்களாகிய பிராமணர்களின் புலம்பலே என்பதல்லவோ உசிதம். இவ்விதமறியாமல் வேதம் அனாதியென்பது சிறிதும் விசாரியாத மூடர்களின் கொள்கையே என்பதாம். இச்சங்கையும் வேதார்த்தத்தையுள்ளபடி யறியாத மந்தர்களாலேயே செய்யப்படுவதாம் என்றறிக.

அதாவது, வேதத்தைப்பற்றி இவ்வுண்மை அறியவேண்டியது. வேதத்தில் அடங்கிய வாக்கியங்கள் மந்திரராசி, ப்ராமணராசி, என இருவகையாய்

உள்ளன. மந்திரராசிகளை ஒரேவகையென்னலாம். பிராமணராசியினில் அடங்கிய விஷயங்கள் விதி, நிஷேதம், அர்த்தவாதம் என மூவகையாயுள்ளன. விதியாவது இதனைச்செய் என்று சொல்லப்படும் ஆணையேயாம். நிஷேதமாவது இதனைச் செய்யாதே எனும் விலக்காம். அர்த்தவாதமாவது, விதியையோ அல்லது விலக்கையோ விசதமாக எடுத்து ஸாமான்னியர்களாகிய மந்தர்களுக்குப் போதிப்பதன்பொருட்டு, திருஷ்டாந்தமாகிய கதைபோல் எழுந்தவாக்கியங்களாம்.

துஷ்டர்களுக்கு உதவிசெய்யக்கூடாதெனும் விஷயத்தைப் பாலருக்குப் போதிப்பதன்பொருட்டுப் பெரியோர், ஓ நாய்க்கு உதவி செய்தகொக்கின் கதையைச்சொல்லுவதுபோல, கர்மமாத்திரத்தையே பரமாய்க்கருதும் இயல்புள்ள ஸாமான்னியர்களை நோக்கி அக்கருமத்தை இவ்வாறு செய்யவேண்டும் வேறு விதமாய்ச்செய்யக்கூடாது எனப் போதிப்பதன்பொருட்டு ஓர் சிறுகதையைச் சொல்லுதல் உசிதமேயாம். அர்த்தவாத சரிதங்களை உண்மையாய் நடந்தவையெனக் கொள்வது உசிதமல்ல. பிரகிருதத்திலுள்ள விஷயத்தைப்போதிப்பதன் பொருட்டே சொல்லப்பட்டதென்பதைமட்டும் அறிந்துகொள்ளவேண்டும். துஷ்டர்களுக்கு உபகாரம்செய்யக்கூடாதெனும் விஷயம் யுக்தமே ஆதலால் அதனைப்போதிக்க வந்தஓநாய்க் கொக்குகளின் கதையும் உண்மையாய் நடந்திருக்கவேண்டுமெனும் நியமமுண்டா? அக்கதை பொய்யாயிருக்கினும் சிறுவர்க்கு அது எப்படி திருஷ்டாந்தமாகவந்து விஷயத்தை விளக்குகின்றதோ, அப்படியே அக்கினிபகவானைக்கட்டி ஹிம்ஸித்தனர் அவனது கண்ணீர்வெள்ளியாய் விழுந்தது எனச்சொல்லப்படும் கதை பொய்யாகவே இருக்கினும், யாகத்தையே பரமெனக்கொண்டு நடக்கும் ஸாமான்னியர்களான மந்தர்கள், கண்ணீராதலின் அதனைக் கொடுக்கக்கூடாதெனும் கதையைக் கண்டாராயின் பொன்னையளிப்பார்கள் எனும் கருத்தோடு சொல்லப்பட்ட விஷயமேயாம். இதனால் இக்கதையையும் வாஸ்தவமெனக் கொள்ளவேண்டுமென்பதல்ல. பிரகிருதத்தில் சொல்லிய வெள்ளிதக்ஷிணையின் விலக்கி (நிஷேதத்தி) லேயே இதற்குக் கருத்தென்க. சிறுவர்களை நோக்கிச்சொல்லும் ஓநாய்க்கதை பொய்யாயிருக்கினும் அக்கதையானது துஷ்டர்களுக்கு உபகாரம் கூடாதெனும் உண்மையைப் போதிக்கவந்தது பற்றி எப்படிப் பிரமாணமேயாகின்றதோ! அக்கதையைச் சொல்லிய கிழவர் எப்படிப் பித்தராகாரோ! அதுபோலவே அர்த்தவாதமாகிய சரிதத்தைச் சொல்லியவசனது வாக்கியமும் பிரமாணமேயென்றும் பிதற்றலாகாதென்றும் அறிக. வேதத்திலுள்ள கதைகளையெல்லாம் வாஸ்தவமென்று கொண்டால் அக்கதைக்குப்பின்னரே வேதமியற்றப் பட்டதென்று கொள்ளும்படி ஏற்பட, வேதம் அநாதியென்பதுகெடும். அவ்விதமல்லவாதலின் வேதம் அநாதி யென்பதும் குற்றமற்ற பிரமாணமே என்பதும் உசிதமே என்றறிக. இதனால் வேதத்திலுள்ள கதைகளை வாஸ்தவமல்லவென்பதும் அவைகளின் கருத்தை மாத்திரம் அறிந்து கொள்ளவேண்டுமென்பதுமே உண்மையாதலால் அங்ஙனம் அறிந்தவர்களுக்கு வேதம் அநாதி யென்பதில் சிறிதும் சங்கை ஏற்படாதென்றறிக.

இனி மற்றுமோர் சங்கை. அதாவது, அக்கிநிபகவான் அழுதனன்அவனது கண்ணீர் வெள்ளியாயிற்று என்பது முதலிய சரிதங்கள் அநுசிதங்களாயிருத்த லின் அர்த்தவாதமென்றும் பொய்க்கதை என்றும் கொண்டு, வேதம் அனாதி யென்பதற்கு சிறிதும் ஹானியில்லை என்று நிர்ணயிக்கப்பட்டது. அது அவ விதமாயினும் உண்மையாகிய மற்றும் சில சரிதங்கள் வேதசாகோபநிடதங்களில் காணப்படுகின்றனவே ? அதாவது, கேநோபநிஷத்தில் உமாதேவி தேவருக்கும் கடவல்லி சுருதியில் யமதர்மன் நசிகேதருக்கும், தைத்திரீயோபநிஷத்தில் வரு ணன் பிருகுவுக்கும், சாந்தோக்கியோபநிஷத்தில் உத்தாலகர்சுவேதகேதுவுக்கும், ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் யாஜ்ஞியவல்க்கியர் முதலியவர் மைத்திரேயிஜன கன் முதலியவர்க்கும் ஆத்மவித்யோபதேசம் செய்ததாகச்சரிதங்கள் காணப்படு கின்றனவே. இவைகளை அர்த்தவாதம் என்பது உசிதமல்லவே ! இச்சரிதங்க ளில் அநுசிதமாகிய பிதற்றல்யாதுமில்லையே! ஆதலின் இவை உண்மையென்ப தல்லவோ உசிதம். இதிஹாஸ புராணங்களிலும் இச்சரிதங்கள் நடந்த விஷயம் என்பதாகவே சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வாறு வேதோபநிடதங்களில் உண்மைச் சரிதங்கள் சொல்லப்படுகின்றமையால், அச்சரிதங்கள் நடந்தேறியகா லத்திற்குப் பின்னரே வேதங்கள் ஏற்பட்டன என்பது நன்றாயறியப்படுகின் றதே இப்படியிருக்க, வேதம் முதநூல் என்பதும் அது அனாதியென்பதும் எப்படிப் பொருந்துமென்பதாம். இச்சங்கை மிகவும் படித்தவர்களுக்கும் நிக ழக்கூடிய தாதலின் இதனுண்மையை விளக்குவாம்.

அதாவது கேநோபநிடதம் முதலியவைகளில் முற்கூறிய சரிதங்கள் சொல் லப்பட்டிருத்தல் வாஸ்தவமே. அவை யுக்தியுக்தமாய் மிகவும் உசிதமாய் அமைந் திருத்தலும் வாஸ்தவமே. ஆனால் அவைகள் பூர்வம் நடந்திருக்கப்பின்னர் சொல் லப்பட்டவை என்பது மாத்திரம் உண்மையறியாமல் சொல்லுதலேயாம். உமா தேவி தேவருக்கும், எமன் நசிகேதருக்கும், வருணன் பிருகுவுக்கும், உத்தாலகர் சுவேதகேதுவுக்கும், யாஜ்ஞியவல்க்யர் மைத்திரேயி முதலியவர்களுக்கும் வித்தியோபதேசம்செய்ததாக உபநிஷத்தில் சொல்லப்பட்டுள்ள சரிதங்கள் இதி ஹாஸபுராணங்களில் சொல்லப்பட்டிருத்தல் பற்றியே அவை வாஸ்தவமாக நடந்திருந்தன என்பது ஸித்தாந்தமாகாது. ஆத்மவித்தை குருபதேச மூலமாக வே ஸித்திபெறுவதன்றித் தன் புத்திபலமாத்திரத்தினால் ஸபலமாகாது எனும் உண்மையை உலகத்தாருக்குப் போதிப்பதற்காகவே, குருசிஷ்ய ஸம்பிரதாயக்கிர மத்தைக் காட்டி, சிரவணஞ் செய்வோருக்குப் புத்தியில் நன்றாய்ப் பதிவதன் பொருட்டு மாத்திரம், நடந்தது போன்ற கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதுவேயன்றி அக்கதைகள் வாஸ்தவமாகவே நடந்தவை என்று கொள்ளவேண் டியதில்லை. உண்மையிதுவேயாகும். ஞானவித்தையைச் சொல்ல எழுந்த இதி ஹாஸபுராணங்களிலும் மற்றும் சிற்சிலசரிதங்கள் இவ்வாறு குருசிஷ்ய ஸம் பிரதாயத்தினைத் திருஷ்டாந்த மூலமாகப் போதிப்பதன் பொருட்டாகவே இறை வனால் கற்பனையாய்ச் சொல்லப்பட்டன என்பதே மர்மம். உசிதமாயிருத்தல் மாத்திரத்தால்அச்சரிதங்கள் உண்மையெனக்கொள்ளத்தக்கவை என்பதல்ல. சிர

வணம் செய்வோருக்கு உசிதமாகிய திருஷ்டாந்தங்களைக்கொண்டு விஷயத்தைப் போதித்தால் மனதினில் நன்றாய்ப் பதியுமென்பதைக் கருதியே அவ்வாறுள்ள சரிதங்கள் உபநிடதங்களில் இறைவனாலருளப்பட்டிருக்கின்றன. இங்ஙனம் வேதோபநிஷதங்களில் சொல்லப்பட்டிருக்கும் சரிதங்களெல்லாம் அங்கங்கு சொல்லப்படும் வித்தையைச் சிறப்பிப்பதன் பொருட்டுத் திருஷ்டாந்தமாய் எழுந்தமையின் அச்சரிதங்களையும் அர்த்தவாதம் என்பதே உண்மை. ஆத்மவித்தையைச் சிறப்பிப்பதன் பொருட்டு மாத்திரமே அத்தகைய சரிதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்பதே நமது பூர்வாசாரியர்களால் செய்யப்பட்டிருக்கும் நிர்ணயம். இவ்விதமுள்ள நிர்ணயத்தை யறியாமல் சரிதங்களை வாஸ்தவ மெனக்கொண்டு அவைகளின் காலத்திற்குப் பின்னரே வேதங்களேற்பட்டன என்பது அறியாத்தன்மையே என்றறிக. இனி முற்கூறிய சரிதங்கள் வித்தையை விசேஷமாய்ச் சிறப்புறுத்தலின் பொருட்டே சொல்லப்பட்டவை என்பதற்குப் பிரமாணம் யாது? எனின் இங்ஙனமே

"ததூாவ௱ாயிகாவிஷ௱ாஸ்துதூ௱ா"

"ஆண்டுசரிதம் வித்தையை விசேஷமாய்ச் சிறப்புறுத்தலின் பொருட்டாம்"

எனக்கடவல்லியுபநிஷதபாஷ்யாரம்பத்திலும்,

"ஆவ௱ாயிகாவிஷ௱ாஸ்துதயெவிர௱பவாது ாயவிதெ௱ா க்ஷதி'

பிரியனாகிய புத்திரனுக்குப் பிதாவினால் சொல்லப்பட்டதெனும் சரிதமானது வித்தையின் ஸ்துதியின் பொருட்டேயாம்"

எனத்தைத்திரீயோபநிடதம் ப்ருகுவல்லியின்பாஷ்யாரம்பத்திலும் சங்கரபகவத்பாத ஸ்வாமிகள் முதலியவர்களால் வியக்தமாய் இவ்வாறே நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. சங்கராநந்தஸரஸ்வதிஸ்வாமிகளும் தாமியற்றியஉபநிஷத் தீபிகையில்

ததூாவ௱ாயிகாமாஉவெஷஸாஷெ ஃ ஹவிஷ௱ாமகூ உஸூயிதாவிஷ௱ாஷொதாவ"

"இங்கு சரிதமானது குருபதேசம் முதலியது ப்ரும்மவித்தைக்கு அங்கம் என்பதைப் போதிப்பதன் பொருட்டும் பிரும்மவித்தையைச் சிறப்பிப்பதன் பொருட்டுமே"

என்று இவ்வாறே கூறியிருக்கின்றனர். இவ்விதம் உபநிஷதங்களில் சரிதம் சொல்லப்பட்டிருத்தலின் உண்மை யிதுவே யென பூர்வாசாரியர்கள் நிர்ணயித்திருக்க, இவ்வாறுள்ள பிராசீன சாஸ்திரக் கிரந்தங்களை ஆழ்ந்து விசாரியாமல், உபநிடதங்களில் உண்மைக் கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றமையால் அச்சரிதகாலத்திற்குப் பின்னரே உபநிடதங்கள் சொல்லப்பட்டன என்பது சிறிதும் ஒவ்வாது. ஆதலால் உபநிடதங்களில் வித்தியாஸ்துதியின் பொருட்டும்

குருபதேசபரம்பரையிலேயே ஆத்மவித்தை கிரஹிக்கப்படவேண்டும் என்பதைப்போதிப்பதன்பொருட்டுமே, நடந்தவைபோன்ற கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றனவேயன்றி வேறல்ல. உண்மையிதுவாதலால் வேதம் அநுதியென்பதில் சிறிதும் சங்கைக்கிடமில்லை என்க.

இனி, வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் கதைகளை அர்த்தவாதமென்றும், திருஷ்டாந்தத்தின் பொருட்டு மாத்திரம் சொல்லப்பட்டவையாகையால் உண்மைக்கதைகளென கொள்ளவேண்டியனவல்லவென்றும் சொன்னுல், அக்கதைகளில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கும் புருஷர்களின் நாமதேயங்களாகிய பெயர்களும் கற்பனையாகவே சொல்லப்பட்டவை என்றல்லவோ ஏற்படும். வேதத்தில் சொல்லப்படும் இந்திரன், அக்நி, யமன், வருணன், என்பது முதலிய சொற்களும் அவ்வாறே கற்பனையாய்ச் சொல்லப்பட்டவையாதலால் அவை அர்த்தமிலாதசொற்களென்று ஏற்படுமே! அப்படியாயின், வேதத்தில்சொல்லப்படும் பெயர்களைக்கொண்ட இந்திராதி தேவர்கள் வாஸ்தவமாகவே இருக்கின்றனர் என்பதாக உபதேசிப்பவையாகிய இதிஹாஸபுராணங்களைப் பிசகென்றே தள்ளவேண்டிவருமே! இதனுண்மையாது? எனின் சொல்லுவாம்.

ப்ரும்மதேவன் கல்பாரம்பத்தோரும், வேதத்திலுள்ள வாக்கியங்களில் அடங்கியிருக்கும் பெயர்களையும் அப்பெயர்களையுடையவருக்குச் சொல்லப்பட்டிருக்கும் செய்கைகளையும் அறிந்துகொண்டே, அந்தந்த தேவர்களையும் அவரவருக்குறிய அதிகாரத் தொழில்களையும் படைத்தனர் என்பதே உண்மை. இவ்வுண்மையையறிந்து கொண்டால் "வேதத்தில் அர்த்தமிராத சொற்களிருக்கின்றன" என்பது ஆராய்ச்சியின்மையே என்பது இனிது விளங்கும். இவ்வுண்மையே

> 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌤𑍁 𑌸 𑌨𑌾𑌮𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌚 𑌪𑍃𑌥𑌕𑍍 𑌪𑍃𑌥𑌕𑍍 ।
> 𑌵𑍇𑌦𑌶𑌬𑍍𑌦𑍇𑌭𑍍𑌯 𑌏𑌵𑌾𑌦𑍌 𑌪𑍃𑌥𑌕𑍍𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌶𑍍𑌚 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍇 ॥
>
> அவ்விறைவன் எல்லோருடைய நாமதேயங்களையும் தனித்தனியேயுள்ள கருமங்களையும் வேதசப்தங்களைக்கொண்டே முதலில் படைத்தனர்

என மனு முதலியவர்களால் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இதிஹாஸபுராணங்களில் சொல்லப்படும் சிவ விஷ்ணுவாதி நாமங்களை நமது புதல்வருக்கிடுவதுபோல, உபநிடதங்களின் சரிதங்களிலுள்ள சொற்களைக்கண்டே, ஸ்ம்ருதிகர்த்தர்களாகிய சிலருக்கு யாக்ஞவல்கியர் என்பது முதலிய பெயர்களிடப்பட்டிருக்கின்றன என்பதும் அறியத்தக்கது.

சங்கை. உபநிடதத்திலுள்ள கதைகள் வித்தையைச் சிறப்பிப்பதன்பொருட்டும் குரு சிஷ்யபரம்பரையாகவே கிரஹிக்கவேண்டுமென்பதைத் திருஷ்டாந்தவாயிலாகப்போதிப்பதன் பொருட்டுமே சொல்லப்பட்டிருக்கின்றன என்பது உசிதமேயாயினும், உபநிடதங்களில்

"ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத: ஆகாஶாத்வாயு: வாயோரக்நி: அக்நேராப: அத்ப்ய: ப்ருதிவீ"

> ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாகியது, ஆகாசத்திலிருந்து வாயு, வாயிவினிடம் அக்கினி, அக்கினியினிடமிருந்து ஜலம், ஜலத்திலிருந்து பிருதிவீதோன்றியது.

என்பது முதலியவாக்கியங்களில் உண்டாகியது தோன்றியது என்பது முதலிய இறந்த காலத்தைக்குறிக்கும் சொற்கள் காணப்படுகின்றனவே. இதனால் ஆகாசவாயுவாதிகள் தோன்றியதன் பின்னர் (அதாவது உலகம் தோன்றியதன் பின்னரே) ஓர் காலத்தில் வேதவாக்கியம் ஏற்பட்டது என்பது நன்றாய் விளங்குகின்றதே? இப்படியிருக்க வேதத்தை அனாதியென்பதையும் அது முதலில் ஈச்வரனாலேயே சொல்லப்பட்டதென்பதையும் எப்படி ஒத்துக்கொள்வது? எனும் சங்கையாம். இனி இதனையும் விசாரித்து உண்மையை நிரூபிப்பாம்.

உலகில் தோன்றியிருக்கும் பொருள்களெல்லாவற்றிற்கும் ஓர் காலத்தில் அழிவுள்ளது என்பது நிச்சயம். உலகமானது பிருதிவி ஜலம் அக்கினி வாயு ஆகாயம் ஆகிய இப்பொருள்களின் விகாரமாகவேயுள்ளதென்பது பதார்த்த சோதனைசெய்த பெரியோர்கண்ட நிர்ணயம். இவ்விதம் ஐம்பூதங்களின் விகாரத்தினால் ஆகிய உலகமானது உலகத்தன்மைகெட்டு ஐம்பூதமாகிய பிரகிருதித் தன்மையை யடையும் காலமும் ஒன்றுண்டு என்பது நிச்சயம். தோற்றமாவது ஸூக்ஷ்ம ஸ்திதியினின்றும் ஸ்தூல ஸ்திதியடைதலேயன்றி பூர்வமில்லாத பொருள் புதிதாய் உண்டாகியது என்பதல்ல. ஏனெனின் உலகில் ஸகல பொருள்களுக்கும் ஸூக்ஷ்மஸ்திதி ஸ்தூல ஸ்திதி என்றிரண்டு நிலைமைகளுள்ளன என்பது நிர்ணயமே ஆதலின் என்க. ஸ்தூலவஸ்து ஸூக்ஷ்மமாதலே நாசமென்றும் ஸூக்ஷ்மவஸ்து ஸ்தூலமாதலே தோற்றமென்றும் சொல்லப்படுகின்றது. ஸ்தூல வஸ்து ஸூக்ஷ்மமாவதுபோல அந்த ஸூக்ஷ்ம வஸ்துவும் அதனிலும்மிக்க ஸூக்ஷ்ம ஸ்திதியையடைதலே லயமென்றும், அவ்யக்தமென்றும், பிரகிருதித் தன்மை என்றும் சொல்லப்படுவது. இதனால் உலகம் அடையக்கூடியதாகிய பரமஸூக்ஷ்ம ஸ்திதியையும் ஓர்காலமடையும் என்பதுமறிக. இதுகாறும் செய்த ஆராய்ச்சியால், உலகத்திற்கும் காரியஸ்திதி காரணஸ்திதி எனும் இரண்டு நிலைமைகள் ஏற்படக்கூடும் என்பது ஊஹிக்கக்கூடியதே. உலகம் காரண நிலைமையையடைந்தது எனின், உலகின் ஸூக்ஷ்மநிலைமையாகிய பிருதிவியாதி ஐம்பூதங்களும் தத்தம் நிலைமையினின்றும் மிக்க ஸூக்ஷ்ம நிலைமையை அடைந்து தனித்தனியாய்க்காணப்படாமல் பிரிவற்ற பிரகிருதி மாத்திரமாய் நிற்கும் ஸ்திதியே என்பதாம்.

இங்ஙனம் காலவசத்தால், உலகத்தின் காரணமாகிய பஞ்ச பூதங்களுக்கும் ஒடுக்கமும் தோற்றமும் ஏற்படுவது ஸ்வபாவநியதம் என்க. இவ்விதம் ஏதோ பிரதி நியதமாயுள்ள ஓர் காலத்தில் பஞ்சபூதங்களும் லயித்துப் பிறகு ஓர் காலத்தில் தோன்றுவன எனும் காரியமானது இதற்குமுன் ஓர் தடவை

அல்லது இரண்டு தடவை மாத்திரமே ஏற்பட்டுள்ளது என்பதல்ல. கணக்கி லடங்காத பலகோடி தடவை இவ்வாறு தோன்றி ஒடுங்கி யிருந்தது என்பதே உண்மை. இவ்விதம் தோன்றுதலே ஸ்ருஷ்டியென்றும் ஒடுங்குதலே பிரளய மென்றும் சொல்லப்படுகின்றது. இதுவேயன்றிப் பிரளயம் என்பதற்கு ஜலப் பிரவாஹ மாத்திரமே என்று பொருள்கொள்ளுவது உசிதமல்ல. பிரளயத்தினின் றும் பிரிதிவியாதி பூதங்களின் தோற்றம் பிரதிதோற்றத்திலும் ஒரே மாதிரியா யுள்ளது. பிரளயத்தினின்றும் பிரபஞ்சம் தோன்றி நிற்றலே கல்பமெனும் சொல்லாலும் வழங்கப்படும். கல்ப்பந்தோறும் ஆகாச வாயுவாதி முறையாகவே பூதங்கள் தோன்றுமியல்பாதலால், எல்லாகல்ப்பங்களிலும் ஆகாச வாயு அக்கினி ஜல ப்ருதிவிக்கிரமமாய் முன்பின் முறையாகவே உலகம் தோன்றுவது என்று பிரமாண நூல்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. உண்மை யிவ்விதமாதலின் முதன் முதல் இந்த ஸமயந்தான் பிரபஞ்சத்தின் ஆரம்பம் என்பது எவராலு மறிய இயலாது. ஆதி(முதல்)என்பதேயில்லாமல் எப்போதும் தோன்றுவதும் ஒடுங்குவதும் தோன்றுவதும் ஒடுங்குவதுமாயிருத்தலே அனாதி என்பதாம். இவ் விதமுள்ள ஆகாசவாயுவாதித்தோற்றமே உபநிடதங்களில் சொல்லப்பட்டிருக் கின்றது. இவ்விதம் பிரதி கல்ப்பத்திற்கும் பொதுவாயுள்ள ஆகாசவாயுவாதிக் கிரமமே வேதோபநிடதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றமையால் அதைக்கொ ண்டு, ஆகாசவாயுவாதிகள் உண்டான பிறகு ஏதோ ஓர் காலத்தில் வேத மேற்பட்டதென்பது சிறிதும் ஒவ்வாது. ஏதோ ஓர் கல்ப்பத்தில் மாத்திரம் நடந்தேறியதும் மற்ற கல்ப்பங்களிலும் நடக்காததுமாகிய விசேஷ ஸங்கதி களை வேதத்தில் சொல்லியிருக்குமானால், அதைக்கொண்டு அக்கல்ப்பத்திற்குப் பிறகே வேதமேற்பட்டது எனக்காலவரையைக் கண்டு கொள்ளலாம். அவ் விதமில்லையே? பிரதிகல்ப்பத்திற்கும் பொதுவாயிருக்கும் முறையன்றோ வேதத் தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அதைக்கொண்டு எந்தக்கல்ப்பத்திற்கு பிறகு தான் வேதமேற்பட்டதென்று தீர்மானிப்பது? யாதும் தீர்மானிக்க இயலா தன்றோ. எந்தக்கல்ப்பத்திற்கும் பொதுவாய் நடைபெறும் விஷயங்களையே போ திக்கவேதம் விளங்குகின்றதன்றி, அது ஏதோ ஓர் கல்ப்பத்தைக்குறித்துச் சொ ல்லியதென்பதில்லாமையால் வேதம் அனாதி என்பதே நிர்ணயம். உலகத்திற்குத் தோன்றுவதும் அழிவதும் இயல்பு என்பதையும் பிரதிகல்ப்பத்திலும்பொதுவாய் நடைபெறும் விஷயங்களையே வேதம் சொல்லுகின்றது என்பதையும் உள்ளபடி அறிந்தவருக்கு வேதம் அனாதி என்பதில் சிறிதும் சங்கை நிகழாது. உண்மை இவ்விதமாதலால், ஆகாசத்தினின்றும் வாயு தோன்றியது என்பது முதலிய வாக்கியங்களில் இறந்த காலத்தைக்குறிக்கும் சொல்லை வேதம் உபயோகித்திரு க்கின்றமையால், ஆகாசாதிகள் உண்டான பிறகே வேத முண்டாரகியது எனும் சங்கை ஆராய்ச்சியில்லாமல் நிகழ்ந்ததே என்றறிக.

இனி ஓர் சங்கை, அது வருமாறு. ஆங்கிலபாஷையினில் மிகுந்தபரிசய மும் உலக சரிதங்களில் மிக்க உழைப்புடையவர்களுமாகிய ரோமேசந்திரதத்தர், முதலிய நம் நாட்டவரும் ஸர்வில்லியம் மானியர், ஹண்டர்,மாக்ஸ்மில்லர் முதலிய வெளி நாட்டவர்களும் வேதத்தின் உற்பத்தி காலத்தை மிகவும் நுட்பமாகிய விசா

ரணையால் தீர்மானித்தெழுதியிருக்கின்றனரே. அதாவது, கிரிஸ்து பிறப்பினது ஆயிரத்து எண்ணூறு வருஷங்களுக்கு முன்னதாகிய காலத்தினில் வேதங்கள் நமது பூர்வர்களாகிய புத்திசாலிகளால் இயற்றப்பட்டன என்றும், தத்து முதலிய வர்முதலில் ருக்வேதமும் பிறகு ஸாமவேதமும் பிறகு யஜுர் வேதமும் இயற்றப் பட்டதென்றும், வேதங்களிலுள்ளவாக்கியங்களின் நடைமுதலியவைகளின் கால இயல்பை நன்றாய்ப் பரிசோதித்துத் தீர்மானித்திருக்கின்றனரே. மிக்கமேதா விகளாகிய அவர்களது தீர்மானத்தைப் பிசகென்று தள்ளி, வேதம் அனாதி என்ப தே உண்மை எனின் இதனையாராவது ஒவ்வுவரா? எனும் சங்கையாம். இது வே உண்மை யெனத்தற்காலம் ஆங்கிலம் படித்தவர்களுள் பலர் எண்ணுகின்ற மையால் வேதம் அனாதியென்பதைப்பற்றி மாறுபாடாகிய அபிப்பிராயம் ஆர்ய ஸமூஹத்தில் ஓங்கிவருகின்றது.

இனி இச்சங்கையைப்பற்றிச்சற்று விசாரணை செய்வாம். அதாவது வேதத்தைப் பற்றிய உண்மையானது யுக்தி யுக்தமாகிய நியாயங்களைக் கொண்டு மிகவும் ஸூக்ஷ்மமாய் விசாரித்தாலொழிய விளங்காதென்பது நிச்சயம். உலகிலு ள்ள ஸகல பொருள்களுக்கும் ஸூக்ஷ்ம நிலைமை ஸ்தூலநிலைமை என இரண்டு நிலைமைகளுள்ளன என்பதைப் பல விடங்களில் நிரூபித்திருக்கின்றனம். உலகில் ஸகல ஜீவர்களாலும் அனுபவிக்கப்படும் விஷயங்களெல்லாம் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் எனும் ஐந்துவகையினில் அடங்கியுள்ளன என்பது நிர்ண யம். இவ்வைந்து விஷயங்களுக்கும் ஸூக்ஷ்மஸ்திதி, ஸ்தூலஸ்திதி என இரண்டு நிலைமைகளுள்ளன.

உதாரணமாக, மல்லிகை முதலியவைகளின் மொக்குகளில் சிறிதும் காணப் படாத பரிமளவாஸனையானது மலரில் காணப்படுகின்றது. அங்ஙனம் மலரும் போது காணப்படும் பரிமளவாஸனையானது பூர்வமே அம்மொக்கினில் ஸூக்ஷ் மாக இருந்தே பிறகுஸ்தூலமாகத் தோன்றியதா? அல்லது பூர்வம் இல்லவே யில்லாமல் மலரும்போது புதிதாகவே உண்டாகின்றதா? என்பதை விசாரிக்க வேண்டும் பூர்வமில்லாமல் புதிதாகவே உண்டாகின்றதெனின் அவ்வாஸனை யை அம்மல்லிகைச் செடியிருக்கும் இடம் கொடுக்கின்றதா? அல்லது மலரும் காலம் கொடுக்கின்றதா? அல்லது அதற்கு ஊற்றிப் பாய்ச்சிய ஜலம் கொடுக் கின்றதா? இம்மூன்றில் எதைச் சொன்னாலும் பொருந்துகின்றதில்லை. எப் படி எனின், இம்மூன்றும் அதனோடு கூடியுள்ள எருக்கு முதலியவைகளுக்கும் பொதுவாயிருக்கின்றமையால் எல்லாவற்றிற்கும் ஒரே மாதிரியாகவே வாஸனை யிருக்க வேண்டுமென்றும் ஏற்படும். ஆனால் உலகில் அப்படியிராமல் ஒவ்வொ ன்றுக்கும் வித்தியாஸமாகிய வாஸனையே இருக்கின்றது. இதனால் தேச காலாதிகளால் வாஸனை வருகின்ற தென்பது பிசகு என்பதாக நிர்ணயிக்கப் பட்டது. இனி மொக்குக் காலத்தினில் ஸூக்ஷ்மமாயிருந்த வாஸனையே மல ரும் போது ஸ்தூலமாகின்ற தென்றுகொண்டு, பூர்வமேயே அதனிடம் அவ்விய க்தமாயிருந்ததெனின் அதுவே உசிதம். ஏனெனின் இல்லாதது ஓர்போதும் தோன்றாது. உள்ளது ஓர் போதும் சூந்யமாகாது. என்பது நியதமாத

லால் பூர்வம் ஸூக்ஷ்மமாயிருந்த வாஸனையே பிறகு ஸ்தூலமாகின்றதென்பதே நிர்ணயம். வாஸனைக்கு மாத்திரமே இவ்வாறோ எனின் அப்படியல்ல. மற்று முள்ளரூபம் ரஸம் ஸ்பரிசம் சப்தம் எனும் இந்நான்கிற்கும் இவ்வாறே ஸூக்ஷ்மம் ஸ்தூலம் எனும் இரண்டு நிலைமைகளுள்ளன என்பது திண்ணம். பழத்தினில் காணப்படும் தித்திப்பானது காய் பூ பிஞ்சுகளில் பூர்வம் ஸூக்ஷ்மமாயிருந்தே பிறகு பக்குவகாலத்தில் ஸ்தூலமாக அறியப்படுகின்றது என்றும், காற்று கட்டைகளில் (ஆக்ஸிஜன்க்கார்பன்களில்) ஸூக்ஷ்மமாயிருந்த அக்கினியே பிறகு உறைச்சலினால் வெளிப்படையாய்க் காணப்படும்படி ஸ்தூலமாகின்றதென்றும், ஸூக்ஷ்மமாயிருந்த காற்றே விசிறி முதலியவைகளின் சலனத்தினால் நன்றாய் அறியப்படும்படியான ஸ்தூல நிலைமையைப் பெறுகின்றதென்றும், தேஹத்திற்குள்ளும் தேஹத்திற்கு வெளியிலுமுள்ள ஸூக்ஷ்மமாகிய சப்தமே வாயுமுதலியவைகளின் ஸ்பந்தமாகிய கிரியையால் காதுக்கேட்டும்படியாகிய ஸ்தூல நிலைமையயடைகின்றதென்றும் அறியத்தக்கது. இங்ஙனம் ஸூக்ஷ்மமேஸ்தூலமாகின்றதன்றிப்புதிதாயுண்டாகின்றதில்லை என்பது ஆங்கில சாஸ்திரப்படித்தவர்களாலும் ஒத்துக்கொள்ளக்கூடியதே.

சப்தத்திற்குஸூக்ஷ்மஸ்திதி யிருக்கின்றதென்பதுதற்காலம்சப்தாநுகரணயந்திரத்தினுருளையில் (கிராமபோன் பிளேட்டில்) பாட்டை கிரஹக்குஞ்செயலையே திருஷ்டாந்தமாய்க் கொண்டு நன்றாய் அறியக்கூடியது. கிராமபோன் எனும் சப்தாநுகரண யந்திரம் ஏற்படாமலிருந்தால் சப்தத்திற்கு ஸூக்ஷ்ம ஸ்திதியுள்ளதென்பதைத் தற்காலத்தவர்க்குப் போதிப்பது அரிதாகும். அந்தத்திருஷ்டாந்தம் ஸகலராலும் காணக்கூடியதாயிருக்கின்றமையால் அதனுருளையில் பதிவுரூபமாய் ஸூக்ஷ்ம நிலைமையில் அடங்கியிருக்கும் நாதமே, பிறகு உருளைசுழன்று வரும்போது காதுக்குக் கேழ்க்கும்படியான ஸ்தூலநிலைமையை யடைதலும் லோகாநுபவஸித்தமாயிருக்கின்றமையால், சப்தத்திற்கும் ஸூக்ஷ்மம் ஸ்தூலம் எனும் இரண்டு நிலைமைகளுள்ளன என்பது நிர்ணயமே என்றறிக.

மற்றுமோர் உண்மை இங்கறிய வேண்டும். ஸூக்ஷ்மவஸ்து ஸ்தூலமாவதற்கு எது நிமித்தமாயிருக்கின்றதோ அதனிலும், அந்த ஸூக்ஷ்மவஸ்து இருக்கும் இடமாகிய அதனாதாரப்பொருள் வேறாகவே யிருக்கின்றது என்பதும் நிர்ணயமேயாம். அதாவது, விதையிலுள்ள முளையுண்டாக்கும் சக்தியானது ஸ்தூலமாய் முளை உருவம் பெறுவதற்கு நிமித்தம் மண் ஜலம் முதலியதும் அச்சக்திக்கு ஆதாரம் அவ்விதையுமாயிருக்கின்றது. நிமித்தமாகிய மண்ஜலம் முதலியவைகளிலும் ஆதாரமாகிய விதை வேறாகவேயிருக்கின்றதுபோல, சப்தம் ஸ்பரிசம், ரூபம் ரஸம் கந்தம் இவைகளின் ஸ்தூலத்தன்மைக்கு எதுநிமித்தமோ அந்தப்பொருளிலும் அந்த ஸூக்ஷ்ம வஸ்துவின் ஆதாரம் வேறாகவே இருக்கின்றது.

ஸூக்ஷ்மமாயுள்ள வாஸனை ஸ்தூலமாவதற்கு நிமித்தம் மொக்கின் மலர்ச்சியும், ஆதாரம் மொக்குமாயிருக்கின்றது. ஸூக்ஷ்மமாகிய தித்திப்பு ஸ்தூலமாதற்கு நிமித்தம் கனிந்து பக்குவமாதலும், ஆதாரமானது பூ பிஞ்சு காய் முதலியது

மாயிருக்கின்றது. அவ்வாறே ஸூக்ஷ்மமாயுள்ள அக்கினி ஸ்தூலமாவதற்கு நிமித்தம் உறைதலும், ஆதாரம் (ஆக்ஸிஜன்கார்பன்களும்,)காற்று கட்டைகளும், ஸூக்ஷ்மமாயுள்ள காற்று ஸ்தூலமாதற்கு நிமித்தம் விசிறிமுதலியதன் சலனமும் ஆதாரம் ஆகாசமும் என்பது நன்ருய் அறியக்கூடியது. இனி இவ்வாறு ஸூக்ஷ்மமாகிய நாதம் ஸ்தூலமாவதற்கு நிமித்தம் வாயுவே என மற்றவர் சொல்லுகின்றனராயினும் எமக்கதனில் விவாதம் யாதுமில்லை. ஆதாரம் யாது எனின் அது பூர்வம் காண்பித்த திருஷ்டாந்த நியாயத்தின்படி, பிருதிவியாதி நான்கு பூதங்களிலும் அந்நியமாகவே இருக்கவேண்டுமென்று ஏற்படுகின்றது. இனி அப்பொருள் யாதெனின் ஆகாசமேயாம் என்றறிக.

இவ்வாறு ஆழ்ந்து விசாரியாதவர்கள் ஆதலால் தற்காலத்தவர்கள் சப்தம் வாயுவின் குணம் என்றனர். நமது முன்னேர் மிகவும் ஆழ்ந்த விசாரணையால் தத்துவத்தை நிர்ணயித்தவர் ஆதலின், சப்தம் வாயுவின் குணமல்ல ஆகாசத்தின் குணமே என்றும், ஸூக்ஷ்மசப்தம் ஸ்தூலமாவதற்கு வாயு கேவலம் நிமித்தமாத்திரமேயாகலாம் என்றும் நிர்ணயித்து அவ்வாறே கௌதமஸூத்திரம் யோகஸூத்திரம் முதலியவைகளிலும் உபதேசித்திருக்கின்றனர். இவ்வாறுள்ள நிர்ணயத்தைக் கவனித்தால் இப்போது நப்நாட்டு வைதிகர்களால் ஓதப்பட்டுவரும் வேதவாக்கியநாதங்களெல்லாவற்றிற்கும் அவ்வாறே ஸூக்ஷ்மம் ஸ்தூலம் எனும் இரண்டு நிலைமைகளிருக்கவேண்டுமென்பது திண்ணம்.

இதுவரையில் செய்த விசாரணையால், உலகில் உண்டாகும் வியக்தமாகிய சப்தங்களெல்லாம் உச்சரித்து ஓய்ந்ததும் ஆகாசத்திலேயே ஸூக்ஷ்மமாய் ஒடுங்கி இருக்கின்றனவென்று அறியப்பட்டது. இங்ஙனம் கவனித்ததினுல் ஆகாசத்தினில் நம்மவர் காதிற்கு எட்டாதஸூக்ஷ்மஸ்திதியில் எவ்வளவோ கோடாநுகோடி சப்தங்கள் இருக்கக்கூடுமென்று ஊகிக்கக்கூடியதே. சப்தமானது த்வனிரூபம்,அக்ஷரரூபம் என இருவகையாய் உள்ளது.த்வனிரூபமான சப்தம் ஸூக்ஷ்மஸ்திதியில் இருக்கினும் அது முன்பின் முறையினில் அமைந்திருத்தல் ஒருவாறு பொருந்தாதாயினும், அக்ஷரரூபமான (அதாவது வாக்கியஉருவமாகிய) சப்தங்களெல்லாம் அக்ஷரத்தின் முன்பின்முறையையனுசரித்தே ஸூக்ஷ்மரூபமாகப் பதிவுபெற்றிருக்கும். இவ்வாறு நம்மவர் பேசும் ஸகல வாக்கியங்களும் ஸூக்ஷ்மரூபமாய் ஸ்தூல சப்தத்திலுள்ள அக்ஷரத்தின் முன்பின் முறைமாருமலே ஆகாசத்தில் ஒடுங்கி அடங்கியிருக்குமென்பது நிச்சயம். இவ்விதம் அடங்கியுள்ள சூட்சும சப்தமானது நமது காதினுல் கேட்கப்படாததினுல் ஒன்றுமிராத சூனியம்போலத் தோன்றினும், அதனுண்மையறிந்து அந்த சூட்சும சப்தத்தையும், தனது அறிவின் தேட்டமாகிய அப்பியாஸத்தினுல் கண்டுபிடிக்கக்கூடிய சக்தியுடையோர்க்கு அது ஸ்தூலமாகிய சப்தம்போல் விளங்கக்கூடியதே.

கால்வாயில் செல்லும் ஜலமானது பலவிடங்களில் சிறிதுசிறிதாய்ச் சிதறிப் போனுல் கழனியில் எப்படி வேகமாய்ப் பாய்வதில்லையோ, அப்படியே நமது அறிவானது பல இந்திரியங்களின் வழி பற்பல விஷயங்களில் செல்லுமானுல் அவ்விஷயத்தைத்தீவிரமாயும் நன்ருயும் அறிந்துகொள்ள முடியாது. பலஇடங்

களில் சிதறும் மடைகளைத்தகைந்து கரையைக் கெட்டிசெய்து ஒரே இடத்தில் கொண்டுபோய்விட்டால் அந்த ஜலம் தீவிரமாய்ச் சென்று சீக்கிரத்தில் அவ்வய லில் நிரம்புவதுபோல, பல இந்திரியங்களோடு கலந்திருக்கும் அறிவை மற்ற இந்திரியங்களினின்றும் பிரித்து ஏகாக்கிரமாய் யாதானும் ஓர் இந்திரியத்தி லேயே செலுத்துவோமானால் அவ்விந்திரியத்திற்கு விஷயமாயுள்ள பொருளை நன்றாயறிந்துகொள்ளும்.

உதாரணமாக, ஒருவர் நமது அருகில் இருந்துகொண்டு மற்றொருவரோடு நம்மைப்பற்றி மெதுவாய் ஏதாவது பிரஸ்தாபித்துக்கொண்டிருக்கும்போது அந்த சப்தம் நமக்கு வியக்தமாய்ப் புலப்படாவிடினும், நாம் மற்றவிஷயங்களில் புத்தியைச் செலுத்தாமல் நமது அறிவை அந்த வார்த்தையையே நோக்கி யாது சொல்லுகின்றனர் என ஏகாக்கிரமாய்ச் சற்றுக் கவனித்தால் அவர் வார்த்தை இன்னதென நமக்கு நன்றாய் அறியப்படுகின்றது. ஏனெனின் அப்போது நமது அறிவானது மற்ற இந்திரியங்களோடு விசேஷமாய் ஸம்பந்தியாமல் சற்றுசுரோ த்திரேந்திரியத்திலேயே ஒருமைப்பட்டு நிற்கின்றமையால் அவ்வாறு அறியப் படுகின்றது என்பதே உண்மை. மற்ற இந்திரியங்களோடுள்ள ஸம்பந்தம் முற் றும் நீங்காவிடினும் சற்றுமந்தப்பட்டு ஓரிந்திரிந்திரியத்தில் கொஞ்சம் ஏகாக்கிரப் படுவதினாலேயே இவ்வாறு ஸூக்ஷ்மமான விஷயம் புலப்படுமானால்,நான்கிந்திரி யங்களிலும் சிறிதும்ஸம்பந்தியாமலும் உள்ளத்திலும் எந்த யோஜனைக்கும் இடங் கொடுக்காமலும் ஏதானும் ஓரிந்திரியத்திலேயே முழு அறிவையும் நிறுத்திவிட் டோமானால், அந்த இந்திரியத்தின் விஷயம் மிகவும் ஸூக்ஷ்மமாயிருக்கினும் அதனை ஸ்தூலம்போலவே வியக்தமாய் அறியலாம் என்பது உசிதமே.

இவ்வாறு சுரோத்திரம் எனும் காதிந்திரியத்திற்கும் ஆகாசத்திற்குமுள்ள ஸம்பந்தத்திலேயே நமது அறிவை நிறுத்தி மற்ற இந்திரியங்களோடு சிறிதும் ஸம்பந்தியாமல் எந்தச் சிந்தனையுமில்லாமல் நிறுத்துவதாகிய அப்பியாஸத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய்ச் செய்துவந்து அவ்வப்பியாஸத்தைத் தேட்டமாக்கிக்கொ ண்டு, ஊசிமுனையில் நிறுத்துவதுபோல மனஸை அவ்வாறு சுரோத்திரத்திற்கும் ஆகாசத்திற்குமுள்ள ஸம்பந்தமாத்திரத்திலேயே நிலைபெறச்செய்துவிட்டோ மானால், ஆகாசத்தினில் பதிந்துள்ள கோடாநு கோடிஸூக்ஷ்மவாக்கியங்களை யும் ஸ்தூல வாக்கியங்களைப்போல நமது காதினால் அறிந்துகொள்ளலாம்.

கற்பாதியில் வேதவாக்கியம் ஈச்வரனால் முதன்முதல் வெளியிடப்பட்டதெ ன்பதே உண்மை. அவ்வாறு முதன்முதல் வந்த சப்தமானது ஸூக்ஷ்ம நிலைமை யில் அமைந்தபின்னர், மனிதர் முதலியவர்களால் உச்சரிக்கப்பட்டுள்ள சப்தங் களெல்லாம் அதனதன் ஸ்தூலமுறைக்குத் தக்கபடி ஸூக்ஷ்ம நிலைமையில் அட ங்கியிருக்கின்றமையால் அவ்வாறு பின்னரேற்பட்டுள்ள ஸூக்ஷ்ம சப்தங்களை யெல்லாம் ஒவ்வொன்றாய் நீக்கிக்கடந்து ஊடுருவிச்செல்லும்படி அதிதீவிரமாய்ப் ப்புத்தியைநிறுத்தி செல்லவிட்டோமானால், அறிவானது பின்னர் ஏற்பட்டுள்ள சப்த ஸூக்ஷ்மங்களையெல்லாந் தாண்டிக்கொண்டு ஆழ்ந்துசெல்லக் கடைசியில், முதன்முதல் பதிந்துள்ள ஸூக்ஷ்ம சப்தமாகிய ஈச்வரவாக்கியத்தினிடம் செல்ல

வே ஆச்சரியமாயுள்ள அவ்வாக்கிய நாதத்தை அப்போது ஸ்தூலம்போல அறியலாம். இவ்வாறு அறிதலே சுரோத்திராகாசஸம்பந்தஸம்யமம் எனும் திவ்விய சுரோத்திரலாபமாகிய யோகவித்தியாம். இதுவே பதஞ்ஜலியோகம் விபூதிபாதத்தில்

"𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌕𑌾𑌶𑌯𑍋𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌸𑌂𑌯𑌮𑌾𑌤𑍍 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑍍"

> "சுரோத்திராகாசங்களின் ஸம்பந்தத்திலேயே புத்தியை நிலைநிறுத்தி அப்பியஸித்தலாகிய ஸித்தியே திவ்வியசுரோத்திரம்"

என்பதாக மூதறிஞராகிய பதஞ்ஜலி பகவானால் உபதேசிக்கப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட திவ்விய யோகவித்தியைக் கொண்டே மஹருஷிகளால் பூர்வம் வேதமானது கண்டுபிடிக்கப்பட்டது. அவ்வாறு வேதங்களை அவர்கள் கண்டு பிடித்தவர்களென்பதே உண்மை. இதுவேயன்றி அவைகளை இயற்றியவர் என்பதல்ல! இவ்வுண்மைபற்றியே மஹருஷிகள் என்பவர் வேதத்தைக் கண்டுபிடித்தவர்களே என நமது ஆரியசாஸ்திரம் கூறுகின்றது. இவ்வுண்மையே

𑌯𑍁𑌗𑌾𑌨𑍍𑌤𑍇𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑌿𑌤𑌾𑌨𑍍 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍 𑌸𑍇𑌤𑌿𑌹𑌾𑌸𑌾𑌨𑍍 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 ।
𑌲𑍇𑌭𑌿𑌰𑍇 𑌤𑌪𑌸𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍𑌭𑍁𑌵𑌾 ॥

> "மஹருஷிகள் பூர்வம் யுகாந்தத்தில் ஸூக்ஷ்மமாய்ப் பதிந்திருந்த வேதங்களை பிரும்மதேவனனுக்கிரஹத்தினால் தபஸினால் கண்டு பிடித்தனர்"

என்பது முதலிய வாக்கியங்களால் வேதவியாஸர் முதலிய பெரியோர்களால் உபதேசிக்கப்பட்டுள்ளது.

சப்தத்திற்கும் ஸூக்ஷ்மம் ஸ்தூலம் என இரண்டு நிலைமைகளுள்ளன என்பதும், சுரோத்திராகாச ஸம்பந்த ஸம்யமம் எனும் யோகவித்தியே ஸூக்ஷ்மமாகிய சப்தத்தைக் கண்டுகொள்ளும் வழியென்பதும், முதன் முதல் பதிந்துள்ள வேதவாக்கியங்களின் ஸூக்ஷ்ம சப்தங்களை மஹருஷிகள் அந்தத்தபஸ்ஸித்தியினால் கண்டுபிடித்தது மாத்திரமே என்பதும், இவ்வாறு ஆழ்ந்தஆராய்ச்சியுடையோர்க்கு மாத்திரம் விளங்குமன்றி ஆங்கில பாஷையையாவது மற்ற எந்த சாஸ்திரத்தையேனும் நன்றாய் அறிந்திருத்தலினாலாவது அல்லது உலக வியவஹாரத்தில் மிக்கத் தேர்ச்சி பெற்றிருத்தலினாலாவது இவ்வுண்மை விளங்காதாதலால், தத்து முதலியவர்களும் மாக்ஸ்மில்லர், ஹண்டர், மானியர் முதலிய வெளிதேசத்தவர்களும் அவ்வாறு வேதத்திற்குக் காலவரை குறிக்க நிகழ்ந்ததேயன்றி வேறல்ல. இவ்வாறு உண்மையாராய்ச்சியாகிய யோகம் நியாயம் முதலிய சாஸ்திராப்பியாஸம் உள்ளவருக்கே இவ்வுண்மை விளங்கும் என்பதை அறிந்துகொள்ளச் சக்தியில்லாதவர்களானது பற்றியே பள்ளிக்கூடத்துச் சிறுவர்களும் வேதம் சிலகாலத்திற்கு முன் இயற்றப்பட்டது வாஸ்தவமே என நம்பி நம்மதத்தை உள்ளபடி யறியாமல் மாறுபாடாய்க்கருதுகின்றனர். நிற்க இனி எடுத்த விஷயத்தை நாடுவோம். இவ்விதம் எப்போதும் ஸூக்ஷ்மரூபமாக

வே உள்ள எண்ணிறந்த வாக்கிய கோடிகளாகிய வேதமானது கற்பாதியில் ஈச ஞல் உச்சரிக்கப்படுகின்றது. எனெனின், ஆகாசமும் தனது காரணநிலமையா கிய பிரகிருதிமாத்திரத்தில் லயித்திருக்கும் காலமே பிரளயம் என்பதாதலால், அப்பிரளயத்தினில் ஸூக்ஷமமாயுள்ள வேதம் அதனிலும் பரமஸூக்ஷமமான காரணத்தன்மையைப் பெற்றுப் பிரகிருதியில் கேவலம் பதிவுமாத்திரமாயிருந் தமையால், அப்படிப்பரமகாரண நிலமையிலடங்கியிருக்கும் வேதத்தை மற்றவர் யோகஸித்தியினுலும் காண்பதற்கு இயலாதென்பது கொண்டு, இறைவனே அங்ஙனம் லயித்திருக்கும் வேதவாக்கியங்களெல்லாவற்றையும் ஆகாசத்தி ணில் ஸூக்ஷம நிலமையைப் பெற்றிருக்கும்படி உச்சரித்து, ப்ருமதேவனு க்கு முதலில் உபதேசிக்கின்றார். இவ்வுண்மையே

"[illegible]

[illegible]"

"எவ்விறைவன் பூர்வம் பிரும்மனை புண்டாக்குகின்றுரோ அவனுக்கு வேதங்களையும் உபதேசிக்கின்றுரோ"

என சுவேதாச்வதராதி ச்ருதிகளில் சொல்லப்பட்டுள்ளது.

[illegible]

ஓ முனிவர்காள் பிரும்மனை முதலில் உண்டாக்கி அவனுக்கு மஹேச் வரன் தன்னிடமேயுள்ள வேதங்களெல்லாவற்றையும் உபதேசிக்கி ன்றார்.

வேதம் எப்போதுமுள்ளது. அது சம்புவனிடமே முதலில் அபிவ்ய க்த மடைந்தது. இதனில் ஸம்சயமில்லை. சங்கரன் வேதத்தை இயற் றியவர் என வேறு சிலர் சொல்லுகின்றனர். வேதம் அநாதியே. அதனையியற்றியோர் யாருமில்லை. சிவன் அதனை அபிவ்யக்தமாகச் செய்தனர் என்பதே உண்மை. சிவன் வேதகர்த்தா வென்பது கற்பாதியில் அவனிடமிருந்தே முதலில் அபிவ்யக்தமாகிய தென் பதைக் கொண்டேயாம.

என ஸூதஸம்ஹிதை முதலிய நூல்களாலும் இவ்வாறே உபதேசிக்கப்ப ட்டிருப்பது காண்க.

இவ்விதம் எப்போதும் உள்ளதும் பிரளயகாலத்தில் காரணநிலமை பெற் றுப் பரமஸூக்ஷம நிலமையிலிருப்பதாதலால் மற்றவர்கள் தபஸினுலும் காண

முடியாதென்பதுகொண்டு பரமேச்வரனுல் கற்பாதியில் கண்டுபிடிக்கப்பட்டு ஸ்தூலமாகிய வாக்கியமாய்ச் சொல்லப்படுவதும், பிறகு ஆகாசத்திலேயே ஸூக்ஷ்ம நிலமையில் பதிவு பெற்றுள்ளதுமாகிய வேதமானது முன்யுகங்களில் "சுரோத்திராகாச ஸம்பந்த ஸம்யமம்" எனும் திவ்வியயோக தபஸால் முன்னோர்களால் கண்டுபிடித்து வெளியிடப்பட்டது என்பதே நிர்ணயம். அங்ஙனம் ஸூக்ஷ்மமாயுள்ள வேதவாக்கியங்களைத் தபஸ்ஸினுல் கண்டுபிடித்தவர்களே மஹருஷிகள் எனும் சொல்லால் வழங்கப்படுவோர். மற்றவரால் கண்டுபிடிக்கப்பட்ட மந்திரங்களை உபதேசம் பெற்று அதனை விதிப்படி பயின்று பெருமை பெற்றவரே ருஷிகள் என்னப்படுவோர்களாம். வேதவாக்கியங்களை "ஸம்ஸ்கார ஸாக்ஷாத்கார"மெனும் தபஸாலும் கண்டுபிடித்த மஹருஷிகள் பலர் என்பதுமறிக.

இங்ஙனம் மஹருஷிகளால் கண்டுபிடிக்கப்பட்டுள்ள வாக்கியங்களெல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்து அஷ்டகம் காண்டம் அநுவாகம் பஞ்சாசத் முதலிய பிரிவைக்கொண்டு (ரெஜிஸ்தர்செய்துவைப்பதுபோல) அவ்வாக்கியங்களையும் கோவையெனும் பெயரைக்கொண்டு கணக்கிட்டடக்கியவரும் அவைகளை ருக்கு யஜுஸ் ஸாமம் அதர்வணம் என நான்காகப் பிரித்தவரும் வியாஸர் எனும் பாதராயணமாமுனிவரேயாம். ஆகாசத்தினில் ஸூக்ஷ்மவடிவமாயிருக்கும் வேதவாக்கியங்களில் பாதபந்தத்தோடு சுலோகம் போலிருக்கும் வாக்கியங்களை ருக்கு என்றும், நடையாக மாத்திரமுள்ளவைகளை யஜுஸ் என்றும், ஸ்துதியாயுள்ள வாக்கியங்களை ஸாமமென்றும், ஸ்தம்பன மோஹனுதி மந்திரங்களோடு கூடியுள்ளவைகளை அதர்வணமென்றும் அவ்வேதவாக்கியத்தைக் கண்டே நிர்ணயித்துப் பிரிவு செய்தனர். ஆதலால் ருக் யஜுஸ் முதலிய பெயரை வியாஸர் தாமாகவே வைத்து வழங்கினுர் என்பதல்ல. வேதத்தைக் கொண்டே அவ்வாறு பிரித்துப் பெயரிட்டனரென்பதேஉண்மை. வேதவியாஸர் இவ்விதம் வேதவாக்கியங்களைக் கணக்கிட்டு சாகாபேதமாகப் பிரிவினைசெய்தவர் என்பதே உண்மையென்பதை யறியாமல் அவரும்சில வேதவாக்கியங்களை இயற்றியவர் எனத் தற்காலத்தவர் கூறுவது விசாரணையில்லாமையேயாம் என்க.

இனி மற்றுமோர் சங்கை; இதுவரையிலும் செய்த ஆராய்ச்சியால் வேதம் கல்பந்தோறும் ஸ்ருஷ்டியாதியில் ஈச்வரனுல் உச்சரிக்கப்படுவதென்பதும், அதனைக் கண்டுபிடித்தவர்களென்பது மாத்திரமேயன்றி மஹருஷிகள் இயற்றியவர்களல்ல என்பதும், ஒருவாறு உசிதமெனக் கொள்ளக்கூடியதாயிருக்கினும், வேதத்தில் சொல்லப்படும் விஷயங்களைக் கவனித்தால் அயுக்தமென்றறியப்படுகின்றது. வேதத்தில் மண், ஜலம், அக்நி, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், முதலிய ஜடப்பொருள்களைத் தெய்வமாகப் போற்றியிருக்கும் வாக்கியங்கள் ஏராளமாயாய்க் காணப்படுகின்றனவன்றே. போற்றினுலும் அல்லது தூற்றினுலும் அதனைச் சிறிதும் அறிந்துகொள்ளஇயலாமல் ஒரேஸ்வபாவத்தை யுடையனவாகிய ஜடப்பொருள்களைப் போற்றுதல் பித்தர் புலம்பல் போன்றதேயல்லவா. அங்ஙனம் பித்தர் புலம்பல் போன்ற வாக்கியங்களடங்கிய வேதத்தை அனுதி

யென்பதும் இறைவன் சொல்லியதென்பதும் பிரமாணச்ரேஷ்டமென்பதும் உசிதமல்ல. ஆதலால்வேதத்தைப்பற்றி இவ்விதமறிந்துகொள்ளவேண்டும்.

அதாவது பிராம்மணர், க்ஷத்திரியர், என்பதாதி ஜாதி பேதம் முதலியவைகளெல்லாம் பன்னெடுங்காலமாயிருந்து வருவனவல்ல. தற்காலம் இந்தியாவிலிருக்கும் ஆர்யர்களான நம்மவர்களின் முன்னோர் ஆசியா எனும் இக்கண்டத்தின் மத்தியபாகமாகிய துர்க்கிஸ்தானம் (Caspian Sea) கஸ்பியன் கடல் பக்கங்களில் இருந்தவர்களே. பிறகு ஆரியர் அங்கிருந்து நாலாபக்கங்களிலும் சென்று குடியேறினார்கள். அதாவது அங்கிருந்து மேற்கு வடக்குப் பக்கமாய்ச் சென்று சிலர் ஐரோப்பாவில் குடியேறினர். சிலர் தென்கிழக்குப் பக்கமாய்ச் சென்று இந்தியாவில் முதன் முதல் ஸிந்துநதிக்கரையில் வந்து குடியேறினார்கள். மற்றும் சிலர் வடக்குவடகிழக்குப் பக்கமாய்ச்சென்று சீனு மங்கோலியா முதலிய இடங்களில் குடியேறினர். மற்றும் சிலர் தெற்கு தென்மேற்குப் பக்கமாய்ச் சென்று பாரசீகம் அராபியா துருக்கி முதலிய இடங்களையடைந்து குடியேறியவர். மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாபக்கம் வந்த ஆரியர் பஞ்சாப் தேசத்திலுள்ள (Indus) எனும் நதிக்கரையில்வந்தமர்ந்த பிறகு வேதம் இயற்றப்பட்டது. அதன் பிறகே பிராமணர் முதலிய ஜாதி பேதம் ஏற்பட்டது. என ஆங்கிலப்படிப்பினில் சிறந்தவெளிநாட்டு மேதாவிகள் அபிப்பிராயப்பட்டிருக்கின்றனரே அதனை வாஸ்தவமென்று ஏன் கொள்ளக்கூடாது?

நம் தேசத்தவராகிய (Romesh C. Dutt) ரோமேசந்திரதத்தர் அவர்களும் Ancient and Modern India எனும் புஸ்தகத்தில் ஆரியர் (Indus) எனும் ஸிந்துநதிக்கரையிலமர்ந்திருந்து சிலகாலத்திற்குப் பின்னரே வேதம் ஏற்பட்டது என்று சொல்லியிருக்கின்றனரே. அதாவது கிரிஸ்து பிறப்பிற்கு சற்றேறக்குறைய இரண்டாயிரம்வருஷங்களுக்கு முந்தினகாலத்தில் வேதமில்லை. அக்காலம் ஆரியர் ஆடுமாடு நீர் முதலியவைகளைக் கொண்டு ஜீவித்துக்கொண்டிருந்தவர். அக்காலத்தில் அவர்கள் ப்ருதிவீ, ஜலம், அக்கினி, வாயு, த்யு, சூரியன், முதலிய ஜடங்களான இயற்கைப்பொருள்களையே ஆராதித்துவந்தவர். அவர்கள் ஜடப்பொருள்களின் ஆராதனுக்கிரமத்தையே சுலோகமந்திரங்களாகவும், கீதங்களாகவும் இயற்றிக்கொண்டனர். அங்ஙனம் சுலோகவடிவங்களாயிருந்த (1028) பதிகங்களே இப்போது ருக்வேதமென்று வழங்கப்படுகின்றன. ஸுமார் இன்றைக்கு முன்னராகிய (3500) வருஷங்களுக்கும் நாலாயிரம் வருஷங்களுக்கும் இடையிலுள்ள காலமே வேதமேற்பட்ட காலம் என்பதாம். அங்ஙனம் ருக்வேதமேற்பட்டதாகிய பிராசீனகாலத்திலும் இவ்விந்திய ஆர்யருக்குள் பிராமணன் க்ஷத்திரியன் என்பதாதி ஜாதிபேதம் யாதுமில்லை. அக்காலம் ஜனங்களுக்குப் பொதுவில் (விஶ:) விசாள் எனும் பெயரே வழங்கப்பட்டுவந்தது. ருக்வேதம் ஏற்பட்ட பிறகு சிலகாலம்அங்ஙனமிருந்து வர, பிறகு ஆரியர்களுக்குள் மதஸம்பந்தமாகிய ஆசாரங்கள் தோன்றி விருத்தியடைந்தன. அவ்வாசாராநுஷ்டானங்களில் முதன்மையாயிருந்தவர் அதற்குப்பின் பிராமணர் எனும் ஓர் புதிய பாம்பரையினராயினர். அரசரும் போர்வீரரும் தனியே பிரிந்து க்ஷத்திரியர் எனும் வகுப்பினரானர். வியாபாரம், கிருஷி, முதலியவைகளில் பிரவேசித்த ஆரியர்

லவைசியர் எனும் ஓர் வகையினராஞர். இந்தியாவில் பூர்வமேயிருந்தவர்களும் ஆர்யர்களால் ஆக்கிரமித்து அடக்கப்பட்டவர்களுமான(அபாரிஜினர் எனும்) ஓர் கூட்டத்தினரே கீழ்ப்பட்டசூத்ரராயினர். ருக்வேதத்தின் பின்னர் ஸாம வேத மேற்பட்டது. அதன் பிறகு விசேஷயாகாதி சட்டதிட்டங்களை ஒருங்குசேர்த்து யஜுர்வேதமியற்றப்பட்டது. அதன் பின்னர் அதர்வவேதமியற்றப்பட்டது பின்னர், வேதத்திற்கு வியாக்கியானம்போன்றதும் யுக்திக்கு ஒவ்வாததுமாகிய பலவித வாக்கியங்கள் இயற்றப்பட்டு பிராம்மணங்களென்று பெயர் பெற்றன அதன் பிறகு ஆரண்யகங்களும் உபநிஷதங்களுமியற்றப்பட்டன என்பதாம் இதனை மேற்படி புஸ்தகத்தில் அடியில்கண்ட விபரப்படிக்காண்க.

Indo—Aryans.—Probably two thousand years before Christ the Aryan race were a civilised community on the banks of the Indus.

Every tribe lived under its king, or chief, every family owned its lands and herds of cattle and performed sacred rites to the Powers of Nature, and priests and poets composed those songs and hymns some of which are still left to us. These hymns, 1028 in number, are known by the name of *Rig Veda*, and give us a faithful picture of the civilisation and manners, the arts and industries and is the wars and conquests of the Indo-Aryans in this early age which known as the Vedic age.

Chapter I Vedic age of Ancient and Modern India
by R. C. DUTT.

இந்து ஆரியர்கள்:—சற்றேறக்குறைய கிருஸ்து பிறப்பதற்கு 2000 வருஷங்களுக்கு முன்னரோ இண்டஸ் நதிக்கரையில் ஆரியவகையினர் நாகரீகம் வாய்ந்த கூட்டத்தினராயிருந்தனர்.

ஒவ்வொரு கூட்டத்தினரும் தத்தம் அரசன் அல்லது தலைவனுக்குக் கீழ்பட்டுவசித்து வந்தனர். ஒவ்வொரு குடும்பமும் தத்தமக்குச் சொந்தமான நிலங்களையும் ஆடு மாடுகளையும் பெற்றிருந்தனர்? அவர்கள் இயற்கை பொருள்களை திவ்விய கிரியைகளால் ஆராதித்தனர். அப்போது வழங்கிவரும் மந்திரங்களை புரோஹிதர்களும் கவிகளும் கீதங்களாகவும், பதிகங்களாகவும் இயற்றினர். அவைகளுள் சில இப்போது நம்மவரால் கையாண்டுவரப்படுகிறது. ஆயிரத்து இருப்பத்தி எட்டு பதிகங்களாகிய இவைகளே ருக்வேதமெனும் நாமதேயத்தால் வழங்கப்படுவன. அவைகள் அப்பழமையான வேதகாலம் என்று வழங்கப்படும் அச்சமய நாகரீக வழக்கங்களையும், கலைகளையும் கைத்தொழில்களையும் இந்து ஆர்யர்களின் யுத்தஜயாதிகளையும் பற்றி உண்மையாய் வர்ணித்தன. இதுவே 'Vedic Age' என்று சொல்லப்பட்டுவருகிறது

Social Life—There were no caste distinctions among the Indo Aryan in this remote age, and men following different profession

in life did not belong to different hereditary castes, but were a united body bearing the name of Visas or the people.

பொதுஜனாசாரம்—இப்பிராசீனகாலத்தில் இந்து ஆரியர்களுக்குள் ஜாதி பேதம் யாதுமில்லை. மனிதர்கள் விசாஸ் அல்லது ஜனங்கள் என்று வழங்கப் பட்டு ஒரு பொதுகூட்டமாகப் பற்பல உத்தியோகங்களைக் கைப்பற்றிவந்தனரே யன்றி, பற்பல பரம்பராக்கிரமமான வர்ணத்தினரென்று காணப்படவில்லை.

The caste-System.—The Social life of the Hindus had undergone a great change since the Vedic age. In the more settled and peaceful times of the Epic age, when religious rites, and ceremonial were vastly elaborated the priestly families who officiated at these ceremonies formed themselves into a distinct and hereditary caste, known since as Brahmans. Similarly, the kings and warriors separated themselves from the common people, and formed themselves into a distinct and hereditary caste known as Kshatriyas The mass of the people living by trade, industries and agriculture formed the Vaisyas or the people And the aboriginal races, who had submitted to the Aryan conquerors and had adopted their civilisation and religion formed the low caste of Sudras.

ஜாதி முறை" வேதகாலத்திற்குப் பிந்தி இந்துக்களது பொது ஆசாரங் கள் மிக்க மாறுபாட்டை அடைந்தன. மிகவும்சாந்தமான ஸந்தர்ப்பமாகிய Epic Age காவ்யகாலங்களில் மதசம்பந்தமான கர்மகிரியாகலாபங்கள் மிக வும் விருத்தியடைய அக்காரியங்களில் முதன்மையாயிருந்து நடத்திவைக்கும் புரோஹிதர்கள் அதுமுதல் பின்னர் வழங்கப்படும் பிராமணர்கள் எனும் ஓர் புதிய பரம்பரையான வர்ணத்தினராகச்சேர்ந்தனர். அப்படியே அரசர்களும் யுத்த வீரர்களும் பொது ஜனங்களிலிருந்து தங்களைப் பிரித்துகொண்டு ஒரு புதிய பரம்பம்பரையாகிய க்ஷத்திரிய வர்ணத்தினராகப் பிரிந்தனர். வியாபாரம், கைத் தொழில், கிருஷி முதலிய விருத்திகளால் வசித்துவரும் ஜனங்கள் வைச்யரா யினர். ஆரியர்களால் ஜயிக்கப்பட்டவரும் அவர்மதநாகரீகங்களை அனுசரித்தவ ருமாகிய Aborigines அபாரிஜினர்களாகிய பூர்வவம்சத்தினர் கீழ்பட்ட சூத் திர வர்ணத்தினராயினர்.

The Four Vedas—We have spoken of the *Reg Veda* in the last Chapter, but the Hindus recognise four Vedas. According to an ancient custom some of the hymns were chanted instead of being recited at sacrifices, and these chanted hymns were separately collected under the name of *Sama Veda* Similarly, special sacrificial rules and formulas existed from ancient times for the performance of rites and these rules and formulas were separately collected under the name of *Yajur Veda*. And a collection of som

peculiar hymns, consisting mostly of charms against evil influences received the name of *Atharva Veda.*

Each Veda again had commentaries and dogmatic explanations complited by generations of priests and these commentaries are known as the *Brahmanas.* Similarly, each Veda had other treatises compiled for the use of those who retired to forests for contemplation, and treatises on forest life are known as *Aranyakas*. It is in these last named works that we generally find those remarkable compositions known as *Upanishads,* containing sublimes peculations and inquiries into the nature of the Universal Soul which pervades the universe.

நான்கு வேதங்கள்.—முந்திய அத்யாயத்தில் ருக்வேதத்தைப்பற்றிச் சொல்லப்பட்டது. ஆனல் இந்துக்கள் வேதங்கள் நான்கு எனத்தீர்மானிக்கின்றனர். ப்ராசீனஓர் வழக்கப்படி யாகாதிகளில் ஒப்பிப்பதாயில்லாமல் சில பதிகங்கள் பாட்டாகவே பாடப்பட்டு வந்தன. அச்சிலபதிகங்களே ஸாமமெனவழங்கப் படுவதாகிய ஓர் வேதமாக ஒன்று சேர்க்கப்பட்டன. அப்படியே விசேஷயாகாதி சட்டங்களும் விதிவாய்ப் பாடுகளும் கர்மங்கள் நடைபெறுமாறு ப்ராசீன காலமுதலாக ஏற்பட்டன. அச்சட்டங்களும் விதிகளுமே யஜுர் வேதமெனும் ஓர் வேதமாகச் சேர்க்கப்பட்டன. முக்கியமாய் துஷ்டச்செயல் முதலியதினின்றும்காப்பவையாகியமருள்மயக்காதிகளையே விஸ்தரித்திருப்பவையாகியசில அபூர்வ பதிகங்களின் சேர்க்கை அதர்வவேதமெனும் நாமதேயத்தைப்பெற்றது.

பின்னர் ஒவ்வொரு வேதத்திற்கும் வியாக்யைகளும் யுக்திக்கு ஒவ்வாத பல விஸ்தாரவாக்கியங்களும் புரோஹித பரம்பரையில் ஏற்பட்டன. இவ்வியாக்யைகளே பிராம்மணங்கள். இதுபோலவே தியானிகளுக்காகக்காடுசென்ற சிலருக்கு உபயோகமாயிருக்கும் வண்ணம் ஒவ்வொரு வேதத்தை ஒட்டி ஏற்பட்ட சில பிரபந்தங்களே ஆரண்யகங்களாயின. கடைசியாகச் சொல்லப்பட்ட இவைகளிலேயே உலகெங்கும் பரந்துள்ள பாமாத்ம ஸம்பந்தமான அருமையான விசாரங்கள் செய்யப்பட்டு வரும் உபநிஷதம் எனும் உத்தமமான நூல் அடங்கியுள்ளது.

என்று இங்ஙனம் சொல்லப்பட்டிருக்கின்றது. இதன்படிக் கவனித்தால் வேதம் அனாதி யென்பது சுத்தப்பிசகென்றே ஏற்படுகின்றதே! எனும் சங்கையாம்.

இனி இதனுண்மையறிக. நமது தேஹத்தினில் ஜீவாத்மா எனும் ஓர் பொருளிருக்கின்றது என்பதும், அதுஎவ்வளவு நுட்பமானகருவிகளைக்கொண்டு பரிசோதிக்கினும் காணக்கூடியதல்ல என்பதும் நிச்சயம். அந்த ஜீவாத்மா இந்தத் தேஹத்தினிலிருந்துகொண்டு இதன் ஸகலஅவயவங்களிலும்நடக்கும்ஸகலவிஷயங்களையும் உணர்ந்துகொண்டிருப்பது போல இந்த ப்ரும்மாண்டமுழுதும் வியாபித்துக்கொண்டு ப்ரும்மாண்டத்தில் நடக்கும் ஸகல விஷயங்களையும் அறிந்துகொண்டிருக்கும் பேரறிவுப்பொருள் ஒன்றுஉள்ளதென்றும், அதன் சக்தியபார

மான தென்றும், அதுவே ஈச்வரனென்று நமது சாஸ்திரங்களில் சொல்லப்படு கின்றதென்றும் இந்நூலின் ஜீவனும் ஈசனும் எனும் பாகத்தில் ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கின்றது. நமது தேஹத்தினிலுள்ள ஜீவாத்மாவுக்கு எப்படி உருவம்யாதுமிராவிடினும் எல்லாவற்றையும் அறியும் யோக்கியதையுள்ளதோ, அப்படியே ப்ரும்மாண்டத்திலிருக்கும் அந்தப் பேரறிவுப்பொருளுக்கு உருவம் யாதுமிராவிடினும் ப்ரும்மாண்டத்தில் நடக்கும் ஸகல விசேஷங்களையும் அறியும் யோக்கியதையிருக்கின்றது.

உருவம் யாதுமில்லாத வஸ்துவைக்காண இயலாது என்பது நிச்சயம். ஆதலால் ஜீவாத்மாவைக்கண்டு நேரில் அந்தப் பொருளோடு வியவஹரிப்பது என்பது எப்படியியலாதோ, அப்படியே ப்ரும்மாண்டமுழுதும் வியாபித்துள்ள அரூபவஸ்துவாகிய ஈச்வரனை நேரில் கண்டு அவனோடு வியவஹரிப்பது என்பது எவருக்குமியலாது. ஜீவாத்மாவை நேரில் காணக்கூடாவிடினும் அவனோடு நேரில் ஒருவிதமான வியவஹாரமும் செய்யமுடியாவிடினும் அவனால் வியாபிக்கப்பட்டுள்ள இத்தேஹத்தின் அவயவத்தை உபசரித்தால் அந்த ஜீவாத்மாவே திருப்தியடைதல் அனுபவஸித்தமே. அதாவது உபசரிப்பது ஸ்தூலமாகிய இந்தத் தேஹத்தையேயாயினும் அவ்வுபசாரத்தினால் திருப்தியடைவது அரூபவஸ்துவாகிய ஜீவாத்மாவே. இதுவே தவிர தேஹத்தையுபசரிக்க அத்தேஹமே திருப்தியடைதல் என்பது இல்லவேயில்லை. உபசரித்தது தேஹத்தையே. தேஹம் அறிவில்லாத ஜடப் பொருளாதலால்அந்தத் தேஹத்தினில் வியாபித்துக் கொண்டிருக்கும் அரூபவஸ்துவாகிய ஜீவாத்மாவே திருப்தியடைகின்றது. இதுவேயொழிய திருப்தியடைவதாகிய ஜீவாத்மாவை தேஹத்தைவிட்டு நேரில் உபசரிக்க எவராலு மியலாதென்பது நிச்சயமன்றோ. அரூபவஸ்துவாகிய ஜீவாத்மாவை, தேஹத்தை விட்டு நேரில்உபசரித்தல் என்பது இதற்கு முற்காலத்திலுமில்லை. இக்காலத்திலும் இல்லை. இனிஎக்காலத்திலுமில்லை.

உதாரணமாக. நமது ஸ்நேஹிதரை அழைத்து வந்து அவருக்கு ஓர் ஆஸனத்தை யளித்து அதனிலிருக்கச் செய்து கையில் ஓர் நல்ல பழத்தைக் கொடுத்தால் அங்ஙனம் உபசரிக்கப்பட்ட ஆஸனமும் கையும் திருப்தியடைகின்றதென்பதில்லை. அவ்வாஸனம் கைமுதலிய அவயவங்களில் வியாபித்துக் கொண்டிருக்கும் அறிவுப்பொருளாகிய அவரது ஜீவாத்மாவே திருப்தியடைகின்றது. ஜீவாத்மாவை அங்கி என்றும் தேஹத்தை அங்க மென்றும் சொல்லப்படும். அங்கியின் திருப்தியின் பொருட்டாக, அதனால் வியாபிக்கப்பட்டுள்ள அறிவில்லாததாகிய அவயவத்தையே உபசரிக்கின்றோமென்பது ஸகல ஜனானுபவஸித்தமல்லவா. இதுபோல ப்ரும்மாண்டத்தில் வியாபித்துக்கொண்டிருக்கும் பேரறிவாகிய அரூபவஸ்துவை உபாஸித்துவழிபடுவது, அதனால் வியாபிக்கப்பட்டிருக்கும் அவயவமாகிய ப்ரும்மாண்டப் பொருளை உபசரித்து வழிபடுதலின் மூலமாகவே ஆகவேண்டும். ஜீவாத்மாவுக்குத் தேஹமங்கமாயிருப்பது போல ஈச்வரனுக்குப்ப்ரும்மாண்டப்பொருள் அங்கமாயிருக்கின்றது. ஆதலால் ஈச்வரனை அங்கியென்றும் ப்ரும்மாண்டப் பொருளை அங்கமென்றும் அறியவேண்டியது. அங்கியைத் திருப்திசெய்வித்தல் முதலிய வியவஹாரம் அங்கத்தின்

மூலமாகவே யாகவேண்டுமெனப் பூர்வம் நிர்ணயித்த நியாயத்தின்படி ஈச்வரனைத் திருப்திசெய்வித்தல் என்பது முதலிய வியவஹாரம் ப்ரும்மாண்டப்பொருள் மூலமாகவே ஆகவேண்டுமென்றோ. இதுவேயொழிய அரூபவஸ்துவாகிய ஈச்வரனை யுபாஸித்துத்திருப்திசெய்வித்தல் என்பது ப்ரும்மாண்டப்பொருளாகிய அங்கத்தைவிட்டு நேரிலேயேசெய்ய எவராலுமியலாதென்பது நிர்ணயம். ஆதலால் அங்கியாகிய ஈச்வரனை, ஜடப் பொருளை விட்டு நேரில் உபசரித்து த்திருப்திசெய்வித்தவர்எக்காலத்திலும் இல்லை என்பது நிச்சயமே.

தேஹத்தினில் வியாபித்துள்ள ஜீவாத்மாவைத் திருப்தி செய்விக்கவேண்டுமானால் அவனால் வியாபிக்கப்பட்டுள்ள கால் முதல் தலை வரையிலுமுள்ள ஸகல அவயவங்களையும் உபசரிக்கவேண்டுமெனும் நியமமில்லையன்றோ. கையெனும். ஓர் அவயவத்தில் ஓர் பழத்தைக்கொடுத்துபசரித்தல் மாத்திரத்தினால் ஸகல அவயவங்களையும் வியாபித்துக்கொண்டிருக்கும் ஜீவாத்மா திருப்தியடைவதுபோல, ப்ரும்மாண்டத்திலுள்ள ஸகல பொருள்களையும் பூஜித்துவழிபடாவிடினும் யாதானும் ஓர் பொருளை உபசரித்து வழிபடுவோமானால் ப்ரும்மாண்டம் முழுதும் வியாபித்துள்ள பரமாத்மாவின் பிரஸாதத்தைப்பெறலாம் என்பது நிச்சயமேயாம்.

சங்கை, ஜீவாத்மாவுக்கு அஞ்ஞானத்தினால் தேஹத்தில் தான் தனதெனும் அபிமானமிருக்கின்றமையால் அதனைப் பூஜித்து உபசரித்தலால் அவன் திருப்தியடைகின்றான். ப்ரும்மாண்டத்திலுள்ள ஸ்தூலப்பொருள்களில் யாதானும் ஒன்றைப்பூஜித்து வழிபடுதலாலேயே ஈச்வரனை உபாஸிக்கவேண்டும் என்றதனால் ஜீவாத்மாவுக்குப் போலவே ஈச்வரனுக்கும் அஞ்ஞானத்தால் ப்ரும்மாண்ட வஸ்துக்களில் நான் எனது எனும் அபிமானமிருக்கின்றதென்றல்லவோ ஏற்படும். அனாதிமுக்தனும் நித்தியதிருப்தனும் அபாரகுணகணங்கள் பொருந்தியவனுமாகிய இறைவனுக்கும் தானல்லாதபொருளில் அபிமான ஏதுவாகிய அஞ்ஞானமிருக்கின்றதெனின் அது ஈச்வரத்தன்மைக்கு அர்ஹமாகுமா? எனும் சங்கைநிகழும்.

இதனுண்மையறிக. அதாவது, அபிமான அஞ்ஞானங்கள் சிறிதுமின்றி முற்றுமொழிந்த ஞானிகளாகிய ஜீவன்முக்தரிடம் பழகி ஞானோபதேசம் பெறுதலைஇங்கு சற்றுக் கவனிக்கவேண்டும். அதைக்கவனித்தால் இவ்வுண்மைநன்கு விளங்கும். அந்த ஜீவன்முக்தரிடம் உபதேசம் பெறவேண்டுவோர் அவரது ஸ்தூலமாகிய தேஹத்தைக்காணாமலே அவரது ஆத்மாவை மாத்திரம் கொண்டு ஞானத்தைஸம்பாதித்தல் என்பது எப்படிச்சிறிதும் இயலாதோ! அத்தேஹத்தில் அவருக்கு அபிமானமிராவிடினும் உபதேசம் பெறுவோராகிய நாம் அவரது ஸ்தூல தேஹத்தோடு பழகிப்பரிசயம் செய்யவேண்டியது எப்படி அவசியமாகின்றதோ அப்படியே அபிமானாஞ்ஞானங்களில்லாத நித்தியமுக்தனான இறைவனிடம் பழகி அவனருளைப்பெறவேண்டுமாயின், அவனால் வியாபிக்கப்பட்டிருப்பது பற்றித்தேஹமாயுள்ள அந்தப்பிரும்மாண்டத்தினிலடங்கியிருக்கும் யாதானுமோர் ஸ்தூலவஸ்துவைப்பூஜித்து உபசரித்தே ஆகவேண்டுமன்றி வேறு வழியில்லவேயில்லை என்றறிக.

ப்ருமமாண்டத்தில் அசுத்தம் சுத்தம் எனும் இருவகை வஸதுக்களடங்கியிருக்கின்றன. ஸ்நேஹிதருடைய ஆஸனத்துவாரம், கக்ஷம் முதலிய அசுத்தாங்கங்களை உபசரித்தலின்றி, சுத்தாங்கங்களாகிய கை வாய் தலை முதலியவைகளையே உபசரித்துத்திருப்திசெய்வித்தல் என்பது, எப்படி உசிதமாகக் காணப்படுகின்றதோ, அப்படியே ப்ருமமாண்டத்திலடங்கியிருக்கும் சுத்தா சுத்தப்பொருள்களில் அசுத்தாங்கங்களைவிட்டுச் சுத்தாங்கங்களாகிய சிலாக்கியமாகிய வஸ்துக்களையே பூஜித்துவழிபடுதல் உசிதமென்க.

சுத்தவஸ்துவாகிய கஸ்தூரி முதலிய பொருள்களிலும் அசுத்தவஸ்துக்களாகிய மலம் முதலியவைகளிலும் ஈசனது வியாபகத்தன்மை ஸமமாகவே யிருக்கினும், பூஜிப்பவராகிய மாந்தரின் அறிவானது சுத்தாசுத்தபாவனைகளால் நிறைந்திருக்கின்றமையால், அசுத்தவஸ்துக்களைப்பூஜித்துபசரிக்க ஸம்மதிக்காமல் சுத்தவஸ்துக்களையே பூஜித்துபசரிக்க இயலும். இங்ஙனம் மாந்தரது அறிவின் பரிபாகத்தை நோக்கியே சுத்த வஸ்துவைப் பூஜித்துபசரித்தல் உசிதமென்று சொல்லியதன்றி, அதனால் ஈச்வரனுடைய வியாபகத்துவத்தில் தாரதம்மியமுள்ளதென்று கொண்டதல்ல.

இனி ப்ருமமாண்டத்திலடங்கியிருக்கும் பொருள்களில் சுத்தவஸ்து யாதெனின், ஊஹித்துப்பார்க்கின் மனிதர் முதலிய சேதனப்பொருள்களைக்காட்டிலும் ஜடப்பொருள்களே சுத்தங்களென்பது நன்கு அறியப்படும். எப்படியெனின் சற்றுவிசாரித்துப் பார்க்கின் மனிதசரீரமானது தோல் சதை நரம்பு ரக்தம் மாம்ஸம் எலும்பு மலம் மூத்திரம் கேசம் நகம் எனும் இப்பதார்த்தங்களின் சேர்க்கையே என்பது நன்ருய் விளங்கும். இப்பதார்த்தம் ஒவ்வொன்றிலும் மலமே ஸம்பந்தித்திருக்கின்றது. கண்களில் பிளிச்சையும், காதுகளில் குரும்பையும், மூக்கினில் சளியும், பற்களில் ஊத்தையும், ரோமகூபங்களின் வழி அழுக்குமே வெளிவருகின்றது பிரத்தியக்ஷமன்ருே. எவ்வளவுமுறை ஸ்நாநம் செய்தாலும் எவ்வளவோ வாஸனைப்பதார்த்தங்களை அணிந்துகொண்டாலும், அவ்வளவும் துர்க்கந்தமாய்ப்போகின்றதைக்கவனித்தால், இச்சரீரம் மலகோசமே என்பதில் ஸந்தேகமுண்டாகுமா? அல்லவன்ருே. இனி, தேஹம் இப்படியாயினும் மனிதரின் குணங்கள் சிறந்திருக்கின்றனவே, அதனைக்கொண்டு பூஜிக்கக்கூடுமே எனின் இதுவும் மிக்க அநுசிதமே என்க. ஏனெனின் பூஜித்துபசரித்தல் தேஹத்தையே யன்றி குணங்களையல்லவாதலாலும் அந்தக் குணங்களும் அடிக்கடி மாறிப்போகின்றமையாலும் நிறைந்த நற்குணங்கள் நிலைத்திருக்கின்றன என எவரிடமும் நிச்சயிக்க இயலாதாதலாலும் இது உசிதமாகாதென்க. ஆதலால் மனிதர் முதலிய தேஹத்திலும் கல் மண் முதலிய பொருள்களே சுத்தமென்றறிக.

உலகில் கல் மண் முதலிய பொருள்களிலும் செடி கொடி மரம் முதலியவை சுத்தமாய்க்காணப்படுகின்றனவே; அவைகளைப்பூசித்து உபசரித்தல் மூலமாய்ப் பரமாத்மாவை உபாஸித்து வழிப்படக்கூடாதோ எனின் கூடுமேஎன்க. ஆனது பற்றியே செடி கொடி மரம் முதலியவைகளிலும் சிலாக்கியமாகிய குண

முடையனவாகிய துளஸி, பில்வம், அச்வத்தம் முதலிய விருக்ஷத்தை யுபசரித்து ப்பரமாத்வாவின் பிரஸாதத்தைப் பெறலாம் என்பது நம்முன்னோர் வழக்கத்தில் நடைபெற்று வருகின்றது.

இனி இச்செடி கொடிகளும் எப்போதும் ஸ்திரமாயிருப்பவையல்லவாதலின் எக்காலத்திலும் ஸ்திரமாயுள்ள மண் கல் முதலியவைகளின் மூலமாய் ப்பரனைப் பூஜித்து வழிபடுதல் மிகவும் யுக்தமென்றறியப்படுகின்றது. இவ்வுண்மைபற்றியே பிருதிவியாகிய மண்ணையே ஸ்தூலபிம்பமாக வைத்துக்கொண்டு அதன் மூலமாய் ஈச்வரனைப் பூஜித்து வழிபடுதல் மிகவும் சிறந்ததென்றுசொல்லப்படுகின்றது,

இனி மண் கல் முதலியவையெல்லாம் பிருதிவியின் விகாரமாவது பற்றிப் பார்த்திவங்களேயாயினும், அப்பார்த்திவப்பொருள்களிலும் எவ்வளவு காலமாயினும் சிறிதும் தேய்ந்து போகாமலும் வேறுவித குணங்களைப் பெறாமலும் சிறிதும் கெடாமலுமிருக்கும் பொருள் பாணலிங்கம், ஸாளக்கிராமம் முதலியனவே. மற்றப்பொருள்களோடு வேற்றுமையின்றிக் காணப்படினும் காந்தத்திற்கு மாத்திரம் இரும்பை இழுக்கும் யோக்கியதை அமைந்திருப்பதுபோல, மற்றக்கற்களோடு ஸமமாகவே காணப்படினும், பாணலிங்கம் ஸாளக்கிராமம் முதலிய கற்களில் மனிதரது மனஸை ஒரே வழியில் நிறுத்தும்படி கவரக்கூடிய சக்தியமைந்திருக்கின்றது. அன்றியும் நர்மதை கண்டகீ முதலிய சுத்தமான நதீதீர்த்தத்திலிருந்தெடுக்கப்படுவனவாதலின், அவைகள் உற்பத்தியிடத்திலும் சுத்தமேயாம். இந்த நியாயங்களைக் கொண்டே பாணலிங்க ஸாளக்கிராமாதிகளின் மூலமாய் ஈச்வரனைப் பூஜித்து வழிபடுதல் பார்த்திவபூஜையில் மிக்க உத்தமமானதென முன்னோர்களால் சொல்லப்பட்டும் அவ்வாறு அநுஷ்டிக்கப்பட்டும் வருகின்றது.

இவ்விதம் ப்ருதிவீ எனும் பொருளின் வகையினில் உள்ள சுத்த வஸ்துக்களின் மூலமாய் எங்கும் வியாபகனுயுள்ள பரமாத்மாவைப் பூஜித்து வழிபடுதல் உசிதமாக இருக்கின்றமையால் அங்ஙனம் பிருதிவியின் மூலமாய் ஈச்வரனை வழிபடட்டுமென வேதத்தில்,

> "ம்ருத்திகே ஹந மே பாபம் யந்மயா துஷ்க்ருதம் க்ருதம்"
>
> ஓ மண்ணே எனது பாபத்தைப் போக்குவாயாக. என்னால் என்ன பாபம் செய்யப்பட்டுளதோ

" என்பது முதலிய வாக்கியங்களால் ப்ருதிவியைப் பரமாத்மஸ்வரூபமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

சங்கை; ஸ்நேஹிதர்கையில் பழத்தைக் கொடுத்தல் மாத்திரமே அவரது திருப்திக்கு ஹேதுவாவதுபோல, பாணலிங்கம் ஸாளக்கிராமம் முதலிய பொருள்களினெதிரில் பழம் முதலிய யாதானும் ஒன்றை ஸமர்ப்பித்துவிடுதல் மாத்திரத்தால் பரமாத்மா பிரஸாதம் செய்வார் என்பது உசிதமாயிருக்க அர்க்கியம், ஆஸநம், ஸ்நாநம், ஆசமனம், வஸ்திரம், புஷ்பம், சந்தனம், தூபம், தீபம், ஆகாரம், தாம்பூலம், முதலியவைகளாலும் பிரதக்ஷிண நமஸ்காராதிகளாலும் பற்பலவாறாக என் வீணில் சிரமப்பட்டு உபசரிக்கவேண்டும்? எனும் சங்கை நிகழும்.

இதனைச் சற்று விசாரிப்பாம். பரமாத்மாவான இறைவனுக்கு வஸ்திரம் புஷ்பம், சந்தனம் தாம்பூலம் நிவேத்தியம் முதலியவை கிடைக்காதாதலால் அவனிடமிராத பொருளை நாம் அவனுக்குக் கொடுக்கவேண்டுமெனும் எண்ணத்தினு லாவது, அங்ஙனம் நாம் கொடுப்பதைப்பெற்று அவ்விறைவன் நமக்கு நல்ல பொருள் கிடைத்ததே எனச் சந்தோஷிப்பார் எனும் எண்ணத்தினுலாவது அர்க்கிய பாத்திய வஸ்திராபரணாதிகளோடு கூட பூஜாக்கிரமம் விதிக்கப்பட்ட தென்பதல்ல. ஈச்வரபாவனை திடப்படவேண்டுமென்பதைக் கருதியே அவ்வாறு பூஜாக்கிரமம் விதிக்கப்பட்டதென்பதே உண்மை. அதெப்படி யெனின் மாந்தர்களுக்குத் தத்தம் தேஹாதிகளிடம் தான் எனும் பாவனை திடப்படுவதற்கே காரணங்கள் விசேஷமாயிருக்கின்றன. தேஹாதிகளிடத்தில் தான்தனதெனும் பாவனையால் எவ்வளவுக்கெவ்வளவு அபிமானம் திடபபடுமோ, அவ்வளவுகவ்வளவு ஈச்வரனிடம் பக்திகுன்றும். ஆதலால் தேஹாதிகளிடம் அபிமானத்தைக் குன்றச்செய்துகொள்ளும் முயற்சியைக் கைக்கொண்டே ஈச்வரபக்தியைத் திடப்படுத்திக்கொள்ளவேண்டும். ஈச்வரனிடம்பக்திதிடப்படின் பாவனைதிடமாகும். ஆதலால் ஈச்வரபாவனை திடப்படுவதைக்குறித்துத் தனது தேஹாதிகளில் அபிமானம் குன்றவேண்டியதவசியமாகின்றது. ஜீவர்களுக்குத் தேஹாதிகளில் உள்ள அபிமானமானது ஸ்நாநம் வஸ்திரம் ஆபரணம் போஜனம் முதலியவைகளால் மேன்மேலும்விருத்தியடைந்துகொண்டேவரும். ஆதலால்அவ்விதம் தனக்கெனும் அபிமானத்தோடு செய்துகொள்ளப்படும் ஸ்நாநாசமனபோஜநபரணாதியுபசாரங்களை ஈச்வரபூஜையில் உபயோகித்தலே அப்பியாஸத்தில் கொண்டுவருவோமாயின், தனக்காக அக்காரியங்களைச் செய்துகொள்ளும் போதும் ஈச்வரபூஜையில்அவைகள் உபயோகப்பட்டுவந்த அப்பியாஸத்தினுல் ஈச்வரபாவனையே திடப்படும்.

இங்ஙனம் தனக்கெனும் பாவனையோடு நடத்திக்கொள்ளப்பட்டுவரும் ஸ்நாநம், ஆகாரம், முதலியகாரியங்களிலும் ஈச்வரபாவனையே எற்படவேண்டுமென்பதைக்கருதியே அற்ப அறிவாளராகிய மாந்தருக்கேற்படும் உபசாராதிகாரியங்களெல்லாம் ஈச்வரபூஜையிலும்விதிக்கப்பட்டிருக்கின்றன. விதிப்படி பூஜித்து வழிபடுவோருக்குத் தமது தேஹத்திற்கெனச் செய்துகொள்ளப்படுவனவாகிய ஸ்நாநம் போஜனம் முதலிய ஸகல செயல்களிலும் தாம்தமக்கு என்பதாகிய பாவனை நீங்கி, ஈச்வரபாவனையே நிலைபெற்றிருக்கும் என்பது உண்மையாதலின் அம்முறை மாறுமலே பூஜித்து வழிபடவேண்டுமென்பது உசிதமென்றறிக

---

குறிப்பு.—பாணலிங்கஸாளக்ராமாதிகளுக்கந்நியமாய் வேறு எந்த பிம்பத்திலும் பூஜிக்கக்கூடாதென்பதல்ல.

“ லிங்காநி ரத்நஜாநி பூஜிதாநி ”

“ ரத்நங்களால் நிர்மிக்கப்பட்ட லிங்கங்களும் பூஜிக்கத்தக்கனவாம்”

என வாராஹம் முதலியவைகளில் சொல்லியபடி பத்மராகம், வஜ்ஜிரம். மரகதம் முதலிய ரத்நங்களாலாகிய லிங்கங்களைப் பூஜிப்பது மிகவும் சிரேஷ்டமாம். தவிரவும்,

இனி, பாணலிங்க ஸாளக்கிராமாதிகளில் யாதானும் அசுத்த ஸம்பந்தம் ஏற்படின் ஜலத்தைக்கொண்டே அதனை நீக்கவேண்டியதாயிருக்கின்றமையால் பிருதிவியின் இனமாயுள்ள பொருள்களைக் காட்டிலும் ஜலமே சுத்தமென்றறியப்படு

---

[illegible]
[illegible]
[illegible]

மண், விபூதி, ஆவின்சாணம், மாவு, தாம்ரம், வெங்கலம், இவைகளில் யாதாலும் ஒன்றினாலாகிய லிங்கத்தை ஆராதிக்கலாம். சுத்தமாகிய மரத்தினால் ஆகிய லிங்கத்தை ஆராதித்தல் செல்வத்தை அருளும். ஸ்படிகலிங்கமானது ஸகலாபீஷ்டங்களையும் ஸாதித்துக் கொடுக்கும்

என்றும் பவிஷ்ய முதலிய நூல்களில் சொல்லப்பட்டிருக்கின்றமையால் மண், விபூதி, முதலியவைகளால் நிர்மிக்கப்பட்டதைப் பூஜித்தலும் அல்லது ஸர்வசிரேஷ்டமான ஸ்படிகலிங்கத்தைப் பூஜித்தலும் ஸர்வாபீஷ்டங்களும் ஸித்திக்க ஏதுவாகும். லிங்கம் ஸாளக்கிராமம் முதலியவைகளில் ஆராதிக்க ஸௌகரியமேற்படாவிடில்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

அவ்விரண்டிற்கும் ஸௌகரியப்படாவிட்டால் ஒன்பதுவகையாயுள்ள பிரதிமைகளில் யாதானுமொன்றைப் பூஜித்து வழிபடலாம். அதாவது ரத்நத்தினாலாவது, பொன்னாலாவது, வெள்ளியினாலாவது, தாமிரத்தாலாவது, பித்தளையாலாவது, லோஹத்தினாலாவது, கல்லினாலாவது மரத்தினாலாவது அல்லது மண்ணாலாவது நிர்மிக்கப்பட்ட பிரதிமையில் அர்ச்சிக்கலாம். மண்ணாலாகிய பிரதிமை அதமமாம்.

என விஷ்ணுதர்மம் முதலியவைகளில் சொல்லியவாறு பிரதிமைகளை நிர்மித்துக்கொண்டு அவைகளில் ஆராதிக்கலாம். ஆனால் இங்கு பார்த்திவபூஜை அதமமென்றது பிரதிமையை நோக்கியேயொழிய லிங்கத்தைக் குறித்ததல்ல. ஏனெனின்.

[illegible]
[illegible]
[illegible]

ப்ருதிவியினாலாகிய லிங்கத்தை எவன் அர்ச்சிக்கின்றானோ; அவன் நீண்ட ஆயுளையுடையோனும், பலமுடையோனும், ஸ்ரீமானும், புத்ரவானும், தனவானும், ஸுகியுமாயிருந்து கோரிய வரத்தைப் பெறு

கின்றமையாலும், பாணலிங்காதிகள் தவறிப்போனபோதும் ஜலம் எங்கும் கிடைக்கும் பொருளாதலாலும் ஜலத்தையே ஈச்வராங்கமாய்க்கொண்டு பூஜித்து

---

> வான். ஆதலால் பார்த்திவலிங்கம் ஸகல பயன்களேயும் ஸாதித்துத் தருவதென்றறிக.

என நாந்திகேசம் முதலியவைகளில் பார்த்திவலிங்க பூஜையை மிகவும் சிறந்ததெனச் சொல்லப்பட்டிருக்கின்றமையாலென்க. பிரதிமையை இல்லத்தில் ஆராதிப்பதானுல் அந்தப் பிரதிமையானது பெருவிரற்கணுவின் பரிமாணம் முதற்கொண்டு ஒட்டைப் பரிமாணம் வரையிலுமுள்ளதாயிருக்கவேண்டும். ஒரொட்டைப்பரிமாணத்திற்கு மேலாவது பெருவிரல் பர்வாவின் பரிமாணத்திற்குக் குறைந்தாவது உள்ள பிரதிமையை வீட்டில் அர்ச்சிக்கக்கூடாது எனெனின்

> அங்குஷ்டபர்வாதாரப்ய விதஸ்திர்யாவதேவ து |
> க்ருஹேஷு ப்ரதிமா கார்யா நாதிகா ஶஸ்யதே புதை: ||

> அங்குஷ்டபரிமாணமுதல் ஒட்டைப்பரிமாணம்வரையிலுமுள்ள பிரதிமையையே கிருஹத்தில் பூஜிக்கலாம். அதற்கு மேற்பட்டதைப் பூஜிக்கக்கூடாது

என பவிஷ்ய பார்க்கவார்ச்சன தீபிகை முதலிய நூற்களில் அங்ஙனமே சொல்லப்பட்டிருத்தல் காண்க. இனி லிங்க பூஜையிலும் பரிமாணநியமமுள்ளது. அதாவது

> நவாஷ்டஸப்தாங்குலிகம் லிங்கம் ஶ்ரேஷ்டமிஹோச்யதே |
> ஷட்பஞ்சவேதாங்குலகம் மத்யமம் ஸமுதாஹ்ருதம் |
> த்ரித்வ்யேகாங்குலிகம் லிங்கம் கநீய த்ரிவிதம் க்ரமாத் ||

> ஒன்பது எட்டு எழு அங்குல பரிமாணமுள்ளலிங்கம் ச்ரேஷ்டமாம். ஆறு ஐந்து நான்கு அங்குல பரிமாணமுள்ளது மத்திமமாம். இரண்டு மூன்று ஒன்று அங்குலமுள்ளது கடாசியாம்.

என்று பிரயோகபாரிஜாதக்கிரியாஸாராதி நூல்களில் சொல்லியவாறு பூஜிக்கவேண்டிய லிங்கபரிமாணத்தையறிக. அன்றியும் பொன், வெள்ளி, தாமிரம், ஸ்படிகம் முதலியவைகளாலாகிய லிங்கங்களில் மற்றும் பலவிதமான அளவை உள்ளது. அதாவது லிங்கமஸ்தகவிஸ்தாரம், சக்தி பீடத்தின் உயரம், தாராப்ரணுளிகையின் நிகளம், பீடத்தின் தாழ்வரையின் விஸ்தாரம் முதலியவை சாஸ்திரவிதிப்படி அமைந்திருக்கும் லிங்கத்தையே பூஜிக்கவேண்டும். ஆனுல் ஆலயாதிகளில் உள்ள லிங்கவிஷயத்தில் அந்த நியமம் கொள்ளவேண்டியதல்ல. இதுகாறும் சொல்லிய அளவை முதலிய நியமங்களெல்லாம் பாணலிங்க ஸாளக்கிராமம் முதலியவைகளில் கவனிக்கவேண்டியனவல்ல. கண்டகீ நதியில் கிடைக்கும் ஸாளக்கிராமமும் நர்மதா நதியில் கிடைக்கும் பாணலிங்கமும் மிகவும் பெ

வழிபடுதல் பாணலிங்க ஸாளக்கிராமாதி பூஜையிலும் மிகவும் சிலாக்கியம் என்றறியப்படுகின்றது.

---

ரிய பரிமாணமாயிராமல் ஸாதாரணமான எப்பரிமாணத்தையுடையதாயினும் பூஜித்து வழிபடலாம்.

சிலையால் செய்யப்பட்ட கிருத்திரிமமாகிய பிரதிமையானது நான்கு அங்குலத்திற்கு மேற்பட்டிருக்குமாயின் அதனை இல்லத்தில் ஆராதிக்கக்கூடாது. இதனை

“ ஙூஹெ நாவூ ஹ்ராவஸஊாலெ திவூஸ_தூ ராரஹ ஊெ_தார ஃகா |

“ வீட்டில் சிலையாலாகிய மூர்த்தி நான்கு அங்குலத்திற்கு மேற்பட்டிருக்குமாயின் பூஜிக்கக்கூடாது.

என்று கூறிய விஷ்ணுதர்மாதி வாக்கியங்களாலறிக. இதுகாறும் பூஜிக்கக்கூடிய லிங்கஸ்வரூபம் லிங்கபரிமாணம், பிரதிமாஸ்வரூபம், பிரதிமாபரிமாணம் எனும் இவை சொல்லப்பட்டன.

இனி பூஜாக்கிரமத்தைப் பற்றிய விலக்கையும் அறிந்துகொண்டு அதனைத் தவிர்த்தலும் உசிதமெனப் பிரமாண நூற்களால் அறியப்படுகின்றது. அதாவது

ஹூஹெ லிஂஹஷ்யஂ நாவூ ஹஂஸாஉஹ்ராலஷ்யஂ தமா||
ெஷவகெ்ரூ ஷாரகாயாஹூ ராவூ ஹஂஸூ்ய ஹ்ஷயா தமா
ஶக்தித்ரயஂ தமா நாவூ ஹஂ ஹணெஶத்ரயமெவவ ||
ஷஉஶாவெஉ நாவூஹ ஜெவெ்ஷவஹஸ்ராஂவஷ்ரதிராஂ தமா |
நாவூஹ்யெஷ்தமாலெத்ஸ்யகூலெஹஊாஊஶகஂ தமா|
ஹூஹெ ஹ்ஊ ஹூலஹஹ்ர்ஷ நாவூ ஹூராவஊஜ ஹ்ராவஸூயஜெ|
வஊ தாவஸாஂஊஊஜ நாநிதஹெ ஷஹாவ ராந ாயா நுல|

வீட்டில் இரண்டுலிங்கங்களை அர்ச்சிக்கக்கூடாது. ஸாளக்கிராமங்களிலும் இரண்டை அர்ச்சிக்கக்கூடாது. துவாரகாசக்ரங்களிலிரண்டையும், இரண்டு ஸூர்யபிம்பங்களையும் மூன்று சக்திகளையும், மூன்று விநாயமூர்த்திகளையும், இரண்டு சங்கங்களையும், ஒடிந்த பிரதிமையையும், வீட்டில் அர்ச்சிக்கக்கூடாது. மத்ஸ்யம், கூர்மம், முதலிய பத்து அவதாரப் பிரதிமைகளை இல்லத்தில் அர்ச்சிக்கக்கூடாது. நெருப்பில் தஹிக்கப்பட்டவைகளையாவது, பின்னமாகவாவது உள்ளபிரதிமைகளை வீட்டில் பூஜிக்கக்கூடாது. இங்ஙனம் பூஜிக்கக்கூடாதவைகளைப் பூஜிக்கும் மனிதன் அடிக்கடி துன்பங்களையே அடைவான்.

என வாராஹபாத்துமங்களில் சொல்லப்பட்டிருக்கின்றதென நிர்ணயஸிந்து முதலிய நிபந்தன நூல்களில் நிர்ணயிக்கப்பட்டிருத்தல் காண்க. ஆனால்

“ஶாஉஹ்ராலஶிலாஹ்ரா வூஜநீயாஸவக்ரகா|
வஜ்ஜிதாஷூவிதாவாவிஶாஉஹ்ராலெ ஶிஷாயா ஹா||

ஆதலால் அதை ஈச்வராங்கமாய் வைத்துக்கொண்டு அதன் மூலமாய்ப் பரமாத்மாவினுடைய அநுக்கிரஹத்தை ஸம்பாதிக்க இயலும். ஆனது பற்றியே

"ஆபோ வா இதꣳ ஸர்வம் ஆபோ ஹிஷ்டா"

> ஈதெல்லாம் ஜலமே ஓ ஜலமே நீயே ச்ரேயஸுக்கு ஹேதுவாயிருக்கின்றாய்."

என்பது முதலிய மந்திரங்களால் வேதத்தினில் ஜலத்தைப் பரமாத்மாவின் ரூபமாகச் சொல்லப்படுகின்றது.

இனி ஸாமான்னிய ஜலத்திலும் கங்கை யமுனை ஸரஸ்வதி முதலிய நதி தீர்த்தமானது சுத்தமாயுள்ளதும் சுத்தமாகிய பூமியில் பிரவஹிக்கின்றதும் பரம பாவனராகிய மஹருஷிகளால் ஸேவிக்கப்பட்டுள்ளதும் வேதசாஸ்திரங்கள் பல கோடி காலமாய் நிலைபெற்றுள்ள இப்பரதகண்டத்திலிருப்பதாதலின் அவைகளைப் பரமமாக வேதங்களில் காணலாம்.

இனி ஜலத்திலும் மற்ற வஸ்துக்களின் ஸம்பந்தத்தால் அசுத்தமெனும் புத்தியுதிக்கக்கூடும். அவ்வசுத்தத்தன்மை என்பதுசிறிதும்ஸம்பந்தியாததும் ஸகல அசுத்தங்களையும் தஹித்துச் சுத்தமாக்குவதும்ாகியஇயல்பு அக்கினிக்கிருக்கின்றமையால் அக்கினி மூலமாய்ப் பரமாத்மாவை வழிபடுதல் மிகவும் உசிதமென்று அறியப்படுகின்றது. இவ்வுண்மைபற்றியே அக்கினியைப் பரமாத்ம ஸ்வரூபமென வேதங்களில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. மிகவும் சுத்தவஸ்து

---

> ஸாளக்கிராமசிலை சக்ரத்தோடு கூடியது ஒடிந்திருப்பினும் பூஜிக்கத் தக்கது. ஸாளக்கிராம சிலையானது துணுக்கைகளாய்க் கண்டிக்கப்பட்டிருந்தாலும் அல்லது பிளக்கப்பட்டிருக்கினும் சுபமேயாம்.

என வாராஹபாத்மங்களில் சொல்லப்பட்டிருக்கின்றமையால் பின்னமாயிருத்தல் முதலிய மாறுபாடுகளை யடைந்திருப்பினும் ஸாளக்கிராமம் பூஜிக்கத் தக்கதேயாம்.

அன்றியும் எந்தெந்த வருணத்தார் எந்தெந்த முறையின்படி பூஜிக்கவேண்டுமென்பதைப் பற்றியும் நன்கறிந்துகொண்டே சாஸ்திரவிதியை மீறாமல் பூஜிக்கவேண்டும். நிர்ணயஸிந்து ஹேமாத்திரி முதலிய நூல்களை நன்காராய்ந்து குரு பரம்பரையின் வழி அறிந்துகொண்ட பெரியோர்களின் மூலமாக அவ்விஷயத்தை நன்கறிந்துகொள்ளத் தக்கது. அன்றியும் ஸாளக்கிராமத்தின் மூலமாகவே இறைவனை யாராதிக்கவேண்டுமென்றாவது, அல்லது பாணலிங்கத்தின் மூலமாகவே யாராதிக்கவேண்டுமென்றாவது, பஞ்சாயதன பூஜையையே செய்யவேண்டுமென்றாவது, நியமமில்லை.

லிங்கமாத்திரத்தில் சிவமாத்திரபாவனையைச் செய்து ஆராதிக்கலாம். அல்லது ஸாளக்கிராமமாத்திரத்தில் ஹரிமாத்திரபாவனையைச் செய்து பூஜிக்கலாம். அல்லது பஞ்சாயதனத்தை ஆராதித்தும் வழிபடலாம். எதன் மூலமாய் ஆராதித்து வழிபடினும் இது ஸர்வாந்தர்யாமியாகிய இறைவனுக்கு ஓர் அங்கமே என்றும் இதன் மூலமாய் நாம் இறைவனருளைப்பெறலாம் என்றும் பாவனையைக் கைக்கொள்ளவேண்டும்.

வின் மூலமாக உபாஸித்து வழிபடுதல் மிகவும் சுத்தருக்கே தகுமாதலின் சுத்தமான குணம் பொருந்தியவரும் சுத்தமான ஆகாரம் முதலியவைகளை உடையவரும் சுத்தமான இடங்களில் ஜனித்தவருமாகிய பெரியோர்களின் வம்சத்தில் தோன்றிய ஓர் சிலரே அக்கினி மூலமாய் ஈச்வரனை உபாஸித்தலாகிய ஔபாஸநாக்கிஹோத்திரங்களைச் செய்யத்தக்கவரென நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இனி ஆதித்த மண்டலத்தை ஈச்வரனுய் வேதம் சொல்லியிருத்தலின் மர்மத்தை இவ்விதமறிக.

இங்கிருந்து நமது பார்வைக்கு ஸூர்யன் ஓர் தீச்சுவாலை போலக் காணப்படினும் உண்மையில் அம்மண்டலமானது அக்கினியம்சம் விசேஷமாய் அமைந்ததும் மற்ற பூதாம்சங்கள் சற்றுக் குறைவாக இருப்பதுமாகிய லோகமேயாம். அவ்விடத்தின் பூதாம்சங்களின் அமைப்புக்குத் தக்கபடி அக்கினியம்சம் விசேஷமாயமைந்துள்ள சரீரமுடைய ஜீவர்கள் அங்கு இருக்கக்கூடும் என்பதும் யுக்தமே. இனி அம்மண்டலமானது தேவர் மஹரிஷிகள் முதலிய புனித புருஷர் வஸிக்குமிடம் என்பதும் நமது பூர்வக்ரந்தங்களில் காணலாம். இங்ஙனம் வஸிக்கும் ஜீவர்களின் நிலமையாலும் ஸ்வபாவ அம்சக்கிரமத்தினுலும் பரமபாவனமாகிய லோகமாகையால் அது எங்கு சென்ருலும் உயரத்தில் பிரத்தியக்ஷமாயும் காணக்கூடிய வஸ்துவாதலால் அதுவும் பரமாத்மாவுக்கு ஓர் சுத்தமாகிய அங்கமாதலால் அதனில் ஈச்வரபாவனை நன்ருய் நிலைபெறுமென்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை. இவ்வுண்மைகொண்டே அதனையும் பரம்பொருளின் ஸ்வரூபமாக வேதத்தினில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இங்ஙனம் அங்கியும் அரூபனுமாகிய பரமாத்மாவினிடம் மாந்தர் மனஸைச் செலுத்துதலும் பூஜித்து வழிபடுதலும் அதனுல் வியாபிக்கப்பட்டுள்ள யாதானும் ஓர் அங்கமின்றி நேரில் உபசரித்துப்பிரஸாதத்தைப் பெறுதல் இயலாதென்பது கொண்டே பரம்பொருளின் உபாஸனையின் பொருட்டு, சுத்தாங்கமாயுள்ள ப்ருதிவி ஜலம் அக்கினி முதலிய பொருள்களைப் பரமாத்ம ஸ்வரூபமாக வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. ப்ரும்மாண்டத்தை அங்கமாய்க்கொண்ட இறைவனுக்குப் பிரிதிவி ஜலம் முதலிய பூதங்களும் அவைகளின் விகாரங்களாகிய ஸாளக்ராமபாணலிங்காதிகளும் அவயவங்களே என்றும் அங்கியின் பிரஸாதத்தின் பொருட்டு அங்கத்தையே உபசரிக்கவேண்டுமென்றும் அறிந்துகொள்ளவேண்டிய மர்மத்தைச் சிறிதுமறியாமலே எவ்வளவுகாலம் உபாஸித்தாலும் இறைவனருளுக்கு ஆளாவது துர்லபமேயாம். வேதார்த்த மர்மங்களை நன்குணர்ந்தவரும் சாஸ்திரீயமாகிய வரம்பை மீறதவர்களும் ஸதாசாரங்களையே கைக்கொண்டவர்களுமாகிய ஈச்வரபக்தர்களிடமும் ஸாளக்கிராமம் லிங்கம் முதலியவைகளில் போலவே ஈச்வரபாவனை செய்து பூஜிக்கலாம்.

இனிப் பெரியோர்கையில் ஓர் நல்ல பழத்தைக்கொடுத்து மிகவும் உபசரித்து அவரது கன்னத்தில் ஓர் அறையை அறைந்தால் அது அப்பெரியோருடைய அநுக்கிரஹத்திற்கு எப்படி ஏதுவாகாதோ அப்படியே லிங்கம், பிரதி

மை முதலிய யாதானும் ஒன்றை மிகவும் சிரத்தையுடன் பூஜித்துக்கொண்டு பிறஜீவர்களுக்கு யாதானும் ஹிம்ஸையையும் செய்துகொண்டிருப்பவர் இறைவனுடைய திருவருளுக்கு ஆளாவது மிகவும் துர்லபமேயாம். ஆதலால் ஜீவஹிம்ஸையைச் சிறிதும் செய்யாமல் யாதானும் ஓர்சுத்தவஸ்துவில் இறைவனையாராதிக்கவேண்டுமென்பதாம். அன்றியும் ஸ்தம்பம் எனும் அணுப்பரிமாணமுடைய சிறிய பூச்சி முதல் ப்ரும்மனீறாகிய ஸகல ஜீவர்களின் உள்ளத்திலும் அந்தர்யாமியாயிருக்கும் ஸர்வக்ஞனும் ஸர்வசக்தனுமாகிய இறைவனே சிவவிஷ்ணுவாதி தேஹங்களை எடுத்துப் பக்தகோடிகளை அருளுவோனாதலால் சிவனைத் தூஷித்துக்கொண்டு விஷ்ணுவை யாராதித்தலும் விஷ்ணுவைத் தூஷித்துக்கொண்டு சிவாராதனை செய்தலும், தாம் ஆராதிக்கும் தெய்வத்தையே துவேஷிப்பதாகின்றமையால் அவ்விறைவனுடைய அநுக்கிரஹத்திற்கு ஆளாக முடியாது. ஈச்வரனுல் திவ்வியசக்தி மஹிமையால் எடுக்கப்படும் சிவமூர்த்தி பேதங்களும் ஹரிமூர்த்தி பேதங்களும், தேவர், மனிதர், திர்யக் எனும் மூவகை ஜீவர்களும், பிரிதிவி ஜலாக்கினியாதி பூதங்களும், ஜீவருக்குக்கைகால் முதலிய அவயவங்கள் போலவே ப்ரும்மாண்ட சரீரியாகிய இறைவனுடைய தேஹத்திற்கு அங்கங்களேயாதலால் இவ்மூவகைப் பொருள்களிலும் ஈச்வரபாவனை விதிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வுண்மையே

'𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌜𑌗𑌦𑍇𑌤𑌚𑍍𑌚𑌰𑌾𑌚𑌰𑌂"

> தேவதேவனான இறைவனுக்குச் சராசரமாகிய இவ்வுலகம் தேஹமே (விக்ரஹமே) யாம்"

என்பதாதி ஸ்ம்ருதி வாக்கியங்களாலும்

"𑌭𑍂𑌰𑌮𑍍𑌭𑌾𑌂𑌸𑍍𑌯𑌨𑌲𑍋𑌽𑌨𑌿𑌲𑍋𑌽𑌮𑍍𑌬𑌰𑌮𑌹𑌰𑍍𑌨𑌾𑌥𑍋 𑌹𑌿𑌮𑌾𑌂𑌶𑍁𑌃
𑌪𑍁𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌾𑌤𑌿 𑌚𑌰𑌾𑌚𑌰𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑌿𑌦𑌂 𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌯𑌷𑍍𑌟𑌕𑌂 ।

> பூமி ஜலம் அக்கினி வாயு ஆகாசம் சூர்யன் சந்திரன் புமான் எனும் சராசரங்களாகிய இவை யெட்டும் எவனுக்குத் தேஹங்களாயிருக்கின்றனவோ"

எனும் பகவத்பாத ஸ்வாமிகள் முதலிய ஆன்றோர்களின் வாக்கியங்களாலும் அறியத்தக்கது. சூரியசந்திர மண்டலங்கள் புண்ணிய புருஷர்கள் வஸிக்குமிடமாகவும் லோகப்ரகாச ஹேதுவாகவும்காணப்படுகின்றமையால் அவைகளும் அங்ஙனமே வேதவேதாங்கங்களை யோதியறிந்து அவ்வழி நடக்கும் பெரியோர்களும் ஈச்வரனுக்குச் சுத்தாங்கங்களாக உபாஸகருக்கு பாவனை நன்கு உதிக்கும் என்பதுகொண்டே இவை மூன்றையும் மற்றஐம்பூதங்களோடு சேர்த்து அஷ்டமூர்த்திகள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இவ்விதம் ப்ருதிவி ஜலம் அக்கினி முதலியவைகளை ஸர்வாந்தர்யாமியாகிய இறைவனுக்கு விக்கிரஹங்களாய்க்கொண்டு அவைகளின் மூலமாய் இறைவனையாராதித்தலைப் போதிக்கும் வேதங்களில் விக்ரஹாராதனமே சொல்லப்படவில்லையெனத் தற்காலம் போதிக்கத் தலைப்படுவோர் முழுப்பூஷணிக்காயைச்சோற்றுப்பருக்கையில் மறைக்க முயற்சிப்பவரே என்றறிக.

இங்கு மற்றும் ஓர் உண்மை யறியத்தக்கது. அதாவது இறைவனது ஆக்ஞையால் நடைபெற்றுவரும் பிரபஞ்சத்தில் அடங்கிய ஜீவர்கள் உத்தமர் மத்திமர் அதமர் என மூவகையோராவர். பகுத்தறிவிராத பசுபக்ஷி, கிருமி, கீடம், முதலிய பிராணிகள் அதமர்களாம். பகுத்தறிவுடைய பிராணிகளான மனித வர்க்கமே மத்திமமாம். புண்ணிய உலகில் வஸிக்கின்றவர்களாகிய தேவர் ருஷிகள் முதலியவர் உத்தமர்களாம். உத்தமர்களாகிய அப்புண்ணிய ஜீவர்களும் ஆதிகாரிகர், பிராஸங்கிகர், என்றிருவகையோராவர். ஆதிகாரிகர்களெனின், ஸவர்க்க லோகம் முதலிய அப்புண்ணிய உலகத்தில் அவாந்தர கல்ப்பாதியிலேயே தோன்றி அங்கேயே வஸித்துக்கொண்டு ஈச்வரனால் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட அதிகாரத் தொழில்களைச் செய்துகொண்டிருப்பவர்களாகிய வஸுக்கள் ருத்திரர் ஆதித்தியர் ரிஷிகள் ஸித்தர் முனிவர் முதலியவர்களாம். ப்ராஸங்கிகர்களெனின் இங்கு மனிதராய்ப் பிறந்து புண்ணியகர்ம உபாஸ்திகளைச் செய்த விசேஷத்தினால் புண்ணிய உலகம் சென்று அங்கு அதன்பயனை அனுபவிப்பவர்களாம். பூர்வ கல்ப்பத்தில் செய்த தபோ விசேஷத்தால் இந்தக் கல்ப்பாதியிலேயே ஸ்வர்க்கம் சென்று வஸுபதம் ருத்திரபதம் ஆதித்தியபதம் முதலிய அதிகாரப்பதவியில் அமர்ந்துள்ளவரே ஆதிகாரிகள் அல்லது ஆஜான தேவர் என்றும், உலகம் நடைபெற்று வரும் கல்ப்பமத்தியில் வேள்விதானம் முதலிய இஷ்டாபூர்த்தாதி கர்மங்களைச் செய்த விசேஷத்தினால் அவைகளின் பயனாகிய இன்பங்களைப் புசித்துத்திரும்ப ஸ்வர்க்கம் சென்றவர் கர்மதேவர் அல்லது பிராஸங்கிகர் என்றும் அறியத்தக்கது. ப்ரும்மதேவன், ஸநகாதியர், நாரதர் முதலிய தேவருஷிகள், சப்தருஷிகளெனும் ப்ரும்மருஷிகள், பதினான்கு மனுக்கள், ப்ருஹஸ்பதி, இந்திராக்கினி முதலிய திக்பாலகர், ஸமுத்திரம் நதி கிரி முதலியவைகளின் அதிஷ்டான தேவர்கள் முதலிய ஸகலரும் புண்ணிய புருஷர்களாகிய ஆஜான தேவர். ஆதலின் அவர்களின் மூலமாயும் ஈச்வராராதனை செய்வதும் ஈச்வராநுக்ரஹத்தைப் பெறும் வழியென்பதுகொண்டே, வேதத்தில் வருணன், அக்கினி, வாயு, ஸூர்யன், ஸாவித்ரீ, வஸுக்கள், ருத்திரர், ஆதித்தியர், ஸோமன் அல்லது சந்திரன், இந்திரன், அச்வினிதேவர், ஸித்தர் ஸாத்தியர் முதலியவர்களைத்தெய்வமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

சங்கை: அதாவது

"[illegible]"

[illegible]

"கதமேவஸவ இதி அக்நிஸ்ச ப்ருதிவீச வாயுஸ்சாந்தரிக்ஷஞ்சாதித்யஸ்ச த்யௌஸ்ச சந்த்ரமாஸ்ச நக்ஷத்ராணிசைதே வஸவ ஏதேஷு ஹீதம் ஸர்வம் ஹிதமிதி தஸ்மாத் வஸவ இதி"

"வஸுக்கள் யாவரெனின், பிருதிவீ அக்கினி வாயு ஆகாசம் ஆதித்யன் த்யௌ: (பிரகாசமாகிய வெளி) சந்திரன் நக்ஷத்திரங்கள் ஆகிய இவைகளே (அஷ்ட) வஸுக்களாம். இவைகளிலேயே இங்கு (வஸு) ஸகல பொருள்களும் நிலைபெற்றிருக்கின்றனவாதலின் வஸுக்களென்பதாம்"

"ருத்ரரர் யாவரெனின், இச்சரீரத்திலுள்ள பிராணன், அபானன் முதலிய பத்துப் பிராணபேதங்களும் பதினொன்றுவதாகிய ஆத்மாவும் சேர்ந்து ருத்ரரென்பவையாம். இவைகள் இச்சரீரத்தினின்றும் வெளிப்படும்போது (ரோதனம் செய்யச் செய்கின்றமையால்) கதற அடிக்கின்றமையால் இவைகளேருத்ரரென்பவையாம்."

"இனி ஆதித்தியர்யாவர் எனின்வருஷத்தில் அடங்கிய பன்னிரண்டு மாஸங்களேயாம். இவையெல்லாவற்றையும் இம்மாஸங்களே ஆதானம் செய்துகொண்டு (கிரஹித்துக்கொண்டு) சலிக்கின்றன. ஆதலின் ஆதித்தியர் என்பதாம்"

கதம இந்த்ர: கதம: ப்ரஜாபதிரிதி ஸ்தநயித்நுரேவேந்த்ரோ யஜ்ஞ: ப்ரஜாபதிரிதி"

"யார் இந்திரன், ப்ரஜாபதியாவர், எனின் மேகமே இந்திரன் யக்ஞமே பிரஜாபதி"

என ப்ருஹதாரண்ணியோபநிஷதம் நான்காமத்தியாயம் ஒன்பதாம் ப்ராம்மணத்தில் வஸு ருத்திராதித்திய இந்திர ப்ரஜாபதிகள், இங்குள்ள பிரிதிவியாதிகளையும் பிராணுபானுதிகளையும் மாஸங்களையும் மேகவேள்விகளையும் தவிர வேருக எங்கேயோ இருக்கின்றனர் என்பதில்லை எனச்சொல்லப்பட்டிருக்கின்றதே! இங்ஙனமுள்ள ச்ருதிக்கு விரோதமாய் வஸு ருத்திராதிதேவர்கள் வேருக எங்கேயோ அதிகாரப் பதத்தில் அமர்ந்த புண்ணியபுருஷர்களாயிருக்கின்றனர் என்று சொல்லியது எப்படிப்பொருந்தும்? என்பதாம். இச்சங்கை உபநிஷதங்களைப் படித்தவர்களுக்கும் நிகழும். ஆதலின் இதனுண்மையை நிரூபிப்பாம்.

இந்தச் சுருதியினுல் வஸு ருத்திராதிகள் வேருக இல்லை என்பது ஸித்தியாகாது. எனெனின், பிரிதிவி அக்கினி முதலியவைகளை வஸுக்களாகவும், பிராணுதிகளை ருத்திரர்களாகவும், மாஸங்களை ஆதித்தர்களாகவும் மேகயாகங்களை இந்திரப் பிரஜாபதிகளாகவும் உபாஸிப்பதன் பொருட்டு ஔபசாரிகமாகவே சொல்ல இந்த ச்ருதிகள் பிரவர்த்தித்திருக்கின்றன என்பதே இங்குள்ள மர்மம். இதனை விடுத்து இந்தச் சுருதியினுல் இவைகளைத்தவிர வேருக வஸு ருத்திராதிகளில்லவேயில்லையெனக் கொள்வோமாயின், இதேயுபநிஷத்தில்

"வாகேவர்க்வேதோ மநோ யஜுர்வேத: ப்ராண: ஸாமவேத:"

"வாக்கே ருக்வேதம் மனம்யஜுர்வேதம் ப்ராணனே ஸாமவேதம்

என்று சொல்லப்படுகின்றதே, இதைக்கொண்டு வேதமானது வாக்கிய வடிவமாய் வேறாக இல்லையென்றும் வாக்குமன ப்ராணன்களே என்றும் கொண்டு, பேசும்பிராணிகளெல்லோருக்கும் இயல்பாகவேதம் கிடைத்திருக்கின்றமையால் ஒருவருக்கும் தனியே வேதாத்தியயனம் செய்யவேண்டியதில்லை எனக்கொள்ளலாமா? அதுமட்டுமல்லவே

உநவவஹி தாவாஜூா தாவு ாணஃவு ஜா"

"மனமே பிதா, வாக்கு மாதா, ப்ராணன் பிரஜை"

என்றும் அதே உபநிஷதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதே. அந்தச் சுருதியைக்கொண்டு தாய் தந்தை புதல்வர் என்பவர்களை இவைகளுக்கந்நியமாய் இல்லவேயில்லை எனக்கொள்ளலாமா? கூடாதன்றே; ஆதலால் இம்மாதிரியான ச்ருதிகளை உபாஸனையின் பொருட்டு ஔபசாரிகமாகவே பிரவர்த்தித்தவை என்றே நிர்ணயித்துக்கொள்க. உண்மையிதுவாதலால் ஆதிகாரிக தேவர் எனும் ஓர் வகையோர் இருக்கின்றனர் என்பது நிர்ணயமே. ஆதலின் அவர்களை வேதத்தில் போற்றியிருத்தலில் உள்ள உண்மையை அறியாமல், வேதம் பித்தர் புலம்பல் போன்றதெனத் தற்காலத்தவர் கொள்வது ஆராய்ச்சியின்மையே என்றறிக.

இனி இந்தியாவில் ஸிந்து (Indus) நதிக்கரையினில் ஆரியர் வியாபகப்பட்ட சிலகாலத்துக்குப் பின்னரே அதாவது 3900 வருஷங்களுக்கு முன் வேத மேற்பட்டதென்றும் அக்காலம் பிராமணாதி ஜாதி பேதம் சிறிதுமில்லையென்றும் ஜனங்களுக்குப் பொதுவில் விசாஸ் எனும் பெயரே வழங்கி வந்தது என்றும் வேதமியற்றப்பட்ட சில காலத்திற்குப் பின்னரே பிராம்மணர் முதலிய ஜாதிப் பிரிவினையை ஆரியர் கற்பித்துக்கொண்டனர் என்றும் (R. C. Dutt) சொல்லியதைச் சற்று கவனிப்பாம். அவர் சொல்லியபடி வேதகாலத்தின்பிறகே ஜாதி பேதமேற்பட்டது என்பது உண்மையானால், வேதத்தில் ஜாதிப்பிரிவைக் குறிக்கும் பிராமணர் முதலிய சொற்கள் இருப்பதற்கு எதுவில்லையன்றே. ஆனால் உபநிஷதம், ப்ராம்மணம் ஆரண்யகம், புருஷஸூக்தம் முதலியவைகளில் பிராம்மணாதி ஜாதிப்பிரிவினையைக் குறிப்பனவாகிய பிராம்மணன், க்ஷத்திரியன், என்பது முதலிய சொற்கள் ஏராளமாய்க் காணப்படுகின்றனவே. அதற்குக் கெதியாது சொல்லுவது? இனி உபநிஷதம் ப்ராம்மணம், ஆரண்யகம் முதலியவை வேதத்தைச் சேர்ந்தவையல்ல. வேதமேற்பட்ட காலத்திற்குப் பின்னரே அவை யியற்றப்பட்டனவென

Each veda again had commentaries and dogmatie explanations compiled by generations of priests, and these commentaries are known as the Brahmanas. Similarly each veda had other treati se compiled for the use of those who retired to forests for contempla. tion, and treatises on forest life are known as Aranyakas. It is in these last named works that we generally find those remarkable compositions known Upanishads.

எனும் பாராவினுல் சொல்லப்பட்டிருக்கின்றமையால், உபநிஷதம் ப்ராம்மணம் முதலியவைகளில் பிராம்மணர் முதலிய சொற்கள் வழங்கப்பட்டிருத்தலால் R. C. Dutt சொல்லியது அநுசிதமாகாது எனச்சிலர் சங்கிக்கக்கூடும். இதுவும் தவறேயாம்.

உண்மையில் உபநிஷதம், ப்ராம்மணம், ஆரண்யகம், புருஷ ஸூக்தம் எனும் இவைகள் வேதமே என்பதில் சிறிதும் சங்கைக்கிடமில்லை. ஆனுல் R. C. Dutt சொல்லியபடியே வைத்துக்கொண்டு கவனித்தாலும், ஜாதி பேதம் சிறிதுமிராதகாலத்தில் ருக்வேதமந்திர ஸம்ஹிதாபாகம் மாத்திரம் பூர்வமே இயற்றப்பட்டது என்று அவர் சொல்லியிருக்கின்றமையால் ருக்வேதமந்திரஸம்ஹிதா பாகத்தில் பிராம்மணர் முதலிய சொறகள் வழங்கப்படுவதற்கு ஏதுவில்லை என்றேற்படுகின்றது. ஆதலால் ருக்வேதஸம்ஹிதையில் அவ்வாறு பிராம்மணரென்பது முதலிய சொற்கள் காணப்படுமாயின் அவர் வேதத்தைப்பற்றி எழுதியகாலவரை பிசகென்றேற்படுமல்லவா! உண்மையில் ருக்வேத மந்திரபாகத்திலும் பலவிடங்களில் பிராம்மணன் முதலிய ஜாதிப்பிரிவினையைக் குறிக்கும் சொற்கள் சொல்லப்பட்டிருக்கின்றமையால், வேதத்தைப்பற்றி எழுதிய அவரது கோட்பாடு அங்கிகரிக்கத் தக்கதல்ல என்று நிர்ணயிக்கப்படுகின்றது. இனி அங்ஙனம் சொல்லப்பட்டிருக்கும் மந்திரங்கள் யாவை என்பதை உதஹரிப்பாம்.

“ஸம்வத்ஸரம் ஶஶயாநா ப்ராஹ்மணா வ்ரதசாரிணঃ”

எனும் ஐந்தாம் அஷ்டகம் ஏழாம் மண்டலம் நூற்று மூன்றுவது ஸூக்தத்திலுள்ள முதலாவது மந்திரமாகிய இந்தருக்கில் “ப்ராம்மணா:” எனும் வியக்தமாகிய சொல்லைக்காண்க. ஸாயணுசாரியரால் எழுதப்பட்டிருக்கும் பாஷ்யத்திலும் இதன் பொருளை விளக்கும் ஸந்தர்ப்பத்தில்

“வ்ரதசாரிணோ வ்ரதம் ஸம்வத்ஸரஸத்ராத்மகம் குர்வாணா ஸ்தோத்ரோ ப்ராஹ்மணா இவ”

எனும் வாக்கியத்தால் பிராம்மணர்கள் என்றே அந்தச்சொல்லுக்குப் பொருள் கொள்ளப்பட்டிருத்தல் காண்க. இன்னம்

“ப்ராஹ்மணாஸோ அதிராத்ரே ந ஸோமே ஸரோ ந பூர்ணமபிதோ வதந்தঃ”

எனும் அதே ஸூக்தத்திலுள்ள ஏழாம் மந்திரத்திலும் பிராம்மண எனும் சொல் உதகரிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும்

“ப்ராஹ்மணாஸஸ்ஸோமிநோ வாசமக்ரத ப்ரஹ்ம க்ருண்வந்தঃ பரிவத்ஸரீணம்”

எனவும் அதே ஸூக்தத்திலுள்ளமந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இதற்கு ஸாயணாசார்ய பாஷ்யத்திலும்

“ஸோமிநঃ ஸோமவந்தঃ பரிவத்ஸரீணம் ஸாம்வத்ஸரிகம் ஸோமயாகநிஷ்பாதகம் ப்ரஹ்மஸ்தோத்ரம் க்ருண்வந்தঃ ப்ராஹ்மணாஸঃ ப்ராஹ்மணா இவ”

"என்று பொருள் விளக்கப்பட்டிருக்கின்றது. தவிரவும் ஆறும் அஷ்டகம் எட்டாம் மண்டலம் முப்பத்தேழாம் ஸூக்தம் முதலாவது ருக்காகிய

"வெ஬ஂஷ்ஹவ்ருதஃ஦ஶமெ஧ாவியஶ்வஸூநஶீஙவீவ தெஹஂஷ் விஶாவிராதிஹிஃ".

எனும் மந்திரத்திலும் ப்ரஹ்ம எனும் சொல்லால் ப்ராம்மணரைச் சொல்லியிருத்தலுமறிக. இதற்கு ஸாயணாசார்ய பாஷ்யத்தில்

"ஹெஸவீவதெஹஂஷ் கூவாவ்ருதஃ஦ஶமெஷஸாஂஹாஙெஷஹஷாஂஷ்ஹஹரானுஶ்ஹணானுவிஶாஹிஃஸவாஹிஃ ரக்ஷாஃ வ்யாவிய"

எனும் வாக்கியங்களாலறிக.

சங்கை, இதுகாறும் ருக்வேத மந்திரத்தில் ப்ராம்மண எனும் சொல்மாத்திரம் உதகரிக்கப்பட் டிருத்தலேயன்றோ நிரூபிக்கப்பட்டது. க்ஷத்திரிய முதலிய சொற்களும் சொல்லப்பட்டிருக்குமாயின் அச்சொற்களை ஜாதிபேதத்தைக் குறிப்பவையெனக் கொள்ளலாம். அங்ஙனமின்றி ப்ராம்மண எனும் சொல்மாத்திரம் உதகரித்தலைக்கொண்டு இவை ஜாதிபேதத்தையே குறிப்பவையென எப்படிக்கொள்ள இயலும்? எனின்

"க்ஷதஂஜிநதஸூதஜிநதஂநூநுஹதாரக்ஷாஂவிவெயதஶீவாஃ"

எனும் ஆறும் அஷ்டகம் எட்டாம் மண்டலம் முப்பத்தைந்தாம் ஸூக்தத்திலுள்ள பதினேழாவது ருக்காகிய இம்மந்திரத்தில க்ஷத்ர எனும் சொல் உதஹரிக்கப்பட்டிருத்தலைக்காண்க. இங்குள்ள க்ஷத்ர எனும் சொல்லுக்கு க்ஷத்திரியன் என்பதே பொருள் என்பதை இம்மந்திரத்திற்கு உரையாகிய

"ஹெஅஶ்விநள யூவாஂ க்ஷதஂ க்ஷதியஂ ஜிநதஂ ஓணயதஂ உத சுவிவநூநு யொஜநூநு ஜிநதஂ"

எனும் ஸாயணாசார்ய பாஷ்யத்தைக்கண்டு தெளிக அன்றியும் இதன்முன்பின் மந்திரங்களாலும் இது ஜாதிப் பிரிவினையையே குறிக்கும் சொல் என்பது பாலர்களுக்கும் விளங்கும். அதாவது

"஬்ரஹ்ஜிநதஸூதஜிநதஂயிவொஹதாரக்ஷாஂவிவெயதஶீவாஃ| ஸஜொஷஸாஉஷஸாஸூயெணவ ஸொமஂஸநூதாஶ்விநா"

எனும் மந்திரத்தில் ப்ரும்ஹ எனுஞ் சொல்லால் பிராமணன் எனக்குறிக்கப்பட்டிருத்தலாலும், இதன் பாஷ்யத்தில்

ஹெ சுஶ்விநள யூவாஂ ஬்ரஹ்ம ஬்ராஹ்மணஂ ஜிநதஂ ஓணயதஂ உத சுவிவ யிபஃ கஸாணி ஜிநதஂ ஹதஂவ ரக்ஷாஂவி சுஶீவா ராக்ஷஸாஂஶ் வெயதஂ உஷஸா ஸூயெணவ ஸஂமதள ஸூநதொ யஜஸாநஸ்ய ஸொமஂவிவதஂ"

எனும் ஸாயணசார்ய பாஷ்யத்தினாலும் அவ்வாறே நன்கு அறியப்படுகின்றமை காண்க. இம்மட்டுமல்ல இதற்கு அடுத்ததாகிய

"யெ நூ௨ஜி-ஹ்ந தூ௨ு-தஜிஹ்ந தா விஶொஹ தாஂரக்ஷாஂஸி வெ ய தஶீவா:"

எனும் மந்திரத்தில் விச: எனும் சொல்லால் வைசியர்களைச் சொல்லியிருத்தலும் அறியத்தக்கது. இதற்கு

"ஹெ அஜுிநள யெ நூ௨ஜிஹ்நதாஂஉ த சுய வ விஶொ வெஶ்யாஂ ஶுஜிஹ்நதாஂ"

எனும் ஸாயணசார்யபாஷ்யத்தில் வைசியர்களென்று பொருள் விளக்கியிருத்தலைக்காண்க.

இவ்வாறு இன்னம் ஏராளமாய்க் காண்பிக்கக்கூடும். ஆயினும் விரிவஞ்சி விடுகின்றனம். இங்ஙனம் உண்மை யிவ்விதமிருக்க, பிராமணாதி ஜாதிபேதம் ஸமீபகாலத்திலேயே கற்பித்துக்கொள்ளப்பட்டதாதலால்அதற்கு முன்னமே ரற்பட்டுள்ள வேதத்தில் ஜாதிபேதத்தைக் குறிக்கும் சொற்கள்காணப்படவில்லை என்றும் வேதமும் நமதுமுன்னோர்களால் சிலகாலத்திற்குமுன்னர் இயற்றப்பட்ட நூலே யன்றி வேறல்ல என்றும், தற்காலம் பலர் போதிக்கக் கிளம்புவதற்குக் காரணம் வேதசாஸ்திரங்களில் ஸரியான ஆராய்ச்சியைச் செய்வதற்குஇடமிராமற் போனதேயாம் என்க.

இனி வேதம் 3500 அலலது 4000 வருஷங்களுக்கு முன்னரியற்றப்பட்டிராவிடினும் ஸு௬மார் பதினாயிரம் வருஷங்களுக்குமுன் ரிஷிகளெனும் நம்முன்னோர்களால் இயற்றப்பட்ட நூலே எனவும், வேதம் அநாதியென்பதானது அதனர்த்தம் பூர்வமே யுள்ளதுபற்றி அதனையே நோக்கிச் சொல்லப்பட்டதன்றி ரிஷிகளாலியற்றப்பட்ட வாக்கியங்களை நோக்கிச் சொல்லப்படுவதல்லவெனவும், வாக்கியங்களை நித்தியமெனக்கொண்டால் வேதசாகைகளுக்குக் காடகம்,தைத்திரீயம், எனக்கடர், தித்திரி முதலிய ரிஷிகளின் ஸம்பந்தமான பெயர் வழங்கப்படுவதற்கு நியாயமில்லையென்றும் சொல்லி அதற்குப் பிரமாண மிதுவே எனச்சில வாக்கியங்களையும் காட்டி வேதம் ஈச்வரனால் சொல்லப்பட்டதல்லஎனவும் அநாதியல்ல எனவும் மற்றும் சிலரால் எழுதப்பட்டிருக்கும் புஸ்தகங்களும் நம் சாஸ்திரத்தில் ஸரியான ஆராச்சி யில்லாமலே எழுதப்பட்டவையென நிச்சயமாய்ச் சொல்லலாம். அநாதியென்பது அர்த்தத்தை நோக்கியேயன்றி வாக்கியங்களை நோக்கியதல்லவெனின், வேதார்த்த நிர்ணயத்திற்கென எழுந்த பூர்வமீமாம்ஸாக் கிரந்தத்தில் இப்போதுள்ள வேதவாக்கியங்களே அநாதி நித்தியமென

"ஔத்பத்திகஸ்து ஶப்தஸ்யா஽ர்தேந ஸம்பந்த:"

எனத்தொடங்கி ஜைமினிமாமுனிவரால் உபதேசிக்கப் பட்டிருத்தல் எப்படிப் பொருந்தும் ? அதனைக் குற்றமென்று கொள்ளும்படியாகுமே.

அன்றியும் லோக குருவாயெழுந்தருளிய சங்கர பகவத்பாதாசார்யர்களால் ப்ருஹ்மஸூத்ரம் முதலாமத்தியாயம் மூன்றாம் பாதத்தில் தேவதாதிகரணம்

எனும் அதிகரணத்தில் வேதவாக்கியமே நித்தியமென நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அந்த பாஷ்யத்திற்கு வியாக்கியானகர்த்தாவாகிய வாசஸ்பதிமிசிரர் முதலிய அபியுக்தர்களாலும்

"[illegible]"

" ஸர்வசக்தி ஞானங்களுடைய இறைவனாகிய பரமாத்மாவும் வேதத்திற்கு ஸ்வதந்திர கர்த்தா என்பதல்ல. பூர்வ பூர்வகல்பத்தை அநுஸரித்து பூர்வ பூர்வாநுபூர்வியையே இயற்றுகின்றானாதலால்

"[illegible]"

பரமேச்வரன் பூர்வகல்ப்பத்தில் தன்னால் சொல்லப்பட்ட வாக்கியங்களின் முன் பின் முறை மாறாமல் அந்த முறையையேயுடையதாகிய வேதராசியையும் அதன் பொருள்களையும் ஸமகாலத்தில் அறிகின்றவனாய்க் கொண்டு வேதத்தைச் சொன்னவர் ஆதலால் வேதம் பௌருஷேயமல்ல.

எனச் சாஸ்திரயோநித்வாதிகரணவியாக்கியையில் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் வேதத்தின் சொற்றொடர்களின் முன் பின் முறை மாறாமல் பூர்வகல்ப்ப ஸமாநாநுபூர்வியாகவே இறைவனால் இயற்றப் படுகின்றமையால் வேதத்தின் வாக்கியங்களாகிய சொற்றொடர்களே நித்தியமென நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. வேதம் நித்தியமென்பது வாக்கியத்தை நோக்கியதல்ல அர்த்தத்தையே குறித்தது எனின் இப்பெரியோர்களுடைய வாக்கியங்களைப் பிசகென்றே தள்ளவேண்டிவருமன்றோ. ஆதலால் வேதத்தின் வாக்கியமே நித்தியமென்று அறிக. இனி, காடகம் முதலிய பெயர்கள் வேத சாகைகளுக்கு வழங்கப்படுகின்றமையால் கடர் முதலிய ரிஷிகளாலேயே வேதமியற்றப்பட்டதெனக் கொள்ளுதலும் விசாரணைக்குறைவேயாம். கடர் முதலிய ருஷிகளால் அந்தந்தபாகம் எண்ணிறந்த பல சிஷ்யர்களுக்கு ஓதுவிக்கப்பட்டு வேதாத்தியயனஸம்பிரதாயம் வியாபகப்பட்டதாதலால் காடகம் என்பது முதலிய பெயர்கள் வேதசாகைகளுக்கு வழங்கப்பட்டு வருகின்றன என்பதே உண்மை. இங்ஙனம் அத்தியயன ஸம்பிரதாயப்பிரவர்த்தகர்களின் பெயரால் சாகை வழங்கப்படுதலைக்கொண்டு அவர்களே அந்தந்த பாகத்தை இயற்றியவரென்பது பிசகே என்றறிக.

சங்கை,

இதுகாறும் வேதம் அநாதியென்பதும் ஸ்ருஷ்டியாதியில் அது ஈச்வரனாலுச்சரிக்கப்படுவதென்பதும் விசதமாக நிரூபிக்கப்பட்டதாயினும் வேதமாவது இஃதே என அதனையறிந்துகொள்ளத்தக்க லக்ஷணம் சொல்லப்படவில்லையே!

லக்ஷணத்தைச் சொல்லாவிடில் வஸ்துவை மற்றவர் எப்படி அறிந்துகொள்ள இயலும்? ஆதலால் அதற்குறிய லக்ஷணத்தைச் சொல்லவேண்டியதவசியமா கின்றது. ஆனல் லக்ஷணம் வேதத்திற்கு ஒன்றும் பொருந்தவில்லையே! அதாவது பிரத்தியக்ஷம் அநுமானம் உபமானம் சப்தம் எனும் நான்கு பிரமாணங்களுள் கடைசியாயுள்ளது வேதம்என்பதா? அல்லது தெளிவாகிய ஞானத்திற்கு ஸாதனமாயுள்ளது வேதம் என்பதா? அல்லது அபௌருஷேயமாயுள்ள (புருஷரால் இயற்றப்படாத) வாக்கியமே வேதமென்று கொள்ளுவதா? இம்மூன்றில் ஒன்றும் பொருந்தவில்லையே! அதாவது பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களுள் கடைசியாயுள்ள சப்தப் பிராணமே வேதமெனக் கொள்ளுவோமென்றல் மனு முதலியவர்களியற்றிய ஸ்ம்ருதி முதலியவைகளிலும் அந்த லக்ஷணம் வந்துவிடும் ஆதலின் அவைகளையும் வேதமெனக்கொள்ளும்படியாகும். ஆதலால் அந்தலக்ஷணம் உசிதமல்ல. இனித்தெளிவாகிய ஞானத்திற்கு ஸாதனமாயுள்ளது வேதம் எனும் இரண்டாவதுலக்ஷணமும் முன்போலவே பாரதம் ஸ்ம்ருதி முதலிய நூல்களில் பிரவர்த்திக்கின்றமையால் அதுவுமொவ்வாது. இனி அபௌருஷேயமாயுள்ள வாக்கியங்களே வேதமெனின் பரமேச்வரனுகிய புருஷனுல் (இயற்றப்படுகின்றமையால்) உச்சரிக்கப்படுகின்றமையால் வேதம் பௌருஷேயமேயாகும். ஆனதுபற்றி அந்தலக்ஷணமும் பொருந்தவில்லை. இனிச்சரீரத்தையுடைய புருஷர்களால் இயற்றப்பட்டிராததே அபௌருஷேயமெனக் கொள்ளலாமே எனின்

'ஸஹஸ்ர ஶீர்ஷா-புருஷ꞉|

"அநேகஞ் சிரஸ்களையுடையோன் புருஷன்"

என்பது முதலிய சுருதிகளால் ஈச்வரனும் சரீரமுடையோன் என்றேற்படுகின்றமையால் அவனுல் உச்சரிக்கப்படும் வேதம் அபௌருஷேயம் என்பதற்கிடமில்லை.

இனி; கர்மாயத்தமாய் வரும் சரீரத்தையுடைய ஜீவர்களால் சொல்லப்படுவதையே பௌருஷேயம் எனக்கொண்டு அங்ஙனமாகிய தன்மை இறைவனிடமில்லையாகையால் அவனுலியற்றப்படுவதை அபௌருஷேயமென்று சொல்லலாமே எனின் அதுவும் ஒவ்வாது: ஏனெனின்

"[illegible]"

"ருக்வேதம் அக்கினியினிடமும் யஜுர்வேதம் வாயுவினிடமும் ஸாம வேதம் ஆதித்தியனிடமும் தோன்றியது.

என்பது முதலிய சுருதிகளால் கர்மவசத்தால் அக்கினியாதி சரீரத்தைப் பெற்றிருக்கும் தேவர்களாகிய ஜீவர்களிடம் தோன்றியதெனச் சொல்லப்படுகின்றமையால் என்க. இங்ஙனம் லக்ஷணம் யாதும்பொருந்தவில்லையே எனும் சங்கைநிகழும்.

ஆதலின் அதன் லக்ஷணத்தைப் பற்றிய மர்மத்தை விளக்குவாம் அபௌருஷேயம் என்பதற்குப் பொருள் வேறுவிதமாகவே உள்ளதாயினும்

மந்திரங்களும் ப்ராம்மணங்களுமாயுள்ள சப்தராசிகளே வேதமெனும் லக்ஷணத்தையே முக்கியமாய்க்கொள்க. இங்ஙனம் கொண்டால் எவ்வாக்ஷேபணைகளுக்கும் இடமிராது. ஆனதுபற்றியே ஆபஸ்தம்பர் முதலிய பெரியோர்களால்

"மந்த்ரப்ராஹ்மணயோர்வேதநாமதேயம்"

"மந்திரப்ராம்மணங்களுக்கே வேதநாமதேயமாம்"

எனும் ஸூத்ரத்தினல் வேதஸ்வரூபம் போதிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் இதுவே ஸித்தாந்தமென்றறிக.

சங்கை, மந்திரப்ராம்மணங்களே வேதமென அதன்லக்ஷணத்தைக்கொள்ளுதலும் உசிதமாகக்காணப்படவில்லை.

அதாவது மந்திரங்களின் அர்த்தத்தைக்கவனிப்போமாயின் அவைகளைப் பிரமாணமாக ஒத்துக்கொள்ள மனம் இயலவில்லையே

"ஸ்ருண்யேவ ஜர்ப்ஹரீ துர்ப்ஹரீது"

என்பது முதலிய மந்திரங்களுக்குப்பொருள் யாதுமறியப்படுவதில்லையே. பொருள் விளங்காத மந்திரம் பிரமாணமாவது எப்படி? எனுஞ் சங்கையாம்.

இஃதறிக. இம்மாதிரியான மந்திரங்களுக்கு அர்த்தம் விளங்காதிருத்தல் வாஸ்தவமே. ஆயினும் ஆகமநிருக்தங்களையும் வியாகரணத்தையும் கொண்டு தாதுக்களின் அர்த்தத்தை நன்கு பர்யாலோசித்தாலொழிய இம்மாதிரியான மந்திரங்களுக்குப் பொருள் விளங்காது. ஆனதுபற்றியே இப்படிப்பட்ட மந்திரங்களின் பொருள் யாஸ்கமுனிவரால் நிருக்தமெனும் வேதாங்கநூலில் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அதாவது இந்தமந்திரம் ஆச்விநஸூக்தத்திலுள்ளதாதலால் இங்கு அச்விநீதேவர்களே பிரதிபாதிக்கப்பட்டிருக்கவேண்டுமென்றறியக்கூடியது. அன்றியும் "ஜர்ப்ஹரீ" என்பதாக இருமைவிகுதியையுடைய சொல்லாகவுமுள்ளது. ஆதலால் ஜர்ப்ஹரீ=பாணம்செய்கின்றவர் துர்ப்ஹரீது=வதைக்கின்றவர் என அர்த்தங்கொண்டு அச்விநீதேவரே இங்குபொருள் என நிருக்தத்தினலறிக. ஆராய்ச்சி செய்யாதவருக்குப் பொருள் விளங்காதது பற்றி மந்திரம் குற்றமுடையதாகுமா? அங்ஙனமாகாதாதலின் மந்திரம் பிரமாணமே என்பது நிர்ணயம். இதனுண்மை

"ஸத꞉ பரமவிஜ்ஞானம்"

எனும் ஸூத்ரத்தால் ஜைமினிமாமுனிவரால் சொல்லப்பட்டுள்ளது.

சங்கை,

"அத꞉ ஸ்விதாஸீது³பரி ஸ்விதாஸீத்"

கீழேயுள்ளதா? அல்லது மேலேதானுள்ளதா"

என இம்மந்திரத்தினல் "கடையோ ...ள்ளனே" என்பது முதலிய வாக்கியங்களில் போல ஸந்தேகமேற்படுகின்றதேயன்றி நிச்சயம் ஒன்றும் விள

ங்கவில்லையே. நிச்சயஞானத்தை உண்டாக்காமல் ஸந்தேஹஹேதுவாகவேயுள்ள இம்மாதிரி மந்திரங்கள் எப்படிப்பிரமாணமாகும்? என்பதாகச் சங்கிக்கக்கூடும்

இனி இதனுண்மையறிக. இம்மந்திரம் ஜகத்காரணமான பரவஸ்து மிகவும் கம்பீரமாயுள்ளதென்பதைப் போதிப்பதேயாம். அதாவது இந்த வஸ்து இங்குதானுள்ளது அங்குதானுள்ளது எனவரையறுத்து நிர்ணயிக்க இயலாததென்பதுகொண்டு அங்ஙனம் பிரவர்த்தித்தறிக. இங்ஙனம் பரம்பொருளின் பெருமையை விளக்க எழுந்ததாதலால் இம்மந்திரம் ஸந்தேஹத்திற்கேதுவாகாது. ஆதலால் இம்மாதிரி மந்திரங்களும் பிரமாணமே என்றறிக.

சங்கை

"ஏக ஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே"

"ஒருவனேருத்திரன் இரண்டாவனில்லை"

"ஸஹஸ்ராணி ஸஹஸ்ரசோ யே ருத்ரா அதி பூம்யாம்।

ஆயிரக்கணக்காய் இப்பூமியில் எந்த ருத்திரர்களிருக்கின்றனரோ"

என இங்ஙனம் ஒன்றுக்கொன்று விரோதமான அர்த்தத்தையுடைய மந்திரங்களை எப்படிப்பிரமாணமாகக்கொள்ளுவது? எனச் சிலர் சங்கிக்கக்கூடும்.

இவ்வுண்மையறிக. ருத்திரரொருவரேயாயினும் ஈச்வரத்துவயோக மஹிமையால் அநேககோடி மூர்த்திகளோடு கூடியிருக்குந்தன்மை யொவ்வுமாதலின் ஒன்றுக்கொன்று விரோதமல்ல. ஆதலால் பிரமாணமே என்றறிக.

சங்கை, அதாவது.

"சத்வாரி ச்ருங்கா த்ரயோ அஸ்ய பாதா । த்வே சீர்ஷே ஸப்த ஹஸ்தாஸோ அஸ்ய । த்ரிதா பத்தோ வ்ருஷபோ ரோரவீதி ।

இதற்கு நான்கு கொம்புகளும் மூன்று கால்களும் இரண்டு தலைகளும் ஏழு கைகளும் உள்ளன. மூன்றாகக் கட்டப்பட்டிருக்கின்றது. இந்த வருஷபம் எக்காளம் போடுகின்றது"

என இம்மந்திரத்தினால் சொல்லப்படுகிறபடி ஓர் விருஷபமுமில்லையன்றோ. இப்படி அஸம்பவமான அர்த்தத்தைச் சொல்லுவதாகிய இம்மந்திரத்தைப் பிரமாணமாய் எப்படிக்கொள்ளுவது? என்பதாகச் சிலர் சங்கிக்கக்கூடும்.

இனி இதனுண்மையறிக. இங்கு யக்ஞத்தை வருஷபமாய் உருவகப்படுத்திச் சொல்லப்படுகின்றது. அதாவது நான்கு கொம்புகளென்றதனால் ஹோதா, அத்வர்யு, உத்காதா, ப்ரும்மா எனும் நால்வர்களை கொம்புகளாகவும், காலை மத்தியானம் ஸாயங்காலம் எனும் ஸவநங்கள் மூன்றுமே பாதங்களாகவும், யஜமானன் அவனது பத்நீ எனும் இருவர்களும் சிரஸ்களாகவும், காயத்ரீ முதலிய ஏழுச் சந்தஸ்களும் கைகளாகவும், ருக்வேதம் முதலிய மூன்றுவேதங்களும் பந்தநங்களாகவும் உருவகப்படுத்தி, யாகங்களுக்கும் அதன் ஸாதனங்களுக்குமுள்ள ஸம்பந்தமே போதிக்கப்பட்டிருக்கின்றது. வருஷபமென்றதினால் காமனைகளை வருஷிப்பதென்பது பொருள். எக்காளம் போடுகின்றது என்றதனால் ஸ்தோத்திரம் சாஸ்திரம் முதலிய சப்தங்களின் கோஷத்தையுடையது என்பது அறிக.

இங்ஙனம் யாகஸாதனங்களின் ஸம்பந்தத்தை த்ருஷ்டாந்தவாயிலாக விளக்க எழுந்த இம்மந்திரம் அஸம்பவமான அர்த்தத்தை யுடையதல்லவாதலின் பிரமாணமே என்க. இவ்வுண்மை ஜைமினிமாமுனிவரால்

"அவிருத்தம் பரம் சாஸ்த்ரம்"

எனும் ஸூத்திரத்தினுல் போதிக்கப்பட்டுள்ளது.

சங்கை அதாவது

"ஓஷதே த்ராயஸ்வைநம்"

"ஓஷதியே இவனை ரக்ஷிப்பாயாக"

"ச்ருணோத க்ராவாண:"

"கற்களே சிரவணஞ் செய்யுங்கள்"

என்பது முதலிய மந்திரங்களில் அசேதனமாகிய தர்ப்பையையும் கற்களை களையும் நோக்கிப் பிரார்த்தனை காணப்படுகின்றதே. இம்மாதிரியான மந்திரம் எப்படிப் பிரமாணமாகும்? என்பதாகச் சங்கை நிகழக்கூடும்.

இதனுண்மை யிதுவேயாம். அதாவது யாகத்தில் உபயோகப்படும் அசேதனமாகிய தர்ப்பையும் பிரார்த்திக்கத்தக்கதெனின் அந்த யாகம் மாந்தரைக் காத்தருளும் என்பதற்குக் கேழ்ப்பானேன் என்பதும், எதனில் கற்களும் ப்ராதஸ் ஸந்தியானுவாகங்களை ச்ரவணஞ்செய்ய இயலுமோ அதனில் வித்வான்களாகிய பிராமணர்கள் சிரவணஞ் செய்யவேண்டுமென்பதைப்பற்றிக் கேழ்ப்பானேன் எனவும் இவ்வர்த்தம் அறியப்படுகின்றமையால் இம்மாதிரி மந்திரங்களும் பிரமாணமே என்பது நிர்ணயமென்றறிக.

இங்ஙனம் மந்திரங்களைப் பற்றிய உண்மையையறிந்தால் அதன் பெருமை நன்கு விளங்கும். மந்திரபாகங்களில் குற்றமில்லையாதலால் மந்திரப்ராம்மணங்கள் வேதமெனும் லக்ஷணத்தில் சங்கைக்கிடமில்லை என்றறிக.

இனி ப்ராம்மணத்தைப்பற்றி விசாரிப்பாம். ப்ராம்மணமாவது யாதெனின் கர்மங்களில் பிரேரேபிப்பதேயாம் என்றறிக. இங்ஙனமே

"கர்மசோதநா ப்ராஹ்மணாநி ப்ராஹ்மணசேஷோ(அ)ர்த்தவாத: நிந்தா ப்ரசம்ஸா"

"கர்மசோதனை ப்ராம்மணமாம். ப்ராம்மணத்தினில் அடங்கியது அர்த்தவாதம் அது நிந்தையும் ஸ்துதியுமாம்

என்று ஆபஸ்தம்பர் முதலிய முனிவர்களால் அதன் லக்ஷணம் சொல்லப் பட்டிருக்கின்றது. ப்ராம்மணமானது விதி அர்த்தவாதம் என இருவகைப்படும். விதியானது

"அப்ரவ்ருத்தப்ரவர்த்தகம்"

பிரவர்த்திக்கவேண்டிய காரியத்தில் பிரவர்த்திக்கச் செய்வது

"அஜ்ஞாதஜ்ஞாபகம்"

அறியவேண்டிய விஷயத்தை அறியச் செய்வது
என்றிருவகையாயுள்ளது. கர்மகாண்டத்திலுள்ளவையாகிய

"ஸம்ய்ராயாம்வஷ்டா ஹிகூவார்மாயத்ராகஷிமெத்தி தாக

வளழ்யமவிக்ஷிபந்தி

" ஸந்தியில் ஸூர்யனுக் கெதிர்முகமாயிருந்து காயத்திரியினல் அபி
மந்திரிக்கப்பட்ட ஜலத்தை உயர எடுத்துவிடவேண்டும்

என்பது முதலிய வாக்கியங்கள் பிரவர்த்தக விதிகளாம்

"ஆத்மாவாஇதமேகவஏவாக்ர ஆஸீத்"

ஈதெல்லாம் ஆதியில் ஆத்மமாத்திரமாயிருந்தது

"ப்ரஹ்மவிதாப்நோதிபரம் ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம"

ப்ரும்மவித்துபரத்தையடைகின்றான் ஸத்தியமும் ஞானமும் அனந்த
முமாயுள்ளது ப்ரும்மம்

என்பது முதலிய உபநிஷத்வாக்கியங்கள் ஞாபகவிதிகளாம்.

இனி அர்த்தவாதமாவது விதியினல் விலக்கப்பட்ட விஷயத்தைமிகவும் சிலாகித்தலாவது நிஷேதத்தினல் விலக்கப்பட்ட விஷயங்களை மிகவும் நிந் தித்தலாகவாவது உள்ளவையும் பிரமாண விரோதமாகக் காணப்படுவனவுமா கிய வாக்கியங்களாம். இவ்விஷயம் ஏற்கனவே " அக்கினியழுதான் அவன்கண் ணீர் வெள்ளியாயிற்று" என்பது முதலிய திருஷ்டாந்தங்களால் விசதமாகச் சொல்லப்பட்டது. அர்த்தவாதங்களின் வாக்கியார்த்தத்தைப் பிரமாணமாகக் கொள்ளக்கூடாது. அதன் கருத்தையே பிரமாணமாகக்கொள்ளவேண்டும். இவ் விஷயம்

" விதிநாத்வேகவாக்யத்வாத் ஸ்துத்யர்த்தேந விதீநாம்ஸ்யு:

விதியோடு ஏகவாக்கியப்படுகின்றமையால் விதிகளை ஸ்துதிக்கும் மூலமாய் உபயுக்தங்களாகின்றன "

என ஜைமினி மாமுனிவரால் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. அர்த்தவா தங்களில் சாஸ்திர விரோதம், திருஷ்டவிரோதம், சாஸ்திர திருஷ்டவிரோ தம் எனமூவகையான விரோதங்கள் காணப்படுகின்றமையால் முக்கியார்த்தத் தை விடுத்து அதன் கருத்தையே பிரமாணமாய்க்கொள்ளவேண்டுமென்பதாம். இதனல் வேதத்திலுள்ள எந்த பாகங்களில் சாஸ்திர விரோதமாவது, பிரத்தி யக்ஷவிரோதமாவது, சாஸ்திர திருஷ்ட விரோதமாவது நிகழுகின்றதோ அந்த பாகங்களுக்கு அங்கு சொல்லப்படும் விதி நிஷேதங்களிலேயே கருத்தென்று அறிந்து கொள்ளவேண்டும். இதனையறியாமல் ப்ராம்மணபாகங்களைப் பிர மாணமல்ல எனச்சொல்லுவோர்களைத்தற்காலம் விசேஷமாய்க்காணலாம். இங் ஙனம் விசாரித்துப்பார்த்தவர்களுக்கு மந்திரம் ப்ராம்மணம் எனும் இரண்டு பா கங்களடங்கிய வேதத்தில் எக்குற்றத்திற்கு மிடமில்லை என்பது விளங்குமாத

லின் மந்திரப்ராம்மணங்களே வேதம் என்பது குற்றமற்ற லக்ஷணமென் றறிக.

சங்கை, இனி வேதத்தில் ப்ரும்ம யக்ஞப்பிரகரணத்தில்

"ஸ்ரூஹ்ணாநிதிஹாஸாநு பு்ராணாநிகல்பாநுமாயாநா ராஶம்ஸீஃ"

ப்ராம்மணங்களையும், இதிஹாஸங்களையும், புராணங்களையும் கல்ப்பங் களையும், காதைகளையும், நாராசம்ஸிகளையும்

என்பது முதலிய சுருதியில் இதிஹாஸாதிகள் சொல்லப்பட்டிருக்கின்ற னவே! அநாதியாகிய வேதத்தில் ஓரோர்காலத்தில் தோன்றுவனவாகிய இதி காஸபுராணாதிசப்தங்கள் வழங்கப்பட்டிருத்தல் எப்படிப்பொருந்தும்? எனும் சங் கைசிலருக்கு நிகழும்.

இவ்வுண்மையை நிரூபிப்பாம். இதிகாஸ புராணங்கள் முதலியவை கல்ப் பங்தோறும் ஏற்படுவனவேயன்றி ஓர் கல்ப்பத்தில் மாத்திரம் ஏற்படுவன என்ப தல்ல. ஏதோ ஓர் கல்ப்பத்தில் மாத்திரம் நடந்ததும் மற்றகல்ப்பங்களில் நட வாததுமான விஷயத்தை வேதம் சொல்லுமாயின் அது குற்றமாகுமேயன்றி ஸகல கல்ப்பங்களிலும் இந்திராதி ஆதிகாரிக தேவர்கள்போலவே பொதுவாய்த் தோன்றி நடைபெறுவனவாதலின், அவைகளின் பெயர் வேதத்தில் சொல்லப் பட்டிருத்தலால் வேதம் அநாதியென்பதற்குச்சிறிதும் ஹானியில்லை என்பதே உண்மை. ஆயினும் இந்தச் சுருதியில் சொல்லப்பட்ட இதிஹாஸாதி சொற் களில் அறிந்து கொள்ளவேண்டிய விசேஷமிருக்கின்றது. அதாவது ப்ராம் மணம் எனும் பாகத்திலேயே அவாந்தரமாய் இதிகாஸபுராணாதிகள் அடங்கியுள் ளன என்பதாகிய ஓர் மர்மம் இருக்கின்றது. அதாவது

"தெவாஸுராஸ்ஸாயத்தாஆஸநு"

" தேவாஸுரர் யுத்தத்திற்குச் சந்நத்தரானர் "

என்பது முதலி அர்த்தவாதம் இதிஹாஸமெனும் சொல்லாலும் வழங்கப் படுவது.

"இஉம்வாஅமெ நைவகிம்விஆஸீக"

" ஈதெல்லாம் முதலில் யாதும் காணப்படாமலிருந்தது "

என்பது முதலிய ஜகத்தின் பூர்வ நிலைமையை உபக்கிரமித்து ஸ்ருஷ்டிக் கிரமத்தைச்சொல்லும் சுருதியானது ஸர்க்கக்கிரமத்தை விளக்குவதாதலின் புராணம் எனும் சொல்லாலும் வழங்கப்படும். ஆருணகேதுகசயநப்பிரகரணத் தில் சொல்லப்படும்

"அதஉஊர்த்வம்யஜிபவிம்ஹரெக"

" இதற்குப்பின் பலிஹரணம் செய்தால் "

என்பது முதலிய சுருதிகளே கல்ப்பமெனும் சொல்லாலும் வழங்கப்படு வது. அக்நிசயநாதிவேள்களில் கானம் செய்யப்பட வேண்டிய ஸாம பாகங் களே " மாயா " காதை" எனும் சொல்லால் சொல்லப்படுவது. நரர்களாகிய

மனிதர்களின் விருத்தாந்தத்தைப் பிரதிபாதிக்கும் சுருதிகளே "நாராசம்ஸீ" எனப்படும். ப்ரும்மயக்ஞப்பிரகரணத்தில் சொல்லப்படும் இதிஹாஸாதிகளுக்கு இங்கு சொல்லியபடி ப்ராம்மண பாகத்திலடங்கிய அவாந்தரசுருதிகள் என்பதே பொருள் என்றறியத்தக்கது.

சங்கை :—அதாவது கல்ப்பந்தோறும் மாருமல் நிகழுவனவாகிய ஆதிகாரிக விஷயங்களே வேதத்தில் சொல்லப்படும் எனக்கொள்ளப்பட்டதன்றே. அவ்விதமாயின்

'𑌶𑍁𑌨𑌃𑌶𑍇𑌪𑍋 𑌹𑍍𑌯𑌹𑍍𑌵𑌦𑍍𑌗𑍃𑌭𑍀𑌤𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌷𑍍𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑍇𑌷𑍁 𑌬𑌦𑍍𑌧𑌃 । 𑌅𑌵𑍈𑌨𑌂 𑌰𑌾𑌜𑌾 𑌵𑌰𑍁𑌣𑌸𑍍𑌸𑌸𑍃𑌜𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌁 𑌅𑌦𑌬𑍍𑌧𑍋 𑌵𑌿 𑌮𑍁𑌮𑍋𑌕𑍍𑌤𑍁 𑌪𑌾𑌶𑌾𑌨𑍍'

எனும் இம்மந்திரம் ருக்வேதம் முதலாமஷ்டகம் முதலாவது மண்டலம் ஆருவது அநுவாகம் பதினைந்தாம் வர்கத்தில் பதின்மூன்ருவது மந்திரமாயிருக்கின்றது. இந்த மந்திரத்தின் பொருள்,

"𑌗𑍃𑌭𑍀𑌤𑌃 𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌯 𑌗𑍃𑌹𑍀𑌤𑌃 𑌤𑍍𑌰𑌿𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌕𑍇𑌷𑍁 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑍇𑌷𑍁 𑌦𑍍𑌰𑍋𑌃 𑌕𑌾𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌯𑍂𑌪𑌸𑍍𑌯 𑌪𑌦𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌷𑍁 𑌬𑌦𑍍𑌧𑌃 𑌶𑍁𑌨𑌃𑌶𑍇𑌪𑌃 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌮𑌦𑌿𑌤𑍇𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌂 𑌵𑌰𑍁𑌣𑌮𑌹𑍍𑌵𑌤𑍍 । 𑌆𑌹𑍂𑌤𑌵𑌾𑌨𑍍 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌏𑌵𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸 𑌵𑌰𑍁𑌣𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌏𑌨𑌂 𑌶𑍁𑌨𑌃𑌶𑍇𑌪𑌮𑌵𑌸𑍃𑌜𑍍𑌯𑌾𑌤𑍍 𑌅𑌵𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌤𑍍 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍋𑌤𑍁 [illegible] 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌜𑍍𑌞𑌃 𑌅𑌦𑌬𑍍𑌧𑌃 𑌕𑍇𑌨𑌾𑌪𑍍𑌯𑌹𑌿𑌂𑌸𑌿𑌤𑍋 𑌵𑌰𑍁𑌣𑌃 𑌪𑌾𑌶𑌾𑌨𑍍 𑌬𑌨𑍍𑌧𑌨𑌰𑌜𑍍𑌜𑍁𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑍍 𑌵𑌿𑌮𑍁𑌮𑍋𑌕𑍍𑌤𑍁 [illegible] 𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍋𑌤𑍁"

எனும் ஸாயணபாஷ்யத்தாலறிக. இம்மந்திரத்தில் சுநச்சேபன் எனும் ஒருவன் யாகத்தில் பசுவாக அகப்பட்டுக்கொண்ட சரிதம் சொல்லப்படுகின்றதே. இங்ஙனம் சுநச்சேபன் என ஒருவன் தோன்றுதலும் யாகத்தில் நரபசுவாக அகப்பட்டுக்கொள்ளுதலும் கல்ப்பந்தோறும் ஸம்பவிக்குமெனக் கொள்ளுவதா? ஆதிகாரிகவிஷயமே வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் எனப் பூர்வம் நிர்ணயித்திருக்கின்றமையால் இதனை ஆதிகாரிக சரிதம் என்று கொள்ள வேண்டியதாகுமே? அது உசிதமாகக்காணப்படவில்லையே எனும் சங்கை சிலருக்கு நிகழும்.

இனி உதனுண்மையைச்சொல்லுவாம். சுநச்சேபன் என்பவன் ஆதிகாரிகனல்ல. இந்தச் சரிதம் யதார்த்தமல்ல. வருணன் எனும் ஆதிகாரிக தேவன் மூலமாய் இறைவனையுபாஸித்து வழிபடுதல் மிகவும் சிறந்ததென்பதை மாந்தருக்குப் போதிப்பதன் பொருட்டாய் அர்த்தவாதமாகிய சரிதத்தை உள்ளடக்கிக் கொண்டு பிரவர்த்தித்ததென்பதாகவே இம்மந்திரத்தை யறிக. இனிபுராணங்களிலும் சுநச்சேபன் கதை சொல்லப்படுகின்றதே. அப்படி யிருக்க இதனை

அர்த்தவாதம் எனக்கொள்வது எப்படிப்பொருந்தும்? எனின், இதற்கு உத்தரம் ஏற்கனவே சொல்லப்பட்டது. அதாவது புராணங்களிலும் அர்த்தவாத சரிதங்கள் ஏராளமாய்ச் சொல்லப்படுகின்றமையால் அவைகளில் சொல்லப்பட்டிருக்கும் சரிதங்களை யெல்லாம் வாஸ்தவமெனக் கொள்ளவேண்டுமெனும் நிபந்தனையில்லை. ஆதலால் அங்கு கருத்தை மாத்திரம் அறிந்துகொள்ளவேண்டு மென்பதே அறியத்தக்கது.

அன்றியும் இச்சரிதம் பாகவதத்தில் சுநச்சேபன் என்பவன் ஹரிச்சந்திரன் செய்த யாகத்தில் நரபசுவாகக்கட்டுப்பட்டானென்றும், ராமாயணத்தில் அம்பரீஷன் செய்த யாகத்தில் நரபசுவாகக்கட்டுப்பட்டானென்றும் ஒன்றுக்கொன்று விரோதமாகச்சொல்லப்பட்டிருக்கின்றமையாலும் அர்த்தவாதமென்பதை நன்குயறிந்து கொள்ள இயலும். ஆதலால் இந்தச்சரிதம் பிரதி கல்பமும் நடக்கவேண்டுமெனச் சங்கித்தல் அறியாமையே என்க.

சங்கை. "ஹஉெஜவருண" எனும் மந்திரத்தினல் பெருமை பெற்றவன் சுநச்சேபன் எனப்பூர்வம் ரிஷிச்சந்தோ தேவதைகளின் பெயரைச்சொல்லுவதில் உள்ள மர்மத்தைச்சொல்லும் பிரகரணத்தில் எழுதப்பட்டிருக்கின்றதே. உண்மையில் நடந்திராத அர்த்தவாத சரிதத்தில் பிரஸ்தாபிக்கப்படுவோனது பெயரை, மந்திரத்தினல் பெருமை பெறக்கூடும் எனும் விஷயத்தில் திருஷ்டாந்தமாகச்சொல்லுவது உசிதமாகுமோ எனச் சிலர் சங்கிக்கக்கூடும்.

அனுதண்மையறிக, மந்திரா நுஷ்டானத்தில் மாந்தர்களுக்குச்சிரத்தையுதிப்பதன்பொருட்டு, வாஸ்தவமாகவே நடந்திராத சரிதத்தில் பிரதி பாதிக்கப்படும் புருஷனது பெயரைத்திருஷ்டாந்தமாக வைத்து முன்னோர் வழங்குவது குற்றமாகாது. நம்போன்றவர்களுக்கு மந்திரானுஷ்டானத்தில் எப்படியாவது சிரத்தையுண்டாகவேண்டுமென்பதே அவர்களது நோக்கமாதலின் இங்கு சிறிதும் சங்கைக்கிடமில்லை என்பதறிக.

சங்கை, அதாவது புராணங்களில் சொல்லப்படும் சுனச்சேபாதி விருத்தாந்தங்களையும் அர்த்தவாதம் எனக்கொள்ளுவதாயின் எந்தச்சரிதம் அர்த்தவாதம்? எந்தச்சரிதம் வாஸ்தவம்? என நிர்ணயிக்க இயலாமல் கலவரமாகின்றதே எனின் கூறுவாம்.

புராணங்களில் இது அர்த்தவாத சரிதம் இது வாஸ்தவ சரிதம் என்பதை நிர்ணயித்துக் கொள்ளுவது தன் புத்திபலமாத்திரத்தினல் இயலாதென்பதே உண்மை. ஆனது பற்றியே அதனையும் குருபரம்பரையிலேயே உபதேசம் பெறவேண்டும் என அபியுக்தர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது. ஈச்வரானுக்கிரஹத்திற்குப் பாத்திரரான ஸூதமஹா முனிவரே புராணப் பிரவசனத்திற்கு அதிகாரியாய் ஏற்பட்டிருக்கின்றதாகவும் அவர் இதிகாஸபுராணங்களைத் தன் புத்தி மாத்திரத்தினல் கிரஹித்தவரல்ல என்றும் வேதவியாஸ பகவனல் உபதேசிக்கப்பட்டேகிரஹித்தவரென்றும் சொல்லப்பட்டிருக்கின்றதைக் கவனித்தால் இதிகாஸபுராணங்களை விற்பத்தியின் திடத்தன்மையால் மாத்திரம் அறிந்து

கொள்ள முயன்ருல் அகினிலுள்ள மர்மம் சிறிதும் விளங்காமல் ஸ்தூலமாய்க் கதைகள் மாத்திரம் அறியப்படும் என்பது விளங்குகின்றது. தற்காலம் குருபரம்பரையின் வழக்கம் தவறிப் போய்த் தன் புத்தி மாத்திரத்தாலும் பாஷாந்தர மொழிபெயர்ப்பினுலும் அறியத்தலைப்படுகின்றமையால் உண்மை சிறிதும் விளங்காமல், தொட்டவிஷயங்களிலெல்லாம் ஸந்தேஹமும் குதர்க்கமுமேஏற்படுகின்றது. ஸத்குரு பரம்பரையின் வழியாயும் விதிமுறை மாருமலும் வேதசாஸ்திரங்களை விசாரிப்பவருக்கு வேதம் அனுதியென்பதில் சிறிதும் ஸந்தேஹத்திற்கிடமிராது என்றறிக.

இங்கு மற்றுமோர் உண்மையை அறிந்துகொள்ளவேண்டும். மந்திர ப்ராம்மணவடிவமாயுள்ள வேதத்தை மஹருஷிகள் கண்டுபிடிப்பதில் இரண்டு வகையடங்கியுள்ளது. ஸூக்ஷ்மசப்தத்தை ச்ரோத்திராகாச ஸம்பந்தஸம்யமத்தினல் ஸ்தூலம்போலக் கண்டுபிடித்தல் ஓர் வகையும் "ஸம்ஸ்காரத்தின் ஸாக்ஷாத்காரம்" எனும் யோகபலத்தால் கண்டுபிடித்தல் மற்ருென்றுமாம். ஸூக்ஷ்ம சப்தத்தைக் கண்டுபிடித்தல் பூர்வமேயே நிரூபிக்கப்பட்டது. ஸம்ஸ்காரஸாக்ஷாத்காரமென்பதும் சொல்லப்பட்டதாயினும் விஸ்தாரமாய்ச் சொல்லப்படவில்லை. ஆதலால் அவ்விஷயத்தைச் சற்று ஆராய்வாம். பதிவிருதையாகிய ஓர் ஸ்திரீயின் கர்ப்பத்தினின்றும் நாலைந்து குழந்தைகள் ஜநிக்க அவர்களில் உலகத்தோடு நல்லபழக்கமிராத பாலப்பருவத்திலேயே ஓர் பையனுக்கு ஸம்ஸ்க்ருதத்தில் விருப்பமும், மற்ருேர் பையனுக்கு ஸங்கீதத்தில் விருப்பமும், மற்ருேர் பையனுக்கு மாடுகன்று முதலியவைகளைத் துரத்திக்கொண்டு திரிவதிலேயே விருப்பமும், மற்ருேர் பையனுக்குச் சிற்பம் முதலிய கைத்தொழிலிலேயே விருப்பமும் ஏற்பட்டு அந்த விஷயத்திலேயே அவனவனுக்குப் புத்தி மிகவும் கூர்மையாக வேலைசெய்யக் காண்கின்ருேம். அங்ஙனம் பாலபருவத்திலேயே ஒவ்வொரு பையனுக்கும் வெவ்வேறுவகையாய்ப்பிரவிருத்தி யேற்படுவதற்கு இந்தப் பிறவியில் காரணமறியப்படாமையால் பூர்வ ஜந்மமிருந்திருக்கவேண்டுமென்றும் அந்த ஜந்மத்தில் அவனவன் அந்தந்த விஷயத்தில் ஏற்கனவே பரிசயம் செய்திருந்தவனுலின் அந்த வாஸனையே இந்த ஜந்மத்தில் பால்யத்திலேயே அதே விஷயத்தில் விசேஷப் பிரவிருத்தியை யுண்டாக்குகின்றதென்றும் நிர்ணயிக்கக் கூடியதே. அங்ஙனம் பூர்வஜந்மத்தில் பரிசயம் செய்திருந்த தேஹம் அப்போதே தொலைந்துபோக அந்தப் பரிசயவாஸனை இந்த தேஹத்திலிருந்து ஏவுகின்றதைக்கவனித்தால், அது தேஹத்தைப்பற்றியதல்லவென்றும் பூர்வம் அந்ததேஹத்தை யடைந்திருந்து அதனைவிட்டுப் பிறகு இந்த தேஹத்தையடைந்திருக்கும் மனஸையே பற்றியதென்றும் வியக்தமாய் விளங்குகின்றது. பூர்வ ஜந்மத்தில் எந்தெந்த விஷயங்களில் உழன்றிருக்கின்ருேமோ அந்தந்த விஷயங்கள் ஸகலமும் ஒன்ருேடொன்று கலக்காமல் மனஸிலேயே ஸம்ஸ்கார வடிவமாக வாஸனையாகப் பதிந்திருக்கும். அந்த வாஸனைகளே இந்த ஜந்மத்தில் முனைந்து ஏவுகின்றன என்பதாம்.

எங்கெந்தப் பொருளில் புத்தி செல்லுகின்றதோ அந்தப் பொருளே யறியப்படுகின்றதென்பது பிரஸித்தமே. நம் அறிவானது இந்திரியங்களின் வழி வெளிப்பொருள்களிலேயேயாவது, அல்லது உள்ளத்திலேயே யிருந்துகொண்டு வெளிப் பொருள்களையே சிந்தித்துக்கொண்டாவது உழன்றுகொண்டிருக்கின்றது. இனிஇவ்விருவகையுழலுதல்களையும் நிறுத்தி அறிவையும் மனவில் பதிந்து கிடக்கும் ஸம்ஸ்காரங்களிலேயே செலுத்துவோமாயின் அப்போது, அந்தப் பதிவுகளை வெளிப் பொருள்களைப்போல வியக்தமாயறிந்து கொள்ளலாம். இங்ஙனம் ஸம்ஸ்காரத்திலேயே எகாக்ரமாய்ப் புத்தியைச் செலுத்தி அவைகளை ஸாக்ஷாத்கார்மாக அறிந்துகொள்ளுதலே ஸம்ஸ்கார ஸாக்ஷாத்காரம் எனும் தபஸாம். பூர்வ ஜன்மத்தில் வேதங்களை நன்கு அத்தியயனம் செய்தவர்களுக்கு அப்போது எற்பட்டிருந்த அத்தியயன ஸம்ஸ்காரம் மனவிலேயே நுட்பமாய்ப் பதிந்திருக்கும். ஆதலின் அந்த ஸம்ஸ்காரத்திலேயே புத்தியைச் செலுத்தி ஏகாக்கிரமாய் நிறுத்தினுல், இந்த ஜன்மத்தின் பால்யத்தில் அப்பியஸித்திருந்ததை விருத்தாப்பிய காலத்தில் நினைப்பதுபோல பூர்வஜன்மத்தில் அப்பியஸித்திருந்த வேதாத்தியயநம் நினைவுக்கு வர அதைச் சொல்லக்கூடும். அப்படியறிந்து வேதத்தைச்சொன்ன மஹருஷிகளும் பலர்.

இங்கிதுவறிக. அதாவது முக்கியப்பிரளயம், அவாந்தரப் பிரளயம் எனப் பிரளயம் இருவகையாம். முக்கியப்பிரளயமாவது பிரகிருதி மாத்திரத்தில் ஸகலமும் ஒடுங்கி அடங்கி லயித்துப்போய் இறைவன் மாத்திரம் மிஞ்சியுள்ளதாகிய பிராகிருதப்பிரளயமேயாம். அவாந்தரப் பிரளயமானது நைமித்திகப்பிரளயமென்றும் யுகப்பிரளயமென்றும் இருவகைப்படும். ப்ரும்மதேவனுக்கு ஓர் பகல் முடிந்ததும் எல்லாம் ஜலமாத்திரமாய் எஞ்சிப் போகும். அந்தப் பிரளயமே நைமித்திகமென்பதாம். இனி யுகப்பிரளயமாவது, கிருதம் திரேதை துவாபரம் எனும் மூன்று யுகங்களும் சென்று கலியுகம் பிரவர்த்திக்க அந்த யுகத்தின் இறுதியில் வேதசாஸ்திரம் வர்ணுச்ரமவியல் முதலிய ஸகலமும் அழிந்து அடியோடு ஒழிந்து போதலேயாம் என்றறிக. இங்ஙனம் கலியுகந்தோறும் நிகழும் யுகப்பிரளயத்தில் வேதம் ஒழிந்துபொகிறதுமன்றிக் கிருதயுகத்தில் தோன்றும் பெரியோர்கள் தவப்பிரபாவத்தால் ஸம்ஸ்கார ஸாக்ஷாத்காரம் எனும் ஸித்திகிடைக்க அதனுல் பூர்வஜன்மத்தில் அத்தியயனம் செய்திருந்த வேதங்களை நினைந்தறிந்து கொண்டு வெளியிடுகின்றனர். நைமித்திகப்பிரளயத்திலும் வேதத்தைக் கண்டுபிடித்தல் இவ்வாறேயாம்.

இங்ஙனம் முக்கியப் பிரளயம் அவாந்தரப் பிரளயம் என இருவகைப் பிரளயமிருக்கின்றமையால் இருவகை ஸித்திகளாலும் வேதத்தைக் கண்டுபிடிக்கின்றனரென்று சொல்லப்பட்டது. இங்ஙனம் கண்டுபிடிக்கப்படும் வேதம் மந்திரம் பிராம்மணம் என இருவகையாயுள்ளதென்பது எற்கனவே சொல்லப்பட்டது.

வேதமானது ஒன்றேயாயினும் மஹருஷிகளால் கண்டுபிடிக்கப்பட்டு பின்னர் துவாபரயுகத்தில் பலவாருகப் பிரிவடைகின்றது. இதனை,

[illegible]
[illegible]

ஒத்விஜர்காள், வேதங்களெல்லாம் ஒன்றே. வேதார்த்தங்களும் ஒன்றே. அங்ஙனமாயினும் சாகாபேதத்தால் பிரிக்கபப்பட்டது

எனும் ஸூதஸம்ஹிதாதி வாக்கியங்களாலறிக.

அதாவது ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என நான்காகப் பிரிக்கப்பட்டுப் பிறகு ஒவ்வொன்றும் பலசாகைகளாய்ப் பிரிவடைந்தது. அங்ஙனம் ருக் யஜுஸ் முதலிய பிரிவினையைச் செய்தவர் வேதவியாஸர் எனப்படும் வேதகுருவே என்றும் ஏற்கனவே சொல்லப்பட்டது.

அவைகளுள் ருக்வேதமாவது பாதபந்தத்தோடுகூடி பதிகம்போலுள்ள வேதவாக்கியங்களாம். அந்த வேதம் எட்டு அஷ்டகங்களாகவும் பத்து மண்டலங்களாகவும், அறுபத்து நான்கு அத்தியாயங்களாகவும், ஆயிரத்துப் பதினேழு ஸூக்தங்களாகவும் இரண்டாயிரத்தாறு வர்க்கங்களாகவும் அமைந்திருக்கின்றது. இவ்வாறுள்ள வேதமானது இருபத்தோர் சாகையாய்ப் பிரிவடைந்திருக்கின்றது. ஆனால் தற்காலம் இச்சாகைகளைப்பற்றிய விபரம் நன்கறியப்படாமல் லோபமடைந்துவிட்டது. ஆயினும் அச்சாகைகளின் பெயர் ஏதோ கிரந்த மூலமாய் இங்ஙனம் அறியப்படுகின்றது. அதாவது ஐதரேயம், கௌஷீதகம், சைசிரம், பைங்கம், ஸாங்கியாயனம், ஆச்வலாயனம், மாண்டுகேம், பாஷ்கலம், சாகலம், முத்கலம், கோகுலம், வாத்ஸ்யம், சிசிரம், எனும் இப்பெயர்களே சரணவ்யூஹம் முதலிய நூல்களால் அறியப்படுகின்றன. இதனை,

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

"ருக்குகளின் ராசி ருக்வேதமாம். அதனை மிக்க ப்ரயத்தினத்தோடு அப்பியஸித்து சாகலராலும், பிறகு நால்வர்களாலும் ஓதுவிக்கப்பட்டது. ஸாங்கியாயனர், ஆச்வலாயனர், மாண்டுகர், பாஷ்கலர் எனும் இவ்வைந்து பேர்களும், ருக்கெனும் ஓர் வேதத்தைச் சேர்ந்தவர்களாம்' "

எனப்ராசீன நூல்களிலும், அங்ஙனமே

[illegible]
[illegible]

முத்கலர் கோகுலர் வாத்ஸ்யர் சைசிரர் சிசிரர் எனும் இவ்வைவர்களும் சாகாபேதப்பிரவர்த்தகர்களாகிய சாகலசிஷ்யர்களாம்"

என்பது முதலிய விஷ்ணுபுராணாதி வாக்கியங்களாலும் அறிக.

இனி யஜுர்வேதமாவது. இது கிருஷ்ணயஜுஸ், சுக்லயஜுஸ் என இருவகையாய் நடைபெற்று வருகின்றது. கிருஷ்ணயஜுஸ் எண்பத்தாறு சாகைகளாகவும், சுக்லயஜுஸ் பதினைந்து சாகைகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. கிருஷ்ணயஜுஸ் சுக்லயஜுஸ் எனும் இருவகையாய்ப் பிரிந்ததற்குக் காரணமாக தற்காலம் ப்ராமணர்களுள் சிலர் அவாந்தரமான துவேஷத்திற்கு ஏதுவும ஸரியான பிரமாணமில்லாததுமாகிய சிற்சில கதைகளைச் சொல்லுகின்றனர். அது அவிவேகத்தால் அவாந்தர வைஷம்யத்தையே உண்டுபண்ணுவதாதலின் அக்கதைகளை நாம் அசட்டை செய்வதே உசிதம் என்றறிக.

இனி இவ்வேதத்தின் சாகைகளின் பெயர்கள் முற்றும் தற்காலம் அறியப்படாவிடினும் கிருஷ்ணயஜுஸின் பெயர்களில் அறியப்படுவனவாகிய சிலபெயர்களை இங்கு கூறுவாம். அதாவது சரகம், ஆஹ்வரகம், கடம், ப்ராச்யகடம் கபிஷ்டலகடம், சாரணீயம், வாரவந்தீயம், ச்வேதம், ச்வேதாச்வதரம், ஔபமந்யவம், பாதாண்டிநேயம், மைத்திராயணீயம், மாநவம், வாராஹம், துந்துபம், சாகலேயம், ஹாரித்வரம், சாம்யாயநீயம், ஆபஸ்தம்பீயம், பௌதாயநீயம், ஸத்தியாஷாடம், ஹிரண்யகேசீயம், சாட்யாயநீயம், வாரதந்தவீயம், காண்டிகீயம், ஔகீயம், தைத்திரீயம், எனும் பெயர்களே கிரந்த மூலமாய் அறியப்படுகின்றன. இனி சுக்லயஜுர் வேதத்தின் பதினைந்து சாகைகளாவன, காண்வம், மாத்யந்தினம், ஜாபாலம், பௌதேயம், சாகேயம், தாபநீயம், காபோலம், பௌண்டரவத்ஸம், ஆவடிகம், பரமாவடிகம், பாராசரீயம், வைநேயம், வைதேயம், ஔதேயம், காலவம் என்பவைகளாம்.

இனி ஸாமவேதமாவது கீதம்போன்ற ஸ்துதியாயுள்ள பாகமாம். இவ்வேதத்திற்கு ஆயிரம் சாகைகளுள்ளன. ஆயினும் பலசாகைகளின் பெயர்கள் தற்காலம் வியக்தமாய்க் காணப்படவில்லை. தற்காலம் அறியப்படும் சாகைகளாவன, ராணாயநீயம், சாம்யமூகம், காபோலம், ஆஸுராயணம், வாதாயநம், ப்ராஞ்ஜலபம், வைநத்ருதம், ப்ராசீன யோக்யம், நைகேயம், முதலிய சிற்சிலசாகைகளே பெயரினால் அறியப்படுகின்றன.

இனி அதர்வணவேதமாவது சாந்திப்ரதிஷ்டை முதலிய கிரியைகளுக்கும் மாரண உச்சாடன ஸ்தம்பன மோஹன ஆபிசாரிக முதலிய கிரியைகளுக்கும் அக்கினியஸ்திரம் வாயுவஸ்திரம் முதலிய அஸ்திரங்களின் பிரயோகத்திற்கும் வேண்டிய மந்திரங்களை விசேஷமாயுடையதும் மற்றுமுள்ள ஸௌம்ய மந்திரங்களும் ப்ராம்மணங்களும் அடங்கிய துமாகிய வேதமாம். இதற்கு ஒன்பது சாகைகளாம். அவையாவனபைப்பலாதம், ஸௌநகீயம், தாமோதம், தோத்தாயநம், ஜாபலம், ப்ரும்மபாலாசம், குநகீ, தேவதர்சீ, சாரணவித்யம் என்பவைகளாம். ஆனால் தற்காலம் இவ்வேதமந்திரப் பிரயோகமுறை அழிந்து போயிருத்தலுக் குக்காரணம் ஸத்காரியத்திற்கு விரோதம் செய்வோர்களை நிக்ரஹித்து தர்மஸ்தாபனத்தின் பொருட்டுள்ள ஷை வேதமந்திர விதிகளை இப்போது பாபமே மிகுதிப்பட்டிருக்கின்றமையால் இவர்கள் பரிபாகத்திற்குத்தக்கபடி அஸத்காரியத்தினை ஸ்தாபிக்கும் விஷயத்திலேயே உபயோகிப்பார்கள் என்பது தீர்க்கதரி

சிகளாகிய முன்னோர்களால் அறியப்பட்டுப் போனமையால் அவ்வேதத்தை மாத்திரம் ஒழிந்துபோகும்படி செய்தார்கள் என்பதே. இவ்வாறு வேதத்தைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டிய விபரங்கள் நிரூபிக்கப்பட்டன.

இந்நான்கு வேதங்களிலும் பூர்வபாகம் கர்மகாண்டமென்றும் இறுதிபாகம் ஞானகாண்டமென்றும் சொல்லப்படும். கர்மகாண்டத்தில் எந்தவருணாச்ரமத்தார் எக்கருமங்களைச் செய்யவேண்டு மென்பது முதலிய விஷயங்களைக்காட்டி ஸர்வஸாமான்ய தர்மங்களும் விசேஷதர்மங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஞானகாண்டமானது எந்த உண்மையையறிந்தே இந்தப்பிறவிக்கடலினின்றும் கரையேறக்கூடுமோ அத்தகைய உண்மையை உபதேசிக்கின்றது. அறிந்துகொண்டு அனுபவிக்கவேண்டியதேயாயினும் அதனுண்மை தெரியவேண்டுமானால் ஜீவன், ஈச்வரன், உலகம், தேகம், கர்ம, இன்பதுன்பம் முதலியவைகளையும் நன்கறிந்துகொள்ளவேண்டியதாகின்றமையால் அவைகளின் ஸ்வரூபமும் ஞானகாண்டத்தில் சொல்லப்படுகின்றது.

இனியிப்படிப்பட்ட வேதத்தை யோதத்தக்க அதிகாரிகள் யாவர் எனின் முதல் மூன்றுவர்ணத்தார்களே என்பது நிர்ணயம். இனிமற்றவர்கள் ஓதினால் விளங்காதோ எனின், அதைக்கொண்டு அங்ஙனம் கூறியதல்ல. பின்னையாதெனின் அவர்களைத்தவிர மற்றவர் ஓதினால் ஓதுவிப்போர்களுக்கும் ஓதுவோர்களுக்கும் நரகயாதனாதிகளால் தண்டனையுண்டென உண்மைநூல்களில் சொல்லப்பட்டிருக்கின்றமையால் இவ்விஷயத்தில் சங்கித்தல் வீணேயாம். இனியிங்ஙனமாயின் மூன்று வருணத்தாருக்கந்நியமாய் மற்றவர்கள் க்ஷேமமடைவது எப்படியெனின்? இதிகாஸ புராணஙகளின் மூலமாகவும், ஓதியறிந்தவரிடம் பாஷாந்தரங்களின் மூலமாகவும் நன்றாயறிந்துகொள்ள இயலுமாதலால் அவ்வழியே அறியவேண்டு மென்றறிக.

ஆனால் தற்காலம் நான்காம் வர்ணத்தார் இவ்விஷயத்தில் சிறிதும் வருத்தப்படவேண்டியதில்லை. ஏனெனின் முதல் மூன்று வர்ணத்தார்கள் ஓதவேண்டியவைகளைக் கிரமமாய் ஓதிக்கிரமமாகவே அர்த்த விசாரமும் செய்து அவ்வழியே அநுஷ்டானத்திலும் கொண்டுவந்து லோகோத்திரமாகிய க்ஷேமத்தைத் தேடிக்கொள்கின்றவர்களாயிருப்பார்களாயின் நமக்கு மாத்திரம் இதற்கிடமில்லாமற் போச்சுதே என்று வருத்தமடையலாம். அங்ஙனமிராமல் விசேஷமாய் எல்லாரும் இவ்விஷயத்தில் ஒரேமாதிரியாய் இருத்தலே காணப்படுகின்றமையால் எல்லோருமே பச்சாத்தாபமடையக் கூடியதாயிருக்கின்றது. ஆனால் வேதவேதாங்கங்களையோதுதற்கு இடமிராவிடினும்தத்தம் வர்ணாச்ரமதர்மத்தைமாத்திரம் எவ்வளவு சிரமமேற்படினும் விடாமற்கைப்பற்றி வருவார்களாயின் வேதாங்கங்களை யோதியறியாமலே க்ஷேமத்தைப் பெறலாம் என்பது திண்ணம்.

இனிச்சிலர் வேதத்தை அர்த்தவிசாரம் செய்தால் மாத்திரம் பயனைப் பெறலாமேயன்றி கேவலம் சப்தமாத்திரத்தை யோதிய பிராமணர்களுக்கு அதனால் பயன்யாதுமில்லை எனச் சங்கிப்பார்கள். இதுவும் ஆராய்ச்சிக் குறைவேயாம். ஏனெனின் வேதம் சப்தப்பிரதான மாதலால் என்றறிக. இதிகாஸ புராணதர்ம

சாஸ்திரம் முதலியவைகளே அர்த்த விசாரத்தை முக்கியமாய்க் கொண்டவை. வேதமோ எனின் சப்தபிராதானமாயுள்ளதாதலால் அர்த்த விசாரம் செய்யாவிடினும் கேவலம் அத்தியயன மாத்திரத்தாலும் மந்திரமாத்திரத்தை உச்சரித்தலாலும் அபாரமாகிய க்ஷேமத்தைய‌ளிப்பதாயுள்ளது. இவ்விஷயம் காவ்யம் படிப்பவர்களாகிய பாலர்களாலும் நன்கறியக்கூடும். அதாவது

“யச்சப்தப்ரதானம் ப்ரபுஸம்மிதம் வேதாஜ்ஞாயதே
யதர்த்தப்ரதானம் ஸுஹ்ருத்ஸம்மிதம் புராணவசனாஜ்ஞாயதே”

யாதொன்று சப்தத்தையே பிரதானமாய்க் கொண்டுள்ளதும் ராஜாக்ஞைபோன்றதுமாகிய வேதத்தால் அறியப்படுவதோ, யாதொன்று அர்த்தத்தையே முக்கியமாய்க் கொண்டதும் ஸ்நேகிதர் சொல்போன்றதுமாகிய புராணவசனத்தால் அறியப்படுவதோ”

என்று கூறியபிரதாபருத்திரீயம் முதலிய கிரந்தங்களில் உள்ளச்லோகத்தினுலும் இதனை நன்கறிந்து கொள்ளலாம். ஆதலால் அர்த்த விசாரமிராத அத்தியயன மாத்திரத்தைச் செய்தவர்களுக்கும் அபாரப்பயனுள்ளதென்றறிக. ஆனுல்அத்தியயனத்தோடு விடாமல் அர்த்த விசாரமும் செய்தால் மிகவும் விசேஷப்பயன் உள்ளதென்பதே நிர்ணயம்.

இங்ஙனம் அதி கம்பீரமாயுள்ள வேதத்தின் அர்த்தமானது கேவல விற்பத்திமாத்திரத்தால் அறிந்துகொள்ள இயதாதாதலால் உள்ளபடி அதன்பொருளையறிந்துகொள்ளுதற்கு வேண்டிய ஸாதநங்களையும் பயிலவேண்டும். அந்த ஸாதநங்களே அங்கங்களென்பவையாம். அவை சீக்ஷை வியாகரணம், சந்தஸ், நிருக்தம் ஜ்யோதிஷம், கல்ப்பஸூத்திரம் என ஆறுவகையாயுள்ளன. இவைகளும் கல்ப்பந்தோறும்நடைபெறுவனவாயினும் பூர்வகல்ப்ப ஆநுபூர்வியின்படி இயற்றப்படுவன என்பதல்ல.

இந்நூல்களை இயற்றுவோரும் இந்நூல்களின் வாக்கியமுறைகளும் கல்ப்பந்தோரும்மாறி வருவன ஆயினும் இவை கல்ப்பந்தோரும் நடைபெறுவன ஆதலின் ஆதிகாரிகநூல்களே என்றறிக. ஆனதுபற்றி இந்நூல்களும் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இவைகளுள் சீக்ஷையாவது அக்ஷரம் ஸ்வரம் மாத்திரை பலம் ஸாமம் ஸந்தானம் இனும் இவ்விஷயங்களைப் பிரஸ்தாபிக்கும்நூலென்றறிக. அக்ஷரமாவது அகாரம் முதலியவர்ணங்களாம். ஸ்வரமாவது உதாத்தம் அநுதாத்தம் முதலியவைஎன்க. மாத்திரையாவது ஹ்ரஸ்வம் தீர்க்கம் முதலியன. பலமாவது அக்ஷரோச்சாரணங்களுக்கு வேண்டிய ஸ்தாநப்ரயத்னங்களாம். ஸாமம் எனின் ஸாம்மிய மென்பதாம். ஸாம்மியமெனின் தோஷமின்மையே. தோஷங்களாவன, கீதீ சிரக்கம்பனம் முதலியவைகளால் உபாம்சு, தஷ்டம், த்வரிதம் முதலியனவாகிய குற்றங்களாம் என்றறிக. இனி ஸந்தானமாவது ஸம்ஹிதை. அதாவது வாயொ-ஆயாஹி எனும் சொற்களின் சேர்க்கையில் வாயாவாயாஹி” எனும் ஸந்தியாதேசம் வருதல் முதலியதாம். இங்ஙனம் சீக்ஷைசொல்லப்பட்டது.

வியாகரணமாவது பாணினி முதலியவர்களாலியற்றப்பட்டுள்ள சப்தசாஸ்திர லக்ஷணநூலேயாம். இனிப் பாணினி முநிவர் கலியுகத்தில் பிறந்தவரன்றோ அவர் பிறந்த பிறகல்லவோ பாணினி வியாகரணம் ஏற்பட்டது. அதற்கு முன் வியாகரணம் என்னும் வேதாங்கநூல் ஏற்படாமலிருந்ததோ ? என்னும் சங்கை [illegible] நிற்கும். அதனுண்மையறிக. அதற்குமுன்னரும் கார்க்கியம், காலவம், [illegible] சாகடாயநம், பாரத்வாஜம் முதலிய வியாகரணங்களிருந்ததாகப்பாணினி [illegible] சூத்திரங்களினாலேயே நன்கறியப்படுகின்றது. ஆதலால் இதனில் சங்கைக்கிடமில்லை என்க.

சந்தஸ் என்னும் நூலாவது எழுத்துக்களைக் கணக்கிட்டு மந்திரங்களின் [illegible] யாப்பிலக்கணமேயாம். நிருக்தமாவது வேதத்தில் வரும் [illegible] மானவாக்கியங்களுக்கும் அர்த்தத்தைப் போதிக்கும் நூலாம். [illegible] முநிவராலியற்றப்பட்டுளது. நிருக்தமெனும் நூலில் நைகண்டுகம், [illegible] என மூன்று காண்டங்களடங்கியிருக்கின்றன. இந்நூலை [illegible] அரிய உரைநூல் எனக்கொள்ளலாம்.

ஜ்யோதிஷமாவது, [illegible] கால விசேஷத்தைக் குறித்தே கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றமை [illegible] வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களை அநுஷ்டித்தலுக்குக் காலவிசேஷ [illegible] நக்ஷத்திராதிகளின் ஞானம் அவசியம் வேண்டப்படுகின்றது. ஆதலால் [illegible] அக்காலவிசேஷங்களைஅந்தேறைவிபரீதங்களின்றித் தெரிந்துகொள்ளும் பொருட்டுக் கற்றறிந்துகொள்ள வேண்டியதாகிய நூலேயாம்.

கல்பஸூத்ரமாவது; ஆச்வலாயனர் போதாயனர் ஆபஸ்தம்பர் முதலிய மஹாமுநிவர்களாலியற்றப்பட்டது. வேதத்தில் சொல்லப்பட்ட கர்மங்களை அநுஷ்டிப்பதின் முறையையும் எந்தெந்த மந்திரங்களை எந்தெந்தக் கர்மாவில் உச்சரிக்கவேண்டுமெனும் விநியோகங்களையும் எடுத்து ஸங்கிரஹித்துச் சொல்லப்பட்டிருப்பதுமாகிய நூலேயாம். அது ச்ரௌதஸூத்ரம் ஸ்மார்த்த ஸூத்ரம் என இருவகைப்படும். ச்ரௌத ஸூத்திரமாவது யாகாதிகர்மங்களின் முறையையுணர்த்தும் ஸூத்ரராசியாம். ஸ்மார்த்த ஸூத்ரமாவது ஸ்ம்ருதியில் விசேஷமாய்ச்சொல்லப்பட்டிருக்கும்ஸந்தியாவந்தன ஔபாஸன வைச்வதேவாதி ஸகலகர்மங்களையும் அநுஷ்டிக்கும் முறையைச்சொல்லும் நூலாம்.

இந்நூலை க்ருஹ்ய ஸூத்ரமெனப் படுவதாம். இங்ஙனம் சொல்லப்பட்ட ஆறு நூல்களும் மனிதருக்குக் கைகால் முதலிய அங்கங்கள் போல வேதத்திற்கு அங்கங்களாயிருக்கின்றன. ஆனதுபற்றியே இவைகள் வேதாங்கங்கள் என்று வழங்கப்படுகின்றன. அதாவது

छन्दः पादौ तु वेदस्य हस्तौ कल्पोऽथ पठ्यते ।
ज्योतिषामयनं चक्षुर्निरुक्तं श्रोत्रमुच्यते ॥
शिक्षा घ्राणं तु वेदस्य मुखं व्याकरणं स्मृतम् ।
तस्मात्साङ्गमधीत्यैव ब्रह्मलोके महीयते ॥

> "வேதத்திற்கு சந்தஸ் பாதங்கள். கல்பஸூத்திரங்களே கைகள். ஜ்யோதிஸ் சாஸ்திரம் நேத்திரமாம். நிருக்தம் காது என்பதாம். வேதத்திற்கு சீக்ஷையே மூக்கு. வியாகரணமே முகமாம். ஆதலால் அங்கங்களோடுகூடவே வேதமோதுக. அங்ஙனம் [illegible]ம்மலோக மெய்துவதற்கு ஏதுவாகும்.

என சிக்ஷைமுதலிய நூல்களில் சொல்லப்[illegible]. கை, கால், கண், முகம் முதலிய அவயவங்களையின்றி [illegible]னை வியவஹரிக்க முடியாதோ அங்ஙனம் சிக்ஷை, வியாகரண[illegible] அங்க நூல்களின்றி வேதத்திலுள்ள விஷயத்தைச் சிறிதும் அறிந்துகொள்[illegible]யலாதென்க.

இங்ஙனம் ஆறு அங்கங்களும் சொல்லப்பட்டன. ஆயினும் இங்கவும் அவசியமாய்க்கற்றறிந்துகொள்ளவேண்டியவைகளாகிய மற்றும் சில நூல்கள் இருக்கின்றன.

"புராணந்யாயமீமாம்ஸா தர்மஶாஸ்த்ராங்கமிஶ்ரிதா: |
வேதா: ஸ்தாநாநி வித்யாநாம் தர்மஸ்ய ச சதுர்தஶ"

> "புராணம் நியாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்திரம், ஆறு அங்கங்கள் இவைகளோடுகூடிய வேதங்களே பதினான்கு வித்தைகளுக்கும் ஸ்தானங்களாய் தர்மத்திற்கு இருப்பிடங்களாயிருக்கின்றன.

என யாக்ஞவல்க்யர் முதலியமுன்னவர் கூறியவாறு புராணம், நியாயம், மீமாம்ஸா, தர்மசாஸ்திரம் முதலிய நூல்களும் வேதத்தின்பொருளை யறிதலுக்கு அவசியம் வேண்டிய ஸாதனங்களாகின்றன.

இவ்விஷயம் அறியத்தக்கது. வேதமானது "இதனைச்செய் இதனையுபாஸிப்பாயாக இதனையறிந்துகொள்" என்பது முதலிய கர்மோபாஸனாஞான விஷயங்களைப் போதிப்பதும் ராஜாக்ஞைபோன்றதுமாயுள்ளது. அது பிரத்தியக்ஷமாய்க் காணப்படாத விஷயங்களை விளக்கிக்காட்டுவது. அதனை ஈச்வரனால் ஏற்படுத்தப்பட்ட ஆணையென்றேகொள்ளவேண்டும். அதனைப்பிரதிக்ஞையென்றறிக.

பிரதிக்ஞையாவது யாதானும் ஓர்விஷயத்தை "இது இப்படி" என்பதாகச் சொல்லுதலே. இது இப்படி எனும் சொல் மாத்திரத்தால் அவ்விஷயம் விளங்குதல் அரிதாதலால் அதனை ஹேதுவோடு யுக்தியுக்தமாய் சொல்லவேண்டும். இனி அப்படிச் சொல்லப்படும் ஹேதுமாத்திரத்தால் அவ்விஷயம் உள்ளபடி அறியப்படுமென்பதல்ல. ஆதலால் அதற்கோர் திருஷ்டாந்தத்தைக்காட்டவேண்டியதவசியமாகின்றது. இவ்வுண்மைபற்றியே பிரதிக்ஞா ஹேது திருஷ்டாந்தங்களாலேயே விஷயம் ஸித்திப்பது என முன்னோர் பரம்பரையால் வழங்கப்பட்டு வருகின்றது. உலகில் மனிதர் நடந்துகொள்ளவேண்டிய நிலைமையைச் சொல்லும் வேதத்தைப் பிரதிக்ஞையெனக் கொள்ளத்தக்கது.

அதற்கு ஸ்ம்ருதிகள்ஹேதுநூல்களாம். இதிஹாஸ புராணங்கள் திருஷ்டாந்தம். இங்ஙனம் ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸ புராணங்கள் முறையே பிரதிக்ஞா ஹேது திருஷ்டாந்தங்களாய்ப் பிரவர்த்தித்திருக்கின்றன. உதாரணமாக

"[illegible]"

அஹரஹம் (ஸந்தியை தோறும்) ஸந்தியை உபாஸனை செய்குக

என வேதமானது ஸந்தியாவந்தனம் சேய்யவேண்டுமென விதிக்கின்றது. இதனால் ஸந்தியாவந்தனஞ் செய்தல் அவசியமென்பது மாத்திரம் அறியப்படுகின்றதேயன்றி, செய்யவேண்டியதவசியம் என்பதற்கு ஹேது காணப்படவில்லை, ஆதலால் ஹேது வடிவமாக எழுந்து அதனைப் போதிப்பதற்காக மனு முதலியவர்களால் ஸ்ம்ருதி முதலிய நூல்கள் இயற்றப்பட்டிருக்கின்றன.

சங்கை,

"[illegible]"

"அங்ஙனமிந்த ப்ரும்மவாதிகளானவர் ஸந்தியாகாலத்தில் கிழக்குமுகமாயிருந்து காயத்திரியினல் அபிமந்திரிக்கப்பட்ட ஜலத்தை மேலெறித்தூக்கி விடுகின்றனரன்றோ. அந்த ஜலம் வஜ்ஜிரமாய்"

என்பது முதலிய சுருதிவாக்கியங்களால் ஹேதுவும் சொல்லப்பட்டிருக்கின்றதே| அப்படியிருக்க ஹேதுவாக ஸ்ம்ருதியெனத் தனியே ஓர் நூல் என் பிரவர்த்திக்கவேண்டும்? எனச்சிலருக்குச் சங்கை நிகழும். இங்ஙனம் சங்கித்தல் உசிதமல்ல. இங்கு காட்டிய சுருதியானது ஹேது திருஷ்டாந்தம் போலக் காணப்படினும் எத்தகையஸந்தேஹங்களை நீக்குவதற்குஹேது சொல்லவேண்டுமோ அத்தகைய ஸந்தேஹங்கள்இந்தச்சுருதிகளால் நீங்குகின்றனவல்ல. அதாவது ஸந்தியாவந்தனம் என் செய்யவேண்டும்? செய்யாவிடில் கெடுதியெப்படி நிகழும்? உலகில் கெடுதியென்பது யாதானும் ஓர் காரியத்தைச் செய்வதனல் மட்டும் நிகழுமேயன்றி ஒன்றுமிராத அபாவத்தினுல் ஓர் காரியமும் நிகழுகின்றதில்லையே? ஸந்தியாவந்தனம் செய்யாதிருத்தல் செய்கையின் அபாவமேயன்றோ. கார்யமானது யாதானும் ஓர் காரணத்தைப்பற்றி யேற்படுமேயன்றி ஓர் காரணமுமில்லாமல் ஒன்றும் எற்படுகின்றதில்லை. கெடுதியென்பது பாவரூபமாகிய காரியம். அது ஸந்தியாவந்தனத்தின் அபாவத்தினின்றும் உண்டாகின்றதெனின் யுக்திக்கு விரோதமாகின்றமையால் அதனை யொத்துக்கொள்ளக் கூடியதல்ல. கெடுதிவரவேண்டுமாயின் அதற்குக் காரணமான கெட்டகாரியத்தைச்செய்யவேண்டும். அங்ஙனமின்றி ஸந்தியாவந்தனத்தைவிட்டுச் சும்மா இருத்தலினுல் கெடுதிவரும் என்பது சுத்தப்பிசகு. ஆதலால் ஸந்தியாவந்தனம் செய்யாமலிருக்கலாம் என, குதர்க்க புத்தியுடையோருக்குத் தோன்றக்கூடும். ஆதலால் அதற்குத்தக்க யுக்தியாகிய ஹேதுவைக்காட்டியே ஸந்தியாவந்தனம்

அவசியம் செய்யவேண்டுமென்பதைப் புத்தியில் பதியச்செய்வதன் பொருட்டு ஸ்ம்ருதி வாக்கியங்கள் பிரவர்த்தித்திருக்கின்றன. அதாவது

> 𑌯𑍋𑌽𑌨𑌾𑌦𑍃𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌂 𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌿 𑌸𑍇𑌵𑌤𑍇 ।
> 𑌸 𑌜𑍀𑌵𑌨𑍍𑌨𑍇𑌵 𑌶𑍂𑌦𑍍𑌰𑌤𑍍𑌵𑌂 𑌮𑍃𑌤𑌃 𑌶𑍍𑌵𑌾 𑌚𑍈𑌵 𑌜𑌾𑌯𑌤𑍇

"எவன் ஸந்தியையை அனாதரவு செய்துவேறுகாரியங்களில் செல்லுகின்றானோ அவன் ஜீவிக்கும்போதே சூத்திரனாய்ப்போய் மரித்த பின்னர் நாயாகவும் பிறக்கின்றான்.

எனும் ஸ்ம்ருதி வாக்கியத்தினால் ஸந்தியாவந்தனத்தை "அனாதரவு செய்து" என ஹேது சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது செய்கையின் இன்மையாகிய அபாவத்தினின்றும் கெடுதியாகிய பாவப்பயன் எங்ஙனம் நிகழும் எனும். சங்கையாம்ஸந்தியாவந்தனஞ்செய்யாதிருத்தலானது அபாவமாக (இன்மையாக)வே காணப்படினும் அது ஈச்வராக்ஞையை அநாதரவு செய்தல் எனும் பாவரூபமாகிய ஓர் செயலாகவே யிருக்கின்றமையால் அதனால் கெடுதியாகிய பயன் நிகழுதல் யுக்திவிரோதமாகாது என்பதைப் போதிப்பதாகின்றது. இங்ஙனம் ஆழ்ந்து விசாரித்துப்பார்க்கின் வேதமெனும் பிரதிக்ஞா க்ரந்தத்திற்கு ஸ்ம்ருதி எனும் நூல் ஹேதுவாகவே பிரவர்த்தித்திருக்கின்றது என்பது விளங்கும். இங்ஙனமே திருஷ்டாந்தமுகமாய்ப் போதிப்பதன்பொருட்டு புராணாதிகளும் அவசியமே என்றறிக.

இனி ஸ்ம்ருதிகள் எத்தனை ? ஸூத்திரங்களெத்தனை ? எனின்.

மனு, ப்ருஹஸ்பதி, தக்ஷர், கௌதமர், யமர், அங்கிரர், யாக்ஞியவல்கியர், பிரசேதஸ், சாதாதபர், பராசரர், ஸம்வர்த்தர், சங்கர், லிகிதர், அத்ரி, விஷ்ணு, ஆபஸ்தம்பர், எனும் பதினெட்டுரிஷிகளால் பதினெட்டுஸ்ம்ருதிகள் இயற்றப் பட்டிருக்கின்றன. இவையன்றியும் உபஸ்ம்ருதியென ஜாபாலி, நாசிகேதஸ் ஸ்கந்தர், லோகாக்ஷி கச்யபர், வியாஸர், ஸநத்குமாரர், சந்தனு, ஜநகர், வியாக்கிரர் காத்தியாயனர், ஜாதுகர்ணர், கபிஞ்ஜலர், போதாயனர், காணாதர், விசுவாமித்திரர், பைடீநஸி, கோபிலர் முதலியவர்களால் உபஸ்ம்ருதிகளாலும் நூல்களியற்றப்பட்டிருக்கின்றன. அன்றியும் வஸிஷ்டர், நாரதர், ஸுமந்து, பிதாமகர் பப்புரு, கார்ஷ்ணாஜனி, ஸத்தியவிருதர், கார்கியர், தேவலர், ஜமதக்நி, பரத்வாஜர், புலஸ்தியர், புலஹர், கிருது, ஆத்ரேயர், சாகலேயர், மரீசி, வத்ஸர், பாரஸ்கரர், ருசியசிருங்கர், பைஜாவாபர் என இருபத்தோர்வரும் இருபத்தோர் உபஸ்ம்ருதிகளை இயற்றியிருக்கின்றனரெனவும் அறியப்படுகின்றது.

இனி ஸூத்திரங்களெவ்வளவு எனின் பதினெட்டாம். அவையாவன போதாயனம், ஆபஸ்தம்பம், ஸத்தியாஷாடம், திராஹ்யாயணம், ஆகஸ்த்யம்,

சாகல்யம், ஆச்வலாயனம், சாம்பவீயம், காத்தியாயனம், வைகாநஸம் சௌநகீயம், பா[illegible]னீயம், மாதுன்யம், கௌண்டிந்யம், கௌஷீதகம், என்பவையாம் என்றறிக.

வேதங்களில் குறிக்கப்பட்டனவும் ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்டனவுமாகிய கர்மங்களை நடாத்தும் வழியானதுகருவிகரண முறைகளின் விளக்கத்தோடு கூட இந்த ஸூத்திரங்களிலேயே விதிக்கப்பட்டிருக்கின்றது. இவைகளே கல்ப ஸூத்ரங்களென்றும் கிருஹ்ய ஸூத்திரங்களென்றும் சொல்லப்படும். அன்றியும் இந்தகல்பஸூத்திரங்கள் அந்தந்த சாகையோர்க்கு எனப்பூர்வபரம்பராக்கிரமத்தில் உபயோகிக்கப்பட்டுவரும் மந்திரபேதம், அனுஷ்டானக்கருவிகரணபேதம் முதலியவைகளைப் பிரித்து விசதமாகச்சொல்லுகின்றன.

இந்த ஸூத்திரங்கள் இப்பரதகண்டம் முழுதும் கலந்து நடைபெற்று வருகின்றன. ஆயினும் தென்தேசத்தில் போதாயனம், ஆபஸ்தம்பம், ஸத்தியாஷாடம், திராஹ்யாயணம், ஆச்வலாயனம், காத்தியாயனம் என்னும் இவைகளே விசேஷமாய் நடைபெறுகின்றன. வைகானஸம், பாரத்துவாஜம், ஆக்கிநிவைச்யம், ஜைமினீயம், மாத்தியந்தினம் எனும் இவைகளும் நடைபெறுகின்றனவாயினும் விசேஷமாய் மிகுதியாயில்லை. ஆக இப்பதினொருஸூத்திரங்களும் இத்தென்னாட்டி லிருக்கின்றன என்பது அறிக. தெலுங்குதேசத்திலும் கன்னடதேசத்திலும் சாம்பவீயம், கௌஷீதகம் எனும் இரண்டு ஸூத்திரங்களும்கூட அனுஷ்டிக்கப் பட்டு வருகின்றன. காசி, பாஞ்சாலம், அயோத்தி, பிரயாகை, பூனா முதலிய இடங்களில் பதினெண்ஸூத்திரங்களும் தற்காலமும் அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. இத்தென்னாட்டில் கிருஷ்ணயஜுர்வேதிகள் போதாயனம், ஸத்தியாஷாடம், ஆபஸ்தம்பம், ஆக்கிநிவைச்யம், பாரத்துவாஜம், வைகானஸம், எனும் ஆறுஸூத்திரங்களையும் சுக்லயஜுர்வேதிகள் காத்தியாயனம், மாத்தியந்தினம், எனும் இரண்டு ஸூத்திரங்களையுமே அனுஷ்டித்துவருகின்றனர். அன்றியும் போதாயனருக்குப் பகவான் என்றும், ஸத்தியாஷாடருக்கு ஹிரண்யகேசியர் என்றும், ஆபஸ்தம்பருக்கு ஸூத்திரக்காரர் என்றும் யாக்ஞியவல்க்கியருக்கு ஸநேயிஎன்றும் மறுநாமமும் வழங்கப்பட்டு வருகின்றது.

இனிப்புராணங்கள் பதினெட்டு அவையாவன ப்ரும்மபுராணம், பாத்மபுராணம், விஷ்ணுபுராணம், சைவபுராணம், பாகவதபுராணம், நாரதீயபுராணம், பவிஷ்யத்புராணம், மார்க்கண்டேயபுராணம், ஆக்கிநேயபுராணம், லயிங்கபுராணம், வாராஹபுராணம், ஸ்காந்தபுராணம், வாமனபுராணம், மாத்ஸ்யபுராணம், கூர்மபுராணம், காருடபுராணம், ப்ரும்மாண்டபுராணம், என்பவையாம். இவையே மஹாபுராணங்களென்னப்படும். இவைகளையியற்றியவர் வேத வியாஸரே.

உபபுராணங்கள் என மற்றும் சிலஇருக்கின்றன. அவையாவன உசநஸ், கபிலர், காளீ, ஸநத்குமாரர், சம்பு, இவர்களதுபுராணங்களும்சிவதர்மம், ஸௌரம், தௌர்வாஸம் நாரதீயம், நாரஸிம்ஹம், நாந்த்யம், பாராசரம், ப்ருகு ஸம்ஹிதை,

அங்கிரஸ்ஸம்ஹிதை பாரீசம், மானவம், வாஸிஷ்டலிங்கம், வாருணம், எனப்பதி னெட்டாம் என்க.

இங்ஙனம் பூர்வகிரந்தங்களின் விபரமென்பதறிக. இந்தவேதத்திலுள்ள ஞானகாண்டார்த்தங்களையறிந்து பரம்பொருளை யனுபவித்தலே முக்திஹேது என்பதில் ஸந்தேஹமில்லை. ஆயினும் அத்தகையஞானகாண்டார்த்தம் நன்ருய் அறியவேண்டுமாயின் மற்றும் சிலகிரந்தங்களை விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டியதவசியமாயிருக்கின்றது. அத்தகைய கிரந்தங்களை ஞானகாண்டாங் கங்கள் எனக்கூறலாம். அவை துவைத நூல்களென்பதாம். துவைதம் யாதென் பதையறியாமல் அத்வைதத்தையறிய இயலாது. அத்வைதமாகிய உபநிஷத்தை யோ அதனைவிளக்க எழுந்த ப்ரும்ம ஸூத்திரத்தையோ படிப்பதற்கு முன்ன ரே ஞானங்கசாஸ்திரங்களாகிய நையாயிகம், வைசேஷிகம், ஸாங்கியம், பாதஞ் ஜலம், ஜைமினீயம் எனும் ஐந்து தரிசனங்களையும் குருமூலமாய்ப் படித்துத் தெரிந்துகொள்ளவேண்டும். இவ்வைந்து சாஸ்திரங்களும் வியாஸஸூத்திரமும் சேர்ந்து ஆறு சாஸ்திரங்களுமே ஷட்தரிசனங்களென்னப்படும். முதல் ஐந்து ஸூத்திரங்களும் துவைதம் என்றும் வியாஸஸூத்திரம் அத்வைதமென்றும் சொல்லப்படும். அத்வைத தர்சனமாகிய வியாஸஸூத்திரம் படிப்பதற்கு முந் தியே நையாயிகம் முதலிய ஐந்து தர்சனங்களையும் ஸரியாய்ப் படித்துத்தெரிந்து கொண்டால் அத்வைதசாஸ்திரத்தில் ஸந்தேக விபரீதமின்றிச் சுளுவாய் வஸ்து நிச்சயம் ஏற்படும். இவ்வைந்து சாஸ்திரங்களையும் படிக்காமல் அத்வைதநூல் படித்தோமானல் தொட்டவிஷயங்களிலெல்லாம் ஸந்தேஹமும் விபரீதஞா னமும் ஏற்படுமேயன்றி நிச்சயம் ஏற்படுகின்றதில்லை.

மற்ற ஐந்து தர்சனங்களிலும் அத்வைதசாஸ்திர ஸித்தாந்தத்திற்கு விரோ தமாகச் சிலவிஷயங்கள் காணப்படினும் அவசியம் அறிந்துகொள்ளவேண்டிய தும்அத்வைதசாஸ்திரத்திற்கு முடன்பாடாயுள்ளதுமாகிய ஏராளமான விஷயம் இருக்கின்றது. இவ்வுண்மைகொண்டே ஐந்து தர்சனங்களையும் அறியவேண் டியது அவசியமென்றதறிக. இவைகளுள் நையாயிகதர்சனஸூத்திரமியற்றிய வர் கௌதமரும், வைசேஷிகஸூத்திரமியற்றியவர் கணுதமுநிவரும், ஸாங்கிய ஸூத்திரமியற்றியவர்கபிலரும், யோகஸூத்திரம் இயற்றியவர் பதஞ்ஜலியும், மீமாம்ஸாஸூத்திரமியற்றியவர் ஜைமினியும் என்றறிக. இவ்வைந்து ஸூத் திரங்களையுமியற்றியவர்களாகிய ஐந்து மஹாமுனிவரும் அத்வைதஞானமே மோக்ஷஹேது என்பதைக் கருத்தில் கொண்டவர்கள் என்பதே உண்மை. இவ் வைந்து தர்சனங்களையும் படித்துத் தெரிந்துகொள்ளாமல் அத்துவைத தர்சனத் தைப்படிப்போமானல் பிருதிவிமுதலிய ஐம்பூதங்களும் அவைகளின் காரியப் பொருள்களுமாயுள்ள பதார்த்தங்களின்ஞானம், ஸ்தூலதேஹபேதம், லோகாந்தர ஸ்வரூபம், கர்மகதி, புருஷயத்தினம், ஈச்வரஸ்வரூபம், தியானக்கிரமம், மன ஸின் ஸம்பந்தமாயுள்ளதத்துவம் இவை முதலிய விஷயங்களைப்பற்றிய மர்மங் கள் நன்ருயறியப்படமாட்டாஎன்பது நிச்சயம். இவ்விஷயங்களின் உண்மை

...ந்தரங்களில் நன்ருய்ப்போதிக்கப்பட்ட விஷயம் என்பது கொண்... ...மஸூத்திரத்தினில் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விஷ... நன்ருய்த் தெரியாவிடில் பாபத்தினில் பயமும் ஈச்வரபக்தியும் வைராக்கி... சமதம முதலியதும் சிறிதும் கைகூடாது. ஆதலின் இந்த ஐந்து தரிச னங்களும் அத்வைதசாஸ்திர விசாரணைக்கு முன்னரே படிக்கப்பட்டிருத்தல் அவசியமேஎன்றறிக.

இவ்வுண்மையறியாமல் ஸாங்கியத்தில் ஈசனில்லைஎனச் சொல்லப்படுகின் றமையாலும் யோகத்தில் அத்துவித விரோதமாய்ச் சொல்லப்படுகின்றமையா லும் ப்ருமஸூத்திரபாஷ்யங்களில் அவை கண்டிக்கப்பட்டிருக்கின்றனவாத லால் அவைகளைப்படிக்கக்கூடாது எனச்சங்கிப்பவரைத்தற்காலம் விசேஷ மாய்க் காணலாம். ஸூத்ரபாஷ்யங்களில் கண்டிக்கப்பட்டவைகளைப் படித்தல் கூடாதெனின் ஸூத்ரபாஷ்யத்தில் நையாயிகமதம், ஜைமினீயமதம், முதலிய தரிசனங்களும் ஒரோரிடத்தில்வையாகரணமதஸித்தாந்தமும் கண்டிக்கப்பட்டிருக் கின்றமையால் நியாயம் மீமாம்ஸை வியாகரணம் எனும் இவைகளையும் படிக்கக் கூடா தென்றேற்படும். அப்படியானுல் வேதத்தின் பொருளைச் சிறிதும் அறிந்து கொள்ள இயலாமற் போவதும்தவிர

புராணந்யாய மீமாம்ஸா தர்மசாஸ்த்ராங்கமிச்ரிதா: ।
வேதா: ஸ்தாநாநி வித்யாநாம் தர்மஸ்ய ச சதுர்தச ॥

புராணம் நியாயம், மீமாம்ஸை, தர்மநூல், சீக்ஷை வியாகரணம் முத லிய ஆறு அங்கங்கள் இவைகளோடுகூடிய வேதங்களே சதுர்த்த சவித்தைகளெனவும் தர்மத்திற்கு ஸ்தானங்களுமாம்

என்பதுமுதலிய ஆன்ருேர் வாக்கியங்களும் விரோதமேயாகும். ஆதலால் நியாயமீமாம்ஸாதிகள் கண்டிக்கப்பட்டிருக்கினும் அவைகளைப்படிக்கவேண்டிய தவசியமென்றுகொள்ளுவதுபோல ஸாங்கியம் யோகம் எனும் தரிசனங்களையும் படித்தல் அவசியமேயாம் என்க.

அன்றியும் இந்த விஷயத்தைச் சற்றுக்கவனிக்கவேண்டும். நிரீச்வரஸாங் கியகாரிகைக்குப் பாஷ்யம் எழுதியவர் பகவத்பாத சங்கராசார்யஸ்வாமிகளுக்குக் குருவாகிய கோவிந்தபகவத்பாத ஸ்வாமிகளுக்கும் குருவாயுள்ளவரும் நேரில் சுகப்ருமத்திற்கு சிஷயருமாகிய மஹாமஹாமஹிமைபொருந்திய அபியுக்தர் ளாகிய ஸ்ரீ கௌடபாதஸ்வாமிகளன்ருே. ஈச்வரனில்லையென்று சொல்லப்பட் டிருக்கின்றமையால் ஸாங்கியத்தைப் படிக்கவேண்டியதல்லவெனின், அத்து விதப்ரதிஷ்டாபகாளாகிய அந்த அபியுக்தாள் அதற்குப் பாஷ்யமெழுதுவாரா என்பதையோஜிக்கவேண்டும். அங்ஙனமே யோகஸூத்திரத்திற்குப் பாஷ் யமானது ப்ருமஸூத்ராசியரிராகிய வேதவியாஸரால் எழுதப்பட்டிருக்கின்றது?

இவ்விஷயங்களை யோஜித்துப் பார்த்தால் தரிசனாந்தரங்களைக் கற்றறிந்து கொள்ளுதல் அவசியமென்பது விளங்கும்.

அன்றியும் இதனைச் சற்றுயோஜிக்கவேண்டும். பரம்பொருளை ஸாக்ஷாத்கரிக்கவேண்டுமாயின் சிரவணம் மனனம் நிதித்தியாசம் எனும் இம்மூன்று ஸாதனங்களும் வேண்டுமென வேதாந்தத்தில் சொல்லப்படுகின்றது. வாமதேவர் சுகர் முதலிய மஹரீயர்களைப்போன்ற உத்தம பரிபாகிகளுக்கு சிரவணமொன்றே போதுமாயினும் மற்றவர்களுக்கு மனன நிதித்தியாசனங்களும் அவசியமேயாம். சிரவணமாவது உபநிஷத் வாக்கியங்களின் அர்த்தத்தை விசாரித்தலே. மனனமாவது அவ்வர்த்தத்திறைல் அறியவேண்டிய வஸ்துவினில் நிகழுவனவாகிய சங்கைகள் நீங்குமாறு யுக்திபோடு விசாரித்தலேயாம். நிதித்தியாஸனமாவது சிரவணமனனங்களிறைல் அறியப்பட்ட வஸ்துவிலேயே மனஸை ஏகாக்ரமாய் நிலைபெறச்செய்து தியானித்தலே. இது விதி இது அர்த்தவாதம் என்பதுமுதலிய விஷயங்களை நிர்ணயிக்கத்தக்க யோக்கியதையை ஸம்பாதித்துக்கொண்டே வேதாந்தவாக்கியங்களைச் சிரவணஞ்செய்யவேண்டும். அல்லாவிடில் ஸரியாய்ப் பொருள்விளங்காது. ஆதலால் அப்படிப்பட்ட ஞானத்தைப் பூர்வமே ஸம்பாதித்துக்கொள்ளுவதற்காகவே பூர்வமீமாம்ஸை எனும் ஜைமிநீய தரிசனத்தைக் கற்றறிந்துகொள்ளுதல் அவசியமென்று சொல்லப்படுகின்றது. உலகத்தின் ஒடுக்கத்திற்கும் விரிவுக்கும் ஏதுவாகிய குண ஸாம்ய வைஷம்யங்களையும் ஸுகதுக்காதிகளின் இயல்பையும் பூர்வமே யறிந்திருந்தால் பிரபஞ்ச பரமாத்மாக்களின் நிலைமையை ஊஹித்தறிதலாகிய யுக்திவிசாரம் பொருந்தும். அன்றியும் இதுஸரியான யுக்தி இது பிசகான யுக்தி என்பதாக நிர்ணயிக்கும்படியாகிய யோக்கியதையும் பூர்வமே அமைந்திருந்தால் பிறகு ஸரியாய் மனனஞ்செய்ய இயலும். ஆதலால் அப்படிப்பட்ட யோக்கியதையைச் சம்பாதித்துக்கொள்வதற்கு ஏதுவாகிய ஸாங்கியதரிசனம் நியாயவைசேஷிக தரிசனங்கள் எனும் இந்தத்தரிசனங்களைப் பூர்வமே கற்றறியவேண்டியதவசியமாகின்றது. இனிமனஸைப் பரம்பொருள் மாத்திரத்தில் நிலைநிறுத்துதலாகிய நிதித்தியாஸனம்கைகூடவேண்டுமாயின் மனஸின் ஸ்வரூபம், அதன் கிரியை, அதனையடங்கச் செய்துகொள்ளும்வழி முதலிய விஷயங்கள் ஏற்கனவே யறியப்பட்டிருக்கவேண்டியது அவசியம். ஆதலால் அவ்விஷயத்திற்கெனயோகதரிசன (பதஞ்ஜலி ஸூத்ர) த்தின் ஆராய்ச்சியும் அவசியமாயிருக்கின்றது. இங்ஙனம் சிரவண மனன நிதித்தியாசனங்களுக்கு அவசியம் வேண்டியனவாகின்றமையால் வேதாந்த தரிசனங்களையோதுதற்கு முன்னரே ஏனையதரிசனங்களையோதியறிதல் அவசியமென்று சொல்லப்பட்டது. இவ்வுண்மைபற்றியே மஹருஷிகளாகிய மஹானுபாவர்கள் தரிசனாந்தரங்களை யியற்றியிருக்கின்றனர்.

இனி இங்ஙனமாயின், ஸாங்கியம் முதலிய தரிசனங்களில் வேதாந்தவிரோதமாய் ஈச்வரனில்லை என்பது முதலிய விஷயங்கள் ஏன் சொல்லப்பட்டிருக்

[illegible] எனச் சிலர் சங்கிக்கக்கூடும். அவ்வுண்மை யிதுவேயாம். பலவிய [illegible] பரிசீலனைசெய்து நிர்ணயிக்கவேண்டிய மனனநிலைமையில் மனம் பற் பல [illegible] ஆராய்ந்து பார்க்கவேண்டியதாகும். இறைவன் இருக்கின்றனெ னும் எண்ணமிருந்தால் அருமையாகிய அவ்வீச்வரனது ஸ்வரூபத்திலேயே சித் தம் ஏகாக்ரமாய்ச் செல்லும். ஆதலின் அது பலவாறாகிய நியாயங்களில் புகுந் து வேலைசெய்யவேண்டிய நிலைமையாகிய மனனத்திற்கு இடையூறாகவே முடி யும். ஆனதுபற்றியே மனனத்திற்கு உபயோகப்படுவதாகிய ஸாங்கிய தரிசன த்தில் ஈச்வர னில்லையென்று சொல்லப்பட்டது. இங்ஙனம் ஏனையதரிசனங்க ளிலும் உள்ள விசேஷங்களை அறிந்துகொள்ளவேண்டியது. ஆதலால் தரிச னாந்தரங்களைக் கற்றறிந்தபிறகே வேதாந்த விசாரம் செய்யவேண்டுமென்பது நிர்ணயம்.

வேதமானது பிரதிக்ஞையென்றும் ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள் ஹேது திருஷ்டாந்தங்களென்றும் ஏற்கனவே சொல்லப்பட்டதன்றோ. அதனைச்சற்று கவனிப்பாம். அதாவது வேதத்திலுள்ள கர்மகாண்டமெனும் பூர்வபாகத்திற்கு ஹேது, மனு முதலியவர்களியற்றிய ஸ்ம்ருதிகளும் போதாயனர் முதலியவரியற்றி ய கல்பஸூத்திரங்களுமாம். திருஷ்டாந்தம் ராமாயணமும் மற்றமுள்ள புரா ணங்களுமாம். இனி ஞானகாண்டமாகிய உத்தரபாகத்திற்கு ஹேது ப்ரும்ம ஸூத்திரமும் திருஷ்டாந்தம் பாரதம் முதலிய நூல்களுமென்பதறிக. அன்றி யும் பாரதம் வேதத்தின் கர்மஞான பாகங்களாகிய இருகாண்டங்களுக்கும் திரு ஷ்டாந்தமாய் ஒருங்கே அமையப்பெற்றதும், சிலபாகங்களில் ஹேதுவாக [illegible] உண்மையை விளக்குவதுமாயுள்ள நூலாதலால் அதனை வேதமென்றே செ[illegible] வேண்டும் என்பதுமறிக.

இவ்வாறு செய்த ஆராய்ச்சியால் பிரதிக்ஞாவடிவமாகிய வேதமே முத நூல் எனவும் ஹேது வடிவமாகிய ஸ்ம்ருதி ஸூத்ரங்களும் திருஷ்டாந்த வடிவ மாகிய இதிஹாஸபுராணங்களும் வழிநூலெனவும் நிர்ணயிக்கப்பட்டது. வேதாந் தார்த்தத்தை நன்கு அறிந்து கொள்ளுவதற்கு ஸாதனங்களாகிய தரிசனாந்தரங் களும் வழிநூலே என்றறிக. பிரதிக்ஞாஹேது திருஷ்டாந்தங்களுக்கு விரோத மாகாமல் பெரியோர்களாலியற்றப்பட்டிருக்கும் காரிகை, பாஷ்யம், வார்த்திகம், முதலியநூல்களும் வழிநூல்களே யாதலின் இவைகளெல்லாவற்றையும் சாஸ் திரமெனும் சொல்லால் ஆன்றோர் வழங்கிவருகின்றனர். ஹேது திருஷ்டாந் தங்களாகிய ஸ்ம்ருதி, இதிகாஸம், புராணம், முதலிய நூல்களைப்பற்றி விஸ் தாரமாய் விசாரித்து நிரூபிக்கவேண்டிய மர்மங்கள் ஏராளமாயிருக்கின்றன.

அதாவது தர்மபுத்திரர் முதலியவர்களின் செய்கைகள் ஸம்ருதி ஸூத்திரங் களில் சொல்லப்பட்டிருக்கும் தர்ம மர்மங்களுக்குத் திருஷ்டாந்தங்களாகக்கண்டு கொள்ளத்தக்கவைகளாம். இவ்விஷயத்தைத் தனியே நிரூபிக்கவேண்டும். அப்

படி நிரூபிப்போமாயின் பாரதாதிகளின்பெருமை நன்கு விளங்கும். அதற்கிங்கு அவகாசமிராமையால் விரிவஞ்சி இம்மட்டோடு இந்நூலைப் பூர்த்தி செய்கின்றனம்.

வேதவேதாங்கப்ரகாசம் முற்றிற்று.

வேதசாஸ்திர தத்துவம்

ஸம்பூர்ணம்.

ஶுபமஸ்து ஶுபமஸ்து ஶுபமஸ்து



S. MURTHY & CO., MADRAS.